# தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கம்

(இரண்டாம் பாகம்)

முனைவர்

**மு. தமிழ்க்குடிமகன்,** எம்.ஏ., பிஎச்.டி.,

(தமிழ் ஆட்சிமொழி - தமிழ்ப் பண்பாட்டுத் துறை மேனாள் அமைச்சர்)

அறிவொளி பதிப்பகம்

81, கார்மேகனார் தெரு

தல்லாகுளம், மதுரை - 625 002

# நூற் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற் பெயர் | : | தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கம் (இரண்டாம் பாகம்) |
| முதற்பதிப்பு | : | 2004 |
| மொத்தப்பக்கங்கள் | : | 336 |
| விலை | : | உருபா. 200/- |
| அச்சு எழுத்து | : | 11 புள்ளிகள் |
| வெளியீடு | : | அறிவொளி பதிப்பகம்<br>81, கார்மேகனார் வீதி<br>தல்லாகுளம், மதுரை - 2<br>தொ.பேசி. 2568048<br><br>11, விக்டோரியா தோட்டம்<br>20, நேரு 100 அடிச் சாலை<br>கோயம்பேடு, சென்னை - 107<br>தொ.பேசி. 24750555<br>செல் பேசி. 94433-68048 |



## உள்ளடக்கம்

4. பணியாளர் மற்றும் நிர்வாக சீர்திருத்தத்துறை (தொடர்ச்சி)

27.4.2000 அன்று அமைச்சரின் நேர்முக மடல் இத்துறைச் செயலாளர் ஷீலா பாலகிருஷ்ணன் அவர்களுக்கு வழங்கப்பட்டது.

தக்க நடவடிக்கை எடுக்கப்படுவதாக 18.5.2000 அன்று செயலர் விடை எழுதியுள்ளார்.

மதிப்பிற்குரிய அய்யா,

பொருள் : தமிழ் வளர்ச்சி - ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் - பணியாளர் மற்றும் நிருவாக சீர்திருத்தத் துறையில் ஆய்வு மேற்கொண்டது - தொடர்பாக.

பார்வை : தங்களின் நேர்முக மடல் த.வ.76, நாள்.27.4.2000

பார்வையில் குறிப்பிடப்பட்டுள்ள தங்களின் நேர்முக மடல் இத்துறையில் பெறப்பட்டுத் தக்க மேல்நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது எனவும் விரிவான விடை தனியே அனுப்பப்பட உள்ளது எனவும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள
(ஷீலா பாலகிருஷ்ணன்)

பெறுநர்

முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பி.எச்.டி.,
தமிழ் ஆட்சிமொழி அமைச்சர், தலைமைச் செயலகம், சென்னை - 9

அடுத்துப் பொறுப்பேற்ற செயலர் சை. முனீஸ் ஹோதாவும் ஒரு விளக்க மடல் எழுதியிருந்தார்.

5. மதுவிலக்கு (ம) ஆயத்தீர்வைத் துறை

ஆய்வு மற்றும் கலந்துரையாடல் நாள் : 8.5.2000 - வருகைப் பதிவேட்டில் 86 பேரில் 28 பேர் மட்டுமே தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

6 மாதத்தில் கடிதப் போக்குவரத்து தமிழில் கூடுதலாக உள்ளது.

தமிழ் : 3291 ஆங்கிலம் : 2958

அரசாணைகளும் தமிழில் அதிகம் உள்ளன.

ஆனால் நிலையாணைகளில் 297 ஆங்கிலத்திலும் 9 மட்டுமே தமிழிலும் உள்ளமையால் இங்கு தமிழ் புறக்கணிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

'இருபதாண்டு' ஆணைகளில் கூட ஆங்கிலத்தில் 71 தமிழ் ஒன்றே ஒன்று மட்டும்.

இதிலும் இது மாண்புமிகு முதல்வர் அவர்கள் துறை. இது தொடர்பாக என் நேர்முக மடல் 24.5.2000 அன்று செயலாளர் திருமதி. சாந்தா ஷீலா நாயர் அவர்களுக்கு அளிக்கப்பட்டது.

ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம் - தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை

அரசுச் செயலாளர் அவர்கள் மதுவிலக்கு மற்றும் ஆயத்தீர்வைத் துறை

அரசுச் செயலாளர் அவர்களுடன் கலந்தாய்வு - ஆய்வறிக்கை

கலந்தாய்வு நாள் : 8.5.2000

வருகைப் பதிவேடு

| | | |
|---|---|---|
| 86 பேரில் 29 பேர் தமிழிலும் 57 பேர் ஆங்கிலத்திலும் | : | ஒப்பமிடுகின்றனர் |
| தொடர்குறிப்பேடு (அனைத்துப் பிரிவுகளிலும்) | : | ஆங்கிலத்தில் உள்ளன. |
| விடுப்பு அனுமதி, தகவலின்மை, அலுவல் பணி, சிறப்பு அனுமதி போன்றவை | : | ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன |

பற்றொப்பப் பதிவேடு

| | | |
|---|---|---|
| 114 பேரில் 10 பேர் தமிழிலும் 104 பேர் ஆங்கிலத்திலும் | : | ஒப்பமிடுகின்றனர். |

பதிவேடு

| | | |
|---|---|---|
| நடமாட்டப் பதிவேடு, விடுமுறைப் பணிப் பதிவேடு, மாலைநேரப் பணிப் பதிவேடு அலுவலக உதவியாளர் பணி நியமனப் பதிவேடு போன்றவை | : | தமிழில் உள்ளன |

| | | |
|---|---|---|
| பணக் கணக்குப் பதிவேடு, இயக்கூர்திகள் காசோலைப் பதிவேடு, கணினிப் பதிவேடு அனுப்புகைப் பதிவேடு, கடன்களும் முன்பணங்களும் குறித்த பதிவேடு, வங்கிப் பதிவேடு, வழங்கப்படா சம்பளப் பதிவேடு, மறு கவனிப்புப் பதிவேடு, அஞ்சல் பகிர்வு பதிவேடு போன்றவை | : | ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன. |
| தன் பதிவேடு (அனைத்துப் பிரிவுகளிலும்) | : | தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதப்படுகின்றன |

பணிப்பதிவேடு

| | | |
|---|---|---|
| விடுப்பு ஒப்பளிப்பு, பணி சரிபார்ப்பு, மாற்றம், ஊதியம் அறுதியிடல் நியமனம் போன்றவை | : | தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன |

கடிதப் போக்குவரத்து : (சென்ற ஆறு திங்களில்)

| | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| அ. பொதுமக்களுக்கும் அரசு சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 2713 | 1065 | 3778 |
| ஆ. மேல்நிலை அலுவலர்களுக்கு | 61 | 165 | 226 |
| இ.சார்நிலை, சமநிலை அலுவலர்களுக்கு | 152 | 461 | 643 |
| ஈ. அரசின் மற்ற அலுவலர்களுக்கு | 365 | 1267 | 1631 |
| மொத்தம் | 3291 | 2958 | 6249 |

ஆணைகள் :

| | | | |
|---|---|---|---|
| வாலாயம் | 6005 | 902 | 6907 |
| அலுவல் நடைமுறை | 272 | 409 | 681 |
| நிலையாணை | 9 | 297 | 306 |
| பத்தாண்டு | 21 | 121 | 142 |
| இருபதாண்டு | 1 | 71 | 72 |
| நாற்பதாண்டு | - | 2 | 2 |
| மொத்தம் | 6308 | 1802 | 8110 |

| | |
|---|---|
| தமிழில் | 6308 |
| ஆங்கிலத்தில் | 1802 |

தட்டச்சுப் பணி :

அ. தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கை ..12

ஆ. ஆங்கிலத் தட்டச்சுகளின் எண்ணிக்கை ..12

இ. அலுவலகத் தட்டச்சர்களின் மொத்த எண்ணிக்கை ..16

ஈ. கடந்த ஆறு திங்களில் தட்டச்சுச் செய்யப்பட்ட செவ்வைப்படிகளின் எண்ணிக்கை :

| | |
|---|---|
| தமிழில் | .. 20244 |
| ஆங்கிலத்தில் | .. 23413 |
| கூடுதல் | .. 43657 |

குறிப்பு :

இவ்வலுவலகத்தில் தமிழ்த் தட்டச்சுப் பொறி 12-ம், ஆங்கிலத் தட்டச்சுப்பொறி 12-ம் ஆக 24 பொறிகள் உள்ளன. 100க்கு 65 விழுக்காட்டின்படி 15 தமிழ்த் தட்டச்சுப்பொறிகள் இருக்கவேண்டும். எனவே, இருக்கின்ற 12 ஆங்கில தட்டச்சுப் பொறிகளில் 3 தட்டச்சுப் பொறிகளை ஒப்படைப்புச் செய்து, அதற்கீடாகத் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெறவேண்டும்.

6. வணிகவரித் துறை

இத்துறையில் 2.5.2000 அன்று இரண்டாம் முறை ஆய்வு மேற்கொள்ளப்பட்டு அன்றே கலந்துரையாடலும் நடைபெற்றுள்ளது.

வருகைப் பதிவேட்டில் 87 பேரில் 28 பேர் மட்டுமே தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

| | | |
|---|---|---|
| ஆறு திங்களில் கடிதப் போக்குவரத்து | : | தமிழில் : 3400, ஆங்கிலத்தில் : 6364 |
| தட்டச்சுச் செய்த பக்கங்கள் | : | தமிழில் : 32016, ஆங்கிலத்தில் : 42109 |
| அரசாணைகள் | : | தமிழில் : 297, ஆங்கிலத்தில் : 1919 |

எந்த அளவுக்கு வணிகவரித் துறையில் தமிழ் புறக்கணிக்கப்பட்டுள்ளது என்பதை இவற்றின் மூலம் அறிய முடியும்.

இது தொடர்பாக 10.5.2000 அன்று என்னுடைய நேர்முக மடலை அளித்தேன். அப்போது துறைப் பொறுப்பேற்றிருந்த எம் துறைச் செயலாளரும் 16.5.2000 அன்று ஒரு நேர்முக மடல் வரைந்துள்ளார்.

வணிகவரித் துறையில் ஆய்வு முடிந்தபின், 17.7.98 இல் செயலர்க்கு ஒரு மடல் எழுதினேன். அரசாணைகள் குறித்த என் நேர்முக மடலுக்கு 12.8.98 அன்று அன்றைய துறைச் செயலர் கே.ஏ. மாத்யூ ஒரு மடல் எழுதியிருந்தார்.

அன்பார்ந்த அய்யா,

பொருள் : அலுவலக நடைமுறைகள் - அரசாணைகள் தமிழில் வெளியிட அறிவுரைகள் - அரசாணைகள் அனுப்பி வைப்பது தொடர்பாக.

பார்வை : 1. மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சரின் நேர்முக கடித நாள் 17.7.1998

2. வணிகவரித்துறையின் அ.சா.கு.எண்.37357/அ2/97-4 நாள்:24.7.1998

பார்வை 1ல் கண்டுள்ள தங்களது நேர்முகக் கடிதத்தில் அறிவுறுத்தியவண்ணம், தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தை முழுமையாக செயற்படுத்தும் வகையில், எமது துறையில் உள்ள எல்லாப் பிரிவுகளுக்கும் அரசாணைகள் யாவும் தமிழில் வெளிவர வேண்டுமென்றும், ஆங்கிலத்தில் அரசாணையை வெளியிட்டால்கூட அவ்வாணையைத் தமிழில் சேர்த்து வெளியிடவேண்டுமென்றும் பார்வை 2ல் அறிவுறுத்தப்பட்டுள்ளது. அதிலும் 1.4.1997 முதல் 31.12.1997 முடிய வெளியிடப்பட்ட அரசாணைகளின் தொகுப்பும் தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறையின் பார்வைக்கும், ஆய்வுக்கும் அனுப்பி வைக்கப்பட்டுள்ளது. மேலும் இத்துறையில் கையாளப்பட்டு வரும் பொருண்மைகள் பெரும்பாலானவை சட்டத் தொடர்புடையதாக இருக்கின்றன. அவ்வாறு தொடர்புடையதாக இருப்பினும் படிப்படியாகத் தமிழில் அரசாணைகள் வெளியிடுவதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது. இருப்பினும், ஆட்சி மொழியான தமிழைச் செயல்படுத்துவதில் போதிய முனைப்புகாட்டும் முகத்தான், இனிமேல் வருகின்ற அனைத்து அரசாணைகளும் தமிழில் வெளியிடப்படும் என்று உறுதியளிக்கிறேன்.

நன்மதிப்புடன்,
தங்கள் அன்புள்ள
(கே.ஏ.மாத்யூ)

பெறுநர்

முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பி.எச்.டி,
மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் அவர்கள், தலைமைச் செயலகம், சென்னை - 9

இனிமேல் வருகின்ற அனைத்து அரசாணைகளும் தமிழில் வெளியிடப்படும் என்று உறுதியளித்துள்ளார் என்பதுதான் இதில் உள்ள சிறப்பு.

இது தொடர்பாக 13.6.2000 அன்று துறைச் செயலாளர் கடிதம் எழுதி, குறைபாடுகளை அகற்ற அனைத்து அலுவலர்களுக்கும் வலியுறுத்தப்பட்டுள்ளது என்று கூறியுள்ளார்.

நேர்முகக்கடித எண்.10109/அ2/2000-1, நாள் : 13.6.2000

அன்பார்ந்த திரு கௌரிசங்கர்,

பொருள் : தமிழ் வளர்ச்சி - ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் - வணிகவரித் துறை ஆய்வு மேற்கொள்ளப்பட்டது - ஆய்வறிக்கை தொடர்பாக.

பார்வை : 1. மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் அவர்களின் நேர்முக மடல் நாள் : 10.5.2000

2. தங்கள் நேர்முகக் கடித எண்.6268/தவ-1-1-2000-2, நாள்:16.5.2000

பார்வையிற்காணும் நேர்முக மடல்களில் சுட்டிக் காட்டியுள்ள குறைபாடுகளை அகற்ற வணிகவரித்துறையில் பணிபுரியும் அனைத்து அலுவலர்களுக்கும் தக்கவாறு அறிவுறுத்தி அலுவலக ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது என்ற விவரத்தினைத் தங்களுக்கு அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள,

நகல் :

மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் அவர்களின் நேர்முக உதவியாளர், சென்னை - 9

/உண்மை நகல்/

பிரிவு அலுவலர்

இத்துறையின் ஆட்சியின் கீழ் வரும் மிகப் பல வணிகர்கள் போதுமான கல்வி அறிவு இல்லாதவர்களாகவோ, அல்லது தமிழ் மட்டுமே தெரிந்தவர்களாகவோதான் இருப்பார்கள். அப்படியிருக்கும்போது இவர்களும் படித்துத் தெரிந்துகொள்ளும் அளவில் கடிதங்களைத் தமிழில் வரையாதது ஏன்? அரசாணைகளைத் தமிழில் பிறப்பிக்காதது ஏன்?

இவர்கள் பொதுமக்களைப் பற்றிக் கவலைப் படுவதேயில்லை. தங்கள் வசதிக்கு எது தோதுப் படுகிறதோ அதைச் செய்துவிட்டுப் போகிறவர்களாகப் பலர் இருக்கிறார்களே என்பதுதான் என் வருத்தம்.

7. நிதித்துறை

இத்துறையில் 7.5.2000 அன்று ஆய்வு மேற்கொள்ளப்பட்டு அன்றே கலந்துரையாடல் குறிப்பும் வழங்கப்பட்டுள்ளது. 24.5.2000 அன்று நான் என் நேர்முகமடலைச் செயலாளர் திரு. பி.வி. இராசாராமன் அவர்கட்கு அளித்துள்ளேன்.

கலந்துரையாடல் குறிப்புரை : (5.5.2000)

ஆய்வுக் குறிப்புகளின் அடிப்படையில் தமிழ் வளர்ச்சி இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அரசுச் செயலாளர் அவர்கள், தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத் துறை இணைச் செயலாளர், தமிழ் வளர்ச்சி இயக்குநர், மொழி பெயர்ப்புத் துறை இயக்குநர் அவர்களுடன் நிதித்துறை அரசுச் செயலாளர்அவர்களின் அலுவல் அறையில் 5.5.2000 முற்பகல் கலந்துரையாடல் நடைபெற்றது. பதிவேடு மற்றும் பற்றொப்பப் பதிவேடுகளில் தமிழில் ஒப்பமிட வேண்டும். பதிவேடுகளில் தமிழில் எழுத வேண்டும். வாலாய, நிலையாணைகள் தமிழில் வெளியிடப்படவேண்டும். அலுவல் நடைமுறை ஆணைகள் பெருமளவில் ஆங்கிலத்தில் வெளியிடப்படுகின்றன. இவ்வாணைகளைத் தமிழில் வெளியிட வேண்டும். முதலில் ஆணையினைத் தமிழில் வெளியிட்டால் பின்னர் எளிதாகிவிடும். கடிதப் போக்குவரத்துக்கு ஆங்கிலமே பயன்படுத்தி வருவதை மாற்றித் தமிழிலேயே மேற்கொள்ள வேண்டும். ஆட்சிச் சொல்லகராதி, கையடக்கப் பதிப்பு, மாதிரி வரைவுகள் போன்றவை துறைகளுக்கு வழங்கப்பட்டுள்ளன. இப்போது துறைகளின் வழக்கிலுள்ள பல்வேறு சொற்களையும் உள்ளடக்கியதாக மறுமதிப்பு அச்சில் உள்ளது. பிழை நீக்கி எழுதும் முறை, ஆங்கிலத் தமிழ்க் கையகராதி போன்ற நூல்கள் அலுவலகப் பயன்பாட்டிற்கென வாங்கிக் கொள்வதற்கு ஏற்கெனவே வகை செய்யப்பட்டுள்ளது. அரசாணைகளுக்கு மொழியாக்கம் தேவைப்படின் மொழி பெயர்ப்புத் துறையின் வாயிலாக மொழியாக்கம் செய்து கொள்ளலாம் எனப் பல்வேறு கருத்துகளைத் தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத்துறை அரசுச் செயலாளர் அவர்கள் தெரிவித்தார்கள். இக்குறைகளை விரைவில் களைந்து ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்திற்கு உறுதுணை புரிவதாக நிதித்துறைச் செயலாளர் அவர்கள் தெரிவித்தார்கள்.

அரசுச் செயலாளர்
தமிழ் வளர்ச்சி, பண்பாடு மற்றும் இந்து சமய அறநியைத்துறை, சென்னை - 9

ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம் - தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத் துறை அரசுச் செயலாளர் - நிதித் துறை அரசுச் செயலாளர் அவர்களுடன் கலந்தாய்வு - ஆய்வு நாள் : 5.5.2000

ஆய்வறிக்கை

வருகைப் பதிவேடு

| | | |
|---|---|---|
| 180 பேரில் 31 பேர் தமிழிலும் 159 பேர் ஆங்கிலத்திலும் (அளிக்கப்பெற்ற விவரங்களின் படி) | : | ஒப்பமிடுகின்றனர் |
| தற்செயல் விண்ணப்பங்கள் அவற்றின் மீதான ஆணைகள் அனுமதி, தகவலின்மை விடுப்பு, அலுவல் பணி இல்லப் பணி போன்றவை | : | தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதப்படுகின்றன. |

குறிப்பு :

அலுவலக நடைமுறைப் பிரிவுகள், அலுவலக உதவியாளர்கள், பதிவுரு எழுத்தர்கள் ஆகியோருக்கான வருகைப் பதிவேடு, தொடர் குறிப்பேடுகள் தமிழில் உள்ளன. இவை நீங்கலாக பிற பிரிவுகளில் வருகைப் பதிவேடு, தொடர் குறிப்பேடு போன்றவை தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன.

2. பற்றொப்பப் பதிவேடு

| | | |
|---|---|---|
| 305 பேரில் 31 பேர் தமிழிலும் 274 பேர் ஆங்கிலத்திலும் | : | ஒப்பமிடுகின்றனர் |

3. பதிவேடுகள்

| | | | |
|---|---|---|---|
| அ. | தன் பதிவேடு, (அனைத்துப் பிரிவுகளிலும்) அனுப்புகைப் பதிவேடு, மறு கவனிப்புப் பதிவேடு, நடமாட்டப் பதிவேடு போன்றவை | : | தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதப்படுகின்றன |
| ஆ. | பணக் கணக்குப் பதிவேடு, வங்கிக் கணக்குப் பதிவேடு மானிய விவரப் பதிவேடு தொலைபேசி பதிவேடு, கடன்களும் முன்பணங்களும் குறித்த பதிவேடு, எழுதுபொருள்கள் விவரப் பதிவேடு, வழங்கப்படாச் சம்பளப் பதிவேடு, மருத்துவச் செலவினப் பதிவேடு, ஓய்வூதியப் பதிவேடு, பொது வைப்பு நிதிப் பதிவேடு, அஞ்சல் வில்லைக் கணக்குப் பதிவேடு போன்றவை | | |

(தற்போது பதிவேடுகளின் முகப்புகளில் தமிழில் பதிவேடுகளின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன)

| கடிதப் போக்குவரத்து : | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. பொதுமக்களுக்கும் அரசு சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 23 | 87 | 110 |
| 2. மேல்நிலை அலுவலர்களுக்கு | 220 | 220 | |
| 3. சார்நிலை / சமநிலை அலுவலர்களுக்கு | 3791 | 11375 | 15166 |
| 4. அரசின் மற்ற அலுவலர்களுக்கு | 1070 | 3208 | 4278 |
| மொத்தம் | 4884 | 14890 | 19774 |
| தமிழில் | 4884 | | |
| ஆங்கிலத்தில் | 14890 | | |

| ஆணைகள் : (1.1.99 முதல் 31.12.2000) | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| வாலாயம் | 72 | 1127 | 1199 |
| அலுவலக ஆணை | 47 | 2054 | 2101 |
| நிலையாணை | 193 | 606 | 799 |
| பத்தாண்டு | - | 186 | 186 |
| இருபதாண்டு | 2 | 32 | 34 |
| முப்பதாண்டு | - | - | - |
| நாற்பதாண்டு | - | - | - |
| மொத்தம் | 314 | 4005 | 4319 |

தமிழ் : 314

ஆங்கிலம் : 4005

பணிப்பதிவேடு

மாறுதல், பணிசரிபார்ப்பு, விடுப்பு ஒப்புவிப்பு : ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன

ஊதியம் அறுதியிடல் போன்றவை
காலமுறை அறிக்கைகள், கமுக்க அறிக்கைகள்
பதிவுரு தாள்கள் : ஆங்கிலத்தில் உள்ளன

தட்டச்சுப்பொறி

அ. தமிழ்த் தட்டச்சுப்பொறி : 56

ஆ. ஆங்கிலத் தட்டச்சுப்பொறி : 24

கடந்த ஆறு திங்களில் தட்டச்சுச் செய்த செவ்வைப் படிகளின் பக்க எண்ணிக்கை

1. தமிழில் : 14522

2. ஆங்கிலத்தில் : 43561

குறிப்பு : தட்டச்சுப் பொறி, கணினி வாயிலாக தட்டச்சு செய்யப்படுகின்றன.

சிறப்பு

| | | |
|---|---|---|
| விரிவான மானிய கோரிக்கைகள், (அனைத்துத் துறைகளுக்கும்) துறை வாரியான மதிப்பீடுகள் வரவு - செலவு திட்ட வெளியீடு 1 முதல் 63 வரை ) | : | தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிடப்படுகின்றன. |

வரவு - செலவுத் திட்ட நூல், வருவாய் குறித்த விரிவான வரவு - செலவுத் திட்ட மதிப்பீடுகள் - வெளியீடு-68, ஆண்டு நிதி நிலை அறிக்கை நிதி நிலைக் குறிப்பு பகுதி-1, பகுதி-2, நிதிநிலை குறிப்பு இணைப்புகள், திட்டம் வரவு - செலவுத் திட்ட இணைப்பு - வெளியீடு -73, வரவு - செலவுத் திட்ட உரையின் இணைப்புகள் கூடுதல் செலவுக்கான மானியக் கோரிக்கைகள் விரிவான துணை மதிப்பீடுகள் பணியாளர் மற்றும் நிருவாக சீர்திருத்தத் துறையினரால் 1.1.94 முதல் 31.12.1998 வரையிலான கால அளவிற்கு ஆய்வு மேற்கொள்ளப்பட்டு அறிக்கை தமிழில் அளிக்கப்பட்டுள்ளது. அதற்கான மறுமொழியும் (குறைபாட்டின் சுருக்கம், குறைகளைவுக்கான விவரங்களுடன்) தமிழில் தயாரித்தளிக்கப்பட்டுள்ளன.

இத்துறையில் வருகைப் பதிவேட்டில் 180 பேரில் 31 பேர் தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

கடிதப் போக்குவரத்து தமிழை அறவே ஒழிப்பது போல்தான் உள்ளது.

ஆறுமாதகாலத்தில் தமிழில் 4884 மட்டும்; ஆங்கிலத்தில் 14890 மட்டும்

அதேபோல அரசாணைகள் : தமிழில் : 314, ஆங்கிலத்தில் 4005

வியப்பு என்னவென்றால் தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் 56 என்றால் ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் 24 மட்டுமே உள்ளன.

ஆனால் கடந்த ஆறு மாதங்களில் தமிழில் 14522 பக்கங்கள் என்றால் ஆங்கிலத்தில் 43561 பக்கங்கள் தட்டச்சிடப்பட்டு உள்ளன.

எனவே 65% அளவு தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இருக்கவேண்டும் என்று வற்புறுத்துவதாலோ, அதன்படி அவர்களின் தட்டச்சுப் பொறிகளைப் பறிமுதல் செய்வதாலோ எந்தப் பயனும் இல்லை என்பதை இதன் மூலம் அறியலாம்.

இங்கே தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் 70% உள்ளன. எனினும் பயன் என்ன?

நிதித்துறையில் ஓர் அரசாணை மட்டும் இங்கே காட்டப்பட்டுள்ளது.

நிதித் (படிகள்) துறை
அரசாணை நிலை எண்.440, நாள் அக்டோபர் 8, 1999
(பிரமாதி, புரட்டாசி 21, திருவள்ளுவர் ஆண்டு 2030)

படிகள் - அகவிலைப்படி - 1.7.1999 முதற்கொண்டு உயர்த்தப்பட்ட அகவிலைப்படிவீதம் - ஆணைகள் - வெளியிடப்படுகின்றன.

---

பின்வருவனவற்றைப் படிக்கவும் :-

1. அரசு ஆணை நிலை எண் 217, நிதித் (படிகள்) துறை, நாள் 20.5.99

2. மத்திய அரசு, புது டில்லி, நிதியமைச்சகம், செலவுத்துறையின் 14.9.99 ஆம் நாளிட்ட எப்.எண்.1(8)/99 - E II B/1050 ஆம் எண்ணுள்ள அலுவலகக் குறிப்பு.

**ஆணை எண் 440, நிதித் (படிகள்) துறை, நாள் 8.10.1999**

மேலே பார்வை 1-ல் குறிப்பிட்டுள்ள அரசு ஆணையில் கீழே விவரித்துள்ளபடி, மாநில அரசுப் பணியாளர்களுக்குத் திருத்தப்பட்ட அகவிலைப்படி வீதத்தை அனுமதித்து ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன:-

| எந்நாளிலிருந்து வழங்கத்தக்கது என்பது | அகவிலைப்படி வீதம் (மாதம் ஒன்றுக்கு) |
|---|---|
| 1.1.1999 | அடிப்படைச் சம்பளத்தில் 32 சதவீதம் |

2. மத்திய அரசு, இப்போது 1.7.1999 முதற்கொண்டு அதன் பணியாளர்களுக்கு பின்வருமாறு திருத்தப்பட்ட வீதத்தில் அகவிலைப்படி அனுமதித்துள்ளது.

| எந்நாளிலிருந்து வழங்கத்தக்கது என்பது | அகவிலைப்படி வீதம் (மாதம் ஒன்றுக்கு) |
|---|---|
| 1.7.1999 | அடிப்படைச் சம்பளத்தில் 37 சதவீதம் |

3. மேலே பார்வை 2-ல் உள்ள மத்திய அரசின் குறிப்பாணையில் மத்திய அரசு பிறப்பித்த ஆணைகளையடுத்து, மாநில அரசு, தற்போது மாநில அரசுப் பணியாளர்களுக்கு கீழே குறிப்பிட்டுள்ளபடி, திருத்தப்பட்ட வீதத்தில் அகவிலைப்படி அனுமதிக்கிறது.

| எந்நாளிலிருந்து வழங்கத்தக்கது என்பது | திருத்தியமைக்கப்பட்ட அகவிலைப்படி வீதம் (மாதம் ஒன்றுக்கு) |
|---|---|
| 1.7.1999 | அடிப்படைச் சம்பளத்தில் 37 சதவீதம் |

4. உயர்த்தப்பட்ட வீதத்திலான அகவிலைப்படியை 1.10.1999 முதற்கொண்டு ரொக்கமாக வழங்க அரசு முடிவு செய்துள்ளது. 1.7.1999 முதல் 30.9.1999 வரையிலான கால அளவிற்கான அகவிலைப்படி நிலுவைத்தொகை பணியாளர்களின் வருங்கால வைப்பு நிதிக் கணக்கில் வரவு வைக்கப்படவேண்டும். வருங்கால வைப்பு நிதிக் கணக்கில் அவ்வாறு வரவு வைக்கப்படும் தொகை 1.6.2000-க்குப் பிறகு, தற்காலிக முன்பணத்திற்கு / பகுதி இறுதித்தொகை பெறுவதற்குக் கணக்கில் எடுத்துக் கொள்ளத்தக்கதாகும். மேற்கண்ட தொகைக்கு 1.11.1999 முதல் நடைமுறையிலுள்ளவாறு வட்டி கணக்கிடப்படும். வருங்கால வைப்புநிதிக் கணக்கு இல்லாதவர்கள், வருங்கால வைப்பு நிதிக் கணக்கிற்கான சந்தாத்தொகை வசூலிப்பது நிறுத்தப்பட்டுள்ளவர்கள் ஆகியோரைப் பொறுத்த மட்டில், இந்த நிலுவைத் தொகை ரொக்கமாக வழங்கப்படும்.

5. பல்வேறு நிலைகளில் அடிப்படைச் சம்பளம் பெறும் பணியாளர்களுக்கு அனுமதிக்கத்தக்க திருத்தப்பட்ட அகவிலைப்படி குறித்த விவரங்கள், இந்த ஆணையின் இணைப்பின் (1) பெரும் பத்தியில் குறிப்பிடப்பட்டுள்ள இரண்டு அடிப்படைச் சம்பள நிலைகளுக்கிடையே வருமாயின், அத்தகைய இனங்களில் திருத்தப்பட்ட அகவிலைப்படி சதவீத வீதங்களில் கணக்கிடப்பட வேண்டும். திருத்தப்பட்ட அகவிலைப்படியைக் கணக்கிடுகையில், ஒரு ரூபாய்க்குக் குறைவாக வரக்கூடிய தொகை, அது 50 காசும் அதற்கு மேலும் இருக்குமாயின் அது அடுத்த ஒரு ரூபாயாக கொள்ளப்படவேண்டும். அதுவே, 50 காசுக்குக் குறைவாக இருந்தால் அது விட்டுவிடப்படவேண்டும்.

6. இந்த ஆணையில் அனுமதிக்கப்பட்ட திருத்தப்பட்ட அகவிலைப்படி, மானியம் பெறும் கல்வி நிறுவனங்களில் பணிபுரியும் ஆசிரியர்களுக்கும், ஆசிரியர் அல்லாத பிற பணியாளர்களுக்கும், உள்ளாட்சி மன்றங்களின் பணியாளர்களுக்கும், பல்கலைக்கழக மானியக்குழு / அனைத்திந்திய தொழில் நுட்பக் கல்விக்குழு சம்பள வீதங்களின் கீழ்வரும் பணியாளர்களுக்கும், அரசு மற்றும் மானியம் பெறும் பல் தொழில் பயிற்சிப் பள்ளிகள், சிறப்பு பட்டயப் படிப்பு நிறுவனங்களில் பணியாற்றும் ஆசிரியர்கள் / உடற்பயிற்சி இயக்குநர்கள் / நூலகர்கள் ஆகியோருக்கும், வருவாய்த் துறையிலுள்ள கிராம உதவியாளர்களுக்கும், மதிய உணவு அமைப்பாளர்கள், சிறுவர் நல அமைப்பாளர்கள், அங்கன்வாடிப் பணியாளர்கள் ஆகியோருக்கும் பொருந்தும்.

7. இச்செலவு, சம்பந்தப்பட்ட கணக்குத் தலைப்பின் பெருந்தலைப்பு துணைப் பெருந்தலைப்பு, சிறு தலைப்பு உட்தலைப்பின் கீழ்வரும் "03. அகவிலைப்படி" என்ற நுணுக்கத் தலைப்பில் பற்று எழுதப்படவேண்டும்.

8. பட்டிகள் அனுப்பப்படும்போது, முதன்மை மாநிலக் கணக்குத் துறைத் தலைவர் (கணக்குகள் மற்றும் உரிமைத்தொகை), சென்னை - 8 அவர்களிடமிருந்து அனுமதிக்காகக் காத்திராமல், திருத்தப்பட்ட அகவிலைப்படியை வழங்குமாறு கருவூல அலுவலர்கள் / சம்பளக் கணக்குகள் அலுவலர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

(ஆளுநரின் ஆணைப்படி)

பி.வி. இராசாராமன்
அரசுச் செயலாளர்

பெறுநர்

அனைத்து அரசுச் செயலாளர்கள்
செயலாளர், சட்டமன்றப் பேரவைச் செயலகம், சென்னை - 9
காப்பாளர், ஆளுநர் மாளிகை, ராஜ் பவன், சென்னை - 32, ஆளுநரின் செயலகம், ராஜ் பவன், சென்னை - 32

அனைத்துச் செயலகத் துறைகள் (அலுவலக நடைமுறை மற்றும் பட்டியல் பிரிவுகள்)
நிதித் துறையிலுள்ள பிரிவுகள் அனைத்தும்.
அனைத்துத் துறைத் தலைவர்கள்
அனைத்து மாவட்ட ஆட்சியர்கள் மற்றும் பலர்

பிரிவு அலுவலர்
(எ. இராமநாதன்)

8. ஊரக வளர்ச்சித் துறை

5.10.99 அன்று இத்துறை ஆய்வு செய்யப்பட்டது.

ஊரக வளர்ச்சித் துறை - தலைமைச் செயலகம்

தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத்துறைச் செயலாளர் அவர்களின் ஆட்சிமொழித் திட்ட ஆய்வு நாள் : 5.10.99

1. வருகைப்பதிவேடுகள் & தொடர் குறிப்புப் பதிவேடுகள் விடுப்புகள் அலுவல் பணி அனுமதி / தகவலின்மை பெயர்களின் தலைப் பெழுத்துகள் பதவிப் பெயர்கள் ஆகியவை : ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன

2. கையொப்பங்கள்

100 பேர்களில் 27 பேர் தமிழில் 73 பேர் ஆங்கிலத்தில்: ஒப்பமிடுகின்றனர்

பற்றொப்பப் பதிவேட்டில் 116 பேர்களில் 9 பேர் தமிழில் 107 பேர் ஆங்கிலத்தில் : ஒப்பமிடுகின்றனர்

3. தற்செயல் விடுப்புகள்

1. பிரிவு அலுவலர்கள் பலருடைய விண்ணப்பங்கள் : ஆங்கிலத்தில் உள்ளன

2. தற்செயல் விடுப்பு விண்ணப்பப் பதிவுத்தாள்கள், பதிவுக்குறிப்புகள்

| | | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 4. | ஆணைகள் (1.1.99 முதல் 24.9.99 வரை) | | | |
| | அலுவலக ஆணைகள் | 8 | 19 | 27 |
| | அலுவலக நடைமுறை ஆணைகள் | 14 | 792 | 806 |
| 5. | அரசாணைகள் (1.1.99 முதல் 30.9.99 முடிய) | | | |
| | பத்தாண்டு | 120 | 317 | 437 |
| | இருபதாண்டு | 175 | 59 | 234 |
| | முப்பதாண்டு | 12 | 8 | 20 |

| | | | |
|---|---|---|---|
| நாற்பதாண்டு | 4 | 29 | 33 |
| நிலை | 72 | 135 | 207 |
| வாலாயம் | 97 | 339 | 436 |
| | 480 | 887 | 1367 |

6. பணிப்பதிவேட்டில் பதிவுகள் :

| | | |
|---|---|---|
| அ. பணியாளர் தொடர்பான விடுப்பு வழங்கல், ஊதிய உயர்வு, பணியிட மாற்றம், பணிவரன் முறை, போன்ற அனைத்து ஆணைகளும் | : | ஆங்கிலத்தில் உள்ளன |
| ஆ.பணிப்பதிவேட்டில் இவற்றின் பதிவுகள் அனைத்தும் | : | ஆங்கிலத்தில் உள்ளன. |

7. பதிவேடுகள் :

| | | |
|---|---|---|
| பணப்பதிவேடு, கொடுபடாப் பணப்பதிவேடு, காசோலைப் பதிவேடு, வங்கிப் பதிவேடு, துணைப் பணப்பதிவேடு, பணம் வழங்கல் பதிவேடு, முன்பணப் பிடித்தப் பதிவேடுகள் உள்ளிட்ட 10 பதிவேடுகள் | : | முழுமையும் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன. இவை தவிர தமிழ்ப் பதிவேடு - 1 |

8. கடிதப் போக்குவரத்து :

| | தமிழில் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| அ. பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 2676 | 353 | 3029 |
| ஆ.துறைத்தலைமை அலுவலகங்களுக்கு | 9597 | 696 | 10293 |
| இ. சார்நிலை, சமநிலை அலுவலர்களுக்கு | 933 | 240 | 1173 |
| ஈ. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 606 | 375 | 981 |
| மொத்தம் | 13812 | 1664 | 15476 |

9. வரப்பெற்ற கடிதங்கள்

| | | | |
|---|---|---|---|
| அலுவலகப் பணியாளர்கள் சார்நிலை அலுவலகம் ஆகியோரிடமிருந்து வரப் பெற்றவை | 6839 | 2087 | 8926 |

10. தட்டச்சுப் பொறிகள்

| | | | |
|---|---|---|---|
| தட்டச்சர்கள் (நேர்முக எழுத்தர் உட்பட) | : | 17 | |
| தமிழ்ப் பொறிகள் | : | 6 | உள்ளன |
| ஆங்கிலப் பொறிகள் | : | 7 | |

65 விழுக்காட்டின்படி 9 தமிழ்ப் பொறிகளும் 4 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளும் இருக்க வேண்டும்.

கூடுதலாக உள்ள 3 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளைத் திரும்ப ஒப்படைக்க வேண்டும்.

11. தட்டச்சுச் செய்த பக்கங்கள் (கடந்த 6 திங்களில்)

| | | |
|---|---|---|
| தமிழ் | .. | 21342 |
| ஆங்கிலம் | .. | 14472 |
| | | ------- |
| கூடுதல் | .. | 35814 |
| | | ------- |

இது தொடர்பாக அமைச்சர் கோ.சி. மணி, அவர்கட்கும், செயலர் இரமேசு சந்திர பாண்டாவுக்கும் 8.10.99 இல் நேர்முக மடல்கள் அனுப்பப்பட்டன.

5.11.99 அன்று அத்துறையின் அரசு துணைச் செயலாளர் அனைத்து அலுவலர்கட்கும் அறிவுரை வழங்கி ஒரு மடல் எழுதியுள்ளார்.

அனுப்புநர்

திரு. ஜெ. வரதராஜன், பி.ஏ.,
அரசு துணைச் செயலாளர்

பெறுநர்

ஊரக வளர்ச்சி இயக்குநர்
சென்னை-15. (பெயரில்)

அய்யா,

பொருள் : தமிழ் வளர்ச்சி - தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் - ஊரக வளர்ச்சித் துறை அரசுக்கு அனுப்பப்படும் செயற்குறிப்புகளை தமிழில் அனுப்புதல் குறித்து.

ஊரக வளர்ச்சித் துறையில் தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் பற்றி 5.10.99 அன்று தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை செயலாளரால் ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. அப்பொழுது விலக்களிக்கப்பட்ட இனங்களைத் தவிர மற்ற இனங்களில் ஆணைகள் / கடிதங்கள் தமிழில் வெளியிடப்பட வேண்டும் என்று தெரிவிக்கப்பட்டது. மேலும் ஊரக வளர்ச்சித் துறையில் தமிழ் ஆட்சி மொழித் திட்டம் மூன்று மாதத்திற்குள் முழுமையாகச் செயல்படுத்தப்படும் என்று அந்த ஆய்வுக் கூட்டத்தில் உறுதியளிக்கப்பட்டது. எனவே கருத்துருக்கள், தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தை முழுமையாக செயல்படுத்த தங்கள் அலுவலகத்திலிருந்து அரசுக்கு அனுப்பப்படும் செயற்குறிப்புகள் அனைத்தும் (விலக்களிக்கப்பட்ட இனங்கள் தவிர) தமிழில் அனுப்ப உரிய நடவடிக்கையை உடனடியாக மேற்கொள்ளுமாறு கேட்டுக்கொள்ள பணிக்கப்பட்டுள்ளேன். இக்கடிதம் கிடைத்தமைக்கு ஒப்புகை அனுப்பும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள

அரசு துணைச் செயலாளருக்காக

நகல்

அனைத்து அலுவலர்கள், ஊரக வளர்ச்சித் துறை, சென்னை - 9

அனைத்துப் பிரிவு, ஊரக வளர்ச்சித் துறை, சென்னை - 9

15.11.99 இல் ஊரக வளர்ச்சித் துறை அமைச்சரே தன் இரு செயலாளர்கட்கும் மடல் எழுதினார்.

அன்புடையீர்,

மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் 14.10.1999 நாளிட்ட மடல் மற்றும் அதன் இணைப்புகளின் படிகளை இத்துடன் அனுப்புகின்றேன்.

2. நமது துறையில் கோப்புகள் அனைத்தும், தமிழிலேயே துவக்கப்பட்டு, தமிழிலேயே கையாளப்பட வேண்டுமென, நான் பலமுறை தங்களிடம் அறிவுறுத்தியுள்ளேன். எனது அறிவுரைகள் புறக்கணிக்கப்பட்டு, அரசாணைகளும், சுற்றறிக்கைகளும் தொடர்ந்து ஆங்கிலத்தில் வெளியிடப்படுவது கண்டு நான் மிகுந்த வேதனைப்படுகிறேன். முன் உதாரணமாக இருக்க வேண்டிய தலைமைச் செயலகமே, தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை அவமதிப்பதும், ஆட்சி மொழி தொடர்பான அரசாணைகளை மீறுவதும் பொறுத்துக் கொள்ளக் கூடியதல்ல. இனியாகிலும், அனைத்துக் குறிப்புகளும், கடிதத் தொடர்புகளும், அரசாணைகளும் தமிழிலேயே வெளியிடப்படுவதை உறுதி செய்து கொள்ள, உரிய நடவடிக்கை மேற்கொள்ளுமாறு கேட்டுக்

கொள்கிறேன். ஆட்சிமொழிச் சட்டத்தையும் அது தொடர்பான அரசாணைகளையும் பின்பற்றத் தவறுவோர் மீது உரிய ஒழுங்கு நடவடிக்கை எடுக்குமாறும் கேட்டுக் கொள்கிறேன்.

3. இம்மடலைப் பெற்றுக் கொண்டது குறித்தும், இதன் மீது தாங்கள் எடுத்துள்ள நடவடிக்கை பற்றியும், எனக்குத் தெரிவிக்குமாறும் கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள,
(ஓம்/-)
(கோ.சி. மணி)

பெறுநர்

அரசுச் செயலாளர்
நகராட்சி நிர்வாகம் (ம) குடிநீர் வழங்கல் துறை
தலைமைச் செயலகம், சென்னை - 600 009
அரசுச் செயலாளர்
ஊரக வளர்ச்சித் துறை
தலைமைச் செயலகம், சென்னை - 600 009

/உண்மை நகல்/

இதில் ஒரு சிறப்பினையும் நான் சொல்லாமலிருக்க முடியாது. பொன்விழா கிராம சுய வேலை வாயப்புத் திட்டம் குறித்து ஓர் அரசாணை (எண்.137 / 21.9.99). 68 பக்கங்களைக் கொண்ட இந்த ஆணை, அது தொடர்பான விளக்கங்கள் யாவும் நல்ல தமிழில் முறையாகத் தரப்பட்டுள்ளன. 'தமிழால் முடியும்' என்றும் காட்டியிருக்கிறார்கள். தமிழ்க்குடிமகனாலும் முடியும் என்றும் காட்டியிருக்கிறார்கள். இதனை மனமுவந்து பாராட்டி வரவேற்கத்தானே வேண்டும்!

எப்படி நாம் செயலாற்றினாலும் சில அலுவலர்கள் தம் போக்கை மாற்றிக் கொள்ளவே இல்லை. ஊரக வளர்ச்சி இயக்குநர் அலுவலகக் கணக்கு அலுவலர் அத்தகையவர். அது தொடர்பாக எங்கள் இயக்குநர் ஊரக வளர்ச்சித் துறை ஆணையர்க்கு எழுதிய மடல் இது: (21.12.99)

"ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் குறித்து அரசால் பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஆட்சிமொழித் திட்டம் அனைத்து அரசு அலுவலகங்களிலும் முழுமையாக நிறைவேற்றப்பட வேண்டுவதன் நோக்கங்களுள் கடிதப் போக்குவரத்து அனைத்தும் தமிழிலேயே அமைய வேண்டும் என்பது இன்றியமையாத ஒன்றாகும். தங்களின் கட்டுப்பாட்டிலுள்ள ரெட்டியார் சத்திரம், ஊராட்சி ஒன்றிய அலுவலகம், மாவட்ட ஆட்சியர் அலுவலகம் மற்றும் திண்டுக்கல் ஊராட்சி ஒன்றிய அலுவலகங்களிலிருந்து அனுப்ப வேண்டிய அறிக்கைகளை ஆங்கிலத்தில் அனுப்பிவைக்குமாறு சென்னை, ஊரக வளர்ச்சி இயக்குநர்

அலுவலகக் கணக்கு அலுவலர் (தணிக்கை) அவர்களால் வேண்டப்பட்டுள்ளதாகவும், இதனை அவ்வலுவலகத்தை ஆட்சிமொழி திட்டச் செயலாக்கம் குறித்து ஆய்வு செய்யும்போது கண்டறிந்ததாகவும் பார்வையில் காணும் கடிதத்தில் திண்டுக்கல் மாவட்டத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர் தெரிவித்துள்ளார். இதுபோன்று ஆங்கிலத்தில் அறிக்கைகளை அனுப்புமாறு வேண்டுவது ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் அக்கறையின்மையைக் காட்டுவதுடன் அரசாணைக்குப் புறம்பாகச் செயற்படுவதாகவும் கருத வேண்டியுள்ளது.

எனவே தாங்கள் இது குறித்து நேரடிக் கவனம் செலுத்தி ஆட்சிமொழிச் செயலாக்கத்தில் விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ள இனங்கள் தவிர பிற அனைத்து இனங்களிலும் நடவடிக்கைகள் தமிழிலேயே அமைய வேண்டும் என அறிவுரை வழங்குமாறு வேண்டுகிறேன். அவ்வாறு அறிவுரை வழங்கப்பட்டதன் படியினை இவ்வியக்ககத்திற்கு அனுப்புமாறும் அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்."

நான் எழுதிய நேர்முக மடல்களுக்குப் பலவகையிலும் பயன் கிடைத்தது. பொறுப்பான விடையும் கிடைத்தது. ஊரக வளர்ச்சித் துறையில் மட்டும் 4 மாத ஆய்வில் 75.18% ஆணைகள் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன என்பதைத் துறை அமைச்சரே ஆய்வு செய்து உறுதிப்படுத்தினார்.

'தமிழை ஆட்சிமொழியாக முழுமையாக ஊரக வளர்ச்சித் துறை கடைப்பிடிக்கும்' என்று அமைச்சர் 9.11.2000 அன்று எழுதிய மடல் வழி உறுதி செய்தார் என்பது மகிழ்ச்சிக்குரியது. அவரது மடல் இணைக்கப்பட்டுள்ளது.

ஊரக வளர்ச்சி (அநப)த் துறை

கடித எண்.27205/அநப/2000-7 நாள் 9.11.2000

பெறுநர்

முனைவர் மு. தமிழ்க்குடிமகன்

மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர், தலைமைச் செயலகம், சென்னை - 600 009.

மதிப்பிற்குரிய ஐயா,

வணக்கம்

பொருள் : ஆட்சிமொழித் திட்ட செயலாக்கம் - ஊரக வளர்ச்சித் துறை ஆய்வு முடிவுகள் குறித்துக் கருத்துரைகள் பற்றி அறிக்கை அனுப்புதல்.

பார்வை : தங்களின் நேமுக.எண் அ.நி-99/2000 நாள் 20.10.2000

பார்வையில் கண்ட தங்களின் கடிதம் கிடைக்கப்பெற்றேன். ஊரக வளர்ச்சித் துறையில் தமிழ் மொழியை ஆட்சி மொழியாகப் பயன்படுத்துவது குறித்து, ஊரக வளர்ச்சித் துறைச் செயலர் மற்றும் ஊரக வளர்ச்சி இயக்குநர் ஆகியோருடன் 9.11.2000 அன்று ஆய்வு மேற்கொண்டேன். 1.7.2000 முதல் 31.10.2000 வரை கடந்த நான்கு மாதத்தில் வெளியிடப்பட்ட அரசாணைகள் குறித்து நான் ஆய்வு மேற்கொண்டேன். 950 அரசாணைகள் வெளியிடப்பட்டன என்பதை அறிந்தேன். அதில் 714 ஆணைகள் தமிழிலும் 236 ஆணைகள் ஆங்கிலத்திலும் இருந்தன. அதன்படி, தமிழில் வெளியிடப்பட்ட ஆணைகள் 75.18 சதவீதமாகும்.

2. மேலும், ஆணைகள் ஆங்கிலத்தில் ஏன், எதற்கு வெளியிடப்படுகின்றன என்பதை ஆய்ந்தேன். கீழ்க்கண்ட காரணங்களுக்காக ஆணைகள் ஆங்கிலத்தில் வெளியிடப்படுகின்றன என்பதைக் கண்டறிந்தேன். (அ) மத்திய அரசு நிதியுதவி வழங்கும் திட்டங்களுக்கு, தமிழ்நாடு அரசு வெளியிடும் ஆணைகள் மத்திய அரசக்கு அனுப்பப்படவேண்டும். அவை ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டுள்ளன. இவை குறிப்பாக இந்திரா குடியிருப்புத் திட்டம் மற்றும் பிரதமரின் கிராம வளர்ச்சித் திட்டம் போன்ற திட்டங்களாகும், (ஆ) தமிழ்நாட்டில் வெளிநாட்டு உதவியுடன் செயற்படுத்தப்படும் டேனிடா உதவியளிக்கும் குடிநீர் வழங்கல் மற்றும் துப்புரவுத் திட்டம் போன்றவை தொடர்பான ஆணைகள், (இ) தமிழ்நாடு ஊராட்சிகள் சட்டம் தொடர்பாக சட்டத் துறை ஒப்புதல் அளிப்பவை (சட்டத் துறை ஒப்புதல் அளிக்கும் சட்ட திருத்தம் மற்றும் விதிகள் திருத்தம் அனைத்தும் ஆங்கிலத்தில் இருக்கிறது என்பதை சுட்டிக்காட்டுவது முக்கியமாகும். வெளியிடப்படும் விதிகள் அனைத்தும் குறுகிய காலத்தில் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட ஊரக வளர்ச்சித் துறை தக்க நடவடிக்கை மேற்கொள்கிறது) மற்றும் (ஈ) பணியமைப்பு குறித்தவை, ஒழுங்கு நடவடிக்கை போன்ற ஆணைகளும் ஆங்கிலத்தில் வெளியிடப்படுகின்றன.

3. தமிழில் வெளியிடப்பட்ட 714 ஆணைகளை ஆய்வு செய்த போது, உள்ளாட்சி அமைப்பு பிரதிநிதிகளும் பயன்பெறும் வகையில் தமிழில் வெளியிடப்பட்ட ஆணைகள் உள்ளன என்பதை அறிந்தேன். மேலும், மாவட்ட ஊராட்சி, ஊராட்சி ஒன்றியம் மற்றும் கிராம ஊராட்சி பிரதிநிதிகளுக்கு அனுப்பப்படும் கடித போக்குவரத்து அனைத்தும் தமிழில் உள்ளதை அறிந்தேன். ஊரக வளர்ச்சித் துறையிலிருந்து வரப்பெறும் அனைத்து சுற்றாணைகளும் தமிழில் அனுப்பப்படும் அனைத்து உத்தரவுகளும் தமிழில் அனுப்பப்படுகின்றன. மேலும், தமிழ்நாடு ஊராட்சிகள் சட்டம் தமிழில் வெளியிடப்படுகின்றன என்பதை தெரிவிக்க விரும்புகிறேன். உள்ளாட்சி அமைப்புகளுக்கு வழங்கப்பட்ட அதிகாரங்கள் மற்றும் பொறுப்புகள் குறித்த ஆணைகள் அனைத்தும் தமிழில் வெளியிடப்பட்டன. புத்தகமாக தயாரிக்கப்பட்ட ஆணைகளின் தொகுப்பு பார்வைக்காக இணைப்பில் வைக்கப்பட்டுள்ளது.

4. ஊரக வளர்ச்சித் துறையின் குறிக்கோள் ஊரக மக்களின் தேவைகளை நிறைவேற்றுவதேயாகும். அரசாணைகள், அரசு திட்டங்கள், அரசு கொள்கைகள் தமிழில்

இருந்தால் தான் ஊரக மக்கள் அதனைப் புரிந்து கொள்ள முடியும் என்பதை உணர்ந்து தமிழை ஆட்சி மொழியாக முழுமையாக ஊரக வளர்ச்சித் துறை கடைப்பிடிக்கும் என்று உறுதியளிக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள
(கோ.சி. மணி)

## 9. தொழில் துறை

இத்துறையில் 9.5.2000 அன்று ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. அதன்பின் கலந்துரையாடல் குறிப்பும் தரப்பட்டது. இதனை ஏற்று, தொழில்துறை 11.5.2000 அன்று தன்துறையில் பணியாற்றும் அரசு அலுவலர்கள் மற்றும் அனைத்துப் பிரிவு ஊழியர்கட்கும் அலுவலக ஆணை ஒன்று பிறப்பித்துள்ளது.

அதில் அனைத்தும் தமிழில் பேணப்பட வேண்டும் என்று தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. அத்துறையும் 11.5.2000 அன்று ஓர் அலுவலக ஆணை பிறப்பித்தது.

தமிழ்நாடு அரசு

தொழில் துறை
தலைமைச் செயலகம், சென்னை - 600 009

அலுவலக ஆணை எண்.9/அநமு2.2/2000, நாள்:11.5.2000

பொருள் : தமிழ் வளர்ச்சி - ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் குறித்து 9.5.2000 அன்று மேற்கொள்ளப்பட்ட ஆய்வின்படி, தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தை செயல்படுத்துவது குறித்து ஆணைகள் வெளியிடப்படுகின்றன.

தமிழ் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம் குறித்து 9.5.2000 அன்று செயலாளர் தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை மற்றும் செயலாளர் தொழில் துறை அவர்களால் மேற்கொள்ளப்பட்ட ஆய்வின் போது எடுக்கப்பட்ட முடிவுகளின் படி பின்வரும் ஆணைகள் பிறப்பிக்கப்படுகின்றன.

1. வருகைப்பதிவேட்டில் அனைவரும் தவறாமல் தமிழிலேயே கையொப்பம் இட வேண்டும். வருகைப்பதிவேடு மற்றும் தொடர் குறிப்பேடு முதலியவை தமிழிலேயே பராமரிக்கப்பட வேண்டும்.

2. தற்செயல் விடுப்பு, மற்றும் அனைத்து விடுப்புகளும் தமிழிலேயே சமர்ப்பிக்கப்பட வேண்டும். விடுப்பு விண்ணப்பங்கள் மீதான ஆணைகளும் தமிழிலேயே இருக்கவேண்டும்.

3. பற்றொப்பத்தில் (Acquittance) தமிழில் மட்டுமே கையொப்பம் இடவேண்டும்.

4. தன்பதிவேடு, தொடர் குறிப்பேடு, கால முறைப்பதிவேடு மற்றும் தமிழ்நாடு கருவூலப் பதிவேடு, வழங்கப்படாச் சம்பளப் பதிவேடு, பணக்கணக்குப் பதிவேடு, வங்கிப் பதிவேடு, முன் ஊதியச் சான்றிதழ் பதிவேடு, ஊதிய உயர்வுப் பதிவேடு, கடன்களும் முன் பணங்களும் குறித்த பதிவேடு, வாடகைப் பிடித்தப் பதிவேடு, இயக்கூர்திகள் பதிவேடு, வீடுகட்டும் முன் பணம் வழங்குதல் பதிவேடு, தொலை பேசிப் பதிவேடு, எழுது பொருள் இருப்பு விவரப் பதிவேடு முதலிய அனைத்துப் பதிவேடுகளும் தமிழிலேயே பராமரிக்கப்பட வேண்டும்.

5. சார்நிலை, சமநிலை அலுவலர்கள் மற்றும் அரசின் மற்ற அலுவலகங்களுக்கு அனுப்பப்படும் வரைவுகள் (விதி விலக்குப் பெற்ற இனங்கள் தவிர) அனைத்தும் தமிழிலேயே வெளியிடப்படவேண்டும்.

6. விதிவிலக்குப் பெற்ற மற்றும் சிக்கலான இனங்கள் தவிர ஏனைய அரசு ஆணைகள் அனைத்தும் தமிழில்தான் வெளியிடப்படவேண்டும்.

7. மாற்றல், விடுப்பு ஒப்புவிப்பு, இருவழிப் பயணச் சலுகை, ஊதிய உயர்வு, ஊதியம் அறுதியிடல், பணி சரிபார்த்தல், வேற்றுப்பணி அயற்பணி குறித்த விவரங்கள் தமிழிலேயே எழுதப் படவேண்டும்.

2. 'எங்கும் தமிழ், எதிலும் தமிழ்' என்ற அரசின் கொள்கைக்கேற்ப தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தை முனைப்புடன் செயல்படுத்த ஏதுவாக மூன்று மாதங்களில் இப்பொருள் குறித்து மறு ஆய்வு செய்யப்பட இருப்பதால், அனைத்துப் பிரிவு அலுவலர்களும், இதில் தனிக் கவனம் செலுத்தி கணிசமான முன்னேற்றத்தை காண்பிக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

எஸ்.ஏ.எம். ஹைதர் அலி
அரசு இணைச் செயலாளர்

பெறுநர்

நகல்: இயக்குநர், தமிழ் வளர்ச்சித் துறை, குறளகம், சென்னை - 108

// ஆணைப்படி அனுப்பப்படுகிறது //

பிரிவு அலுவலர்

## 10. கைத்தறி (ம) கதர்த்துறை

17.7.98 அன்று அனைத்துத் துறைச் செயலர்கட்கும் ஒரு மடல் எழுதினேன். அதனைக் கருத்திற் கொண்டு கைத்தறி (ம) கதர்த் துறைச் செயலர் திருமதி ஜெயந்தி, இ.ஆ.ப. தன்

துறையில் பணியாற்றும் அனைவர்க்கும் ஒரு சுற்றறிக்கை அனுப்பியுள்ளார்.

அதனைப் பாருங்கள்

தமிழ்நாடு அரசு

கைத்தறிகள், கைவினைப்பொருட்கள் துணி நூல் மற்றும் கதர்த் (ஏ1) துறை.

அலுவலக ஆணை எண். 3, நாள் 24.7.98

பொருள் : அலுவலக நடைமுறை - கைத்தறிகள், கைவினைப் பொருட்கள், துணி நூல் மற்றும் கதர்த் துறை - அரசாணைகள் தமிழில் வெளியிட அறிவுரைகள் - வெளியிடப்படுகிறது.

மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் தமது 17.7.98 நாளிட்ட கடிதத்தில் இத்துறையின் செயலாளர் அவர்களின் கவனத்திற்குக் கீழ்க்கண்ட கருத்துக்களைக் கொண்டு வந்துள்ளார்கள்:-

"அரசாணைகள் அனைத்தும் தமிழில் வெளிவர வேண்டும் என்றே அரசாணை உள்ளது என்றும், ஒரு வேளை ஆங்கிலத்தில் அரசாணை வெளியிட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால் கூட, அதே அரசாணை தமிழில் சேர்த்து வெளியிடப்பட வேண்டும் என்பதும் நீண்டகாலமாக ஓர் அரசாணையால் வலியுறுத்தப்பட்டுள்ளது. ஆனால் இவ்வளவு காலமாகியும் இதற்கென்று ஒரு தனித்துறை இயங்கி, தக்க முயற்சிகளையும் மேற்கொண்ட பிறகும், தலைமைச் செயலகத்தில் 4 துறைகள் தவிர, எஞ்சிய 27 துறைகளிலும் இந்த நடைமுறை பின்பற்றப்படவில்லை. இது மிகவும் வருத்தத்திற்குரியது என்றும், இது மாண்புமிகு முதல்வர் அவர்களின் கவனத்திற்கும், நடவடிக்கைக்கும் கொண்டு செல்லப்படுகிறது என்பதையும் தெரிவித்துள்ளார்கள். அதிலும், 1.4.97 முதல் 31.12.97 முடிய வெளியிடப்பட்ட அரசாணைகளில் தொகுப்பைத் தொடர்புடைய துறையின் பார்வைக்கும் ஆய்வுக்கும் அனுப்பி வைக்க வேண்டும் என்று கேட்டும், 15 துறைகளைத் தவிர ஏனைய துறைகள் இவற்றை அனுப்பி வைக்கவில்லை என்றும் தெரிவித்துள்ளார்கள். மேலும், தலைமைச் செயலகம் ஆட்சிமொழித் திட்டத்தைச் செயல்படுத்த முனையவில்லை என்பதே இப்போதுள்ள உண்மையாகும் என்றும், இதனைக் கருத்திற்கொண்டு உடனடியாக, துறையின் செயலாளரால் அமர்த்தப்பட்ட "பற்றாளர்" (Nodal Officer) வாயிலாக 1.4.97 முதல் ஒன்பது மாதங்களில் வெளியிடப்பட்ட அரசாணைகளை உடன் அனுப்பி வைக்க வேண்டும் என்றும் இனிமேல் வருகின்ற அரசாணைகள் தமிழில் கட்டாயம் வெளியிடப்படும் என்பதையும் உறுதி செய்யுமாறு வேண்டியுள்ளார்.

மேலே பத்தி 1ல் தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் வெளியிட்ட ஆணைக்கிணங்க, கீழ்க்காணும் அறிவுரைகளை அனைத்துப் பிரிவினரும் பின்பற்ற வேண்டும் என்று அறிவுறுத்தப்படுகின்றன: -

1. அனைத்து அரசாணைகள் தமிழிலேயே வெளியிடப்பட வேண்டும். ஆங்கிலத்தில் வெளியிடப்பட வேண்டிய அரசாணைகளுக்கு அந்த ஆணைகளுடன் தமிழிலும் சேர்த்தே ஆணைகள் வெளியிடவேண்டும்.

2. இத்துறையின் "பி-பிரிவு", 1.4.97 முதல் 31.12.97 உடன் முடிவடைந்த அனைத்துப் பிரிவுகளின் அரசாணைகளையும் ஒன்று திரட்டி, உடனடியாக தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறைக்கு ஒரு வார காலத்திற்குள் அனுப்பி வைக்க வேண்டும் என்றும் அறிவுறுத்தப்படுகின்றது. அனைத்துப் பிரிவுகளும், தங்களுடைய பிரிவுகள் வெளியிட்டுள்ள அரசாணையின் நகல்களை "பி-பிரிவு"க்கு அனுப்பி வைக்குமாறு பணிக்கப்படுகிறார்கள்.

ஜெயந்தி
அரசுச் செயலாளர்

பெறுநர்

அனைத்துப் பிரிவுகள்,
கைத்தறிகள், கைவினைப் பொருட்கள், துணி நூல்
மற்றும் கதர்த்துறை, சென்னை - 9
தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை, சென்னை - 9

நகல் : - செயலரின் தனிச் செயலர் / துணைச் செயலாளரின் நேர்முக உதவியாளர், கைத்தறிகள், கைவினைப்பொருட்கள், துணி நூல் மற்றும் கதர்த்துறை, சென்னை - 9

" அனைத்துச் சார்புச் செயலாளர்கள், கைத்தறிகள், கைவினைப்பொருட்கள், துணி நூல் மற்றும் கதர்த்துறை, சென்னை - 9

" மாண்புமிகு அமைச்சர், தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப்பண்பாடு - நேர்முக உதவியாளர், சென்னை - 9

// ஆணைப்படி அனுப்பப்படுகிறது //

து. பிரதாப் சிங்
பிரிவு அலுவலர்

9.8.99 அன்று இத்துறை ஆய்வு செய்யப்பட்டது. கலந்துரையாடல் குறிப்பினை எம் துறைச் செயலர் வழங்கிய பின், நானே அனைவர்க்கும் நேர்முக மடல் எழுதினேன்.

17.9.99 அன்று கைத்தறித் துறை அமைச்சர் என்.கே.கே. பெரியசாமிக்கும், கதர்த்துறை அமைச்சர் அந்தியூர் செல்வராசுக்கும், இந்த இரு துறைகளின் செயலராக விளங்கிய திருமதி ஜெயந்திக்கும் நேர்முக மடல்கள் வரையப்பட்டன.

உடனடியாகச் செயலர் திருமதி ஜெயந்தி (23.9.99) அவரது துறை சார்ந்த அனைத்து அலுவலர்கட்கும் ஒரு சுற்றறிக்கை அனுப்பியுள்ளார். இது, நல்ல பயனை விளைத்தது எனலாம். அவரது சுற்றறிக்கை இது :

தமிழ் நாடு அரசு

கைத்தறி, கைவினைப்பொருள், துணி நூல் மற்றும் கதர்த் (ஏ1) துறை.

சுற்றறிக்கை எண்.05, நாள் 23.9.99

பொருள் : கைத்தறி, கைவினைப்பொருள் துணி நூல் மற்றும் கதர்த்துறை - அரசாணைகள், பதிவேடுகள், தமிழ்ப்படுத்துதல் - அறிவுரைகள் - வெளியிடப்படுகிறது.

பார்வை : 1. கைத்தறி, கைவினைப்பொருள், துணி நூல் மற்றும் - கதர்த் துறை சுற்றறிக்கை எண்.4, நாள்: 17.9.99

பார்வை ஒன்றில், இனி வரும் காலங்களில் அரசாணைகள், கடிதப் போக்குவரத்து மற்றும் இத்துறையில் பராமரிக்கப்படும் பதிவேடுகள் போன்ற அனைத்து இனங்களிலும் தமிழ் முழுமையாகப் பயன்படுத்தப்பட வேண்டும் எனவும், இனித் தமிழில் இருக்க வேண்டும் என அவர்களை அறிவுறுத்துமாறும் அனைத்துப் பிரிவினரும் அறிவுறுத்தப்பட்டனர். வரும் திசம்பர் முதல் வாரத்தில், இத்துறையில், அமைச்சர், தமிழ் ஆட்சி மொழித்துறை அவர்களால் ஆய்வு நடத்தப்படும்.

2. பார்வை இரண்டில் உள்ள மாண்புமிகு தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் ஆணையின் அடிப்படையில், கீழ்க்காணும் இனங்கள் அனைத்தும் தமிழ் மொழியில் இருக்கவேண்டும் என அறிவுறுத்தப்படுகிறது.

1. வருகைப் பதிவேட்டிலும் பிற பட்டியல்களிலும் தமிழிலேயே கையொப்பமிட வேண்டும்.

2. மத்திய அரசு, பிற மாநிலங்கள், தூதரகங்கள், வெளி நாடுகள் போன்றவற்றிற்கு எழுதப்படும் கடிதங்கள் தவிர, ஏனைய அனைத்துக் கடிதங்களும் தமிழிலேயே எழுதப்படுதல் வேண்டும்.

3. அனைத்து அரசாணைகளும் தமிழிலேயே பிறப்பிக்கப்பட வேண்டும். இன்றியமையாத நேர்வுகளில் மட்டும் தமிழிலேயே பிறப்பிக்கப்படும் அரசாணைகளோடு சேர்த்து ஆங்கிலத்திலும் அரசாணைகள் வெளியிட வேண்டும்.

4. தன் பதிவேடு, காசோலைப் பதிவேடு, பணக்கணக்குப் பதிவேடு, வீடு கட்டும் முன் பணப் பதிவேடு, பொது வருங்கால வைப்பு நிதி பதிவேடு, செவ்வைப் பதிவேடு, முன் ஊதியச் சான்றிதழ் பதிவேடு, சீருந்து முன்பண ஒப்பளிப்புப் பதிவேடு போன்ற பதிவேடுகளும் துறையில் பராமரிக்கப்படும்படி பிற பதிவேடுகளும் தமிழிலேயே இருக்க வேண்டும்.

5. வருகைப் பதிவேட்டில் அலுவலகப் பணியாளர் பெயர்கள், விடுமுறை நாள், அலுவலகப் பணி விவரங்கள் பற்றிய பதிவுகள் மற்றும் ஆய்வுக் குறிப்பேடு தமிழில் இருக்க வேண்டும்.

6. பணிப்பதிவேட்டில் மேற்கொள்ளப்படும் பதிவுகள் அனைத்தும் தமிழில் இருக்கவேண்டும்.

7. விடுப்பு விண்ணப்பங்கள் மற்ற கோரிக்கை மனுக்கள் தமிழில் இருக்க வேண்டும். இதனைப் பிரிவு அலுவலர்கள் கவனிக்க வேண்டும்.

8. கோப்புகளில் குறிப்புகள் வரைவுகள் அனைத்தும் தமிழில் அமைதல் வேண்டும்.

9. அலுவலக நடைமுறை ஆணைகள், மற்றும் ஒப்பளிப்பு ஆணைகள் தமிழில் இருத்தல் வேண்டும்.

10. இரப்பர் முத்திரைகள் இனித் தமிழில் இடுதல் வேண்டும்.

மேற்காணும் அறிவுரைகள் தவறாமல் பின்பற்றப்பட வேண்டும். இதன் மீது எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கை குறித்து எல்லாப் பிரிவுகளும் 20.10.99 அன்று தவறாமல் அளிக்க வேண்டும்.

ஜெயந்தி
அரசுச் செயலாளர்

நகல் : மாண்புமிகு அமைச்சர்,
தமிழ் வளர்ச்சி, பண்பாட்டு துறை, அவர்களின் நேர்முக உதவியாளர், சென்னை - 9

/ஆணைப்படி அனுப்பப்படுகிறது/

து. பிரதாப் சிங்
பிரிவு அலுவலர்

அமைச்சர் என்.கே.கே. பெரியசாமி என் மடலை மேற்கோள் காட்டி அவரது துறைச் செயலர்க்கு மடல் எழுதியுள்ளார்.

பெறுநர்

அரசுச் செயலாளர்
கைத்தறித்துறை, சென்னை - 9

அன்புடையீர் வணக்கம்.

தமிழ் வளர்ச்சி, தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாட்டுத்துறை 9.8.99 அன்று கைத்தறித்துறையில் தமிழ் ஆட்சிமொழியாகப் பயன்படுத்துவது குறித்து ஆய்வு செய்தது. கையெழுத்து, மடல் போக்குவரத்து, அரசாணைகள், பதிவேடுகள், தட்டச்சுப்பொறிகள், கோப்புகள் நடவடிக்கை, அலுவலக நடைமுறை ஆணைகள், ஒப்பளிப்பு ஆணைகள் ஆகியவற்றில் தமிழை முழுமையாகப் பயன்படுத்தவில்லை என்றும், ஆட்சிச் சொல்லகராதி, கழகத் தமிழ்க் கையகராதி, பிழைநீக்கி எழுதும் முறை ஆகிய நூல்கள் துறையில் இல்லை என்றும், ரப்பர் முத்திரைகள் முழுவதுமாகத் தமிழில் பயன்படுத்தப்படவில்லை என்றும், ஆய்வு செய்த அறிக்கையின் விவரத்தை மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு மற்றும் அறநிலைத்துறை அமைச்சர் அனுப்பியுள்ளார். அக்கடிதத்தை இத்துடன் இணைத்துள்ளேன்.

கைத்தறித் துறையில் தமிழை முழுவதுமாகப் பயன்படுத்த தக்க நடவடிக்கை எடுக்கப்படவேண்டும். தமிழை ஆட்சிமொழியாக்க அனைத்து ஏற்பாடுகளும் செய்ய வேண்டும். இதன்மீது எடுத்த நடவடிக்கை விவரத்தை மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களுக்குத் தெரிவிக்கவும்.

அன்பன்
(என்.கே.கே. பெரியசாமி)

நகல்:

முனைவர் மு. தமிழ்க்குடிமகன்
தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் அவர்கள்,
தலைமைச் செயலகம், சென்னை - 9

அமைச்சர் அந்தியூர் செல்வராசு எனக்கு ஒரு மடல் வரைந்தார். அது இதுதான்.

மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமய மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் கனிவான பார்வைக்கு,

வணக்கம்.

தலைமைச் செயலகத்தின் கைத்தறி, கைத்திறன், துணிநூல் மற்றும் கதர்த் துறையில் ஆட்சி மொழியாகத் தமிழைப் பயன்படுத்துதல் குறித்த ஆய்வின் விவரங்கள் அடங்கிய தங்களது கடிதம் கிடைக்கப்பெற்றேன். துறையில் ஒவ்வொரு நடவடிக்கையிலும் முழுமையாக ஆட்சி மொழியினைப் பயன்படுத்தத் துறை அலுவலர்களுக்கு அறிவுறுத்தி உள்ளேன். இனி இத்துறையின் வெளியீடுகள், குறிப்புகள் எல்லாம் தமிழிலேயே இருக்கும் என உறுதி அளிக்கிறேன்.

நன்மதிப்புடன்,

தங்கள் அன்புள்ள,
(ப. செல்வராசு)

தலைமைச் செயலகம் கைத்தறி, கைத்தறித் துணி நூல் மற்றும் கதர்த்துறை

## தமிழ் ஆட்சிமொழித் திட்ட ஆய்வு 9.8.99

கலந்துரையாடல் குறிப்பு

1. தட்டச்சுப் பொறிகள்

இத்துறையில் 7 தட்டச்சுகள் பயன்பாட்டில் உள்ளன.

இவற்றில் தமிழ் ..3
ஆங்கிலம் ..4

விதிமுறைப்படித் தலைமைச் செயலகத்துறைகளில் 65% தமிழ்த் தட்டச்சுகளும், 35% ஆங்கிலத் தட்டச்சுகளுமே இருத்தல் வேண்டும். இதன்படி தற்போது கூடுதலாக உள்ள 2 ஆங்கிலத் தட்டச்சுகளை உடனடியாக எழுது பொருள் துறையில் ஒப்படைத்துவிட்டு இவற்றிற்கீடாகத் தமிழ்த் தட்டச்சுகளைப் பெற்றுக்கொள்ள உடன் நடவடிக்கை எடுக்கப்படல் வேண்டும்.

2. கோப்பு நடவடிக்கைகள்

சுற்றோட்டக் குறிப்புகள், சட்டமன்றவினா தொடர்பான நடவடிக்கைகள், தமிழில் உள்ளன. சில கோப்புகளில் குறிப்புகள், வரைவுகள் தமிழில் எழுதப்படுகின்றன. உயரலுவலர்களின் குறிப்புகளும் ஆணைகளும் தமிழில் உள்ளன. ஆயினும் மிகப்பல கோப்புகளில் குறிப்புகளும், வரைவுகளும் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன. உயரலுவலர்களின் குறிப்புகளும் ஆணைகளும் ஆங்கிலத்தில் உள்ளன.

இவையனைத்தும் இனித் தமிழிலேயே அமைதல் வேண்டும். ஆங்கிலத்தில் எழுதுதல் கூடாது என அனைவருக்கும் அறிவிக்கப்படுதல் வேண்டும். மேலும் அவ்வாறு எழுதப்படும் வரைவுகளை ஏற்காது திருப்பியனுப்பித் தமிழில் எழுதப்பட உறுதியான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படல் வேண்டும்.

3. அலுவலக நடைமுறை ஆணைகள்

இவ்வாணைகள் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிடப்படுகின்றன. மொத்தம் 215 இல் தமிழ் 47, ஆங்கிலம் 168, இனி இவ்வாணைகள் அனைத்தும் தமிழிலேயே வெளியிடப்படல் வேண்டும்.

4. ஒப்பளிப்பு ஆணைகள்

ஈட்டிய விடுப்பு, மருத்துவ விடுப்பு, ஒப்பளிப்பு ஆணைகள் தமிழில் உள்ளன.

ஊதிய உயர்வு, ஒப்பளிப்பு விடுப்பு, விழா முன்பணம், திருமண முன்பணம், வீடுகட்டல் முன்பணம், பொது வருங்கால வைப்பு நிதி முன்பணம் மற்றும் பகுதி இறுதி எடுப்பு, சீருந்து முன்பணம், விடுப்புக்காலப் பயணச்சலுகை முதலிய ஒப்பளிப்பு ஆணைகள் ஆங்கிலத்தில் வெளியிடப்படுகின்றன.

இத்தகைய ஒப்பளிப்பு ஆணைகள் அனைத்தும் தமிழிலேயே வெளியிடப்படுதல் வேண்டும்.

5. இரப்பர் முத்திரைகள்

இரப்பர் முத்திரைகள் தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ளன. பணிப்பதிவேடுகள் கோப்புகள், ஏனைய பதிவேடுகள் ஆகியவற்றில் பெரும்பாலும் ஆங்கில முத்திரைகள் இடப்பட்டுள்ளன.

6. பொதுக்குறிப்பு

ஆட்சிமொழிச் சட்டம் இயற்றப்பட்டு 42 ஆண்டுகளுக்கும் மேலாகிவிட்டது. தலைமைச் செயலகத் துறைகளில் தமிழ்ப் பயன்பாடு இன்னும் முழுமையாக அமையவில்லை. மொத்தத்தில் நிருவாக நடைமுறையில் தமிழ் குறைந்த அளவிலேயே பயன்படுத்தப்படும் நிலை உள்ளது.

மேற்கூறப்பெற்ற அனைத்து இனங்களிலும் தமிழ் முழுமையாகப் பயன்படுத்தப்பட இத்துறை முனைப்பான நடவடிக்கைகளை உடன் மேற்கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். அத்துடன் தொடர்புடைய துறைத் தலைமை அலுவலர்களிடமிருந்து வரப்பெறும் கடிதங்கள் தமிழில் அமைந்திடவும் இத்துறை தொடர்பான அனைத்து

அலுவலகங்களிலும் தமிழ் முழுமையாகப் பயன்படுத்தப்படவும் உரிய நடவடிக்கைகளை உடன் மேற்கொள்ளுதல் வேண்டும்.

11. போக்குவரத்துத்துறை

17.7.98 அன்று செயலர் திரு. தேவேந்திரநாத் சாரங்கிக்கு ஒரு நேர்முக மடல் வரைந்தேன். அவர் 21.7.98 இல் எனக்குத் தந்த விடையைப் பார்த்தால் நாம் அதிர்ச்சியில் உறைந்து போவோம். அந்த ஒரே ஆணையையும் இணைத்து அனுப்பியிருந்தார்.

நேர்முக கடித எண். 13849/அந2/98 நாள் : 21.7.98

மதிப்பிற்குரிய அய்யா,

பொருள் : அலுவலக நடைமுறைகள் - அரசாணைகள் - தமிழில் வெளியிட அறிவுரைகள் - அரசாணைகள் அனுப்பிவைப்பது - தொடர்பாக.

பார்வை : தங்கள் நேர்முக கடித நாள் : 17.7.98

தங்கள் நேர்முக கடிதத்திற்கிணங்க கீழ்க்காணும் விவரங்களை தங்களது மேலான பார்வைக்கு அனுப்புகிறேன்.

2. போக்குவரத்துத் துறையில் 1.4.1997 முதல் 31.12.97 வரையில் வெளியிடப்பட்டுள்ள அரசாணைகளின் எண்ணிக்கை மொத்தம் 563. அதில் தமிழில் வெளியிடப்பட்ட அரசு ஆணை ஒன்றாகும். (நகல் இணைக்கப்படுகிறது)

3. மேலும், இனி வருங்காலங்களில் போக்குவரத்துத் துறையில் வெளியிடப்படும் அனைத்து ஆணைகளும் தமிழிலேயே வெளியிட முயற்சிகள் எடுக்கப்படும் என்பதை அன்போடு தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள

பெறுநர்

மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பி.எச்.டி.,
தமிழ் ஆட்சி மொழி அமைச்சர், தலைமைச் செயலகம், சென்னை - 600 009

1.4.97 முதல் 31.12.97 முடிய 9 மாதங்களில் வெளியிடப்பட்ட அரசாணைகள் 563. இவற்றில் தமிழில் வெளியிடப்பட்ட அரசாணை ஒன்றே ஒன்றுதான். போக்குவரத்து அமைச்சர் க. பொன்முடி இதில் எந்தக் கவனமும் செலுத்தவில்லை என்பதையும் புரிந்து கொள்ள முடிகின்றது.

நான் அறிவுறுத்திய பிறகுதான் அனைத்து அரசாணைகளையும் தமிழில் வெளியிட முயல்வதாகத் தெரிவித்துள்ளார்.

15.12.99 அன்று துறை ஆய்வு செய்யப்பட்டது. அந்தக் குறிப்பு இதுதான்.

ஆய்வறிக்கை

1. வருகைப் பதிவேடு

| | | |
|---|---|---|
| தற்செயல் விடுப்பு, ஈட்டிய விடுப்பு, அலுவல் பணி, தகவலின்மை, இல்லப்பணி, மாறுதல் பணி, சமய விடுப்பு | : | ஆங்கிலத்தில் உள்ளன |
| தற்செயல் விடுப்பு விண்ணப்பங்கள் அவற்றின் மீதான ஆணைகள் | : | தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ளன. |
| கையொப்பங்கள் (வருகைப் பதிவேடு) 56 பேர்களில் 23 பேர் தமிழிலும் 33 பேர் ஆங்கிலத்திலும் | : | ஒப்பமிடுகின்றனர் |

2. பற்றொப்பப் பதிவேடு

| | | |
|---|---|---|
| 68 பேர்களில் 7 பேர் தமிழிலும் 61 பேர் ஆங்கிலத்திலும் | : | ஒப்பமிடுகின்றனர் |

3. ஆணைகள் : 1.1.99 (முதல் 10.12.1999 வரை)

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| வாலாயம் | 15 | 189 | 204 |
| நிலையாணை | 29 | 227 | 256 |
| பத்தாண்டு | 73 | 66 | 139 |
| இருபதாண்டு | 14 | 30 | 44 |
| முப்பதாண்டு | 2 | 1 | 3 |
| நாற்பதாண்டு | 3 | 13 | 16 |
| | 136 | 526 | 672 |

தமிழில் : 136

ஆங்கிலத்தில் : 526

4. வழங்கப்படாச் சம்பளப் பதிவேடு, பணக் கணக்குப் பதிவேடு, சம்பளப் பதிவேடு வங்கிப் பதிவேடு, கருவூலப் பதிவேடு, கடன்கள் குறித்த பதிவேடு, பொது வைப்பு முன் பணப் பதிவேடு, காசோலைப் பதிவேடு போன்றவை : ஆங்கிலத்தில் உள்ளன

பணிப்பதிவேடு

மாறுதல் நியமனம், ஈட்டிய விடுப்பு ஒப்புவிப்பு ஆணை ஊதியம் அனுமதியிடல் பணி சரிபார்த்தல் சான்று, ஊதியம் அனுமதித்திடல் குறித்த விவரங்கள் : ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன

தன் பதிவேடு / அனுப்புகைப் பதிவேடு : தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்பட்டுள்ளன

5. கடிதப் போக்குவரத்து

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. பொது மக்களுக்கும், அரசு சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 520 | - | 520 |
| 2. துறைத் தலைமை அலுவலகங்களுக்கு | 950 | 610 | 1560 |
| 3. சார்நிலை / சமநிலை அலுவலகங்களுக்கு | 832 | 547 | 1379 |
| 4. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 6473 | 2287 | 8760 |

6. வரப்பெற்ற கடிதங்கள்

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| அலுவலகப் பணியாளர்கள், சார்நிலைப் பணியாளர் ஆகியோர்களிடமிருந்து வரப்பெற்றவை | 2590 | 4690 | 7289 |

7. தட்டச்சுப் பொறி

அ. தமிழ்த் தட்டச்சுப் பொறி .. 9

ஆ. ஆங்கிலத் தட்டச்சுப் பொறி .. 7

இ. மின்னணுத் தட்டச்சுப்பொறி .. 1

8. கடந்த ஆறு திங்களில் தட்டச்சுச் செய்யப்பட்ட பக்கங்களின் எண்ணிக்கை :

(1.1.99 முதல் 30.6.99 வரை)

| | |
|---|---|
| தமிழில் | . . 14851 பக்கங்கள் |
| ஆங்கிலத்தில் | . . 16152 பக்கங்கள் |
| கூடுதல் | . . 31,003 பக்கங்கள் |

20.12.99 அன்று அமைச்சர் பொன்முடிக்கும், செயலர் அ. நாகராசனுக்கும் நேர்முக மடல்கள் வரைந்தேன்.

12. நகராட்சி நிர்வாகம் (ம) குடிநீர் வழங்கல்

இத்துறைக்கு 5.2.98 இல் நான் அனுப்பிய நேர்முக மடலுக்கு அரசு இணைச் செயலர் 22.7.98 இல் மடல் வரைந்துள்ளார். மேலும் 1.4.97 முதல் 31.12.97 வரை பதிப்பிக்கப்பட்ட அரசாணைகளின் தொகுப்பினை 22.7.98 அன்று அளித்துள்ளார். (அந்த மடல்)

நேர்முக கடித எண்.6186/பொது/1/98-2, நாள் 22.7.1998

அன்புள்ள அய்யா,

பொருள் : தமிழ் வளர்ச்சி - தமிழில் அரசாணைகள் வெளியிடுதல் ஆவணங்கள் வழங்கியது - விவரங்கள் அனுப்புதல் - தொடர்பாக.

பார்வை : 1. தங்களது நேர்முக கடித எண்.474/தவ1-1/98-1, நாள்.5.2.98
2. எனது நேர்முக கடித எண்.6186/பொது1/98-1, நாள்.1.9.98

இத்துறையில் ஒவ்வொரு மாதமும் வெளியிடப்பட்ட அரசாணைகள் புத்தக வடிவில் தொகுக்கப்பட்டுள்ளன. 1997 ஏப்ரல் முதல் டிசம்பர் வரையிலான ஒன்பது மாதங்களுக்கான தொகுதிகள் தங்களின் பார்வைக்காக இத்துடன் இணைக்கப்பட்டுள்ளன. மேற்சொன்ன பிரதிகளைப் பார்வையிட்டபின் இத்துறைக்குத் திருப்புமாறு தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

2. மேற்சொன்ன 1.4.97 முதல் 31.12.97 வரையிலான காலகட்டத்தில் இத்துறையில் வெளியிடப்பட்ட 1222 அரசாணைகளில் தமிழில் 678 அரசாணைகளும், ஆங்கிலத்தில் 544 அரசாணைகளும் வெளியிடப்பட்டுள்ளன என்ற விவரங்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

ஒம்/ . . . .

நகல் :

அமைச்சர், தமிழ் ஆட்சிமொழி, அவர்களின் முதுநிலை நேர்முக உதவியாளர்,
சென்னை - 600 009.

//உண்மை நகல்//

பிரிவு அலுவலர்

இத்துறை அமைச்சர் திரு. கோ.சி.மணி அவர்கள் அனைத்தும் தமிழில் இருக்கவேண்டுமென்ற ஆர்வமும் அக்கறையும் உடையவர். அவரே 14.8.98 அன்று எனக்கொரு நேர்முக மடல் வரைந்துள்ளார்.

நேர்முக கடித எண்.21770/அநப/98-1

அன்பார்ந்த திரு. தமிழ்க்குடிமகன்,

பொரு அலுவலக நடைமுறை - அரசாணைகள் தமிழில் வெளியிட
ரைகள் வழங்கப்பட்டது - அரசாணைகள் அனுப்பி வைப்பது

பார்வை மொழி, தமிழ் பண்பாடு இந்து சமயம்
றை அமைச்சரின் 17.7.1998 நாளிட்ட

பார்வையில் கண்ட கடிதத கத்தில் தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை முழுமையாக செயல்படுத்தாததைக் கு பின் பற்றாளர் வாயிலாக 1.4.97 முதல் ஒன்பது மாதங்களில் இத்துறையில் வெளியிடப்பட்ட சாணைகளை அனுப்பும்படியும் இனிமேல் அரசாணைகளைக் கட்டாயம் தமிழில் வெளியிடப்படும் என உறுதி செய்யும்படியும் வேண்டுகோள் விடுக்கப்பட்டுள்ளது.

2. தலைமைச் செயலக ஊரக வளர்ச்சித் துறையைப் பொறுத்தமட்டில், இத்துறை ஊரக மக்களின் நலன்களுக்கான திட்டங்களை செயல்படுத்துகிற துறை ஆகும். மேலும் மூன்றடுக்கு ஊராட்சிகளுக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்கள் மற்றும் உறுப்பினர்களும் பல்வேறு திட்டங்களையும் ஊராட்சி அமைப்பு முறைகளையும் நன்கு தெரிந்து செயலாற்ற வேண்டிய நிலையில் இருப்பதால் பொதுவாக அரசாணைகள் தமிழில்தான் வெளியிடப்படுகின்றன. இவ்வாறு வெளியிடப்பட்ட ஆணைகளின் நகல்களை இத்துடன் இணைத்துள்ளேன்.

3. ஊரக குடிநீர் திட்டங்கள் பெரும்பாலும் மைய அரசின் நிதி உதவியுடன் செயல்படுத்தப்படுகின்ற நிலையில் இது தொடர்பாக ஆங்கிலத்தில் ஆணைகள்

வெளியிடப்படுகின்றன. அத்தகைய ஆணைகள் முதலில் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டாலும், பிறகு அதன் தமிழாக்கமும் அனுப்பப்படுகிறது. தமிழ்நாடு பஞ்சாயத்து சட்டம் மற்றும் விதிகள் தொடர்பாக திருத்த ஆணைகள் ஆங்கிலத்தில் பரிசீலிக்கப்பட்டு, சட்டத் துறையில் ஒப்புதல் பெற்று ஆங்கிலத்தில் வெளியிடப்படுகின்றன.

4. இத்துறையைப் பொறுத்த மட்டில் சுற்றனுப்புக் குறிப்புகள் அனைத்தும் தமிழில்தான் தயாரித்து கோப்புகள் சுற்றனுப்பப்படுகின்றன. மேலும் கோப்புகளில் எல்லா நிலையிலும் இயன்ற அளவிற்குத் தமிழ்தான் பயன்படுத்தப்படுகிறது.

5. அலுவலக நடைமுறையைப் பொறுத்தமட்டில் கோப்புகளில் பணியாளர்களின் கையொப்பம் / சுருக்கொப்பம் தமிழில்தான் இருத்தல் வேண்டும் என்றும் விடுப்புக் கடிதங்கள், வருகைப் பதிவேடு, கடன்கள் முன்பணம் ஆகியவற்றிற்கான விண்ணப்பங்கள் மற்றும் இவை ஒப்பளிப்பு வெளியிடப்படும் ஆணைகள், ஆகியன கட்டாயம் தமிழில்தான் இருக்க வேண்டுமென இத்துறையில் உள்ள பணியாளர்களுக்குத் தக்க அறிவுரைகள் வழங்கப்படவுள்ளது எனவும் தங்களுக்கு அன்புடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,
கோ.சி. மணி

பெறுநர்

முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பி.எச்டி.,
தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்,
தலைமைச் செயலகம், சென்னை-600 009

ஏற்கெனவே தமிழில் அதிக அளவிலான அரசாணைகளும் வெளியிடப்பட்டிருந்தாலும், மேலும் சிறப்புறச் செயற்பட உறுதியளித்திருந்தார். அதன்படி, பிற்காலத்திலும் கவனம் செலுத்தினார் என்பதையும் மறவாமல் குறிப்பிடவேண்டும்.

31.12.99 அன்று இத்துறை ஆய்வு செய்யப்பட்டது.

6.1.2000 அன்று என் நேர்முக மடல் அளிக்கப்பட்டது. செயலர் திருமதி மாலதி இதனைப் பெற்றுக்கொண்டார்.

வருகைப் பதிவேட்டில் 108 பேர்களில் 38 பேர்கள் மட்டுமே தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

கடிதப் போக்குவரத்தில் மிக நல்ல முன்னேற்றம். தமிழில் 15303, ஆங்கிலத்தில் 2631.

அரசாணைகள் - தமிழில் 780, ஆங்கிலத்தில் 607. தட்டச்சுச் செய்த பக்கங்கள் : தமிழ் 21686, ஆங்கிலம் 26480. அமைச்சர் ஆர்வமுடையவர் எனினும் இன்னும் அக்கரை செலுத்த வேண்டும் என்று செயலர்க்கு அறிவுறுத்தப்பட்டது.

10.2.2000 அன்று இத்துறை மறு ஆய்வு செய்யப்பட்டது. கலந்துரையாடல் குறிப்பும் உடனே வழங்கப்பட்டது.

வருகைப் பதிவேட்டில் 171 பேர்களில் 130 பேர்கள் தமிழில் ஒப்பமிடுகிறார்கள் என்பது வியப்பாகும். ஆனால் பற்றொப்பப் பதிவேட்டில் 18 பேர்தான் தமிழில் ஒப்பமிடுகின்றனர். 1.1.99 முதல் 13 மாதங்களில் தமிழில் அரசாணைகள் 1594, ஆங்கிலத்தில் 2944.

இத்துறை இதில் கவனம் செலுத்தவில்லை. கடிதப் போக்குவரத்துகள் 6 மாதத்தில் தமிழில் 32371 என்றால் ஆங்கிலத்தில் 73092 என்பது எவ்வளவு கேவலமான நிலை?

இவற்றை எல்லாம் சுட்டிக் காட்டித் துறைச் செயலாளருக்கும் துறை அமைச்சர்களுக்கும் நேர்முக மடல்கள் தரப்பட்டன.

13.7.2000 அன்று அமைச்சர் அவர்களே எனக்கொரு நேர்முகமடல் வரைந்து எல்லா வகையிலும் இத்துறை சிறப்பாகச் செயற்படும் என்று உறுதியளித்துள்ளார்.

என் ஆய்வுக் குறிப்பாக திரு. கோ.சி. மணி அவர்களுக்கு ஒரு மடல் வரைந்தேன்.

தமிழ் ஆட்சிமொழித் துறை அமைந்ததும் துறையினுடைய அறிவிப்புகளைத் தொடர்ந்து அனைத்து நடவடிக்கைகளும் தமிழிலேயே அமையவேண்டுமென்று முதலில் அறிவிப்புச் செய்தவர் தாங்கள்தான் என்பதைப் பெருமையுடன் நினைவு கூர்கிறேன்.

ஆட்சிமொழிச் சட்டம் இயற்றப்பட்டு 42 ஆண்டுகளுக்கும் மேலாகிவிட்டது. தலைமைச் செயலகத் துறைகளில் தமிழ்ப் பயன்பாடு இன்னும் முழுமையாக அமையவில்லை. மொத்தத்தில் நிருவாக நடைமுறையில் தமிழ் குறைந்த அளவிலேயே பயன்படுத்தப்படும் நிலை உள்ளது.

மேற்கூறப்பெற்ற அனைத்து இனங்களிலும் தமிழ் முழுமையாகப் பயன்படுத்தப்பட இத்துறை முனைப்பான நடவடிக்கைகளை உடன் மேற்கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். அத்துடன் தொடர்புடைய துறைத் தலைமை அலுவலர்களிடமிருந்து வரப்பெறும் கடிதங்கள் தமிழில் அமைந்திடவும், இத்துறை தொடர்பான அனைத்து அலுவலகங்களிலும் தமிழ் முழுமையாகப் பயன்படுத்தப்படவும் உரிய நடவடிக்கைகளை உடன் மேற்கொள்ளுதல் வேண்டும்.

குறிப்பாக, தங்கள் துறையில் திரு. சன்வந்த்ராம், இ.ஆ.ப., அவர்கள் பொறுப்பேற்றிருந்த போது, பல்லாயிரக்கணக்கான கடிதங்கள் ஆங்கிலத்திலேயே எழுதப்பட்டு வந்தன என்பதை வருத்தத்துடன் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். மேலும், தங்கள் துறைதான் அதிகம் கல்வியறிவில்லாத, தமிழையே கூட சரியாக எழுதப் படிக்கத் தெரியாத ஊராட்சித் தலைவர்களையெல்லாம் கொண்ட துறையாகும். ஆனால், தங்கள் துறையோ ஊராட்சி மன்றத் தலைவருக்கு அனுப்பும் செய்தியைக்கூட ஆங்கிலத்தில் அனுப்பி வருகிறது. அதற்கான இணைப்பு தரப்பட்டுள்ளது. தொலைநகல் (Fax) செய்திகளைத் தாராளமாகத் தமிழில் தரலாம் என்பதைக் கூட தங்கள் துறை அலுவலர்கள் கவனிக்க மறந்துவிட்டனர்.

மேலும், இது தொடர்பாக சின்னமலைக்குன்று ஊராட்சி மன்றத் தலைவர் எழுதிய மடலையும் இணைத்துள்ளேன். அண்மையில் ஈரோடு நகராட்சியில் ஆங்கிலத்திலுள்ள அரசாணைகளை எதிர்த்துக் கண்டனம் தெரிவித்ததுடன் மட்டுமல்லாமல், வெளிநடப்பும் செய்துள்ளார்கள். அதற்கான செய்தித்தாள் குறிப்பையும் தங்கள் பார்வைக்காகவும் அனுப்பியுள்ளேன்.

மேலும், தங்கள் துறையின் செயலாளர்கள் இதில் அதிக மெத்தனம் காட்டுகிறார்கள் என்பது தங்கள் துறை ஆய்வின்போது கண்டறியப்பட்ட உண்மையாகும்.

ஒன்பதுக்கும் மேற்பட்டவர்கள் தமிழ் காக்க - தங்கள் தேக்குமரத் தேகங்களைத் தீயிட்டுக் கொண்டு மடிந்தனர் என்பதைத் தாங்கள் அறிந்தவர். எனினும் ஆட்சிமொழித்துறை அமைக்கப்பட்டதன் நோக்கம், மாண்புமிகு முதல்வர் அவர்களின் குறிப்பு, அமைச்சரின் நேர்முக மடல், தலைமைச் செயலாளரின் அறிவிப்பு ஆகிய அனைத்தும் புறக்கணிக்கப்பட்டுள்ளன. தாங்கள் இதில் தக்க கவனம் செலுத்துவீர்கள் என்று நம்புகிறேன்.

தங்கள் துறையின் செயலாளரிடம் இது பற்றி நேரில் எடுத்துச் சொல்லப்பட்டுள்ளது. அவரும் திசம்பர் இறுதிக்குள் அனைத்தையும் செம்மை செய்துவிடுவதாக உறுதியளித்துள்ளார்.

அன்புடன்

(மு. தமிழ்க்குடிமகன்)

இணைப்பு :

பெறுநர்

மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள்
தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சர்,
தமிழ்நாடு அரசு கோட்டை வளாகம், சென்னை - 600 009

ஐயா,

பொருள் : ஊராட்சி மன்றத் தலைவர்களுக்கு ஆங்கிலத்தில் கடிதம் வருவதை மாற்றித் தமிழில் அனுப்ப ஏற்பாடு செய்வது சம்மந்தமாக.

நான் ஊராட்சி மன்றத் தலைவராக 1996 இல் பதவியேற்றேன். ஊராட்சி மன்றத் தலைவர் பதவிக்குக் கல்வித் தகுதி எதுவும் கிடையாது. அதனால் பெரும்பாலான தலைவர்கள் தமிழில் மட்டுமே வாசிக்கக் கூடியவர்களாகத்தான் உள்ளனர். தாங்கள் அமைச்சர் பதவியேற்ற பின் "எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என்ற முழக்கத்தோடு செயல்படுகிறீர்கள் என்பதை அறிந்து மகிழ்ச்சிதான். ஆனால் அரசு உயர் பதவி வகிப்பவர்கள் தமிழைப் பயன்படுத்த வெட்கப்படுவதை என்னுடைய அனுபவத்தில் தெரிகிறேன். நான் அத்துடன் ஊரக வளர்ச்சி முகமையிலிருந்து வந்துள்ள கடிதத்தை இணைத்துள்ளேன். இதன் தமிழ்ப் பொருள் தலைவர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை. அப்படியெனில் இதனை நடைமுறைப் படுத்துவது எப்படி? இதேபோல் எத்தனையோ கடிதங்கள் வந்துள்ளன. தங்கள் கவனத்திற்குச் சான்றாக இதனைப் பணிந்து அனுப்புகிறேன். தாங்கள் எங்களின் மொழிச் சிரமத்தினைப் போக்க வழிசெய்து தரும்படி பணிந்து கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு
ச. இராமமுர்த்தி
தலைவர்
ஊராட்சி மன்றம், சின்னமலைக்குன்று

என் விடை :

3.8.1999

தி.பி.2030/ஆடி18.

அன்புடையீர்,

தங்கள் மடல் கண்டேன். உரிய நடவடிக்கை எடுக்குமாறு பணித்துள்ளேன். பல அலுவலர்கள் தாங்கள் தமிழர்கள் என்பதையும் தமிழ்தான் தங்கள் தாய்மொழி என்பதையும் மறந்து ஆங்கில மோகம் பிடித்த அடிமைகளாகச் செயற்படுகிறார்கள். இதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு. வெகுவிரைவில் நல்ல மாற்றங்கள் ஏற்படும். நம்பிக்கையோடு தொடரவும்.

அன்புடன்
(மு. தமிழ்க்குடிமகன்)

பெறுநர்

திரு. ச. இராமமூர்த்தி
தலைவர், சின்னமலைக்குன்று சிற்றூராட்சி
கோவில் பட்டி ஊராட்சி ஒன்றியம்
தூத்துக்குடி மாவட்டம்

மற்றொரு மடல்

பெறுதல்

மாண்புமிகு தமிழ்க்குடிமகன் அவர்கள்
தமிழ் மொழி வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத்துறை அமைச்சர்
தமிழக அரசு, தலைமைச் செயலகம்
சென்னை - 9

அன்புடையீர் வணக்கம்.

பொருள் : ஈரோடு நகர்மன்றம் - அரசு ஆணை ஆங்கிலத்தில் வெளியீடு ஆட்சேபணை - வெளிநடப்பு மற்றும் அரசு ஆணைகள் தமிழில் வெளியிட அனைத்து அரசுத் துறைகளுக்கு உத்தரவிடுவது - சம்பந்தமாக.

"எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என முழங்கும் தமிழக அரசு தமிழ் மேம்பாட்டிற்கென ஒரு துறையைத் தனியாக ஏற்படுத்தி அதற்கென்று ஒரு அமைச்சரை அதாவது தமிழ்மொழியே தன் உயிர் என்று எண்ணிவாழும் தங்களை இத்துறையின் அமைச்சராக நியமித்தது மிகவும் சிறப்புடையதாகும். தங்களால்தான் இத்துறைக்குப் பெருமை என்று அனைவரும் பாராட்டும் வகையில் தங்கள் செயல்பாடுகள் உள்ளன.

தங்கள் இலாகாவின் உத்தரவை பொதுமக்கள் தான் மதித்து செயல்படுகிறார்கள். அதாவது வியாபாரிகள் மற்றும் வர்த்தக நிறுவனங்கள் தங்கள் நிறுவனங்களில் பெயர்ப்பலகையில் பெரிய அளவில் தமிழில் பெயர் எழுதி வைத்துள்ளார்கள். ஆனால் பெரும்பாலான அரசுத்துறை அதிகாரிகள் தங்கள் இலாக்காவின் உத்தரவை மதிக்காமல் அத்துறை மூலம் வெளியிடும் அரசு ஆணைகளை இன்னும் ஆங்கிலத்தில்தான் வெளியிட்டு வருகிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்க செயலாகும். (உ.ம்.) உள்ளாட்சித்துறையின் மூலம் வெளியிடப்படும் ஆணைகள் பெரும்பாலானவை ஆங்கிலத்தில் வெளியிட்டு அதை நகர்மன்றத்தில் உறுப்பினர்களின் ஒப்புதலுக்கும், பதிவுக்கும் அனுப்பி வைக்கிறார்கள். உள்ளாட்சிமன்ற உறுப்பினர்களில் பெரும்பாலானவர்களுக்கு ஆங்கிலம் தெரியாது. அதனால் இந்த ஆங்கில அரசு ஆணைகளை

இவர்கள் எவ்வாறு புரிந்துகொண்டு மன்றத்தில் பதிவு செய்யமுடியும்? இது சம்பந்தமாக ஈரோடு நகராட்சியில் கடந்த 21.9.99 ஆம் தேதி நடந்த நகர்மன்றக் கூட்டத்தில் ஆங்கிலத்திலுள்ள அரசு ஆணைகளைப் பதிவு செய்வதற்கு உறுப்பினர்கள் கடும் எதிர்ப்பும், வெளிநடப்பும் செய்தார்கள். மேலும் நகர்மன்ற மினிட் புத்தகத்திலும் இனிவரும் காலங்களில் அரசால் வெளியிடப்படும் எல்லா ஆணைகளும் தமிழில் வெளியிட அரசை வற்புறுத்தி தீர்மானம் நிறைவேற்றப்பட்டு அரசுக்கு அனுப்பப்பட்டுள்ளது: (நகர்மன்ற மினிட் நகல் மற்றும் இது சம்பந்தமான பத்திரிக்கைச் செய்தி இணைப்பு) தமிழ்நாட்டிலேயே தமிழில் அரசு ஆணையைக் கேட்டுப் போராட்டம் நடத்த வேண்டிய அவலநிலை உண்டாகி உள்ளது. இது தமிழக அரசுக்கே முக்கியமாக தங்கள் துறைக்கு அவமானச் செயலாகும்.

ஆகவே இனிமேலாவது அரசுத்துறை மூலம் வெளியிடும் அனைத்து அரசு ஆணைகளையும் தமிழில் வெளியிடக் கடுமையான நடவடிக்கை எடுக்கும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறேன். மேலும் இக்கடிதத்தின் மீது தாங்கள் எடுக்கும் நடவடிக்கையை அறிந்துகொள்ள விரும்புகிறேன்.

இப்படிக்கு,
தங்கள் உண்மையுள்ள
இரா. சுந்தரசாமி
நகர் மன்ற உறுப்பினர், த.மா.க.

இணைப்பு :

1. 21.1.99ந் தேதிய நகர் மன்ற தீர்மான நகல்
2. பத்திரிகைச் செய்தி நகல்

நகல் :

மாண்புமிகு மு. கருணாநிதி அவர்கள்
தமிழக முதலமைச்சர், தலைமைச் செயலகம், சென்னை - 9

தினகரன் - 22.9.99

## ஆங்கிலத்தில் அரசு ஆணை : ஈரோடு நகராட்சி உறுப்பினர்கள் கண்டனம்

ஈரோடு, செப்.22-

ஆங்கிலத்தில் அரசு ஆணைகள் வெளியிடப்படுவதற்கு ஈரோடு நகராட்சி உறுப்பினர்கள் கண்டனம் தெரிவித்து உள்ளனர்.

கூட்டம்

ஈரோடு நகராட்சிக் கூட்டம் நேற்று நடந்தது. நகராட்சித் தலைவர் அரங்கராசன் தலைமை தாங்கினார். கூட்டத் தொடக்கத்திலேயே த.மா.கா. குழுத் தலைவர் ஆர். சுந்தரசாமி நகராட்சியின் இரண்டு, மூன்று, நான்கு தீர்மானங்கள் சம்பந்தமாக ஆங்கிலத்தில் உள்ள அரசு ஆணை உறுப்பினர்களுக்கு வழங்கப்பட்டதைக் கண்டித்தார்.

ஆங்கிலத்தில் அரசு ஆணை

ஆங்கிலத்தில் இருப்பதால் பெரு வாரியான உறுப்பினர்களுக்கு அந்த ஆணைகளின் அர்த்தம் தெரியாது. எனவே ஆணைகளின் தமிழாக்கம் வழங்கவேண்டும் என்றார்.

வெளிநடப்பு

ராதாமணிபாரதி : - எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்று அரசு கூறுகிறது. ஆனால் இந்த மன்றத்திலேயே பல முறை ஆட்சேபித்தும் தொடர்ந்து ஆங்கிலத்திலேயே அரசு ஆணைகள் உறுப்பினர்களுக்கு வழங்கப்படுகிறது. இதைக் கண்டித்து வெளிநடப்பு செய்கிறேன்.

தினமணி 10.10.99

## மூன்று மாதத்தில் அரசு ஆணைகள் தமிழில் வெளியிடப்படும் : தமிழ்க்குடிமகன் உறுதி

ஈரோடு, அக். 9-

மூன்று மாத காலத்துக்குள் தமிழக அரசின் ஆணைகள் அனைத்தும் தமிழில் வெளியிட நடவடிக்கை எடுக்கப்படும் என்று தமிழ் ஆட்சிமொழி மற்றும் தமிழ் பண்பாட்டுத் துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் உறுதியளித்துள்ளார்.

அரசு ஆணைகள் அனைத்தையும் தமிழில் வெளியிட வேண்டும் என்று ஈரோடு நகர்மன்ற தமிழ் மாநில காங்கிரஸ் உறுப்பினர் இரா. சுந்தரசாமியின் கோரிக்கைக்கு கடிதம் மூலம் இந்த உறுதியை அமைச்சர் அளித்துள்ளார்.

அரசு ஆணைகள் அனைத்தையும் தமிழில் வெளியிடுவது குறித்து தலைமைச் செயலகத்தில் ஆய்வு நடந்து வருகிறது. மூன்று மாத காலத்துக்குள் அரசு ஆணைகள் அனைத்தும் தமிழில் வெளியிட ஏற்பாடு செய்யப்படும் என்றும் கடிதத்தில் கூறியுள்ளார்.

முன்னதாக, சென்ற மாதம் 21-ம் தேதி நடந்த ஈரோடு நகர் மன்றக் கூட்டத்தில் அரசு ஆணை ஆங்கிலத்தில் இருந்ததைக் கண்டித்து உறுப்பினர்கள் வெளிநடப்புச் செய்தனர்.

இதையடுத்து, தமிழக அரசு ஆணைகள் அனைத்தையும் தமிழில் வெளியிட வேண்டும் என்ற கோரிக்கை தீர்மானமாகக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது.

தமிழில் அரசு ஆணை வெளியிடாவிட்டால் கடும் நடவடிக்கைகளை அதிகாரிகள் மீது எடுக்கவேண்டும் என்றும் வலியுறுத்தப்பட்டது.

13. செய்தி (ம) சுற்றுலாத்துறை

17.7.98 இல் நான் எழுதிய மடலுக்கு துறைச் செயலாளர் இராசரத்தினம் விடை எழுதியிருந்தார்.

நேர்முகக் கடித எண்.5181/அநமு-1/98, நாள்:19.8.1998

அன்பார்ந்த ஐயா,

பொருள் : அலுவலக நடைமுறைகள் - அரசாணைகள் - தமிழில் வெளியிட அறிவுரைகள் - தொடர்பாக.

பார்வை : தங்கள் நேர்முகக் கடிதம் நாள். 17.7.98

தமிழ் ஆட்சிமொழித் திட்டம் முழுமையாகச் செயல்படுத்தப்படவேண்டும் எனவும், அரசாணைகள் அனைத்தும் தமிழில் கட்டாயம் வெளியிடப்பட வேண்டும் எனவும் இத்துறையின் அனைத்து அலுவலர்களுக்கும் அறிவுரை வழங்கப்பட்டுள்ளது.

2. இத்துறையிலிருந்து இனிமேல் வருகின்ற அரசாணைகள் தமிழில் வெளியிடப்படும் என்பதை உறுதி செய்கிறேன்.

3. 1.4.97 முதல் 31.12.97 முடிய இத்துறையிலிருந்து வெளியிடப்பட்ட அரசாணைகளின் தொகுப்பு, இத்துறையின் பற்றாளர் வாயிலாக இன்று தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறைக்கு அனுப்பப்படுகிறது எனவும் தெரிவித்துக்கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள
(எஸ். இராசரத்தினம்)

பெறுநர்

மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி தமிழ்ப்பண்பாடு,
இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர், சென்னை -9.

18.8.99 இல் இத்துறை ஆய்வு செய்யப்பட்டது. ஆய்வறிக்கையைக் கவனியுங்கள்.

வருகைப் பதிவேடுகளில் ஒப்பம் :

இத்துறையில் உள்ள அலுவலர்கள், பணியாளர்களின் எண்ணிக்கை 147 ஆகும். இவர்களில் 76 பேர் ஆங்கிலத்தில் ஒப்பமிடுகின்றனர்.

அரசாணைப்படி அலுவலர்கள் பணியாளர்கள் அனைவரும் அனைத்து இனங்களிலும் தமிழிலேயே ஒப்பமிடல் வேண்டும்.

கடிதப் போக்குவரத்து :

இத்துறையிலிருந்து கடந்த ஆறு திங்களில் பொது மக்களுக்கும் அரசு சார்பற்ற நிறுவனங்களுக்கும் மொத்தம் 1052 கடிதங்கள் எழுதப்பட்டுள்ளன. இவற்றில் 324 கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன. துறைத் தலைமை அலுவலகங்களுக்கு எழுதப்பட்ட 5161 கடிதங்களில் 1060 கடிதங்களும், சார்நிலை சமநிலை அலுவலர்களுக்கு எழுதப்பட்ட 4330 கடிதங்களில் 1345 கடிதங்களும், அரசின் மற்ற அலுவலகங்களுக்கு எழுதப்பட்ட 1890 கடிதங்களில் 562 கடிதங்களும் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன.

கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுதப்படுவது தவிர்க்கப்படவேண்டும். விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ள இனங்கள் தவிரப் பிற அனைத்துக் கடிதங்களும் முழு அளவில் தமிழிலேயே எழுதப்படவேண்டும்.

அலுவலகப் பணியாளர்கள், சார்நிலை அலுவலர்கள் ஆகியோரிடமிருந்து வரப்பெற்ற 2150 கடிதங்களில் 200 கடிதங்கள் ஆங்கிலத்தில் உள்ளன. தமிழிலேயே கடிதங்களை அனுப்புமாறு பணியாளர்களுக்கும், சார்நிலை அலுவலர்களுக்கும் அறிவித்தல் வேண்டும்.

பதிவேடுகள்

இத்துறையில் பேணப்படும் பதிவேடுகளில் 36 பதிவேடுகள் தமிழிலும், பணக்கணக்குப் பதிவேடு, பணம் மற்றும் காசோலைகள் வழங்கல் பதிவேடு கொடுபடாப் பணப்பதிவேடு, பொது வைப்பு நிதிப் பதிவேடு போன்ற 16 பதிவேடுகள் ஆங்கிலத்திலும், 54 பதிவேடுகள் தமிழும் ஆங்கிலமும் கலந்தும் எழுதப்படுகின்றன.

பதிவேடுகள் எவற்றிற்கும் விதிவிலக்கு இல்லை. அனைத்துப் பதிவேடுகளும் இனித் தமிழிலேயே எழுதப்படுதல் வேண்டும்.

பணிப்பதிவேடுகளில் பதிவுகள்

பணிவரன்முறை செய்தல், தகுதிகாண் பருவம் முடித்தல், பயிற்சிக்காக விடுவிக்கப் பெறுதல், வீடுகட்டும் முன்பண ஒப்பளிப்பு, கணக்குத் தேர்ச்சி, விடுப்பு காலப் பயணச் சலுகை,

பணி சரிபார்ப்புச் சான்று ஆகியவை தொடர்பான பதிவுகள் ஆங்கிலத்தில் மேற்கொள்ளப்பட்டுள்ளன. விடுப்பு ஒப்பளிப்பு ஆணைகள் தமிழில் இருந்தும் இவை குறித்த பதிவுகள் ஆங்கிலத்தில் மேற்கொள்ளப்படுகின்றன.

பணிப்பதிவேடுகளில் அனைத்துப் பதிவுகளையும் தமிழிலேயே மேற்கொள்ளுதல் வேண்டும்.

நடப்புக் கோப்புகள்

நிலுவையிலுள்ள நடப்புக் கோப்புகளில் 1552 கோப்புகள் தமிழிலும், 661 கோப்புகள் ஆங்கிலத்திலும் 234 கோப்புகள் இருமொழிகளிலும் அமைந்துள்ளன. கோப்புகளில் ஆங்கிலத்தில் எழுதப்படுவது தவிர்க்கப்படவேண்டும். கோப்புகளில் குறிப்புகள் வரைவுகள் ஆகியன முழு அளவில் தமிழிலேயே எழுதப்படுதல் வேண்டும்.

அரசாணைகள்

1.1.99 முதல் 30.6.99 முடிய உள்ள ஆறு திங்களில் இத்துறையில் பின்வரும் அரசாணைகள் வெளியிடப்பட்டுள்ளன.

| வகை | மொத்தம் | தமிழில் | ஆங்கிலத்தில் |
|---|---|---|---|
| அரசாணை நிலை | 139 | 65 | 74 |
| 4டி | 15 | 3 | 12 |
| 3டி | 8 | 4 | 4 |
| 2டி | 28 | 23 | 5 |
| டி | 95 | 70 | 25 |
| மொத்தம் | 285 | 165 | 120 |

மொத்தம் வெளியிடப்பட்டுள்ள 285 அரசாணைகளில் 120 அரசாணைகள் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டுள்ளன. இனி, அரசாணைகள் அனைத்தும் தமிழில் வெளியிடப்படல் வேண்டும்.

தட்டச்சுகள் - செவ்வைப் படிகள்

இத்துறையிலுள்ள தட்டச்சர்களின் மொத்தம் எண்ணிக்கை 22. தமிழ்த் தட்டச்சுகள் 28ம், ஆங்கிலத் தட்டச்சுகள் 22ம் பயன்படுத்தப்படுகின்றன. தலைமைச் செயலகத் துறை ஒவ்வொன்றிலும் மொத்தமுள்ள தட்டச்சுகளில் 65% தமிழ்த் தட்டச்சுகளும், 35% ஆங்கிலத்

தட்டச்சுகளுமே இருத்தல் வேண்டும். இவ்விதிமுறைப்படி தற்போது கூடுதலாக உள்ள 5 ஆங்கிலத் தட்டச்சுகளை ஒப்படைத்து அவற்றிற்கீடாகத் தமிழ்த் தட்டச்சுகளைப் பெற்றுப் பயன்படுத்துதல் வேண்டும்.

கடந்த ஆறு திங்களில் இத்துறையில் மொத்தம் 31,423 பக்கங்கள் தட்டச்சு செய்யப்பட்டுள்ளன. இவற்றில் தமிழில் 23,213 பக்கங்களும், ஆங்கிலத்தில் 8,210 பக்கங்களும் தட்டச்சிடப்பட்டுள்ளன.

குறிப்புகளையும் வரைவுகளையும் முழுமையாகத் தமிழில் எழுதுவதன் வாயிலாகவே ஆங்கிலத்தில் அதிகப் பக்கங்கள் தட்டச்சிடப்படுவதைத் தவிர்க்க இயலும். இதற்கு ஆவன செய்யப்படுதல் வேண்டும்.

படிவங்கள்

விடுப்பு விண்ணப்பப் படிவங்கள், வீடுகட்டும் முன்பண விண்ணப்பப் படிவம், பொது வைப்புநிதி முன்பண விண்ணப்பப் படிவம் ஆகியன ஆங்கிலத்தில் உள்ளன. அனைத்து விண்ணப்பப்படிவங்களும் தமிழிலேயே அமைதல்வேண்டும்.

கலந்துரையாடல்

இத்துறையில் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்க நிலை குறித்துத் தமிழ் வளர்ச்சி - பண்பாடு (ம) அறநிலையத்துறைச் செயலாளர் அவர்கள் நடத்திய கலந்துரையாடலில் (20.8.99) இத்துறையின் செயலாளர், பற்றாளர், அலுவலர்கள், பணியாளர்கள் ஆகியோர் கலந்து கொண்டனர்.

தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலைத்துறைச் செயலாளர் அவர்கள் பின்வரும் கருத்துரைகளை எடுத்துரைத்தார்கள்.

"தமிழில் எழுதுவதற்குத் தயக்கம் காட்டக் கூடாது. அரசாணைப்படி அனைவரும் தமிழிலேயே ஒப்பமிடல் வேண்டும். ஒவ்வொரு கோப்பிலும் அமையும் முதல் குறிப்பும் வரைவும் தமிழில் அமைந்துவிட்டால் அதனைத் தொடர்ந்து அமையும் அனைத்தும் தமிழிலேயே அமைந்துவிடும். எனவே இதில் கவனமாகச் செயற்படுவது இன்றியமையாதது. சுற்றோட்டக் குறிப்புகள் தமிழில் எழுதப்படுவதால் அவற்றின் அடிப்படையில் வெளியிடப்படும் அரசாணைகள் தமிழில் அமைவதில் சிக்கல் ஏதும் இருந்திட வாய்ப்பில்லை. எனவே அரசாணைகள் அனைத்தும் இனித் தமிழிலேயே வெளியிடப்பட ஆவன செய்தல் வேண்டும். கடிதப்போக்குவரத்தைப் பொறுத்தவரை விதிவிலக்கு இனங்கள் தவிர மற்ற அனைத்துக் கடிதங்களும் தமிழிலே எழுதப்படுதல் வேண்டும். அரசாணைகள், கடிதங்கள் போன்றவற்றைத் தமிழில் எழுதுவதில்,

ஏதாவது இடர்ப்பாடு இருந்தால் மொழிபெயர்ப்புத் துறையில் கொடுத்து உடன் தமிழில் மொழிபெயர்த்துப் பெற்றுக் கொள்ளலாம். பதிவேடுகளுக்கு விதிவிலக்கு இல்லை. எனவே பதிவேடுகள் அனைத்தும் தமிழிலேயே எழுதப்பட நடவடிக்கை எடுத்தல் வேண்டும். இந்தத் துறை பொதுமக்களோடு மிகுந்த தொடர்புடைய துறை என்பதால் அனைத்தும் தமிழிலேயே அமைய மேலும் முனைப்பான நடவடிக்கைகளை மேற்கொண்டு ஆட்சிமொழித் திட்டம் முழுமையாகச் செயற்படுத்தப்பட உடன் ஆவன செய்ய வேண்டியது இன்றியமையாததாகும்.

மேற்கண்டவாறு தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் அவர்கள் கருத்துகளை எடுத்துரைத்தார்கள். சுட்டிக்காட்டப்பட்டுள்ள குறைபாடுகளைக் களைவதற்கு உடன் உரிய நடவடிக்கை எடுக்கப்படும் எனச் செய்தி மற்றும் சுற்றுலாத்துறைச் செயலாளர் அவர்கள் தெரிவித்தார்கள்.

முன்னேற்றம் : போதுமான அளவில் இல்லை
ஈடுபாடு : இன்னும் தேவை

தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும்
அறநிலையத்துறைச் செயலாளர்

* * *

இது தொடர்பாக 28.9.99 அன்று செய்தித் துறை அமைச்சர் வ. முல்லை வேந்தனுக்கும், சுற்றுலாத் துறை அமைச்சர் சுரேசுராசனுக்கும், துறைச் செயலாளர் இராசரத்தினத்துக்கும் நேர்முக மடல்கள் எழுதினேன்.

இது குறித்து, சுரேசுராசன் தன் துறைச் செயலர்க்கு ஒரு மடல் எழுதியுள்ளார்.

28.9.99

அன்பார்ந்த திரு. இராசரத்தினம் அவர்கள்,

வணக்கம்.

மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களிடமிருந்து பெறப்பட்ட 28.9.99 நாளிட்ட நேர்முக மடலின் நகலினைத் தங்களுடைய கவனத்திற்காக இணைத்துள்ளேன்.

சுற்றுலாத்துறையைப் பொறுத்தமட்டில், இனி அனைத்து மேல் நடவடிக்கைகளும், அரசாணைகளும் தமிழிலேயே மேற்கொள்ள வேண்டுமென்றும், வெளிநாட்டு சுற்றுலாப் பயணிகள், நடுவண் அரசு நிறுவனங்களுக்கு அவற்றின் ஆங்கிலப் படியினை இணைத்து அனுப்புமாறும் கேட்டுக் கொள்கிறேன்.

மேற்கூறப்பட்ட அறிவுரையைக் கருத்திற்கொண்டு, சுற்றுலாத்துறையைப் பொறுத்தமட்டில் 31.2.1999 க்குள் செம்மை செய்து அது குறித்து மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் அவர்களுக்கும், எனக்கும் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

அன்புடன்,
(என். சுரேசுராசன்)

பெறுநர்

திரு. எஸ். இராசரத்தினம், இ.ஆ.ப.,
செயலாளர், செய்தி மற்றும் சுற்றுலாத்துறை
தலைமைச் செயலகம், சென்னை - 9

நகல்

மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு,
இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் தகவலுக்காக.

14. உள்துறை

17.7.98 இல் எல்லாத் துறையின் செயலாளர்கட்கும் பொதுவான ஒரு மடலை எழுதினேன். அந்த நேரத்தில் உள்துறைச் செயலாளராக இருந்த இரா. பூரணலிங்கம் 29.7.98 அன்று எனக்கொரு நேர்முக மடலை எழுதினார். தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தைச் செயற்படுத்துவதில் இத்துறை முழு மூச்சாக ஈடுபடும் என்று தெரிவித்துள்ளார்.

20.4.2000 அன்று 'உள்துறை' ஆய்வுக்குட்படுத்தப்பட்டது. அது தொடர்பான அறிக்கை நேர்முக மடலாக, துறையின் செயலர் சாந்தா ஷீலா நாயரிடம் தரப்பட்டது.

அந்த விளக்கத்தையும் இங்கே காணலாம் :

நேர்முக கடித எண்.51294/அநமு.2/98-1, நாள்: 29.7.1998

அன்பார்ந்த அய்யா,

பொருள் : அலுவலக நடைமுறைகள் அரசாணைகள் தமிழில் வெளியிட அறிவுரைகள் - அரசாணைகள் அனுப்பி வைப்பது தொடர்பாக.

பார்வை : தங்கள் நேர்முகக் கடிதம், நாள் 17.7.98

வணக்கம்

பார்வையில் கண்ட தங்களது நேர்முகக் கடிதத்தின்மீது அன்பான கவனம் ஈர்க்கப்படுகிறது.

2. இத்துறையைப் பொறுத்தமட்டில் இணைச் செயலாளர் (காவல் - 1) தமிழ் மொழிச் செயலாக்கம் குறித்த பற்றாளராக செயல்பட்டு வருகிறார்.

3. மேலும், இத்துறையைப் பொறுத்தமட்டில் 1997-ஆம் ஆண்டிற்கான அரசு ஆணைகளின் தொகுப்பினை ஏற்கெனவே இத்துறை அனுப்பியுள்ளது என்பதனையும் இத்துறையில் நியமிக்கப்பட்டுள்ள பற்றாளர் அவர்களால் ஆட்சிமொழி செயலாக்கத்தை முழு முனைப்புடன் இத்துறையில் நிறைவேற்றுவதற்காக தக்க நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டு வருகிறது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். அனைத்து ஆணைகளும் தமிழில் வெளியிடத் தக்க அறிவுரைகள் இத்துறையில் பணியாற்றும் அலுவலர்களுக்கும் / அனைத்துப் பிரிவுகளுக்கும் வழங்கப்பட்டுள்ளன.

தங்கள் அன்புள்ள,
(இரா. பூர்ணலிங்கம்)

பெறுநர்

முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ் ஆட்சிமொழி அமைச்சர், தலைமைச் செயலகம், சென்னை -600 009

உள்துறை (என் மடல்)

நடவடிக்கைகள்

எல்லாத் துறைகளையும் ஆய்வுசெய்தால், உண்மை நிலையை வெளிக்கொண்டுவந்துவிடமுடியும் என்ற அடிப்படையில் 20.4.2000-ஆம் நாளன்று எங்களது துறைச் செயலாளர் திரு. இராமகிருட்டிணன், இ.ஆ.ப., தமிழ் வளர்ச்சி இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் ஆகியோர் தங்கள் துறையினை ஆய்வு செய்தனர். அதில் கண்டறியப்பட்ட உண்மைகள் இணைப்பில் தரப்பட்டுள்ளன. மேலும், கீழ்க்கண்ட உண்மை நிலையையும் தங்களுக்கு உணர்த்த வேண்டியது என் கடமை.

1. கையொப்பங்கள்

வருகைப் பதிவேட்டிலும், பிற பட்டியல்களிலும் பலர் ஆங்கிலத்திலேயே ஒப்பமிடுகின்றனர். 1978-ஆம் ஆண்டிலேயே தமிழக அரசு ஊழியர்கள் அனைவரும் தமிழில்தான் கையொப்பமிடவேண்டும் என்ற ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது. 21 ஆண்டுகளாகத் தங்கள் துறையில் சிலர் இந்த ஆணையைப் புறக்கணித்து வருகின்றனர்.

வருகைப் பதிவேட்டில் 165 பேர்களில் 56 பேர் தமிழிலும், 109 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர். பற்றொப்பப் பதிவேட்டில் 273 பேர்களில் 26 பேர் தமிழிலும், 247 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர்.

தமிழில் உள்ள கடிதங்களில் தமிழிலும் ஆங்கிலத்தில் உள்ள கடிதங்களில் ஆங்கிலத்திலும் ஒப்பமிடும் நிலை காணப்படுகிறது. அரசாணையின்படி அனைவரும் அனைத்து இனங்களிலும் தமிழில் மட்டுமே ஒப்பமிடுதல் வேண்டும்.

2. மடல் போக்குவரத்து (சென்ற ஆறு திங்கள்)

பெரும்பாலான கடிதங்கள் தமிழில் உள்ளன. சில கடிதங்கள் ஆங்கிலத்தில் உள்ளன. பாராட்டுகிறோம்.

| | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் | 1268 | 990 | 2258 |
| 2. மேல்நிலை அலுவலர்களுக்கு | 864 | 1434 | 2298 |
| 3. சார்நிலை, சமநிலை அலுவலர்களுக்கு | 13,797 | 2166 | 15,963 |
| 4. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 2092 | 1368 | 3460 |
| கூடுதல் | 18021 | 5958 | 23979 |

மத்திய அரசு, பிற மாநிலங்கள், தூதரகங்கள், வெளிநாடுகள் போன்றவற்றிற்கு எழுதப்படும் கடிதங்கள் தவிர ஏனைய அனைத்துக் கடிதங்களும் தமிழிலேயே எழுதப்படுதல் வேண்டும். செயலகத் துறையிலிருந்து செல்லும் கடிதங்கள் அனைத்தும் தமிழில் இருந்தால்தான் துறைத்தலைமை, சார்நிலை அலுவலகங்களில் இக்கடிதங்களின் தொடர்ச்சியான நடவடிக்கைகள் தமிழில் அமைய வாய்ப்பு ஏற்படும்.

3. அரசாணைகள்

இத்துறையில் 1.1.99 முதல் 31.1.2000 வரை வெளியிடப்பட்டுள்ள அரசாணைகளில் பெரும்பான்மையான அரசாணைகள் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டுள்ளன. சில அரசாணைகள் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன.

| | தமிழில் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| பத்தாண்டு | 482 | 709 | 1191 |
| இருபதாண்டு | 13 | 301 | 314 |
| முப்பதாண்டு | 60 | 171 | 231 |
| நாற்பதாண்டு | 102 | 22 | 124 |
| நிலையாணை | 333 | 1488 | 1821 |
| வாலாயம் | 1697 | 3407 | 5104 |
| மொத்தம் | 2687 | 6098 | 8685 |

அனைத்து அரசாணைகளும் தமிழிலேயே பிறப்பிக்கப்பட வேண்டும் என்றும், இன்றியமையாத நேர்வுகளில் மட்டும் பிறப்பிக்கப்படும் அரசாணைகளோடு சேர்த்து ஆங்கிலத்திலும் அரசாணைகள் வெளியிடலாம் என்றும் தமிழக அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

4. பதிவேடுகள்

பணக்கணக்குப் பதிவேடு, வங்கிக் கணக்குப் பதிவேடு, கருவூலப் பதிவேடு, வழங்கப்படாச் சம்பளப் பதிவேடு, காசோலைப் பதிவேடு, நீண்ட காலக் கடன்கள் குறித்த பதிவேடு, பொது வைப்புப் பதிவேடு, எழுது பொருள் விவரப் பதிவேடு, தொலைபேசிப் பதிவேடு போன்றவை ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன. (முகப்பில் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன) தன்பதிவேடு, அனுப்புகைப் பதிவேடு போன்றவை தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன.

பதிவேடுகள் எவற்றிற்கும் விதிவிலக்கு இல்லை. பதிவேடுகளைத் தமிழில் எழுதுவதில் எத்தகைய சிக்கலும் இல்லை. எனவே அனைத்துப் பதிவேடுகளும் தமிழிலேயே எழுதப்படுதல் வேண்டும். ஆங்கிலத்தில் அச்சடிக்கப்பட்டுத் தற்போது பயன்பாட்டில் உள்ள பதிவேடுகளிலும் பதிவுகள் தமிழிலேயே மேற்கொள்ளப்படுதல் வேண்டும்.

விடுப்பு விண்ணப்பங்கள்

தொடர் குறிப்பேடு, விடுப்பு விண்ணப்பங்கள், அனுமதி, தகவலின்மை, இல்லப்பணி போன்றவை தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன. தாமத வருகைப் பதிவேடு ஆங்கிலத்தில் உள்ளது. அனுமதி, தகவலின்மை, இல்லப்பணி விடுப்பு, அலுவல் பணி போன்ற பதிவுகள் தமிழிலும், ஆங்கிலத்திலும் மேற்கொள்ளப்படுகின்றன.

விடுப்பு விண்ணப்பங்களில் மேற்கொள்ளப்படும் பதிவுகள் அனைத்தும் அரசாணைக்கிணங்கத் தமிழிலேயே அமைதல் வேண்டும். ஆங்கிலேயர்கள் வெளியேறி 52 ஆண்டுகளாகியும் கூட இன்னும் இவை தமிழில் இல்லாதது மிகுந்த கண்டனத்துக்குரியது.

பணிப் பதிவேடுகள்

நியமனம், மாறுதல், விடுப்பு ஒப்புவிப்பு, அயற்பணி, பணி சரிபார்ப்பு, நீண்டகாலக் கடன்கள் குறித்த விவரங்கள் - தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன.

அலுவலகத்தில் உள்ள தட்டச்சுகளின் எண்ணிக்கை :

| | | |
|---|---|---|
| தமிழ் | - | 41 |
| ஆங்கிலம் | - | 29 |

65 விழுக்காட்டின்படி 45 தமிழ் தட்டச்சுப் பொறிகள் இருக்கவேண்டும். எனவே, இருக்கின்ற 29 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளில் 4 தட்டச்சுப்பொறிகளை ஒப்படைப்பச் செய்து அதற்கீடாகத் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெற வேண்டும்.

தட்டச்சு செய்த பக்கங்கள் (கடந்த 6 திங்களில்)

| | | |
|---|---|---|
| தமிழ் | - | 33241 |
| ஆங்கிலம் | - | 72718 |

தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை மிகுதியாகப் பயன்படுத்தி ஆங்கிலத்தில் தட்டச்சு செய்யப்படும் பக்கங்களின் எண்ணிக்கையைக் குறைக்க வேண்டும்.

தமிழில் வெளியிடப் பெற்றுள்ள ஆணைகள்

1. முதலமைச்சர் பொது மற்றும் விபத்து நிவாரண நிதியுதவித் திட்டங்கள்

2. நீதிமன்றங்கள் - தனி மராமத்துப் பணிகள், தீயணைப்புச் சாதனங்கள் வாங்குதல், கூடுதல் பணியிடங்கள் நியமனம், 1999-2000 ஆம் ஆண்டின் பகுதி 2 திட்டம் - இராமேசுவரத்தில் மாவட்ட உரிமையியல் குற்றவியல் நடுவர் நீதிமன்றம் உருவாக்குதல் தொடர்பான ஆணைகள் நீதிமன்ற வளாகத்தில் கட்டடக் கலை அழகுடன் கூடிய முகப்பு அமைத்தல், மின் தூக்கிகளைப் பழுது பார்த்துப் பராமரித்தல், சென்னையில் கண்காட்சி நடத்துதல் - அனுமதி விழாவிற்கான செலவு ஆணை.

3. தடையின்மைச் சான்றிதழ், சீராய்வு மனு - தொடர்பான ஆணைகள், மேல்முறையீடு.

15. வீட்டு வசதித்துறை

10.11.99 அன்று வீட்டு வசதித்துறை ஆய்வு செய்யப்பட்டது.

இது தொடர்பான ஆய்வறிக்கை இதுதான்.

1. வருகைப் பதிவேடுகள் மற்றும் தொடர் குறிப்புப்பதிவேடுகள்

| | | |
|---|---|---|
| அலுவல் பணி, அனுமதி, தகவலின்மை, பதவிப்பெயர்கள், பெயர்களின் தலைப்பெழுத்துக்கள் ஆகியவை | : | ஆங்கிலத்தில் உள்ளன. |
| தற்செயல் விடுப்பு விண்ணப்பங்கள் கையொப்பங்கள் அவற்றின் மீதான குறிப்புகள், ஆணைகள் | : | தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ளன. |

2. கையொப்பங்கள் (வருகைப் பதிவேடு)

105 பேர்களில் 35 பேர் தமிழில் 70 பேர் ஆங்கிலத்தில் : ஒப்பமிடுகின்றனர்

பற்றொப்பப் பதிவேடு

150 பேர்களில் 21 பேர் தமிழில் 129 பேர் ஆங்கிலத்தில் : ஒப்பமிடுகின்றனர்

3. பதிவுருத்தாள் / கமுக்க அறிக்கைகள் : ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

| 4. ஆணைகள் (1.1.99 முதல் 2.11.99 வரை) | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. அலுவலக நடைமுறை (வாலாயம்) | 49 | 160 | 209 |
| 2. நிலையாணை | 143 | 330 | 473 |
| 3. பத்தாண்டு | 196 | 312 | 508 |
| 4. இருபதாண்டு | 589 | 78 | 667 |
| 5. முப்பதாண்டு | 10 | 10 | 20 |
| 6. நாற்பதாண்டு | 1 | 2 | 3 |
| மொத்தம் | 978 | 892 | 1870 |

5. பணிப்பதிவேட்டில் பதிவுகள்

நியமனம், மாறுதல் ஊதிய உயர்வு ஈட்டிய விடுப்பு ஒப்புவிப்பு, பணிச்சான்று, ஊதியம் அறுதியிடல் போன்ற அனைத்துப் பதிவுகளும் : ஆங்கிலத்தில் உள்ளன.

6. பதிவேடுகள்

கணக்குப் பதிவேடு, வழங்கப்பெறா சம்பளப் பதிவேடு, நிலைமுன் கணக்குப் பதிவேடு, பயணச் சலுகைப் பதிவேடு, சில்லரைச் செலவினப் பதிவேடு, கருவூலப்பட்டிப்பதிவேடு, காசோலைப் பதிவேடு, ஊதிய உயர்வுப் பதிவேடு போன்ற பதிவேடுகள் : ஆங்கிலத்தில் எழுதுப்படுகின்றன.

7. கடிதப் போக்குவரத்து

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| அ. பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 1503 | 1808 | 3311 |
| ஆ. துறைத் தலைமை அலுவலகங்களுக்கு | 4725 | 5008 | 9733 |
| இ. சார்நிலை/சமநிலை அலுவலகங்களுக்கு | 1798 | 2018 | 3816 |
| ஈ. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 139 | 216 | 355 |
| மொத்தம் | 8165 | 9050 | 17215 |

8. வரப்பெற்ற கடிதங்கள்

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| அலுவலகப் பணியாளர் சார்நிலை அலுவலகம் ஆகியோரிடமிருந்து வரப்பெற்றவை | 420 | 586 | 1006 |

9. தட்டச்சுகளின் எண்ணிக்கை :

ஆங்கிலப் பொறிகள் : 9

தமிழ் : 14

மின்னணு (இருமொழி) தட்டச்சுப்பொறி :

10. கடந்த ஆறு திங்கள்களில் தட்டச்சுச்செய்யப்பெற்ற

செவ்வைப்படிகளின் பக்க எண்ணிக்கை : 90,587

தமிழில் : 56,587

ஆங்கிலம் : 33,606

இவற்றை அடிப்படையாகக் கொண்டு 15.11.99 அன்று அமைச்சர் கு. பிச்சாண்டி அவர்களுக்கு ஒரு நேர்முக மடல் எழுதினேன். இதே போன்ற ஒரு மடலை, துறையின் செயலாளர் என். கோவிந்தன் அவர்கட்கும் எழுதினேன்.

துறை அமைச்சர் 27.12.99 அன்று எனக்கொரு விடை எழுதினார்.

அன்புடையீர்,

தங்களது 15.11.99-ம் நாளிட்ட நேர்முக மடலில் சுட்டிய வண்ணம் இத்துறையின் அனைத்துப் பிரிவுகளிலும் வெளியிடப்படும் அனைத்து ஆணைகளும் தமிழில் வெளியிடப்பட்டு வருகின்றன.

வருகைப் பதிவேட்டில் தமிழில் கையொப்பமிடத்தக்க அறிவுரைகள் வழங்கப்பட்டுள்ளன. அனைத்துப் பதிவேடுகளும் தமிழில் பதிவுகள் செய்யப்படுகின்றன. தமிழைச் சிறப்பாக செயல்படுத்த தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் அலுவலகத்தில் மாதிரி வரைவு படிவங்கள், மாதிரி வரைவு ஆணைகள். ஆட்சிச் சொல் அகராதி. சிறப்புச் சொல் அகராதி போன்ற படிவங்கள் இத்துறைக்கு வழங்கக் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளன. மேலும் அடுத்த ஆய்வுக் கூட்டத்திற்குள் இத்துறையில் தமிழ் ஆட்சிமொழிச் செயல்திட்டம் முழுமையாகச் செயல்படுத்த அனைத்து நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன என்பதனை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்
(கு. பிச்சாண்டி)

பெறுநர்

மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் அவர்கள்,
தலைமைச் செயலகம், சென்னை - 600 009

அனைத்து நடவடிக்கைகளும் தமிழில் அமைய ஆவன செய்யப்படும் என்று உறுதியளித்திருந்தார்.

16. வேளாண்மைத் துறை

29.11.99 துறையின் நேர்முக மடல், 6.1.2000 அன்று அனுப்பப்பட்ட என் நேர்முக மடல் ஆகியவற்றைக் கொண்டு 3.3.2000 அன்று துறை அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம் அவர்கள் ஒரு குறிப்புத் தந்துள்ளார்கள்.

இதனையொட்டி துறைச் செயலர் நா. ஆதிமூலம் துறையினர்க்கு விரிவாக உணர்த்தியதுடன்,

எனக்கும் அதனுடைய படியை அனுப்பிவைத்திருந்தார். தமிழ் ஆட்சிமொழி ஆகவேண்டும் என்பதில் அதிக ஆர்வம் காட்டிய அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம். அவர் என் வேதனையை உணர்ந்து புலப்படுத்தியுள்ளார் என்பதை உணரலாம்.

நா. ஆதிமூலம், இ.ஆ.ப.,
அரசுச் செயலாளர்
வேளாண்மைத்துறை

பொருள் : தமிழ் வளர்ச்சி - ஆட்சிமொழி செயலாக்கம் - பதிவேடுகள் குறிப்புகள் தமிழிலேயே எழுதப்படவேண்டும் - ஆணைகள் அனைத்தும் தமிழிலேயே பிறப்பிக்கப்படவேண்டும் - அறிவுரைகள் வழங்கப்படுகின்றன.

''மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அர்களின் வேதனையை நான் உணர முடிகிறது. வேளாண்மைத்துறைச் செயலாளர் கொடுத்துள்ள உறுதிமொழியை அவசியம் நிறைவேற்ற அனைத்து நடவடிக்கையையும் எடுத்திட வேண்டும்.

2. எனவே, தமிழ் ஆட்சிமொழியை முழுமையாகச் செயல்படுத்துவதில் மெத்தனமாக இல்லாமல் தனிக்கவனம் செலுத்தி விலக்கப்பட்ட இனங்களைத் தவிர அனைத்து இனங்களிலும், பதிவேடுகள், குறிப்புகள், கடிதங்கள் மற்றும் ஆணைகள் ஆகியவற்றில் தமிழை முழுமையாகப் பயன்படுத்த வேண்டும். இதற்கான முனைப்பான நடவடிக்கை உடனடியாக எடுக்கப்பட வேண்டும் என்று தங்களை மீண்டும் கேட்டுக் கொள்கிறேன்.

3. பார்வை ஐந்து மற்றும் ஆறில் கண்டுள்ள நேர்முகக் கடிதங்களில் கேட்டுள்ளபடி இதுபற்றி இத்துறையின் பிரிவுகளில் எடுக்கப்பட்ட நடவடிக்கை குறித்த விவரங்களை (2 நகல்கள்) உடனடியாக வேளாண்மை (அ.ந.3) பிரிவிற்கு அனுப்பி வைக்குமாறும் கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் அன்பார்ந்த,

ஒம்/. . . . .

(நா. ஆதிமூலம்)

பெறுநர்

மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர்
அவர்களின் நேர்முக உதவியாளர்.

ஆய்வு நாள் : 27.12.1999

1. அ. வருகைப் பதிவேடு (கையொப்பம்)

179 பேர்களில் 134 பேர் ஆங்கிலத்திலும்
45 பேர் தமிழிலும் : ஒப்பமிடுகின்றனர்

ஆ. தற்செயல் விடுப்பு, ஈட்டிய விடுப்பு, அலுவல் பணி, தகவலின்மை, மாறுதல் பணி, சமய விடுப்பு, இல்லப்பணி போன்றவை :ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

இ. வருகைப் பதிவேடு, பெயர்களின் தலைப் : தமிழிலும் ஆங்கிலத்திலும்
பெழுத்துக்கள், தொடர் குறிப்பேடு எழுதப்படுகின்றன
பதிவுகள்போன்றவை

2. பற்றொப்பப் பதிவேடு

210 பேர்களில் 199 பேர் ஆங்கிலத்திலும்
11 பேர் தமிழிலும் : ஒப்பமிடுகின்றனர்

3. பதிவேடுகள்

பணக்கணக்குப் பதிவேடு, கடன் ஒப்பளிப்புப் : ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன
பதிவேடு, வழங்கப்படா சம்பளப் பதிவேடு,
விழா முன் பணப்பிடித்தப் பதிவேடு, ஓய்வூதியத்
தொகை வழங்கல் பதிவேடு, பல்வகைக் கடன்கள்,
முன்பணங்கள் பிடித்தப் பதிவேடு, வீடுகட்டும்
முன்பணப் பதிவேடு, பொது வைப்பு முன்பணம்
வழங்கல் பதிவேடு போன்றவை

4. பணிப்பதிவேடு

மாறுதல், நியமனம், பணி சரிபார்த்தல், ஊதியம் : ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன
அறுதியிடல், ஈட்டிய விடுப்பு, ஒப்புவிப்பு ஆணைகள்,
நீண்ட காலக் கடன் குறித்த விவரங்கள் ஆகியன
விடுப்பு ஒப்புவிப்பு பதிவுகள் : தமிழில் சில பதிவேடுகளில்
எழுதப்படுகின்றன

| 5. ஆணைகள் : (1.1.99 முதல் 23.12.99 வரை) | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. வாலாயம் | 146 | 610 | 756 |
| 2. நிலையாணை | 127 | 407 | 534 |
| 3. பத்தாண்டு | 33 | 125 | 158 |
| 4. இருபதாண்டு | 111 | 102 | 213 |
| 5. முப்பதாண்டு | 35 | 167 | 202 |
| மொத்தம் | 452 | 1411 | 1863 |

தமிழில் .. 452
ஆங்கிலத்தில் .. 1411

6. கடிதப் போக்குவரத்து : (1.1.99 முதல் 30.11.99 வரை)

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. பொதுமக்களுக்கும், அரசு சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 1026 | 4460 | 5486 |
| 2. துறைத் தலைமை அலுவலகங்களுக்கு | 1086 | 3461 | 4547 |
| 3. சார்நிலை / சம நிலை அலுவலர்களுக்கு | 1339 | 5487 | 6826 |
| 4. அரசின் மற்ற அலுவலர்களுக்கு | 11350 | 4469 | 15819 |
| | 14801 | 17877 | 32678 |

7. வரப்பெற்ற கடிதங்கள் :

| | | | |
|---|---|---|---|
| அலுவலகப் பணியாளர்கள், சார்நிலைப் பணியாளர் ஆகியோரிடமிருந்து வரப்பெற்றவை | 15809 | 22803 | 38612 |

8. தட்டச்சுப்பொறி :

| | | | |
|---|---|---|---|
| அ. | தமிழ்த் தட்டச்சுப் பொறி | : | 22 |
| ஆ. | ஆங்கிலத் தட்டச்சுப் பொறி | : | 17 |
| இ. | மின்னணுப் பொறி | : | 4 |
| ஈ. | இருமொழித் தட்டச்சுப்பொறி | : | 1 |

(இத்துறையில் உள்ள மொத்தம் தட்டச்சுப் பொறிகள் 39-இல் விழுக்காட்டின்படி 25 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இருக்க வேண்டும். தற்போது 22 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் உள்ளன. எனவே, ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் 17-இல் 3 தட்டச்சுப் பொறிகளை ஒப்படைப்புச் செய்து அதற்கீடாக தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெற வேண்டும். கழித்தொதுக்கப்பட வேண்டிய தட்டச்சுப் பொறிகள் தமிழிலும், ஆங்கிலத்திலும் ஒன்று வீதம் உள்ளன. இத்தொடர்பில் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது.)

9. கடந்த 1.1.99 முதல் 30.11.99 வரை தட்டச்சுச்செய்த பக்கங்கள்

| | | | |
|---|---|---|---|
| அ. | தமிழில் | : | 24008 |
| ஆ. | ஆங்கிலத்தில் | : | 70032 |
| இ. | கூடுதல் | : | 94040 |

கலந்துரையாடல் குறிப்புரை

ஆய்வுக் குறிப்புகளின் அடிப்படையில் தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத் துறை அரசுச் செயலாளர் அவர்கள் வேளாண்மைத் துறைச் செயலாளர் அவர்களுடன் 3.1.2000 அன்று

கலந்துரையாடினார்கள். வருகைப் பதிவேட்டில் 179 பேர்களில் 134 பேர் ஆங்கிலத்திலும் 45 பேர் தமிழிலும் ஒப்பமிடுகின்றனர். பற்றொப்பப் பதிவேட்டில் 210 பேர்களில் 199 பேர் ஆங்கிலத்திலும் 11 பேர் தமிழிலும் ஒப்பமிடுகின்றனர். இனி அரசுப் பணியாளர்கள் அனைவரும் 21.6.78 ஆம் நாளிட்ட கல்வி (த.வ.) த் துறை நிலையாணை எண். 1134க் கிணங்க தமிழிலேயே அனைத்திலும் ஒப்பமிட வேண்டும். வாலாயமாக வெளியிடப்படும் அரசாணைகள் 756இல் 610 அரசாணைகள் ஆங்கிலத்தில் உள்ளன. இவ்வாலாய அரசாணைகள் அனைத்தும் தமிழிலேயே வெளியிடப்படவேண்டும். தேவைப்படின் தொடக்க நிலையில் மொழி பெயர்ப்புத் துறையின் வாயிலாக மொழியாக்கம் செய்து கொள்ளலாம். பெரும்பாலான பதிவேடுகள் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன. பதிவேடுகள் அனைத்தும் தமிழிலேயே பேணப்படவேண்டும். பணிப்பதிவேடுகளில் பணியாளர் தொடர்பான விடுப்பு வழங்கல், ஊதிய உயர்வு, ஊதியம் அறுதியிடல். மாற்றல். நியமனம் போன்ற விவரங்களைத் தமிழிலேயே எழுத வேண்டும். இவ்வலுவலகத்தில் தமிழ்த் தட்டச்சுப் பொறி 22ம், ஆங்கிலத் தட்டச்சுப் பொறி 17ம் ஆக 39 தட்டச்சுப் பொறிகள் உள்ளன. இவற்றுள் 17 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளைக் கொண்டு 70032 பக்கங்களும். 22 தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைக் கொண்டு 24008 பக்கங்களும் தட்டச்சிடப்பட்டுள்ளன. இனி, இருக்கின்ற தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பயன்படுத்தி வரைவுகள் தமிழில் எழுதி தட்டச்சிடப்பட வேண்டும்.

இவ்வலுவலகத்திலிருந்து பொது மக்களுக்கும். துறைத் தலைமை அலுவலகங்களுக்கும். சார்நிலை சமநிலை அலுவலர்களுக்கும் அனுப்பப்பட்ட மொத்தக் கடிதங்கள் 16859இல் 13408 கடிதங்கள் ஆங்கிலத்தில் உள்ளன. விதி விலக்குகளுக்கு உட்பட்டு கடிதங்கள் யாவும் தமிழிலேயே எழுத வேண்டும். விளக்கக் குறிப்பு, திட்டங்கள் போன்றவற்றை பொருள் புரிந்து மொழியாக்கம் மேற்கொள்ள வேண்டும். தேவைப்படும் இடங்களில் ஆங்கிலச் சொற்கள் அடைப்புக் குறிகளில் இடப்பெறலாம். பற்றாளர் தமிழ்த் திட்டத்தில் ஆர்வங்கொண்டு செயற்பட வேண்டுமெனப் பல்வேறு கருத்துகளை தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத்துறை அரசுச் செயலாளர் அவர்கள் தெரிவித்தார்கள். இக்குறைகளை விரைவில் களைந்து தமிழ்த் திட்டச் செயலாக்கத்தை மேம்படுத்துவதாக வேளாண்மைத்துறைச் செயலாளர் அவர்கள் தெரிவித்தார்கள்.

அரசுச் செயலாளர்
தமிழ் வளர்ச்சி பண்பாடு இந்து சமயம் (ம) அறநிலையத்துறை, சென்னை - 9

அமைச்சர்க்கு நான் எழுதிய மடல் 20.10.2000, தி.பி.2031/ஐப்பசி 4.

பெறுநர்

மாண்புமிகு வீரபாண்டி ஆறுமுகம் அவர்கள்
வேளாண்மைத்துறை அமைச்சர்
தலைமைச் செயலகம், சென்னை - 600 009

மதிப்பிற்குரியீர்,

வணக்கம்.

பொருள் : ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் - ஆய்வு முடிவுகள் குறித்த கருத்துரைகள் - தொடர்பாக.

ஆட்சிமொழித் திட்டத்தை முழுமைப்படுத்தும் வகையில் தலைமைச் செயலகத் துறைகள் அனைத்தும் இரண்டுமுறை ஆய்வு செய்யப்பட்டுள்ளன. வேளாண்மைத்துறை தொடர்பான பயன்பாடுகள் தமிழ்நாட்டின் ஏழை எளிய உழவர்களைச் சென்றடைய வேண்டியுள்ளது. செயலாக்கும் பொறுப்பினைச் செயலகத்துறையின் மேல்மட்ட அலுவலர்கள் பெறுகிறார்கள். உழவர்களின் கல்வி நிலையைத் தாங்கள் அறிவீர்கள். அவர்களுக்குப் போய்ச் சேரும் செய்திகள் அனைத்தும் தமிழில் இருந்தால்தான் அவர்கள் தங்களுக்குள்ள அரை குறைத் தமிழறிவைக் கொண்டாவது பயன்களை எதிர்கொள்ள முடியும். மேலே இருக்கின்ற அலுவலர்கள் இன்னும் அந்த ஏழை உழவர்களை அந்நியப்படுத்தி வைத்திருக்கக்கூடாது. அதற்கு ஒரே வழி! வேளாண்மைத் துறையின் அனைத்து நடவடிக்கைகளையும் தமிழ் வழியில் கொண்டு செல்வது ஒன்றுதான்.

தங்கள் துறை நடவடிக்கைகள் 29.11.1999 அன்று ஆய்வு செய்யப்பட்டபோது தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் 29 விழுக்காடாக இருந்தது. இதுகுறித்து தான் தங்களுக்கு ஓர் அறிக்கை அளித்தபோது. என் ஆதங்கத்தையும் சுட்டிக்காட்டி தங்கள் துறையினருக்குத் தாங்கள் ஓர் அருமையான அறிக்கையை வெளியிட்டீர்கள். அதன்பிறகு ஓரளவு முன்னேற்றம் உள்ளது. 6.9.2000 அன்று இரண்டாவது சுற்று ஆய்வு மேற்கொள்ளப்பட்ட போது. 54 விழுக்காடாக உள்ளது. இதில் முன்னேற்றம் உள்ளது என்பதை ஒப்புக்கொண்டாலும் பிற துறைகளோடு ஒப்பிடும்போது இது மிகவும் குறைவு என்பதை வருத்தத்துடன் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். பெரும்பாலான துறைகள் 75 விழுக்காட்டுக்கும் மேல் 90 விழுக்காடு வரை சென்றுவிட்ட நிலையில் தாங்கள் இதில் தக்க கவனம் செலுத்துமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

தங்கள் அன்புள்ள,

(மு. தமிழ்க்குடிமகன்)

## 17. வருவாய்த்துறை

4.2.2000 அன்று இத்துறை ஆய்வு செய்யப்பட்டது. 8.2.2000 அன்று வருவாய்த்துறைச் செயலர்க்கும் துறை அமைச்சர் நாஞ்சிலார்க்கும் நேர்முக மடல்கள் என்னால் அளிக்கப்பட்டன.

வருகைப் பதிவேட்டில் 237 பேர்களில் 65 பேர்கள் மட்டுமே தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

34 நாட்களில் வெளியிடப்பட்ட அரசாணைகளில் தமிழில் 65ம் ஆங்கிலத்தில் 96 ம் உள்ளன. துறையில் போதுமான தமிழ்ச் செயலாக்கம் இல்லை என்பது புரிந்து விடுகிறது.

1999 இல் 971 ஆணைகள் தமிழில் என்றால் 1473 ஆணைகள் ஆங்கிலத்தில்.

2000 த்தில் 73 ஆணைகள் தமிழில் என்றால் 116 ஆங்கிலத்தில்.

கடிதப் போக்குவரத்தில் மட்டும் இத்துறையில் முன்னேற்றம் காணப்படுகிறது. ஏழை உழவர்களிலிருந்து கிராம நல அலுவலர் வரை இத்துறைக்குத் தொடர்புள்ளவர்கள் எனும் முறையில் 1,38,426 மடல்கள் தமிழில், ஆங்கிலத்தில் 36092 மடல்கள் ஆங்கிலத்தில்.

குறை களைந்து சில மாதங்களிலேயே நல்ல முன்னேற்றம் காட்டுவதாக அமைச்சரும் என்னிடம் நேரில் தெரிவித்தார். செயலர் தேவேந்திரநாத் சாரங்கியும் உறுதியளித்தார்.

வருவாய்த்துறை - தலைமைச் செயலகம்

தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறைச் செயலாளர் அவர்களின் ஆட்சிமொழித்திட்ட ஆய்வு நாள் : 4.2.2000

1. வருகைப் பதிவேடுகள் :

 விடுப்புகள் அலுவல் பணி அனுமதி
 தகவலின்மை பதவிப்பெயர் தலைப்பெழுத்து: ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன
 ஆகிய குறிப்புகள்

2. கையொப்பங்கள்

 பணம் வழங்கல் பதிவேட்டில் பெயர்களும்
 ஒப்பங்களும் : ஆங்கிலத்தில் உள்ளன

3. அலுவலக ஆணைகள் (1.1.2000 முதல் 3.2.2000 வரை)

 வெளியிடப்பட்ட அலுவலக ஆணைகள்

| | | |
|---|---|---|
| தமிழில் | : | 65 |
| ஆங்கிலத்தில் | : | 96 |
| மொத்தம் | : | 161 |

| 4. அரசாணைகள் (1999) | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. பத்தாண்டு | 356 | 382 | 738 |
| 2. இருபதாண்டு | 122 | 263 | 385 |
| 3. முப்பதாண்டு | 6 | 29 | 35 |
| 4. நாற்பதாண்டு | - | 4 | 4 |
| 5. வாலாயம் | 72 | 515 | 587 |
| 6. பல்வகை | 415 | 280 | 695 |
| மொத்தம் | 971 | 1473 | 2444 |

அரசாணைகள் (2000)

| | | | |
|---|---|---|---|
| 1. பத்தாண்டு | 20 | 32 | 52 |
| 2. இருபதாண்டு | 10 | 19 | 29 |
| 3. முப்பதாண்டு | - | - | - |
| 4. நாற்பதாண்டு | - | 1 | 1 |
| 5. வாலாயம் | 6 | 38 | 44 |
| 6. பல்வகை | 37 | 26 | 63 |
| மொத்தம் | 73 | 116 | 189 |

பணிப்பதிவேடு

1. ஊதிய உயர்வுப் பதிவு
2. பதவிப் பெயர் முத்திரைகள்
3. பணிவரன்முறைப்படுத்தல் : ஆங்கிலத்தில் உள்ளன
4. ஈட்டிய விடுப்புக் குறைத்தல்
5. பணிச்சரிபார்ப்புச் சான்று
6. விடுப்புக் கணக்கு

5. பணிப்பதிவேட்டில் பதிவுகள் :

ஊதிய உயர்வு, ஊதிய நிர்ணயம், பணி சரிபார்ப்புச் சான்று, பதவிப் பெயர் முத்திரை, விடுப்புக் கணக்கு, பணி வரன்முறை, ஈட்டிய விடுப்புக் குறைத்தல், அலுவலர் ஒப்பங்கள் : ஆகிய பதிவுகள் ஆங்கிலத்தில் உள்ளன.

6. பதிவேடுகள்

| | | |
|---|---|---|
| பணம் வழங்கல் பதிவேடு, காசோலைப் பதிவேடு, கொடுபடா பணப் பதிவேடு, பணிப் பதிவேடு | : | ஆகியவை உள்ளிட்ட 38 பதிவேடுகள் முழுமையாக ஆங்கிலத்தில் எழுதப் படுகின்றன. 175 பதிவேடுகள் தமிழ் ஆங்கிலம் கலந்தும் 412 பதிவேடுகள் தமிழிலும் எழுதப்படுகின்றன. |

| 7. கடிதப் போக்குவரத்து | | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|---|
| அ. பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | : | 12114 | 6800 | 18,914 |
| ஆ. மேல் நிலை அலுவலர்களுக்கு | : | 82107 | 8401 | 90,508 |
| இ. சார்நிலை சம நிலை அலுவலர்களுக்கு | : | 24098 | 7804 | 31,902 |
| ஈ. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | : | 20107 | 13087 | 33,194 |
| கூடுதல் | : | 138426 | 36092 | 1,74,518 |

| 8. வரப்பெற்ற கடிதங்கள் | | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|---|
| அலுவலகப் பணியாளர்கள் சார்நிலை அலுவலர்கள் ஆகியோரிடமிருந்து வரப் பெற்றவை. | : | 82414 | 32310 | 1,14,724 |

9. தட்டச்சுப்பொறிகள்

தமிழ் - 36 போதிய எண்ணிக்கையில்
ஆங்கிலம் - 15 தமிழ்த் தட்டச்சுகள் உள்ளன.

10. தற்செயல் விடுப்பு விடுப்பு பதிவுருத்தாள், பதிவுக் குறிப்பு, சிலருடைய தற்செயல் விடுப்பு விண்ணப்பங்கள், விடுப்புக்கோரும் தொலைபேசி தகவல் குறிப்பு : ஆகியவை தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ளன.

கலந்துரையாடல் குறிப்பு

தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத் துறைச் செயலாளர் அவர்கள் வருவாய்த்துறைச் செயலாளர் அவர்களுடன் 4.2.2000 பிற்பகல் 4 மணிக்குக் கலந்துரையாடினார். தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை

செயலாளர் பதிவேடுகள் அனைத்தையும் தமிழில் எழுதுமாறும், இப்போதுள்ளதைவிட அரசாணைகளைத் தமிழில் வெளியிடுமாறும், தமிழ்த் தட்டச்சுகளை அதிகமாகப் பயன்படுத்தி தமிழில் கடிதப் போக்குவரத்துகளை மேலும் அதிகமாக்குமாறும், விரிவாக எடுத்துரைத்து ஆய்வில் கண்டறியப்பட்ட குறைகளை 3 மாதத்திற்குள் களைந்து, ஆட்சிமொழிச் செயலாக்கத்தை முழுமையாக நிறைவேற்றமாறு கேட்டுக் கொண்டார். வருவாய்த் துறைச் செயலாளர் 3 திங்களில் குறைகளைக் களைந்து ஆட்சி மொழிச் செயலாக்கத்தை மேம்படுத்துவதாக உறுதியளித்தார்.

## 18. எரிசக்தித் துறை **(Energy)**

15.2.2000 அன்று இத்துறையில் ஆய்வு செய்யப்பட்டது. 16.2.2000 அன்று துறைச் செயலர் லால் ராவ்ணாஷைலோவுக்கு நேர்முக மடலும் தரப்பட்டது.

இத்துறையில் 37 பேரில் 21 பேர் தமிழில் ஒப்பமிடுகின்றனர். ஒரு சில துறைகளைத் தவிரப். பதிவேடுகள் அனைத்தும் ஆங்கிலத்தில்தான் பேணப்படுகின்றன. இவற்றைக் கூட மாற்றம் செய்து வைக்க வேண்டுமெனும் எண்ணம் எவர்க்கும் எழவில்லை.

ஆறுமாதத்தில் தமிழில் 110 அரசாணைகள் என்றால் ஆங்கிலத்தில் 680.

கடிதப்போக்குவரத்தில் முன்னேற்றம் உள்ளது.

தமிழில் 18198 என்றால் ஆங்கிலத்தில் 14663

19.5.2000 அன்று செயலர் ஷைலோ அவர்கள் ஆட்சிமொழிச் செயலாக்கத்தினை முழுமைப் படுத்த ஆய்வு செய்துள்ளதாக எழுதியுள்ளார். அவரது துறை சார்ந்த அலுவலர் அனைவர்க்கும் சுற்றறிக்கை வாயிலாக அறிவுறுத்தப்பட்டுள்ளது.

இது தொடர்பாக துறை அமைச்சர் ஆர்க்காடு வீராசாமி அவர்களுக்கும் நேர்முக மடல் தரப்பட்டுள்ளது.

**தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத் துறை அரசுச் செயலாளர் அவர்களின் தமிழ்த் திட்டச் செயலாக்கம் - ஆய்வு**

**ஆய்வறிக்கை**

ஆய்வு நாள் : 15.02.2000

1. வருகைப் பதிவேடு

37 பேரில் 21 பேர் தமிழிலும், 16 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர்.

2. பற்றொப்பப் பதிவேடு

42 பேரில் 11 பேர் தமிழிலும் 31 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர்.

3. மருத்துவ விடுப்பு. ஈட்டிய விடுப்பு, தகவலின்மை, தொடர் குறிப்பேடு போன்றவை தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன.

4. பணிப்பதிவேடு

விடுப்பு ஒப்புவிப்பு, பணிச்சரிபார்ப்பு, நீண்டகாலக் கடன், ஆண்டு ஊதிய உயர்வு, நியமனம், மாற்றுப்பணி குறித்த விவரங்கள் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

5. பதிவேடுகள்

பொதுவைப்பு முன் பணப் பதிவேடு, விழாமுன் பணம், கடன்களும், முன்பணங்களும் குறித்த பதிவேடு, எழுதுபொருள் பதிவேடு, அலுவலக ஆணைப் புத்தகம் போன்றவை ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

6. காசோலைப் பதிவேடு, பணக்கணக்குப் பதிவேடு, வங்கிக் கணக்குப் பதிவேடு, வழங்கப்படாச் சம்பளப் பதிவேடு ஆகியவற்றில் 5.2.2000 முதல் தமிழில் பதிவுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. (இதற்கு முன்னர் ஆங்கிலத்தில் பதிவுகள் செய்யப்பட்டுள்ளன).

7. தன்பதிவேடு, அனுப்புகைப் பதிவேடு போன்றவை தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன.

| 8. அரசாணைகள் | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| வாலாயம் | 102 | 374 | 476 |
| நிலையாணை | 2 | 205 | 207 |
| பத்தாண்டு | 2 | 51 | 53 |
| இருபதாண்டு | 3 | 30 | 33 |
| முப்பதாண்டு | 1 | 20 | 21 |
| மொத்தம் | 110 | 680 | 790 |

தமிழில் - 110
ஆங்கிலத்தில் - 680
கூடுதல் - 790

| 9. கடிதப் போக்குவரத்து | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் | 5324 | 3088 | 8412 |
| 2. மேல்நிலை அலுவலர்களுக்கு | 6434 | 3620 | 10054 |
| 3. சார்நிலை, சமநிலை அலுவலர்களுக்கு | 3577 | 3455 | 7032 |
| 4. அரசின் மற்ற அலுவலர்களுக்கு | 2883 | 4500 | 7363 |
| கூடுதல் | 18198 | 14663 | 32861 |

தமிழில் - 18198
ஆங்கிலத்தில் - 14663
கூடுதல் - 32861

10. கமுக்க அறிக்கைகள் / பதிவுருத் தாள்கள் ஆங்கிலத்தில் உள்ளன.

11. கடந்த ஆறு திங்களில் தட்டச்சுச் செய்யப்பட்ட பக்கங்களின் எண்ணிக்கை

தமிழில் - 18198
ஆங்கிலத்தில் - 25331
கூடுதல் - 43529

(குறிப்பு) இவ்வலுவலகத்தில் 8 தட்டச்சுப்பொறிகள் உள்ளன. (இவற்றுள் 3 தமிழ்த் தட்டச்சுப்பொறியும் 5 ஆங்கிலத் தட்டச்சுப்பொறியும் ஆகும்) 65 விழுக்காட்டின் படி 5 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இருக்க வேண்டும். எனவே, இப்போதுள்ள 5 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளில் இரண்டை ஒப்படைப்பு செய்து அதற்கு ஈடாக 2 தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெறநடவடிக்கை மேற்கொள்ள வேண்டும்.

12. கால முறை அறிக்கைகள்

75 அறிக்கைகளில் 45 அறிக்கைகள் தமிழிலும் ஆங்கிலத்திலும், 30 அறிக்கைகள் தமிழிலும் உள்ளன.

13. சட்டமன்ற வினாக்கள், மக்கள் சாசனம், உறுதி மொழிப்பட்டியல் / சுற்றோட்டக்குறிப்புகள் ஆகியன தமிழில் உள்ளன. பாராட்டுக்குரியது.

14. தமிழ் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம் குறித்த பயிற்சி வகுப்புகள் நடத்தும் பொருட்டு விருப்பார்வம் தெரிவித்துள்ளனர்.

தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம்

செயலரின் மடல்

நே.மு.க.எண்.979/அநமு/2000-3, நாள்:195.2000

அன்புள்ள திரு. ராமகிருட்டிணன்,

பொருள் : தமிழ் வளர்ச்சி - தமிழ் ஆட்சி மொழி திட்ட செயலாக்கம் எரிசக்தித் துறையின் ஆய்வு - ஆட்சி மொழிச் செயலாக்கத்தினை முழுமைப்படுத்துவது தொடர்பாக.

பார்வை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி தமிழ்ப் பண்பாடு இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் நேர்முக மடல், நாள்:16.2.2000

பார்வையில் காணும் அமைச்சர் அவர்களின் கடிதத்தில் எரிசக்தித் துறையில் தமிழ் மொழித் திட்டச் செயலாக்கம் நடைமுறைப்படுத்துவதில் ஏற்பட்டுள்ள குறைகளை களைய வேண்டும் எனவும், மேற்கண்ட குறைகளை களைந்து மே திங்களில் அடுத்த ஆய்வுக்கு வரும்போது 100 விழுக்காடு தமிழ் செயல்பாட்டில் இருக்க வேண்டும் எனவும் அறிவுறுத்தப்பட்டுள்ளது. அதனடிப்படையில் குறைகள் இத்துறையில் களையப்பட்டு தமிழ்மொழி திட்ட செயலாக்கம் செயல்படுத்தப்படுகிறது என்பதனை தங்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் இது சம்பந்தமாக இத்துறையில் உள்ள அனைத்து பிரிவுகளுக்கும் அறிவுரை வழங்கப்பட்டுள்ளது (நகல் இணைக்கப்பட்டுள்ளது) என்பதையும் தங்களுக்கு தெரிவிக்க விழைகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஒம்/

பெறுநர்

நகல் : தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்
அவர்களின் முதுநிலை நேர்முக உதவியாளர், சென்னை - 9

(துரை. சந்திரசேகரன்)
பிரிவு அலுவலர்

## 19. மக்கள் நல்வாழ்வு மற்றும் குடும்ப நலத்துறை

10.2.2000 அன்று இத்துறை ஆய்வு செய்யப்பட்டது. கலந்துரையாடல் குறிப்பும் உடனே வழங்கப்பட்டது.

வருகைப் பதிவேட்டில் 171 பேர்களில் 130 பேர்கள் தமிழில் ஒப்பமிடுகிறார்கள் என்பது வியப்பாகும். ஆனால் பற்றொப்பப் பதிவேட்டில் 18 பேர் தான் தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

1.1.99 முதல் 13 மாதங்களில் தமிழில் அரசாணைகள் 1594, ஆங்கிலத்தில் 2944.

இத்துறை இதில் கவனம் செலுத்தவில்லை. கடிதப் போக்குவரத்துகள் 6 மாதத்தில் தமிழில் 32371 என்றால் ஆங்கிலத்தில் 73092 என்பது எவ்வளவு கேவலமான நிலை?

இவற்றை எல்லாம் சுட்டிக்காட்டித் துறைச் செயலர்க்கும் துறை அமைச்சர்க்கும் நேர்முக மடல்கள் தரப்பட்டன.

13.7.2000 அன்று அமைச்சர் அவர்களே எனக்கொரு நேர்முக மடல் வரைந்து எல்லா வகையிலும் இத்துறை சிறப்பாகச் செயற்படும் என்று உறுதியளித்துள்ளார்.

தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத்துறை அரசுச் செயலாளர் அவர்களின்
தமிழ்த் திட்டச் செயலாக்கம் - ஆய்வு
ஆய்வு நாள் : 10.2.2000

ஆய்வறிக்கை

1. வருகைப் பதிவேடு

| | | |
|---|---|---|
| 171 பேர்களில், 130 பேர் தமிழிலும், 41 பேர் ஆங்கிலத்திலும் | : | ஒப்பமிடுகின்றனர் |

2. பற்றொப்பப் பதிவேடு

| | | |
|---|---|---|
| 165 பேர்களில் 18 பேர் தமிழிலும் 147 பேர் ஆங்கிலத்திலும் | : | ஒப்பமிடுகின்றனர் |

| | | |
|---|---|---|
| 3. தொடர் குறிப்பேடு, தற்செயல் விடுப்பு, மருத்துவ விடுப்பு, தகவலின்மை போன்றவை | : | தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன |
| 4. தன்பதிவேடு, அனுப்புகைப்பதிவேடு, முதன்மை ஆணைத் தொகுப்பு | : | தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன |

5. பதிவேடுகள்

| | | |
|---|---|---|
| பணக்கணக்குப் பதிவேடு, வழங்கப்படாச் சம்பளப் பதிவேடு, துணைக்கணக்குப் பதிவேடு, வங்கிப் பதிவேடு, கடன்கள் - முன் பணங்கள் குறித்த பதிவேடு. சம்பளம் வழங்கல் | : | ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன |

பதிவேடு, பொது வைப்பு முன்பணப் பதிவேடு,
பண்டிகை முன்பணப் பதிவேடு, எழுதுபொருள்
பதிவேடு போன்றவை

பணிப்பதிவேடு

மாறுதல், நியமனம், ஊதியம் அறுதியிடல்,
பணிச் சரிபார்ப்பு, நீண்டகால கடன்கள் : ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன
விடுப்பு ஒப்புவிப்பு போன்ற விவரங்கள்

6. ஆணைகள் (1.1.99 முதல் 31.1.2000)

| | | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | வாலாயம் | 1347 | 1128 | 2475 |
| 2. | நிலையாணை | 98 | 438 | 536 |
| 3. | பத்தாண்டு | 109 | 1244 | 1353 |
| 4. | இருபதாண்டு | 16 | 74 | 90 |
| 5. | முப்பதாண்டு | 6 | 46 | 52 |
| 6. | நாற்பதாண்டு | 18 | 14 | 32 |
| | மொத்தம் | 1594 | 2944 | 4538 |

தமிழில் - 1594
ஆங்கிலத்தில் - 2944

7. கமுக்க அறிக்கைகள் பதிவுருத் தாள்கள் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

8. கடிதப் போக்குவரத்து : 1.7.1999 முதல் 31.12.1999 வரை

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. பொது மக்களுக்கும் அரசு சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 10979 | 8800 | 19779 |
| 2. துறைத் தலைமை அலுவலர்களுக்கு | 8400 | 42107 | 50507 |
| 3. சார்நிலை, சமநிலை அவலர்களுக்கு | 7804 | 14098 | 21902 |
| 4. அரசின் மற்ற அலுவலர்களுக்கு | 5188 | 8087 | 13275 |
| மொத்தம் - | 32371 | 73092 | 105463 |

9. தட்டச்சுப்பொறி

அ. தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கை - 18
ஆ. ஆங்கிலத் தட்டச்சுகளின் எண்ணிக்கை - 12

10. கடந்த ஆறுதிங்களில் தட்டச்சுச் செய்யப்பட்ட செவ்வைப் படிகளின் எண்ணிக்கை :-

தமிழில் - 32371
ஆங்கிலத்தில் - 53529
மொத்தம் - 85900

11. நிலுவையில் உள்ள நடப்புக் கோப்புகள்

| தமிழ் | ஆங்கிலம் | இருமொழிகளிலும் | மொத்தம் |
|---|---|---|---|
| 850 | 3450 | 1150 | 5750 |

12. மக்கள் சாசனம், முதலமைச்சருக்கு
அனுப்பப்பெறும் சுற்றாணைக் குறிப்புகள் : தமிழில் உள்ளன.

அமைச்சரின் நேர்முக கடித எண்.6187/அநமு1/1/2000- நாள்:13:7.2000

அன்புடையீர்,

பொருள் : நிர்வாகம் - மக்கள் நல்வாழ்வு மற்றும் குடும்பநலத்துறை ஆட்சி மொழி தமிழ்ச் செயலாக்கம் குறித்து.

பார்வை : தமிழ் ஆட்சி மொழி தமிழ்ப்பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் நேர்முகக் கடித நாள் : 16.2.2000

பார்வையில் காணும் மாண்புமிகு அமைச்சரின் நேர்முகக் கடிதத்தில் கூறப்பட்ட ஆட்சிமொழிச் செயலாக்கம் குறித்து இத்துறையில் முழுமையான அளவில் உடன் மேற்கொள்ளப்படும் வகையில் கீழ்க்காணும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு கீழ்க்காணும் அறிவுரைகள் வழங்கப்பட்டன என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அ) வருகைப் பதிவேடு, பற்றொப்பப் பதிவேடு மற்றும் அன்றாடம் கையாளப்படும் அனைத்துப் பதிவேடுகளிலும் தமிழிலேயே கையொப்பமிடவேண்டும். அனைத்து அலுவலர்களும் தற்செயல்/ மருத்துவ விண்ணப்பப் படிவங்களைத் தமிழிலேயே சமர்ப்பிக்கவேண்டும்;

இ) பட்டியல் பிரிவில் பராமரிக்கப்படும் பணக்கணக்குப் பதிவேடு, வழங்கப்படா சம்பளப் பதிவேடு, துணைக் கணக்கு பதிவேடு ஆகிய பதிவேடுகள் மட்டும் அல்லாமல் தன்பதிவேடு, தனிப்பதிவேடு மற்றும் ஏனைய பதிவேடுகளும் தமிழில் எழுதவேண்டும். மேலும் மாறுதல் நியமனம், ஊதியம் அறுதியிடல், பணிச் சரிபார்ப்பு, நீண்ட கால கடன்கள் விடுப்பு ஒப்புவிப்பு போன்ற விவரங்கள் தமிழிலேயே எழுதப்படவேண்டும். கடிதப்போக்குவரத்து தமிழிலேயே

இருத்தல் வேண்டும். கடினமான ஆங்கில தொழில் நுட்ப சொற்களையும் அடைப்புக் குறியில் தெரிவிக்க வேண்டும். துறைத் தலைவர்களிடமிருந்து பெறப்படும் செயற்குறிப்புகள் பதில்கள் தமிழில் அனுப்ப வேண்டும். ஆட்சி சொல் அகராதி, பிழை நீக்கி எழுதும் முறை நூல் ஆங்கில - தமிழ் கையகராதி மற்றும் மாதிரி வரைவு நூல் போன்ற நூல்களை போதிய அளவில் பெற்று அனைத்து பிரிவுகளுக்கும் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

ஈ) தற்போது இந்தத் துறையில் சுருக்கெழுத்தர் உட்பட தட்டச்சர்களின் எண்ணிக்கை மொத்தம் 28 பேர். தமிழ் தட்டச்சுகள் 18 உள்ளன. இவை போதுமான எண்ணிக்கையில் உள்ளன. ஆய்வு மேற்கொண்டதற்குப் பிறகு தமிழில் தட்டச்சு செய்யப்பட்ட செவ்வைப்படிகளின் பக்கங்கள் அதிகரித்துள்ளது. அதேபோல் நிலுவையிலுள்ள நடப்பு கோப்புகள் மற்றும் கால முறை அறிக்கைகள் தமிழில் கையாளப்படுவது அதிகரித்துள்ளது.

உ) பொதுவாக இந்தத்துறையில் அதிக அளவில் தமிழில் கையாளப்படாததற்குக் காரணம் துறைத் தலைவர்களிடமிருந்து அனுப்பப்படும் ஒவ்வொரு செயற்குறிப்பும் பதில்களும் அதிக அளவில் ஆங்கிலத்திலேயே உள்ளதுதான். இதன் விளைவாக தலைமைச் செயலகத்திலிருந்து பிறப்பிக்கப்படும் அரசு ஆணைகளும் கடிதங்களும் அம்மொழியிலேயே வெளியாகின்றன. எனவே, அரசிற்கு அனுப்பப்படும் செயற்குறிப்புகள் கருத்துருக்கள் பதில்கள் ஏனைய கடித போக்குவரத்து அனைத்தும் தமிழிலேயே அமைந்திட வேண்டும் என்றும் தமிழ் அல்லாது ஆங்கிலத்தில் தொடர்ந்து செயற்குறிப்புகள் வருமேயானால் அவை திருப்பி அனுப்பப்படும் என்றும் இத்துறையின் கீழ் இயங்கிவரும் துறைத் தலைவர்கள் அனைவருக்கும் அறிவுரை வழங்கப்பட்டது. மேலும் இத்துறையைச் சார்ந்த அனைத்துப் பிரிவு அலுவலர்கள் மற்றும் உதவிப்பிரிவு அலுவலர்களுக்கு ஆட்சித் தமிழ் நினைவு கூர் பயிற்சி ஒன்றினை தமிழ் வளர்ச்சி துறை இயக்குநர் மூலம் ஏற்பாடு செய்யப்பட்டு சிறப்பாக பயிற்சி அளிக்கப்பட்டது. ஆட்சிமொழித் திட்டத்தினை முழுமையாகப் பயன்படுத்திட உரிய நடவடிக்கைகள் உடன் மேற்கொள்ளுமாறும் இது குறித்து மறு ஆய்வு நடக்கும்போது குறைகள் அகற்றப்பட்டு இருக்கவேண்டும் என்றும் அனைத்து அலுவலர்களுக்கும், துறைத் தலைவர்களுக்கும் அறிவுரைகள் வழங்கப்பட்டுள்ளன.

2. எனவே, இனிவரும் காலங்களில் ஆட்சி மொழியாகிய தமிழில் வளம் குன்றாமல் உரிய வகையில் மக்கள் நல்வாழ்வு மற்றும் குடும்பநலத்துறையில் அனைத்து வகையிலும் கையாளப்படும் என்றும், சுட்டிக்காட்டப்பட்டுள்ள குறைகள் கவனத்தில் கொள்ளப்பட்டு, மீண்டும் நிகழாவண்ணம் நடவடிக்கை மேற்கொள்ளப்படும் என்றும் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள

(ஆற்காடு நா. வீராசாமி)

பெறுநர்

முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ் ஆட்சிமொழி அமைச்சர், சென்னை - 600 009

20. பள்ளிக் கல்வித்துறை

இத்துறையில் 18.2.2000 அன்று ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

வருகைப் பதிவேட்டில் 105 பேர்களில் 57 பேர்கள் தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

கடிதப் போக்குவரத்தில் ஒரு நிறைவான நிலை உ_ள்ளது.

தமிழில் : 52722 ஆங்கிலத்தில் : 9528 மட்டுமே. சற்றுக் கவனம் செலுத்தினால் இன்னும் மேலும் முன்னேற்றம் காண முடியும்.

13 மாதங்களில் அரசாணைகள் :

| | | |
|---|---|---|
| தமிழில் | - | 1192 |
| ஆங்கிலத்தில் | - | 509 |

இதில் கல்வித்துறை கவனம் செலுத்தாதது வருந்தத்தக்கதாகும். தமிழ்ப் பேராசிரியர் துறையில் எப்படி இப்படியெல்லாம் நடக்கிறது என்று வெளியில் உ_ள்ள தமிழன்பர்கள் பலரும் கேட்கக் கூடிய நிலை உ_ள்ளது.

5 மாதங்களில் தட்டச்சுச் செய்யப்பட்ட பக்கங்கள் :

தமிழில் : 31791, ஆங்கிலத்தில் : 26585

இது மிகவும் மோசமான நிலையே ஆகும். பள்ளிக் கல்வித்துறையே இவ்வளவு பொறுப் பற்றிருந்தால் பிற துறைகள் நழுவுவதில் வியப்பென்ன இருக்கமுடியும்?

இது தொடர்பாகக் கல்வி அமைச்சர் அவர்களுக்கு நேர்முக மடல் எழுதப்பட்டது. பள்ளிக் கல்வித்துறைச் செயலராக இருந்த எம்.ஏ. கௌரிசங்கருக்கு நேர்முக மடல் தரப்பட்டது.

பள்ளிக் கல்வித்துறை

எல்லாத் துறைகளையும் ஆய்வு செய்தால், உ_ண்மை நிலையை வெளிக்கொண்டுவந்து விடமுடியும் என்ற அடிப்படையில் 18.2.2000 -ஆம் நாளன்று எங்களது துறைச் செயலாளர் திரு. இராமகிருட்டிணன், இ.ஆ.ப., தமிழ் வளர்ச்சி இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் ஆகியோர்

தங்கள் துறையினை ஆய்வு செய்தனர். அதில் கண்டறியப்பட்ட உண்மைகள் இணைப்பில் தரப்பட்டுள்ளன. மேலும், கீழ்க்கண்ட உண்மை நிலையையும் தங்களுக்கு உணர்த்த வேண்டியது என் கடமை. இது கல்வி அமைச்சர் பேராசிரியர்க்குத் தரப்பட்ட விவர மடல்.

1. கையொப்பங்கள்

வருகைப் பதிவேட்டிலும், பிற பட்டியல்களிலும் பலர் ஆங்கிலத்திலேயே ஒப்பமிடுகின்றனர். 105 பேர்களில் 57 பேர்கள் தமிழிலும், 48 பேர்கள் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர். பற்றொப்பப் பதிவேட்டில் 159 பேர்களில் 62 பேர் தமிழிலும், 97பேர்கள் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர். 1978-ஆம் ஆண்டிலேயே தமிழக அரசு ஊழியர்கள் அனைவரும் தமிழில்தான் கையொப்பமிட வேண்டும் என்ற ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது. 21 ஆண்டுகளாகத் தங்கள் துறையில் சிலர் இந்த ஆணையைப் புறக்கணித்து வருகின்றனர்.

வருகைப் பதிவேட்டில் - தற்செயல் விடுப்பு, மருத்துவ விடுப்பு, தகவலின்மை போன்றவை தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன. தொடர் குறிப்பேடு தமிழில் உள்ளது.

தமிழில் உள்ள கடிதங்களில் தமிழிலும் ஆங்கிலத்தில் உள்ள கடிதங்களில் ஆங்கிலத்திலும் ஒப்பமிடும் நிலை காணப்படுகிறது. அரசாணையின்படி அனைவரும் அனைத்து இனங்களிலும் தமிழில் மட்டுமே ஒப்பமிடுதல் வேண்டும்.

2. மடல் போக்குவரத்து

பெரும்பாலான கடிதங்கள் தமிழில் உள்ளன. பல கடிதங்கள் ஆங்கிலத்தில் உள்ளன.

| | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 5514 | 1396 | 6910 |
| 2. துறைத் தலைமை அலுவலர்களுக்கு | 31326 | 4497 | 35823 |
| 3. சார்நிலை, சமநிலை அலுவலர்களுக்கு | 10834 | 2411 | 13245 |
| 4. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 5048 | 1224 | 6272 |
| கூடுதல் | 52722 | 9528 | 62250 |
| அலுவலகப் பணியாளர்கள் சார்நிலை அலுவலர்கள் ஆகியோரிடமிருந்து வரப்பெற்றவை | 3852 | 2382 | 6234 |

மத்திய அரசு, பிற மாநிலங்கள், தூதரகங்கள், வெளிநாடுகள் போன்றவற்றிற்கு எழுதப்படும் கடிதங்கள் தவிர ஏனைய அனைத்துக் கடிதங்களும் தமிழிலேயே எழுதப்படுதல் வேண்டும். செயலகத் துறையிலிருந்து செல்லும் கடிதங்கள் அனைத்தும் தமிழில் இருந்தால்தான் துறைத்தலைமை, சார்நிலை அலுவலகங்களில் இக்கடிதங்களின் தொடர்ச்சியான நடவடிக்கைகள் தமிழில் அமைய வாய்ப்பு ஏற்படும்.

3. அரசாணைகள் (1.1.99 முதல் 31.1.2000 வரை)

இத்துறையில் வெளியிடப்பட்டுள்ள அரசாணைகளில் பெரும்பான்மையான அரசாணைகள் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன. சில அரசாணைகள் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

| | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| வாலாயம் | 196 | 330 | 526 |
| நிலையாணை | 317 | 94 | 401 |
| பத்தாண்டு | 470 | 59 | 529 |
| இருபதாண்டு | 65 | 22 | 87 |
| முப்பதாண்டு | 133 | 4 | 137 |
| நாற்பதாண்டு | 11 | - | 11 |
| மொத்தம் | 1192 | 509 | 1691 |

அனைத்து அரசாணைகளும் தமிழிலேயே பிறப்பிக்கப்பட வேண்டும் என்றும், இன்றியமையாத நேர்வுகளில் மட்டும் தமிழில் பிறப்பிக்கப்படும் அரசாணைகளோடு சேர்த்து ஆங்கிலத்திலும் அரசாணைகள் வெளியிடலாம் என்றும் தமிழக அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

4. பதிவேடுகள்

வருகைப் பதிவேடு, நடமாட்டப் பதிவேடு, பதிவு அஞ்சல் கடிதங்கள் வரவுப் பதிவேடு, நூல்கள் பராமரிப்புப் பதிவேடு, உள்ளூர் அனுப்புகைப் பதிவேடு, மறுகவனிப்புப் பதிவேடு, அலுவலக ஆணைப் பதிவேடு, தாமத வருகைப் பதிவேடு, சட்டமன்றப் பேரவை வினாப்பதிவேடு, தற்காலிகப் பணியிடங்கள் பதிவேடு போன்றவை தமிழில் எழுதப்படுகின்றன.

வங்கிக் கணக்குப் பதிவேடு, பணக் கணக்குப் பதிவேடு, வழங்கப்படாச் சம்பளப் பதிவேடு, வழங்கு பதிவேடு, துணைக் கணக்குப் பதிவேடு போன்றவை 4.2.2000 முதல் தமிழில் பதிவுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. (இதற்கு முன்னர் ஆங்கிலத்தில் பதிவுகள் மேற்கொள்ளப்பட்டிருந்தன).

தன்பதிவேடு, எழுதுபொருள் இருப்பு வழங்குப் பதிவேடு, சிறப்புக் கடிதங்கள், நேர்முகக் கடிதங்கள், தாமத வருகைப் பதிவேடு போன்றவை தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன.

தகுதிகாண் பருவத்தினர் பதிவேடு, ஊதிய உயர்வுப் பதிவேடு, செலுத்துகைப் பதிவேடு, முன் ஊதியச் சான்றிதழ் பதிவேடு, அச்சிட்ட படிவங்கள் இருப்பு வழங்கு பதிவேடு, நீண்ட காலக் கடன்கள் குறித்த பதிவேடு போன்றவை ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன

பணிப்பதிவேடுகள்

விடுப்பு ஒப்புவிப்பு, பணிச் சரிபார்ப்பு, நீண்ட காலக் கடன்கள் குறித்த விவரம், ஆண்டு ஊதிய உயர்வு, நியமனம்,மாற்றுப்பணி குறித்த விவரங்கள் தமிழிலும், ஆங்கிலத்திலும் பதிவு செய்யப்பட்டுள்ளன.

பதிவேடுகள் எவற்றிற்கும் விதிவிலக்கு இல்லை. பதிவேடுகளைத் தமிழில் எழுதுவதில் சிக்கலும் இல்லை. எனவே அனைத்துப் பதிவேடுகளும் தமிழிலேயே எழுதப்படுதல் வேண்டும். ஆங்கிலத்தில் அச்சடிக்கப்பட்டுத் தற்போது பயன்பாட்டில் உள்ள பதிவேடுகளிலும் பதிவுகள் தமிழிலேயே மேற்கொள்ளப்படுதல் வேண்டும்.

பணிப்பதிவேடுகளில் மேற்கொள்ளப்படும் பதிவுகள் அனைத்தும் அரசாணைக்கிணங்கத் தமிழிலேயே அமைதல் வேண்டும். ஆங்கிலேயர்கள் வெளியேறி 52 ஆண்டுகளாகியும் கூட இன்னும் இவை தமிழில் இல்லாதது மிகுந்த வருத்தத்துக்குரியது.

5. தட்டச்சுப் பொறிகள்

| | | |
|---|---|---|
| அலுவலகத்தில் உள்ள தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கை | - | 16 |
| ஆங்கிலத் தட்டச்சுகளின் எண்ணிக்கை | - | 12 |

65 விழுக்காட்டின்படி 18 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இருக்க வேண்டும். எனவே, இப்போதுள்ள 12 ஆங்கிலத் தட்டச்சுப்பொறிகளில் இரு தட்டச்சுப்பொறியினை ஒப்படைப்புச் செய்து அதற்கீடாக 2 தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெற நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும்.

கடந்த ஆறு திங்களில் தட்டச்சுச் செய்யப்பட்ட படிகளின் எண்ணிக்கை

(1.1.1999 முதல் 31.5.99 வரை)

| | | |
|---|---|---|
| தமிழில் | - | 31791 |
| ஆங்கிலத்தில் | - | 26585 |

சுற்றாணைக் கோப்புகள், பள்ளி மாணவ, மாணவியர்களோடு தொடர்புடைய ஆணைகள், நாட்டு நலப்பணித் திட்டம், பள்ளி விளையாட்டுத் திட்டம், அலுவலகத் தொடர்புடைய ஆணைகள், பணியாளர்களுக்கான சம்பள விவரங்கள் குறித்த சம்பளச் சீட்டு, மக்கள் சாசனம் போன்றவை தமிழில் உள்ளன. - பாராட்டுக்குரியது.

6. பொதுக்குறிப்பு

ஆட்சிமொழிச் சட்டம் இயற்றப்பட்டு 42 ஆண்டுகளுக்கும் மேலாகிவிட்டது. தலைமைச் செயலகத் துறைகளில் தமிழ்ப் பயன்பாடு இன்னும் முழுமையாக அமையவில்லை. மொத்தத்தில் நிருவாக நடைமுறையில் தமிழ் குறைந்த அளவிலேயே பயன்படுத்தப்படும் நிலை உள்ளது.

மேற்கூறப்பெற்ற அனைத்து இனங்களிலும் தமிழ் முழுமையாகப் பயன்படுத்தப்பட இத்துறை முனைப்பான நடவடிக்கைகளை உடன் மேற்கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். அத்துடன் தொடர்புடைய துறைத் தலைமை அலுவலர்களிடமிருந்து வரப்பெறும் கடிதங்கள் தமிழில் அமைந்திடவும், இத்துறை தொடர்பான அனைத்து அலுவலகங்களிலும் தமிழ் முழுமையாகப் பயன்படுத்தப்படவும் உரிய நடவடிக்கைகளை உடன் மேற்கொள்ளுதல் வேண்டும்.

ஒன்பதுக்கும் மேற்பட்டவர்கள் தமிழ் காக்க - தங்கள் தேக்குமரத் தேகங்களைத் தீயிட்டுக்கொண்டு மடிந்தனர் என்பதைத் தாங்கள் அறிந்தவர்கள். எனினும் ஆட்சிமொழித்துறை அமைக்கப்பட்டதன் நோக்கம், மாண்புமிகு முதல்வர் அவர்களின் குறிப்பு, அமைச்சரின் நேர்முக மடல், தலைமைச் செயலாளரின் அறிவிப்பு ஆகிய அனைத்தும் புறக்கணிக்கப்பட்டுள்ளன. தாங்கள் இதில் தக்க கவனம் செலுத்துவீர்கள் என்று நம்புகிறேன்.

தங்கள் துறையின் செயலாளரிடம் இதுபற்றி நேரில் எடுத்துச் சொல்லப்பட்டுள்ளது. அவரும் 30.4.2000 க்குள் அனைத்தையும் செம்மை செய்துவிடுவதாக உறுதியளித்துள்ளார்.

21. உயர் கல்வித்துறை

வருகைப் பதிவேட்டில் 61 பேர்க்கு 22 பேர்கள் தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

கடிதப் போக்குவரத்து இத்துறையில் மோசமாக உள்ளது. தமிழில் 3845 என்றால் ஆங்கிலத்தில் 7436. கேட்டால் கல்லூரிகள், பல்கலைக் கழகங்களுக்கு அனுப்ப வேண்டிய நிலை என்கிறார்கள். தமிழ்நாட்டுக் கல்லூரிகளுக்கும் தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களுக்கும் தமிழில் அனுப்பக்கூடாது என்று யார் சொன்னது? தமிழில் அனுப்ப முடியாது என்ற 'இயலா' நிலையாவது உண்டா? இல்லை. கல்வி அமைச்சர் இதில் என்னதான் முடிவெடுத்தார்? அவர் இதில் கருத்துச் செலுத்தவே இல்லை என்று அடித்துச் சொல்வேன். (He has not applied his mind)

ஆனால் இத்துறையின் அமைச்சர் மிகவும் கண்டிப்புக் காட்டியிருந்தால் உறுதியாக வந்து இருக்கும்.

13 மாதத்தில் ஆணைகள் கூடத் தமிழில் அதிகம் வரவில்லை.

தமிழில் 458 என்றால் ஆங்கிலத்தில் 1403. இத்துறையே, அதுவும் முதலமைச்சருக்கு அடுத்த நிலையில் இருக்கும் கல்வி அமைச்சர் துறையில், அதிலும் தமிழ்ப் பேராசிரியர் துறையில் ஆட்சிமொழிச் செயலாக்கம் இந்த நிலையில் இருக்கிறதென்றால், ராணா ஷைலோவையும் கீழே இருக்கிற பிற அமைச்சர்களையும் எப்படிக் குற்றம் சாட்ட முடியும்?

25.4.2000 அன்று கல்வி அமைச்சர்க்கு என் நேர்முக மடலை அளித்தேன்.

உயர்கல்வித் துறைச் செயலர் இ.வீ. மணிவண்ணனுக்கும் நேர்முக மடல் அளிக்கப்பட்டது.

உயர் கல்வித்துறை 6.3.200 தி.பி.2031/மாசி.23 நேர்முக மடல்!

பெறுநர்

மாண்புமிகு பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள்,
கல்வித்துறை அமைச்சர், தலைமைச் செயலகம், சென்னை - 600 009

அன்புடையீர்,

வணக்கம்.

ஏற்கெனவே பள்ளிக் கல்வித்துறை ஆட்சிமொழித் தொடர்பாக ஆய்வு செய்யப்பட்டு, அதுபற்றிய குறிப்பு தங்களிடம் தரப்பட்டது. பின்னர் உயர் கல்வித் துறையிலும் ஆய்வு மேற்கொள்ளப் பட்டது. ஏற்கெனவே மற்ற செய்திகள் தொடர்பாக நான் விரிவாகத் தங்களுக்குத் தெரிவித்துவிட்டபடியால், உயர் கல்வித்துறையின் ஆட்சிமொழிப் பயன்பாடு குறித்த அறிக்கையை மட்டும் தங்களுக்கு இத்துடன் அனுப்பி வைத்துள்ளேன். ஆவன செய்யுமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

தங்கள் அன்புள்ள
(மு. தமிழ்க்குடிமகன்)

ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம் ஆய்வு - தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை

அரசுச் செயலாளர் அவர்களின் ஆய்வு - ஆய்வறிக்கை

1. வருகைப் பதிவேடு

அ. 61 பேரில் 22 பேர் தமிழிலும், 39 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர்.

ஆ.தற்செயல் விடுப்பு, மருத்துவவிடுப்பு, தகவலின்மை, இல்லப்பணி போன்றவை தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன.

2. பற்றொப்பப் பதிவேடு

83 பேரில் 32 பேர் தமிழிலும், 51 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர்.

3. பதிவேடுகள்

அ. வருகைப்பதிவேடு, தொடர்குறிப்பேடு, பகிர்மானப் பதிவேடு, தற்செயல் விடுப்புப் பதிவேடு தமிழில் எழுதப்படுகின்றன.

ஆ. அனுப்புகைப் பதிவேடு, தன்பதிவேடு. அலுவலக ஆணை, அலுவலக நடைமுறைப் பதிவேடு, ஆய்வுக் குறிப்பேடு, செவ்வைப்படி பதிவேடு போன்றவை தமிழும், ஆங்கிலமும் கலந்து எழுதப்படுகின்றன.

இ. வழங்கப்படாச் சம்பளப் பதிவேடு, காசோலைப் பதிவேடு, சம்பளம் வழங்கு பதிவேடு, பணக்கணக்குப் பதிவேடு, நடமாட்டப் பதிவேடு, மறுகவனிப்புப் பதிவேடு, கருவிகள், தளவாடங்கள் பதிவேடு, ஊதிய உயர்வுப் பதிவேடு, துணைக்கணக்குப் பதிவேடு, மருத்துவப் பதிவேடு, முன்பணப்பிடித்தங்கள் பதிவேடு போன்றவை ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

4. பணிப்பதிவேடு

நியமனம், மாறுதல், பணிச் சரிபார்ப்பு, விடுப்பு ஒப்புவிப்பு, ஊதிய உயர்வு, நீண்டகாலக் கடன்கள் போன்றவை தமிழும், ஆங்கிலமும் கலந்து எழுதப்படுகின்றன.

| 5. கடிதப் போக்குவரத்து | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 315 | 395 | 710 |
| 2. மேல்நிலை அலுவலர்களுக்கு | 2460 | 4922 | 7382 |
| 3. சார்நிலை, சமநிலை அலுவலர்களுக்கு | 165 | 319 | 484 |
| 4. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 905 | 1800 | 2705 |
| கூடுதல் | 3845 | 7436 | 11281 |
| அலுவலகப் பணியாளர்கள் சார்நிலை அலுவலர்கள் ஆகியோரிடமிருந்து வரப்பெற்றவை | 1070 | 1750 | 2820 |

| 6. ஆணைகள் (1.1.99 முதல் 31.1.2000 வரை) | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| வாலாயம் | 170 | 872 | 992 |
| நிலையாணை | 173 | 353 | 526 |
| பத்தாண்டு | 62 | 76 | 138 |
| இருபதாண்டு | 42 | 137 | 179 |
| முப்பதாண்டு | 11 | 15 | 26 |
| மொத்தம் | 458 | 1403 | 1861 |

7. தட்டச்சுப்பணி

அ. தமிழ்த் தட்டச்சுப் பொறிகளின் எண்ணிக்கை - 6

ஆ.ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளின் எண்ணிக்கை - 13

தட்டச்சுச் செய்யப்பட்ட பக்கங்கள் (கடந்த ஆறு திங்களில்)

| | | |
|---|---|---|
| தமிழில் | - | 23760 |
| ஆங்கிலத்தில் | - | 20592 |
| மொத்தம் | - | 44352 |

இத்துறையில் மொத்தம் 19 தட்டச்சுப் பொறிகள் உள்ளன. இவற்றுள் 6 தமிழ்த் தட்டச்சுப் பொறியும் 13 ஆங்கில தட்டச்சுப் பொறியும் ஆகும். 65 விழுக்காட்டின்படி 12 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இருக்க வேண்டும். எனவே இருக்கின்ற 13 தட்டச்சுபொறிகளில் ஆறு ஆங்கில தட்டச்சுப் பொறியினை ஒப்படைப்பு செய்து அதற்கீடாக தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பெறவேண்டும்.

* * *

எனது குறிப்பு

ஏற்கெனவே தலைமைச் செயலகத் துறைகளை ஆய்வு செய்வதற்கு 11 மாதங்கள் எடுத்துக் கொண்டோம். ஒவ்வொரு துறையும் அடுத்த 6 மாதங்கட்குள் ஆய்வு செய்யப்படவேண்டும் எனும் முறையில் என் துறைச் செயலாளர்க்கு மறு ஆய்வினைத் தொடங்குமாறு மடல் எழுதினேன்.

19.6.2000

தி.பி.2031/ஆனி 5.

அன்புக்குரிய திரு. இராமகிருட்டிணன்,

நாம் தமிழ் ஆட்சிமொழி ஆய்வினைத் தொடங்கி 11 மாதங்களாகிவிட்டன.

எனவே ஒரு மாதத்திற்கு 6 என்ற அளவில் உடனடியாக மறு ஆய்வை மேற்கொள்ளவும் ஏற்கெனவே ஆய்வு செய்யப்பட்ட விவரங்கள் தங்களிடம் உள்ளன. எனினும் நினைவூட்டலுக்காக இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. இதைத் தலையாய பணியாகக் கொண்டு உடனடியாகப் பணிகளை மேற்கொள்ளவும்

அன்புடன்
(மு. தமிழ்க்குடிமகன்)

பெறுநர்

திரு. சு. இராமகிருட்டிணன், இ.ஆ.ப.,
அரசுச் செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, பண்பாடு (ம) அறநிலையத்துறை

## 22. பிற்படுத்தப்பட்டோர், மிகப் பிற்படுத்தப்பட்டோர் (ம) சிறுபான்மையினர் நலத்துறை

12.11.99 அன்று இத்துறை ஆய்வு செய்யப்பட்டது.

73 பேரில் 42 பேர்தான் தமிழில் கையொப்பமிடுகின்றனர். பற்றொப்பப் பதிவேட்டில் 67 பேர்களில் 19 பேர்தான் தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

எட்டு மாதங்களில் வெளியான அரசாணைகளில் 55 மட்டும்தான் தமிழில். 236 அரசாணைகள் ஆங்கிலத்தில் வந்துள்ளன. மிகப் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு நன்மைகள் செய்வதற்காகப் பிறப்பிக்கப்படும் அரசாணைகள் அதிக அளவில் ஆங்கிலத்திலேயே இருக்குமானால் இவர்கள் மக்களைப் பற்றி என்ன நினைக்கிறார்கள்? முருகன் செயலாளராக இருந்தும் இந்த நிலை. இவரும் பிற்படுத்தப்பட்டோராக எளிய நிலையில் முதலில் தமிழ் வழியில் படித்துத்தானே இவ்வளவு உயர் பதவிக்கு வந்திருக்க முடியும்? எளிய மக்களைச் சென்றடைய வேண்டுமெனில் ஆணைகளின் விவரம் அவர்களுக்கு விளங்கவேண்டும். ஆனால் இவர்களோ இந்தப் பிற்படுத்தப்பட்ட மக்களைக் கடைசி வரையில் விளங்காதவர்களாகவே வைத்திருக்க வேண்டும் என்றே கருதுகின்றார்கள். அதனால்தான் இவ்வளவு மோசமான நிலை.

கடிதப் போக்குவரத்திலும் மிகப் பெரிய பின்னடைவு 4039 கடிதங்கள் தமிழில் என்றால் 8809 ஆங்கிலத்தில். ஆட்சிமொழிச் செயலாக்கம் குறித்து எந்த அக்கறையும் இல்லை என்றே சொல்லலாம்.

அதிலும் பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்ட மடல்கள் 1757 மட்டும் தமிழில். 4017 மடல்களை ஆங்கிலத்திலேயே எழுதியுள்ளனர். எத்தனை வெள்ளைக்கார நிறுவனங்களுக்கு எழுதினார்களோ தெரியவில்லை.

மற்ற மடல்கள் எல்லாம் சார்நிலை, சமநிலை மற்ற அலுவலர்க்குத்தான். அவற்றிலேயே எந்த ஒழுங்கும் இல்லை.

1.1.99 முதல் ஆறுமாதங்களில் மட்டும் தட்டச்சுச் செய்யப்பட்ட பக்கங்களில் தமிழில் மிகவும் குறைவு (7034) அதே நேரத்தில் ஆங்கிலத்தில் 13997.

பொதுவாகவே இது மிகவும் பிற்படுத்தப்பட்ட துறையாகவே விளங்குகிறது.

இது குறித்து அமைச்சர் பன்னீர்செல்வத்துக்கு 18.11.99 இல் நேர்முகமடல் அனுப்பப்பட்டது. அதே நாளில் செயலர் முருகன் பெயர்க்கும் நே.மு. மடல் அனுப்பப்பட்டது. இருவரிடமிருந்தும் பொறுப்பான விடையேதும் வரவில்லை.

நாள் : 12.11.1999

வருகைப் பதிவேடுகள் மற்றும் தொடர் குறிப்பேடுகள்

1. விடுப்புகள், அனுமதி, தகவலின்மை, அலுவல் பணி,

பதவிப் பெயர்களின் தலைப்பெழுத்துகள் ஆகியவை ஆங்கிலத்தில் உள்ளன.

தற்செயல் விடுப்பு, ஈடு செய் விடுப்பு, வரையறுக்கப் பெற்ற விடுப்பு: விடுப்பு விண்ணப்பங்கள் அவற்றின் மீதான ஆணைகள்/அலுவலகக் குறிப்புகள் தமிழும், ஆங்கிலமும் கலந்துள்ளன

| 2. அரசாணைகள் | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. அலுவலக நடைமுறை (வாலாயம்) | 23 | 93 | 116 |
| 2. நிலையாணை | 20 | 65 | 85 |
| 3. பத்தாண்டு | 7 | 43 | 50 |
| 4. இருபதாண்டு | 2 | 33 | 35 |
| 5. முப்பதாண்டு | 2 | 2 | 4 |
| 6. நாற்பதாண்டு | 1 | - | 1 |
| மொத்தம் | 55 | 236 | 291 |

3. பணியாளர்கள் / அலுவலர்கள் பணிப்பதிவேடு :

| | |
|---|---|
| நியமனம், மாறுதல், விடுப்பு ஒப்புவிப்பு, பணிச்சான்று, ஊதியம் அறுதியிடல் | ஆங்கிலத்தில் உள்ளன |

அ. பதிவேடுகள்:

| | |
|---|---|
| வழங்கப்படா சம்பளப் பதிவேடு, பற்றொப்பப் பதிவேடு, வங்கிப் பதிவேடு, காசோலைப் பதிவேடு, பணக்கணக்குப் பதிவேடு, துணைக் கணக்குப் பதிவேடு | ஆங்கிலத்தில் உள்ளன |

ஆ. தன் பதிவேடு, அனுப்புகைப் பதிவேடு தமிழும், ஆங்கிலமும் கலந்து எழுதப்பட்டுள்ளன. (10.11.99 முதல் தமிழில் பேண நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது)

| 4. கடிதப் போக்குவரத்து | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| அ. பொதுமக்களுக்கும், அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 1757 | 4017 | 5774 |
| ஆ.மேல்நிலை அலுவலர்களுக்கு | 665 | 664 | 1329 |
| இ. சார்நிலை / சமநிலை அலுவலர்களுக்கு | 937 | 2699 | 3636 |
| ஈ. அரசின் மற்ற அலுவலர்களுக்கு | 680 | 1429 | 2109 |
| மொத்தம் | 4039 | 8809 | 12848 |

5. கடந்த ஆறு திங்களில் தட்டச்சிடப் பெற்ற பக்கங்களின் எண்ணிக்கை 1.1.99 முதல் 30.6.99 வரை

| | | |
|---|---|---|
| தமிழில் | - | 7034 |
| ஆங்கிலத்தில் | - | 13997 |
| மொத்தம் | - | 21031 |

6. கமுக்க அறிக்கைகள், பதிவுரு தாள்கள் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

## கலந்துரையாடல் குறிப்புரை

ஆய்வுக் குறிப்புகளின் அடிப்படையில் தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத்துறை அரசுச் செயலாளர் அவர்கள் தமிழ் வளர்ச்சி இயக்குநர், தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத் துறை இணைச்

செயலாளர், மொழிபெயர்ப்புத்துறை இயக்குநர் ஆகியோருடன் பிற்படுத்தப்பட்டோர் மற்றும் மிக பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை அரசுச் செயலாளர் அவர்களின் அலுவல் அறையில் கலந்துரையாடினார். இக்கலந்துரையாடலின்போது வருகைப்பதிவேடுகளில் அனைவரும் தமிழில் ஒப்பமிட வேண்டும். பதிவேடுகளில் ஆங்கிலத்தில் குறிப்புகள் எழுதுவதைத் தவிர்க்க வேண்டும். வாலாய ஆணைகள் அனைத்தும் தமிழில் வெளியிட வேண்டும். தேவைப்படின் தொடக்க நிலையில் மொழி யெர்ப்புத் துறையின் வாயிலாக மொழியாக்கம் செய்து கொள்ளலாம். பொதுவாக அரசாணைகள் தமிழில் இருத்தல் இன்றியமையாதது. பணிப்பதிவேட்டில் ஊதிய உயர்வு, பணியிட மாற்றம், விடுப்பு ஒப்பளிப்பு ஆணைகள் போன்ற பதிவுகளைத் தமிழிலேயே மேற்கொள்ள வேண்டும். பொது மக்களுக்கும் மாவட்ட அலுவலகங்களுக்கும் எழுதப்படும் அனைத்துக் கடிதங்களுக்கும் தமிழைப் பயன்படுத்த வேண்டும். சிறுபான்மையினர் ஆங்கிலத்தில் கடிதம் எழுதினாலும் அதற்கான மறுமொழி தமிழில் எழுத வேண்டும். ஆய்வுக்கு முந்திய அரையாண்டில் அனுப்பப்பட்ட மொத்தக் கடிதங்கள் 21032. இவற்றில் 7034 மட்டுமே தமிழில் இருந்திருக்கின்றன. 13997 கடிதங்கள் ஆங்கிலத்தில் உள்ளன. அனுப்பப்படும் கடிதங்களில் ஆங்கிலம் பெருமளவு பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வலுவலகத்திலிருந்து அனுப்பப்படும் கடிதங்கள் யாவும் தமிழிலேயே எழுத வேண்டும்.

கமுக்க அறிக்கைகள், பதிவுருத் தாள்கள் தொடர்பான நடவடிக்கைகளைத் தமிழிலேயே மேற்கொள்ள வேண்டும் எனப்பல்வேறு கருத்துக்களைத் தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத் துறை அரசுச் செயலாளர் அவர்கள் தெரிவித்தார்கள். இக்குறைகளை ஆறுதிங்கள்களில் களைந்து ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்திற்கு உறுதுணை புரிவதாக பிற்படுத்தப்பட்டோர் நலத்துறைச் செயலாளர் அவர்கள் உறுதியளித்தார்கள்.

அரசுச் செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, பண்பாட்டு இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை, சென்னை - 9

## 23. சட்டத்துறை

சட்டத்துறை 28.10.99 அன்று ஆய்வு செய்யப்பட்டது. 113 பேர்களில் 47 பேர்கள் தமிழில் கையொப்பமிடுகின்றனர். பற்றொப்பப் பதிவேட்டில் 128 பேர் ஆங்கிலத்தில் ஒப்பமிடுகின்றனர்.

மடல் போக்குவரத்தில் இத்துறை தமிழில் கவனம் செலுத்தியுள்ளது. 9 மாதங்களில் தமிழில் 85ம் ஆங்கிலத்தில் 72ம் எழுதப்பட்டுள்ளன. அரசாணைகளைப் பொறுத்தவரையில் தமிழில் 114 என்றால் ஆங்கிலத்தில் 145.

அந்த வகையில் அலுவலக நடைமுறை ஆணைகளில் பெரும்பாலானவை தமிழில் உள்ளன. 453 தமிழில் என்றால் ஆங்கிலத்தில் 23 தான்.

இதுகுறித்துச் செயலர் கி. பார்த்தசாரதியிடம் 15.11.99 அன்று நேர்முக மடல் தரப்பட்டது. அமைச்சர் ஆலடி அருணா அவர்களிடம் அதே நாளில் மடல் தரப்பட்டது. எடுக்கப்படும் நடவடிக்கைகள் குறித்து இவர்களிடமிருந்து விடை ஏதும் வரவில்லை.

ஆய்வு நாள் : 18.10.99

ஆய்வறிக்கை

1. வருகைப் பதிவேடுகள் :
   விடுப்புகள், அலுவல்பணி, அனுமதி
   தகவலின்மை ஆகிய குறிப்புகள் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன

2. அலுவலக ஆணைகள் :

   வெளியிடப்பட்ட அலுவலக ஆணைகள்

| | | |
|---|---|---|
| தமிழில் | - | 434 |
| ஆங்கிலத்தில் | - | 22 |
| மொத்தம் | - | 456 |

3. அரசாணைகள் : (1.1.99 முதல் 23.9.99 வரை)

| | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| நிலை | 86 | 121 | 207 |
| வாலாயம் | 28 | 24 | 52 |
| மொத்தம் | 114 | 145 | 259 |

கலந்துரையாடல் குறிப்புரை

ஆய்வுக் குறிப்புகளின் அடிப்படையில் தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத்துறை அரசுச் செயலாளர் அவர்கள் சட்டத்துறைச் செயலாளர் அவர்களுடன் 28.10.99 அன்று கலந்துரையாடினார். இக்கலந்துரையாடலின்போது வருகைப்பதிவேடுகளில் அனைவரும் தமிழில் ஒப்பமிடவேண்டும். பதிவேடுகளில் ஆங்கிலத்தில் குறிப்புகள் எழுதுவதைத் தவிர்க்க வேண்டும். சென்ற ஒன்பது திங்கள்களில் வெளியிடப்பெற்ற ஆணைகள் மொத்தம் 259இல் 145 ஆணைகள் ஆங்கிலத்திலும் 114 ஆணைகள் தமிழிலும் வெளியிடப்பட்டன. இனி, வாலாய ஆணைகள் அனைத்தும் தமிழிலேயே வெளியிடப்பெற வேண்டும். நிலையாணைகள் தமிழில் மாற்றக்கூடியனவற்றை தமிழிலேயே வெளியிடவேண்டும். உடனடியாகச் செயற்படுத்த இயலவில்லையாயினும் படிப்படியாகச் செயற்படுத்த வேண்டும். அலுவலக நடைமுறை ஆணைகள் தமிழில் உள்ளன. நன்று.

பிற துறைகளின் கோப்புகளில் சட்டத்துறை கருத்து வழங்கும் குறிப்புகளை இயன்றவரை தமிழில் எழுதி அனுப்பலாம். சொல்லகராதியில் பல்வேறு துறைகளின் வழக்கிலுள்ள பொதுவான சொற்கள் உரிய தமிழாக்கங்களுடன் வெளியிடப்பட்டுள்ளன. இந்நூலுடன் கழக ஆங்கில தமிழ்க் கையகராதி, பிழைநீக்கி எழுதும் முறைபோன்ற நூல்களைப் பயன்படுத்தி உரியவாறு மேற்கொள்ள வேண்டும் எனப் பல்வேறு கருத்துகளை தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத்துறை அரசுச் செயலாளர் அவர்கள் தெரிவித்தார்கள். இக்குறைகளை படிப்படியாகக் களைந்து ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தை செயற்படுத்துவதாக சட்டத்துறைச் செயலாளர் அவர்கள் உறுதியளித்தார்.

அரசுச் செயலாளர்
தமிழ்வளர்ச்சி பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை

## 24. சிறுதொழில் துறை

26.10.99 இல் இத்துறையில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. வருகைப் பதிவேட்டில் 38 பேர்களில் 7 பேர் மட்டுமே தமிழில் ஒப்பமிடுகின்றனர். பற்றொப்பப் பதிவேட்டில் இன்னும் மோசம். 55 பேர்க்கு 4 பேர் மட்டுமே தமிழில்.

1.1.99 முதல் 11.10.99 வரை அலுவலக நடைமுறை ஆணைகள் தமிழில் 153 என்றால் ஆங்கிலத்தில் 198. பிற ஆணைகளில் 73 மட்டுமே தமிழில்; 602 ஆணைகள் ஆங்கிலத்தில்.

கடிதப் போக்குவரத்தில் 3756 தமிழில்; 5633 ஆங்கிலத்தில்.

கடந்த ஆறுமாதங்களில் தமிழில் தட்டச்சுச் செய்யப்பட்ட பக்கங்கள் 4753. அதே நேரத்தில் ஆங்கிலத்தில் 7128 பக்கங்கள் தட்டச்சுச் செய்யப்பட்டுள்ளன.

ஆய்வு நாள் : 26.10.99

ஆய்வறிக்கை

1. வருகைப் பதிவேடுகள் (ம) தொடர் குறிப்புப் பதிவேடுகள், விடுப்புகள், அலுவல் பணி, அனுமதி/தகவலின்மை, பதவிப் பெயர்கள் ஆகியவை — ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன

2. தற்செயல் விடுப்புகள்

   1. சிலருடைய விண்ணப்பங்கள்

2. தற்செயல் விடுப்பு விண்ணப்பப் பதிவுத்தாள்கள், பதிவுக் குறிப்புகள் — ஆங்கிலத்தில் உள்ளன.

| 3. ஆணைகள் 1.1.99 முதல் 11.10.99 வரை | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| அலுவலக நடைமுறை ஆணைகள் | 153 | 198 | 351 |

| 4. அரசாணைகள் (1.1.99 முதல் 11.10.99 வரை) | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| பத்தாண்டு | 12 | 234 | 246 |
| இருபதாண்டு | 2 | 41 | 43 |
| முப்பதாண்டு | - | 5 | 5 |
| நாற்பதாண்டு | 30 | 36 | 66 |
| நிலை | 7 | 68 | 75 |
| வாலாயம் | 22 | 218 | 240 |
| மொத்தம் | 73 | 602 | 675 |

5. பணிப்பதிவேட்டில் பதிவுகள்

அ. பணியாளர் தொடர்பான விடுப்பு வழங்கல்

ஊதிய உயர்வு, பணியிட மாற்றம், பணிவரன்முறை, போன்ற ஆணைகள் அனைத்துப் பதிவுகளும் — ஆங்கிலத்தில் உள்ளன (விடுப்பு வழங்கல் தமிழில் இருந்த போதிலும்)

6. பதிவேடுகள்

பணப்பதிவேடு, கொடுபடாப் பணப் பதிவேடு, காசோலைப் பதிவேடு, வங்கிப் பதிவேடு, துணை பணப்பதிவேடு, பணம் வழங்கல் பதிவேடு, முன்பணப் பிடித்தப் பதிவேடுகள் — உள்ளிட்ட பத்து பதிவேடுகள் முழுமையும் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன

| 7. கடிதப் போக்குவரத்து | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| அ. பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 2640 | 3960 | 6600 |
| ஆ. துறைத்தலைமை அலுவலகங்களுக்கு | 219 | 327 | 546 |
| இ. சார்நிலை, சமநிலை அலுவலகங்களுக்கு | 373 | 560 | 933 |

| | | | |
|---|---|---|---|
| ஈ. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 524 | 786 | 1310 |
| கூடுதல் | 3756 | 5633 | 9389 |
| 8. வரப்பெற்ற கடிதங்கள் | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
| அலுவலகப் பணியாளர் சார்நிலை அலுவலகம் ஆகியோரிடமிருந்து வரப்பெற்றவை | 2756 | 4134 | 6890 |

9. தட்டச்சுச் செய்த பக்கங்கள் (கடந்த 6 திங்களில்)

தமிழ் - 4753 பக்கங்கள்

ஆங்கிலம் - 7128 பக்கங்கள்

கூடுதல் - 11881 பக்கங்கள்

கலந்துரையாடல் குறிப்பு

ஆய்வுக் குறிப்புகளின் அடிப்படையில் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை செயலாளர் அவர்கள் சிறு தொழில்கள் துறை செயலாளர் அவர்களுடன் 26.10.99 பிற்பகல் கலந்துரையாடினார்கள். கலந்துரையாடலின்போது, அரசுப் பணியாளர்கள் அனைவரும் தமிழில் ஒப்பமிடவேண்டுமெனவும் பதிவேடுகளில் ஆங்கிலத்தில் எழுதுவதைத் தவிர்க்கவேண்டுமெனவும் ஆட்சிமொழித்திட்டத்தில் பதிவேடுகளுக்கு விதிவிலக்கு ஏதும் இல்லை எனவும் தெரிவித்தார். பணிப்பதிவேட்டில் ஊதிய உயர்வு, பணியிட மாற்றம், விடுப்பு வழங்கல் போன்ற பதிவுகளை தமிழிலேயே மேற்கொள்ள வேண்டும். வாலாயமாக வெளியிடப்பெறும் அரசாணைகள் 240இல் 218 அரசாணைகள் ஆங்கிலத்தில் உள்ளன. இனி அரசாணைகள் அனைத்தையும் தமிழிலேயே வெளியிட வேண்டும். தேவைப்படின் தொடக்க நிலையில் மொழிபெயர்ப்புத் துறையின் வாயிலாக மொழியாக்கம் செய்து கொள்ளலாம். அரசாணைகள் அனைத்தும் தமிழில் இருத்தல் இன்றியமையாதது. தமிழிலேயே கடிதங்கள் அனுப்புவதற்கியலும் வகையில், உரிய அலுவலகங்களும் பணியாளர்களும் அறிவுறுத்தப்படவேண்டும். ஒழுங்கு நடவடிக்கைகள் தொடர்பான பணிகளையும் தமிழிலேயே மேற்கொள்ள வேண்டும் எனப் பல்வேறு கருத்துகளைத் தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத் துறை அரசுச் செயலாளர் அவர்கள் தெரிவித்தார்கள். இக்குறைகளை மூன்று திங்கள்களில் களைந்து ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தை மேம்படுத்துவதாகச் சிறுதொழில் துறை அரசுச் செயலாளர் அவர்கள் உறுதியளித்தார்.

அரசுச் செயலாளர்,
தமிழ் வளர்ச்சி பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலைத்துறை

இது குறித்து, செயலர் திருமதி சோசம்மாவிடம் கலந்துரையாடல் நிகழ்த்தி, குறிப்புகள் உணர்த்தப்பட்டன.

மேலும் அமைச்சர் இ. பெரியசாமி அவர்கட்கு 10.11.99 அன்றும், செயலர் அவர்கட்கு அதே நாளிலும் நேர்முக மடல்களை அனுப்பினேன். நேரிலும் அழைத்துக் கூறினேன். செயலர் சோசம்மா அவர்கள் மிகச் சிறப்பாக நடவடிக்கை எடுத்துள்ளார்கள். கலந்துரையாடல் முடிந்ததும் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டி அனைத்துப் பிரிவுக்கும் மடல் அனுப்பியுள்ளார்கள்.

13.10.99 அன்றே துறையின் கீழ் உள்ள துறைத் தலைமை அலுவலகங்களில் நிர்வாக இயக்குநர்கட்கு மடல் அனுப்பியுள்ளார்.

தமிழ்நாடு அரசு
சிறுதொழில் துறை
தலைமைச் செயலகம், சென்னை - 9

கடித எண்.14012/அநமு.1/99-1 நாள் : 13.10.99

அனுப்புநர்

திருமதி ஓ.போ. சோசம்மா, இ.ஆ.ப.,
அரசுச் செயலாளர்

பெறுநர்

தொழில் ஆணையர் மற்றும் தொழில் வணிக இயக்குநர்,
சென்னை - 5

தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர், தமிழ்நாடு சிறுதொழில் வளர்ச்சி நிறுவனம், சென்னை - 16

தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர், தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம்,சென்னை - 35

தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர், தமிழ்நாடு தோல் வளர்ச்சி நிறுவனம், சென்னை - 12

தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர், தமிழ்நாடு சிறுதொழில் நிறுவனம், சென்னை - 32

அய்யா,

பொருள் : சிறுதொழில் துறை - தமிழ் வளர்ச்சி - ஆட்சிமொழி செயலாக்கம் - தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநியைத்துறையின் ஆய்வறிக்கை - அறிவுரைகள் வழங்கப்படுகின்றது.

பார்வை : தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை செயலாளரின் நேர்முகக் கடித எண்.15027/தவ.1.1.99 நாள் : 11.10.99

அரசின் தொடர்ச்சியான அறிவுரைகளுக்குப் பின்பும், தங்களிடமிருந்து பெறப்படும் கடிதங்கள், கருத்துருக்கள் யாவும் பெரும்பாலும் ஆங்கிலத்திலேயே உள்ளன. அரசு நிர்வாகத்தில் தமிழை முழுமையாகப் பயன்படுத்த வேண்டும் என்ற கொள்கைக்கு இது மிகவும் இடர்ப்பாடுடையதாக உள்ளது.

தலைமை அலுவலகங்கள் / நிறுவனங்கள் யாவும் இனிமேல் அரசுக்கு அனுப்பும் முன் மொழிவுகளையும், கடிதங்களையும் தமிழில்தான் அனுப்ப வேண்டும். தமிழில் இல்லாத கருத்துருக்கள் / கடிதங்களின் மீது அரசு எவ்வித நடவடிக்கையும் எடுக்காது என்பது தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது."

இத்தகைய கண்டிப்பான கடிதத்துக்காகச் செயலரைப் பாராட்ட வேண்டும்.

இவர் இந்த அளவோடு நிற்கவில்லை. நான் நெல்லையில் பேசிய பேச்சு 'தினமணி' இதழில் வெளிவந்துள்ளது. அதனை எடுத்து, ஒளி அச்சுச் செய்து சில இடங்களில் அடிக்கோடிட்டு அனைத்து அலுவலர்களுக்கும் அனுப்பப்பட்டுள்ளது.

தமிழ்நாடு அரசு

சிறுதொழில் துறை
தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

அ.சா.கு.எண்.14012/அநமு. 2/99-5 நாள் : 29.10.99

பொருள் : சிறுதொழில் துறை - தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் 26.10.99 அன்று நடைபெற்ற கலந்துரையாடல் - தொடர் நடவடிக்கைகள் - அறிவுரைகள் வழங்கப்படுகின்றன.

சிறு தொழில் துறையில் தமிழ் ஆட்சிமொழி செயலாக்கம் பற்றி, தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அலுவலர்களால் 11.10.99 அன்று ஒரு ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. அப்போது தயாரிக்கப்பட்ட ஆய்வு அறிக்கையின் அடிப்படையில், 26.10.99 அன்று தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் அவர்களால் சிறுதொழில் துறைச் செயலருடன் கலந்துரையாடல் நடத்தப்பட்டது. அப்பொழுது சிறுதொழில் துறையில் தமிழ் மொழி பயன்பாடு மிகக் குறைந்த அளவே உள்ளது என்று சுட்டிக்காட்டப்பட்டது.

கலந்துரையாடலின் இறுதியில் எதிர்வரும் மூன்று திங்கள்களுக்குள் இத்துறையில் தமிழ்மொழி பயன்பாட்டில் குறிப்பிடத் தகுந்த அளவு முன்னேற்றம் எட்டப்படும் என்று உறுதியளிக்கப்பட்டது.

2. இந்த உறுதிமொழியினை அடையும் வகையில், இத்துறையிலுள்ள அனைத்துப் பிரிவுகளையும் எல்லா வகையிலும் தமிழ்மொழியினைத் தவறாது பயன்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்ளலாம். குறிப்பாக கீழ்க்கண்ட இனங்களில், அவ்வினங்களில் குறிப்பிட்டுள்ளவாறு தமிழ்மொழியினை முழுமையாக பயன்படுத்தும் விதத்தில் நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டுமெனவும் அறிவுறுத்தலாம்.

1. வருகைப் பதிவேடுகள், தொடர் குறிப்புப் பதிவேடுகள் : முழுக்க முழுக்க அத்தனையும் தமிழில் இருக்கவேண்டும்.

2. கையொப்பங்கள் : தவறாது தமிழில்தான் கையொப்பம் இடவேண்டும்

3. தற்செயல் விடுப்பு மற்றும் இதர விடுப்பு விண்ணப்பங்கள் : அத்தனையும் தவறாது தமிழில் தான் இருக்க வேண்டும்.

4. பணிப்பதிவேட்டில் பதிவுகள் : அத்தனை பதிவுகளும் தவறாது தமிழில்தான் இருக்கவேண்டும்

5. பதிவேடுகள் : பிரிவுகளில் பராமரிக்கப்படும் வழக்கமான பதிவேடுகள் (ம) காலமுறைப் பதிவேடுகள், பணப்பதிவேடு, கொடுபடா பணிப்பதிவேடு, காசோலை பதிவேடு, வங்கி பதிவேடு, துணைப் பதிவேடு, பணம் வழங்கல் பதிவேடு, முன்பணப் பதிவேடு இவை தவிர இதில் சொல்லப்படாத பராமரிக்கப்படும் / பராமரிக்க வேண்டிய பதிவேடுகள் அனைத்தும் தமிழில்தான் பதியப்பட வேண்டும்.

6. கடிதப்போக்குவரத்து : பொதுமக்கள், அரசு சார்பற்ற நிறுவனங்கள், துறைத் தலைமை அலுவலகங்கள், சார் நிலை, சமநிலை அலுவலகங்கள் அரசின் மற்ற அலுவலகங்கள் இவைகளுக்கு அனுப்பப்படும் கடிதப் போக்குவரத்து அத்தனையும் (விலக்களிக்கப்பட்ட இனங்கள் தவிர) தமிழில் மட்டுமே எழுதப்படவேண்டும்.

7. அரசு ஆணைகள் : 1) அலுவலக நடைமுறை ஆணைகள் கட்டாயமாக 100% தமிழில் மட்டுமே அமைய வேண்டும்.

2) வாலாய ஆணைகள் அத்தனையும் 100% தமிழில் மட்டுமே அமைய வேண்டும்.

3) அரசு நிலை மற்றும் இன்ன பிற ஆணைகள், விலக்களிக்கப்பட்ட இனங்கள் தவிர, மற்றவை அனைத்தும் கட்டாயமாகத் தமிழில் மட்டுமே அமைதல் வேண்டும்.

3. மேற்காணும் அறிவுரைகளை உடனடியாகத் தவறாது கடைப்பிடித்து தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கத்தை பெருமளவு இத்துறையில் வெற்றி பெறச் செய்யுமாறு இத்துறை அலுவலர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

4. தமிழ்மொழி செயலாக்கம் பற்றி இத்துறையின் கீழுள்ள துறைத் தலைமை அலுவலகம் மற்றுமுள்ள நிறுவனங்களுக்கு ஏற்கெனவே அனுப்பப்பட்ட கடிதத்தின் நகல் ஒன்று இத்துடன் பார்வைக்காகவும் தக்க நடவடிக்கைக்காகவும் இணைக்கப்பட்டுள்ளது.

5. இத்துறையிலுள்ள அனைத்து அலுவலர்கள் / பணியாளர்கள் அவர்களின் கனிவான கவனத்திற்காக, 27.10.99 அன்று தினமணி நாளேட்டில் தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் பற்றிய அறிவிப்பின் ஒளி அச்சு நகல் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

ஓ.போ. சோசம்மா,
அரசுச் செயலாளர்

பெறுநர்

அனைத்துப் பிரிவுகள், சிறுதொழில் துறை, சென்னை - 9

(இணைப்புடன்)

நகல் :

தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை, சென்னை - 9 (இணைப்புடன்)
தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அமைச்சரின் நேர்முக உதவியாளர், சென்னை - 9 (இணைப்புடன்)

(க. முனுசாமி)
பிரிவு அலுவலர்

அதிகாரிகள், அலுவலர்கள் மெத்தனப் போக்கு, இளக்காரம், போலித்தன்மை உள்ளிட்ட காரணங்களால் தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தை முழுமையாகச் செயல்படுத்த முடியாத நிலை நீடித்து வந்தது.

தினமணி

"தலைமைச் செயலகத்தில் உள்ள அனைத்துத் துறைகளையும் ஆய்வு செய்து, தமிழை ஆட்சி மொழியாக்குவதற்கான நடவடிக்கைகள் விரைவுபடுத்தப்பட்டுள்ளன" என்ற பகுதியும்

"தமிழகத்தில் வரும் மார்ச் மாதத்துக்குள் அனைத்து அரசுத் துறைகளிலும் தமிழிலேயே அரசாணைகள் வெளியிடுவதற்கும், மடல்கள் அனுப்புவதற்கும் நடவடிக்கை எடுக்கப்படும். இதைச் செயல்படுத்தத் தவறும் அரசு அதிகாரிகள், ஊழியர்கள் தண்டிக்கப்படுவர், எனத் தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் அறிவித்துள்ளார்" என்ற பகுதியும்

அனைவரது கவனத்துக்கும் கொண்டு வரப்பட்டுள்ளது. இது பாராட்டத்தக்க முயற்சி என்பதோடு செயலர் சார்பில் இவற்றைச் செம்மை செய்து அனுப்பிய க. முனுசாமியையும் பாராட்டாமல் இருக்க முடியாது.

16.11.99 எனக்கும் துறை அமைச்சர்க்கும் ஒரு மடல் எழுதினார்

அனுப்புநர்

திருமதி ஓ.போ. சோசம்மா, இ.ஆ.ப.,
அரசுச் செயலாளர்

பெறுநர்

தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் (ம) அறநிலையத்துறை
அமைச்சர் அவர்களின் முதுநிலை நேர்முக உதவியாளர், தலைமைச் செயலாகம்
சென்னை - 9

ஐயா,

பொருள் : சிறுதொழில் துறை - தமிழ் ஆட்சிமொழி செயலாக்கம் தமிழ் வளர்ச்சி, பண்பாடு மற்றும் அறநிலையத்துறை ஆய்வறிக்கை - எடுக்கப்பட்ட மேல் நடவடிக்கை தொடர்பாக

பார்வை :
1. சுற்றறிக்கை எண்.18, சிறுதொழில் துறை நாள் 13.10.99
2. கடித எண்.14012/அநமு.2/99-1 நாள் 13.10.99
3. அ.சா.கு.எண்.14012/அநமு/2/99-4 நாள் 29.10.99
4. அ.சா.கு.எண்.14012/அநமு.2/99-5 நாள் 29.10.99
5. மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் நேர்முக மடல், நாள் 10.11.99

பார்வையில் கண்டுள்ள அமைச்சர் அவர்களின் நேர்முக கடிதத்தின்பால் தங்களது கவனத்தை ஈர்க்க விழைகிறேன்.

தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம்

2. தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் பற்றி தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலர் அவர்களால் 26.10.99 அன்று சிறுதொழில் துறை செயலர் அவர்களுடன் ஒரு கலந்துரையாடல் மேற்கொள்ளப்பட்டது. இக்கலந்துரையாடலின் போது, தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் இத்துறையில் மிகக் குறைந்த அளவே உள்ளதென சுட்டிக் காட்டப்பட்டது. எதிர்வரும், மூன்று திங்களுக்குள் இத்துறையில் தமிழ் மொழி பயன்பாட்டில் குறிப்பிடத் தகுந்த அளவு முன்னேற்றம் எட்டப்படும் என உறுதியளிக்கப்பட்டது.

3. மேற்சொன்ன உறுதிமொழியினை அடையும் நோக்கில் இத்துறையில் உள்ள அனைத்துப் பிரிவுகளும் எல்லா வகையிலும் தமிழ்மொழியினை தவறாது பின்பற்ற வேண்டும் என்று வலியுறுத்தி, 29.10.99 அன்று, இத்துறையின் அ.சா.கு.எண்.14012/அநமு.2/99-5ல் அறிவுரைகள் வழங்கப்பட்டுள்ளது. மேலும் இத்துறையின் கட்டுப்பாட்டில் தகுந்த அறிவுரைகள் வழங்கப்பட்டுள்ளன. 29.10.99 நாளிட்ட அ.சா.கு.எண்.14012/அநமு.2/99-5 ன் நகல் ஒன்று ஏற்கெனவே அமைச்சர் அவர்களின் அலுவலகத்துக்கும் அனுப்பப்பட்டுள்ளது. எனினும் மற்றொரு நகல் தங்களின் உடனடி கவனத்திற்காக இத்துடன் இணைத்து அனுப்பப்படுகிறது. இதனை அமைச்சர் அவர்களின் பார்வைக்கு வைக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன்.

தமிழ்மொழி செயலாக்கம் பற்றி இத்துறையின் பற்றாளர் அவர்களால் தொடர்ந்து கண்காணிக்கப்பட்டு வருகிறது. தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கத்தினை இவ்வாண்டு இறுதிக்குள் குறிப்பிடத் தகுந்த அளவு முன்னேற்றம் எட்டப்படுவதற்கு அனைத்து நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன என்பதை இதன் மூலம் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
அரசுச் செயலருக்காக

நகல்:

ஊரகத் தொழில் மற்றும் பதிவுத்துறை அமைச்சர் அவர்களின்
முதுநிலை நேர்முக உதவியாளர்,
தலைமைச் செயலகம், சென்னை - 9

## 25. கைவினைப் பொருட்கள் துறை

இத்துறை 9.8.99 அன்று ஆய்வு செய்யப்பட்டது. சம்பளப்பட்டியலில் 52 பேரில் இருவர் மட்டுமே தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

1.1.99 முதல் ஆறுமாதங்களில் அதிக அளவில் ஆங்கிலத்திலேயே கடிதங்கள் அமைந்துள்ளன.

சனவரி 99 முதல் 4.8.99 வரை வெளியிடப்பட்ட அரசாணைகளில் பல ஆங்கிலத்தில்

வாலாய அரசாணைகளில் 153 இல் தமிழில் 38 மட்டுமே. நிலை அரசாணைகள் 140 இல் தமிழில் 27 மட்டுமே அரசாணை (டி) யில் வெளியிடப்பட்ட 16ம் ஆங்கிலத்தில் மட்டுமே.

அலுவலக நடைமுறை ஆணைகள் 215இல் தமிழில் 47 மட்டுமே. மொத்தத்தில் இந்தத் துறையில் மிகவும் பின்னடைவு ஏற்பட்டுள்ளது. இது குறித்து, 17.9.99 அன்று அமைச்சர் பெரியசாமிக்கு நேர்முக மடல் அனுப்பப்பட்டது. ஆய்வின் சாரம் இது.

1. கையொப்பங்கள்

வருகைப் பதிவேட்டிலும், பிற பட்டியல்களிலும் சிலர் ஆங்கிலத்திலேயே ஒப்பமிடுகின்றனர். 1978-ஆம் ஆண்டிலேயே தமிழக அரசு ஊழியர்கள் அனைவரும் தமிழில்தான் கையொப்பமிட வேண்டும் என்ற ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது. 21 ஆண்டுகளாகத் தங்கள் துறையில் சிலர் இந்த ஆணையைப் புறக்கணித்து வருகின்றனர்.

சம்பளப்பட்டியலில் ஒப்பமிட்டுள்ள 52 பேரில் இருவரது ஒப்பங்கள் மட்டும் தமிழில் உள்ளன. ஏனையோர் ஆங்கிலத்தில் ஒப்பமிடுகின்றனர். தமிழில் உள்ள கடிதங்களில் தமிழிலும் ஆங்கிலத்தில் உள்ள கடிதங்களில் ஆங்கிலத்திலும் ஒப்பமிடும் நிலை காணப்படுகிறது. அரசாணையின்படி அனைவரும் அனைத்து இனங்களிலும் தமிழில் மட்டுமே ஒப்பமிடுதல் வேண்டும்.

2. மடல் போக்குவரத்து

1.1.99 முதல் 30.6.99 முடிய அனுப்பப்பட்ட கடிதங்களில் பெரும்பாலான கடிதங்கள் ஆங்கிலத்திலேயே உள்ளன. சில கடிதங்கள் தமிழில் உள்ளன. அறிக்கைகள் அனுப்புமாறு கேட்டல், இயக்குநர்கள் குழுக்கூட்டம் தொடர்பான அறிவிப்புக் கடிதம், நினைவூட்டுகள் போன்ற வாலாயமான கடிதங்கள் கூட ஆங்கிலத்தில் உள்ளன. நேர்முகக் கடிதங்கள் சிலவும் ஆங்கிலத்தில் உள்ளன. மத்திய அரசு, பிற மாநிலங்கள், தூதரகங்கள், வெளிநாடுகள் போன்றவற்றிற்கு மட்டுமே ஆங்கிலத்தில் எழுதப்படுதல் வேண்டும். தமிழ்நாட்டு மக்களுக்கு எழுதப்படுகின்ற மடல்களைக்கூட, தமிழில் எழுதுவதற்குத் தங்கள் துறை முன்வரவில்லை.

செயலகத் துறையிலிருந்து செல்லும் கடிதங்கள் அனைத்தும் தமிழில் இருந்தால்தான் துறைத்தலைமை, சார்நிலை அலுவலங்களில் இக்கடிதங்களின் தொடர்ச்சியான நடவடிக்கைகள் தமிழில் அமைய வாய்ப்பு ஏற்படும். எனினும் 50 விழுக்காட்டுக்கும் மேல்

மடல்கள் ஆங்கிலத்தில் அமைந்திருப்பது தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தை அவமதிப்பதும், ஆட்சிமொழி தொடர்பான அரசாணைகளை மீறுவதுமாகும்.

3. அரசாணைகள்

இத்துறையில் சனவரி '99 முதல் 4.8.99 வரை வெளியிடப்பட்டுள்ள அரசாணைகளில் சில தமிழில் வெளியிடப்பட்டுள்ளன. பெரும்பான்மையான அரசாணைகள் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| அரசாணை வாலாயம் | 38 | 115 | 153 |
| அரசாணை - நிலை | 27 | 113 | 140 |
| அரசாணை - (டி) | - | 16 | 16 |

அனைத்து அரசாணைகளும் தமிழிலேயே பிறப்பிக்கப்பட வேண்டும் என்றும், இன்றியமையாத நேர்வுகளில் மட்டும் தமிழில் பிறப்பிக்கப்படும் அரசாணைகளோடு சேர்த்து ஆங்கிலத்திலும் அரசாணைகள் வெளியிடலாம் என்றும் தமிழக அரசு ஆணை பிறப்பித்துள்ளது. ஆனால் தங்கள் துறை தமிழை அறவே புறக்கணிப்பதாக உள்ளது. இந்நிலை ஆட்சிமொழிச் செயலாக்கத்தைப் பெரிதும் பின்னடையச் செய்வது மட்டுமின்றி, தமிழ் மட்டுமே அறிந்த தமிழர்களை அவமதிப்பதும் ஆகும். இவை கீழே போகும்போதுதான் கீழே உள்ளவர்களுக்கும் ஓர் அலட்சிய மனப்பாங்கு உண்டாகிவிடுகிறது.

4. பதிவேடுகள்

ஆங்கிலத்தில் அச்சிடப்பட்டுள்ள தன்பதிவேடுகள் பயன்பாட்டில் உள்ளன. இவற்றில் தமிழிலும் ஆங்கிலத்திலும் பதிவுகள் மேற்கொள்ளப்படுகின்றன. தன்பதிவேடுகளில் முகப்பில் உள்ள பொருள் விவரம், அலுவலர்கள் விவரம், பெறப்படும் கடிதங்களில் பொருள் பற்றிய விவரம், கோப்பின் முடிவுகள் நிலுவைக் கோப்புகள் பற்றிய சான்றுகள் முதலிய பதிவுகள் ஆங்கிலத்தில் உள்ளன. பிற பதிவேடுகளில் சில தமிழில் எழுதப்படுகின்றன. எனினும் காசோலைப் பதிவேடு, பணக்கணக்குப் பதிவேடு, வீடுகட்டும் முன்பணப்பதிவேடு, பொது வருங்கால வைப்புநிதிப் பதிவேடு, பிடித்தங்கள் பதிவேடு, செவ்வைப்படிப் பதிவேடு, முன் ஊதியச் சான்றிதழ் பதிவேடு, திருமண முன்பணப் பதிவேடு, சீருந்து முன்பண ஒப்பளிப்புப் பதிவேடு முதலியவை ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

பதிவேடுகள் எவற்றிற்கும் விதிவிலக்கு இல்லை. பதிவேடுகளைத் தமிழில் எழுதுவதில் எத்தகைய சிக்கலும் இல்லை. எனவே அனைத்துப் பதிவேடுகளும் தமிழிலேயே எழுதப்படுதல்

வேண்டும். ஆங்கிலத்தில் அச்சடிக்கப்பட்டுத் தற்போது பயன்பாட்டில் உள்ள பதிவேடுகளிலும் பதிவுகள் தமிழிலேயே மேற்கொள்ளப்படுதல் வேண்டும்.

வருகைப் பதிவேடு

வருகைப் பதிவேடுகள் சிலவற்றில் அலுவலர் - பணியாளர் பெயர்கள், விடுமுறை நாள், அலுவல் பணிவிவரங்கள் பற்றிய பதிவுகள் ஆங்கிலத்தில் உள்ளன. வருகைப் பதிவேட்டின் ஆய்வுக் குறிப்பேடு தமிழ் ஆங்கிலம் கலந்து எழுதப்பட்டுள்ளது.

பணிப்பதிவேடுகள்

விடுப்பு ஒப்புவிப்புப்பதிவு தமிழில் உள்ளது. ஏனைய விடுப்பு விவரங்கள், பணிசரிபார்ப்புச் சான்றிதழ், ஊதிய உயர்வு விவரம், விடுப்புப் பயணச்சலுகை, துறைத் தேர்வுகளில் தேர்ச்சி பெற்ற விவரம் முதலிய பதிவுகள் ஆங்கிலத்தில் உள்ளன. பணிப்பதிவேடுகளில் மேற்கொள்ளப்படும் பதிவுகள் அனைத்தும் அரசாணைக்கிணங்கத் தமிழிலேயே அமைதல் வேண்டும்.

ஆங்கிலேயர்கள் வெளியேறி 52 ஆண்டுகளாகியும் கூட இன்னும் இவை தமிழில் இல்லாதது மிகுந்த கண்டனத்துக்குரியது.

விடுப்பு விண்ணப்பங்கள்

ஒரு சிலர் அளித்துள்ள விடுப்பு விண்ணப்பங்கள் தமிழில் உள்ளன. ஆயினும் தற்செயல் விடுப்பு, ஈட்டிய விடுப்பு, மருத்துவ விடுப்பு வேண்டும் பலரது விண்ணப்பங்கள் ஆங்கிலத்தில் உள்ளன. தற்செயல் விடுப்பு விவரத்தாள் படிவம் ஆங்கிலத்தில் உள்ளது. விடுப்பு விவரங்கள் பதிவுச் சான்று ஆங்கிலத்தில் உள்ளது.

5. தட்டச்சுப் பொறிகள்

இத்துறையில் 7 தட்டச்சுகள் பயன்பாட்டில் உள்ளன. இவற்றில் தமிழ் - 3, ஆங்கிலம் -4

விதிமுறைப்படி தலைமைச் செயலகத்துறையில் 65% தமிழ்த் தட்டச்சுகளும், 35% ஆங்கிலத் தட்டச்சுகளுமே இருத்தல் வேண்டும்.

6. கோப்பு நடவடிக்கைகள்

சுற்றோட்டக் குறிப்புகள், சட்டமன்றவினா தொடர்பான நடவடிக்கைகள் தமிழில் உள்ளன. சில கோப்புகளில் குறிப்புகள், வரைவுகள் தமிழில் எழுதப்படுகின்றன. உயரலுவலர்களின் குறிப்புகளும் ஆணைகளும் தமிழில் உள்ளன. ஆயினும் மிகப்பல கோப்புகளில் குறிப்புகளும், வரைவுகளும் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம்

இவையனைத்தும் இனித் தமிழிலேயே அமைதல் வேண்டும். ஆங்கிலத்தில் எழுதுதல் கூடாது என அனைவருக்கும் அறிவிக்கப்படுதல் வேண்டும். மேலும் அவ்வாறு எழுதப்படும் வரைவுகளை ஏற்காது திருப்பியனுப்பித் தமிழில் எழுதப்பட உறுதியான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படல் வேண்டும்.

7. அலுவலக நடைமுறை ஆணைகள்

இவ்வாணைகள் தமிழிலும், ஆங்கிலத்திலும் வெளியிடப்படுகின்றன. மொத்தம் 215 இல் தமிழ் 47, ஆங்கிலம் 168, இனி இவ்வாணைகள் அனைத்தும் தமிழிலேயே வெளியிடப்படல் வேண்டும்.

8. ஒப்பளிப்பு ஆணைகள்

ஈட்டிய விடுப்பு, மருத்துவ விடுப்பு, ஒப்பளிப்பு ஆணைகள் தமிழில் உள்ளன. ஊதிய உயர்வு, ஒப்பளிப்பு விடுப்பு, விழா முன்பணம், திருமண முன்பணம், வீடுகட்டல் முன் பணம், பொது வருங்கால வைப்பு நிதி முன்பணம் மற்றும் பகுதி இறுதி எடுப்பு, சீருந்து முன்பணம் விடுப்புக்காலப் பயணச்சலுகை முதலிய ஒப்பளிப்பு ஆணைகள் ஆங்கிலத்தில் வெளியிடப்படுகின்றன.

இத்தகைய ஒப்பளிப்பு ஆணைகள் அனைத்தும் தமிழிலேயே வெளியிடப்படுதல் வேண்டும்.

9. நூல்கள்

ஆட்சிச் சொல்லகராதி, கழகத் தமிழ்க் கையகராதி, பிழை நீக்கி எழுதும் முறை ஆகிய நூல்கள் இல்லை எனத் தெரிவிக்கப்பட்டது. இவற்றில் தமிழ் வளர்ச்சி துறையால் வழங்கப்படும் ஆட்சிச் சொல் அகராதி தவிர ஏனைய இரு நூல்களையும் அலுவலகச் சில்லறைச் செலவினத்திலிருந்து விலைக்கு வாங்கிப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

அன்புடன்
(மு. தமிழ்க்குடிமகன்)

26. சுற்றுச் சூழல் (ம) வனத்துறை

22.10.99 அன்று இத்துறை ஆய்வு செய்யப்பட்டது. வருகைப் பதிவேட்டில் 106 பேர்களில் 28 பேர் தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

அலுவலக நடைமுறை ஆணைகள் 618 இல் 103 மட்டுமே தான் தமிழில். (1.1.99 முதல் 20.10.99 வரை)

இதே கால அளவில் தமிழில் .208 அரசாணைகளும் ஆங்கிலத்தில் 1306ம் வெளிவந்துள்ளன. இத்துறை தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தைச் செயற்படுத்துவதில் எந்த அக்கறையும் எடுத்துக் கொள்ளவில்லை.

இவ்வளவுக்கும் அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமி தமிழில் இளங்கலைப் பட்டம் பெற்றவர். அந்தக் கல்வியின் சாயல் இத்துறையில் எங்கும் தென்படவில்லை.

12281 மடல்கள் தமிழில் எழுதப்பட்டால், 8925 மடல்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன.

கடந்த 6 திங்களில் தமிழில் 27405 பக்கங்களும் ஆங்கிலத்தில் 27251 பக்கங்களும் தட்டச்சுச் செய்யப்பட்டுள்ளன.

கலந்துரையாடல் குறிப்புரை

ஆய்வுக் குறிப்புகளின் அடிப்படையில் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை அரசுச் செயலாளர் அவர்கள் சுற்றுச்சூழல் வனத்துறைச் செயலாளர் அவர்களுடன் 23.10.99 அன்று கலந்துரையாடல் கூட்டம் நடத்தினார். இக்கலந்துரையாடலின்போது வருகைப் பதிவேடுகளில் அனைவரும் தமிழில் ஒப்பமிட வேண்டுமெனவும், பதிவேடுகளில் ஆங்கிலத்தில் குறிப்புகள் எழுதுவதைத் தவிர்க்கவேண்டும் எனவும் வலியுறுத்தப்பட்டது.

அலுவலக ஆணைகள்

அலுவலக நடைமுறை ஆணைகள் பெருமளவில் (515) ஆங்கிலத்தில் வெளியிடப்படுகின்றன. இந்நிலைமை ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்திற்கு இடர்ப்பாடாக அமைந்துள்ளது. மேலும் பத்தாண்டு அரசாணைகள் (295) இருபதாண்டு அரசாணைகள் (62) முப்பதாண்டு அரசாணைகள் (21), நாற்பதாண்டு அரசாணைகள் (6), நிலையாணைகள் (193), வாலாயம் (729) ஆங்கிலத்தில் வெளியிடப்படுகின்றன. தலைமைச் செயலக சுற்றுப்புறம் - வனத்துறையின் கட்டுப்பாட்டிலுள்ள அனைத்து நிலை அலுவலகங்களிலும், வனத் தோட்டக் கழகங்களிலும் ஆங்கிலத்தின் பயன்பாடு மிகுதியாகி ஆட்சிமொழித் திட்டம் விரைவில் நிறைவேற்ற இயலா வாய்ப்பமையும் என்பதைக் கருத்திற் கொள்ள வேண்டும். அரசு ஆணைகள் அனைத்தும் தமிழில் இருத்தல் இன்றியமையாதது. பெரும்பாலான பதிவேடுகள் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன. கடிதங்கள், வரைவுகள் எழுதுவதற்கு விதிவிலக்கு அளிக்கப்படவில்லை. எனவே, பதிவேடுகள் அனைத்தும் தமிழிலேயே பேணப்படவேண்டும்.

பணிப்பதிவேடுகள் தமிழில் பேணுதல்

பணிப்பதிவேடுகளில், பணியாளர் தொடர்பான விடுப்பு வழங்கல் ஊதிய உயர்வு, அறுதியிடல், பணியிட மாற்றம் போன்ற விவரங்களை தமிழிலேயே மேற்கொள்ள வேண்டும்.

கடிதப் போக்குவரத்து

வரப்பெறும் கடிதங்கள் தமிழிலேயே அனுப்புவதற்கியலும் வகையில் உரிய அலுவலகங்களுக்கும் பணியாளர்களுக்கும் அறிவிக்க வேண்டும்.

தட்டச்சுகள்

இவ்வலுவலகத்தில் 27 தட்டச்சர்கள் உள்ளனர். தமிழ்த் தட்டச்சுப் பொறி (16) உம், ஆங்கிலத் தட்டச்சுப்பொறி (11) உம் ஆக 27 பொறிகள் உள்ளன. கடந்த ஆறு திங்களில் மொத்தம் தட்டச்சுச் செய்யப்பெற்ற பக்கங்கள் 54656. இவற்றுள் 27251 பக்கங்கள் ஆங்கிலத்திலும், 27405 பக்கங்கள் தமிழிலும் தட்டச்சிடப்பெற்றுள்ளன. சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் கைப்பழக்கம் என்னும் புதுமொழிக்கேற்ப, இருக்கின்ற தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைப் பயன்படுத்தி வரைவுகள் தமிழில் எழுதி தட்டச்சிடப்பெற வேண்டும்.

கமுக்க அறிக்கை, பதிவுருத் தாள்கள் போன்றவற்றில் விவரங்களை உரியவாறு தமிழில் நிறைவு செய்யவேண்டும். வனத்துறைத் தொடர்பான விளக்கக் குறிப்பு, திட்டங்கள் போன்றவற்றை பொருள் புரிந்து மொழியாக்கம் மேற்கொள்ளவேண்டும். தேவைப்படும் இடங்களில் ஆங்கிலச் சொற்கள் அடைப்புக் குறிகளில் இடப்பெறலாம். வனத்துறை நடைமுறை நூலை மொழியாக்கம் செய்வதற்கு ஆவன செய்யப்பெறவேண்டும். அலுவலர்கள் பெயர்ப் பலகைகள், பிரிவுகளின் பெயர்கள், தகவல் பலகை ஆகியன தமிழில் உள்ளமை பாராட்டுக்குரியது எனப் பல்வேறு கருத்துகளை தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை அரசு செயலாளர் அவர்கள் தெரிவித்தார்கள். இக்குறைகளை மூன்று திங்களில் களைந்து ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தை மேம்படுத்துவதாக சுற்றுப்புறம் - வனத்துறைச் செயலாளர் அவர்கள் உறுதியளித்தார்.

அரசுச் செயலாளர்
தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை

செயலர் இராசரத்தினம் 18.11.99 அன்று அலுவலக ஆணை : 29 இன்படி தமிழை ஆட்சிமொழியாகப் பயன்படுத்துமாறு தெளிவுரைகள் வழங்கியுள்ளார்.

பொருள் : பணி - சுற்றுப்புறம் மற்றும் வனத்துறை - தமிழ் ஆட்சிமொழி செயலாக்கம் - குறித்து ஆணைகள் - வெளியிடப்படுகின்றன.

பார்வை : அலுவலக ஆணை எண்.25, நாள் 21.10.99

தமிழ் ஆட்சிமொழி செயலாக்கம் குறித்த ஆய்வின்போது இத்துறையில் தமிழ் ஆட்சி மொழி செயலாக்கம் சரிவரச் செயற்படுத்தப்படவில்லை என தெரியவந்துள்ளது. எனவே தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கத்தை நடைமுறைப்படுத்த கீழ்க்கண்டவாறு ஆணையிடப்படுகிறது.

1. பார்வை ஒன்றில் கண்டுள்ள அலுவலக ஆணையின்படி அனைத்து அலுவலர்களும் தமிழில் மட்டுமே அனைத்து இனங்களிலும் கையொப்பமிட வேண்டும். பொதுமக்களுக்கும் அரசு சார்பற்ற நிறுவனங்களுக்கும், துறைத்தலைமை அலுவலகங்களுக்கும், சார்நிலை, சமநிலை அலுவலர்களுக்கும் மற்றும் அரசின் மற்ற அலுவலகங்களுக்கும் எழுதப்படுகின்ற கடிதங்கள் அனைத்தும் தமிழில் இருக்கவேண்டும். அறிக்கைகள் அனுப்புமாறு கேட்டல், இயக்குநர்கள் குழுக்கூட்டம் தொடர்பான அறிவிப்புக்கடிதம், நினைவூட்டுகள் மற்றும் நேர்முகக் கடிதங்கள் தமிழில் எழுதப்படவேண்டும்.

2. மத்திய அரசு, பிற மாநிலங்கள், தூதரகங்கள், வெளிநாடுகள் போன்றவற்றிற்கு எழுதப்படும் கடிதங்கள் தவிர மற்ற அனைத்துக் கடிதங்களும் தமிழிலேயே எழுதப்படுதல் வேண்டும்.

3. அனைத்து அரசாணைகளும் தமிழிலேயே பிறப்பிக்கப்படவேண்டும். இன்றியமையாத நேர்வுகளில் மட்டும் தமிழில் பிறப்பிக்கப்படும் அரசாணைகளோடு சேர்ந்து ஆங்கிலத்தில் அரசாணைகள் வெளியிடவேண்டும்.

4. பணப்பதிவேடு, கொடுபடாப் பணப்பதிவேடு, காசோலைப் பதிவேடு, வங்கிப் பதிவேடு, துணைப்பதிவேடு, பணம் வழங்கல் பதிவேடு, முன்பணப் பிடித்தப் பதிவேடுகள் அனைத்தும் தமிழில் எழுதப்படவேண்டும். பதிவேடுகள் எவற்றிற்கும் விதிவிலக்கு இல்லை. பதிவேடுகளைத் தமிழில் எழுதுவதில் எத்தகைய சிக்கலும் இல்லை. எனவே அனைத்துப் பதிவேடுகளும் தமிழிலேயே எழுதப்படுதல் வேண்டும். ஆங்கிலத்தில் அச்சசடிக்கப்பட்டுத் தற்போது பயன்பாட்டில் உள்ள பதிவேடுகளிலும் பதிவுகள் தமிழிலேயே மேற்கொள்ளப்படுதல் வேண்டும்.

5. வருகைப் பதிவேடுகள், விடுப்புகள், அலுவல்பணி அனுமதி / தகவலின்மை, செயலர் இல்லப்பணி, பதவிப் பெயர்கள் ஆகியவை தமிழில் எழுதப்படவேண்டும்.

6. விடுப்பு வழங்கல், ஊதிய உயர்வு, பணியிடமாற்றம் ஈட்டிய விடுப்பு ஒப்படைப்பு ஆகியவை தமிழில் எழுதப்படவேண்டும்.

7. விடுப்பு விண்ணப்பங்களும், விடுப்புப் பதிவுக் குறிப்புகளும் தமிழில் எழுதப்படவேண்டும். ஆங்கிலத்தில் எழுதப்படும் விண்ணப்பங்கள் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

மேலே கூறப்பட்ட அனைத்தையும் இத்துறையில் உள்ள அனைத்து அலுவலர்களும் / பிரிவுகளும் தவறாது கடைப்பிடிக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். அவ்வாறு

நடைமுறைப்படுத்தாதவர்கள் மீது கடுமையான ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் என அறிவுறுத்தப்படுகிறது.

சி. இராஜரத்தினம்
அரசுச் செயலாளர்

பெறுநர்

அனைத்து அலுவலர்கள் / பிரிவுகள் சுற்றுப்புறம் மற்றும் வனத்துறை, சென்னை-9

நகல்:

மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, அமைச்சர் அவர்களின் முதுநிலை நேர்முக உதவியாளர், சென்னை- 9
மாண்புமிகு அமைச்சர் (வனம்) அவர்களின் முதுநிலை நேர்முக உதவியாளர், சென்னை -9

வைப்புக் கோப்பு / உதிரி.

பிரிவு அலுவலர்

ஆங்கிலத்தில் எழுதப்படும் விண்ணப்பங்கள் இனிமேல் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா என்றும் தெளிவுபடுத்தியுள்ளார்.

18.11.99 இல் எனக்கு ஒரு நேர்முக மடல் வரைந்துள்ளார்.

அன்பார்ந்த அய்யா,

பொருள் : பணி - சுற்றுப்புறம் மற்றும் வனத்துறை - தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கம் - குறித்து

பார்வை : தங்களின் நேர்முக மடல் நாள் 9.1.99

தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் குறித்து தாங்கள் உணர்த்தியவாறு இனிவரும் காலங்களில் இத்துறையில் தமிழ் ஆட்சிமொழித் திட்டம் செவ்வனே நடைமுறைப்படுத்தப்படும் எனத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள,
(எஸ். இராசரத்தினம்)

கவிஞர் ஆனந்தத்தின் மருமகனான இராசரத்தினம் தக்க நடவடிக்கையை எடுத்திருப்பது பாராட்டுக்குரியது.

## 27. சமூக நலம், சத்துணவுத்துறை

இத்துறையில் 14.9.99 அன்று ஆய்வு நடைபெற்றது. வருகைப் பதிவேட்டில் 70 பேர்களில் 37 பேர் தமிழில் ஒப்பமிடுகின்றனர். பிற துறைகளோடு ஒப்பிடும்போது இங்கு 50% மேல் உள்ளது. அரசாணைகள் அளவில் 7 மாதங்களில் தமிழில் 193ம் ஆங்கிலத்தில் 351ம் வந்துள்ளன.

ஆனால் கடிதப் போக்குவரத்தில் முன்னேற்றம் உள்ளது. தமிழில் 9608 என்றால் ஆங்கிலத்தில் 3018 ஆகும். இது ஓரளவு பாராட்டப்படவேண்டியதாகும். கடந்த ஆறு மாதங்களில் தமிழில் 18174 பக்கங்களில் தட்டச்சுச் செய்யப்பட்டிருந்தாலும் ஆங்கிலத்தில் 8134 பக்கங்கள்தான். ஆறுதலான செய்தி இது.

ஆய்வறிக்கை

1. வருகைப் பதிவேடுகள்

விடுப்புகள், அலுவல்பணி, அனுமதி / தகவலின்மை, பெயர்களின் தலைப்பெழுத்துகள், பதவிப் பெயர்கள் ஆகியவை ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன.

2. கையொப்பங்கள்

70 பேர்களில் 37 பேர் தமிழிலும், 33 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர். பற்றொப்பப் பதிவேட்டில் 83 பேர்களில் 14 பேர் தமிழிலும், 69 பேர் ஆங்கிலத்திலும் ஒப்பமிடுகின்றனர்.

3. தற்செயல் விடுப்புகள்

சிலருடைய விண்ணப்பங்களும் தற்செயல் விடுப்பு விண்ணப்பப் பதிவுத்தாள்களும் ஆங்கிலத்தில் உள்ளன.

| 4. ஆணைகள் (1.1.99 முதல் 8.9.99 வரை) | | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|---|
| அ. | அலுவலக ஆணைகள் | 12 | 8 | 20 |
| ஆ. | சுற்றறிக்கைகள் | 4 | - | 4 |
| இ. | அலுவல் நடைமுறைப் பணிகள் | 100 | 250 | 350 |
| ஈ. | சுற்றனுப்புகைப் பதிவேடுகள் | 325 | 10 | 335 |

| 5. அரசாணைகள் (1.1.99 முதல் 8.9.99 முடிய) | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| பத்தாண்டு | 78 | 27 | 105 |
| இருபதாண்டு | 8 | 21 | 29 |
| முப்பதாண்டு | 5 | 16 | 21 |

| | | | |
|---|---|---|---|
| நாற்பதாண்டு | - | - | - |
| நிலை | 39 | 121 | 160 |
| வாலாயம் | 63 | 166 | 229 |
| மொத்தம் | 193 | 351 | 544 |

6. பணிப் பதிவேட்டில் பதிவுகள்

பணிவரன்முறை, பதவிப்பெயர் முத்திரை, விடுப்புப் பயணச் சலுகை, பணிச்சரிபார்ப்புச் சான்று, மருத்துவ விடுப்பு, ஒப்படைப்பு விடுப்பு, ஈட்டிய விடுப்பு, ஊதிய நிர்ணயம் ஆகிய பதிவுகள் ஆங்கிலத்தில் உள்ளன. விடுப்பு வழங்கல் ஆணைகள் தமிழில் இருந்தும், பதிவுகள் ஆங்கிலத்தில் செய்யப்படுகின்றன.

7. பதிவேடுகள்

பணப்பதிவேடு, கொடுபடாப் பணப்பதிவேடு, காசோலைப் பதிவேடு, வங்கிப் பதிவேடு, துணைப் பதிவேடு, பணம் வழங்கல் பதிவேடு உள்ளிட்ட 48 பதிவேடுகள் முழுமையும் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன. இவை தவிர 52 பதிவேடுகள் தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதப்படுகின்றன.

| 8. கடிதப் போக்குவரத்து | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| அ. பொதுமக்களுக்கும் அரசு சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 511 | 22 | 533 |
| ஆ. துறைத்தலைமை அலுவலகங்களுக்கு | 7563 | 2302 | 9865 |
| இ. சார் நிலை அலுவலகங்களுக்கு | 1122 | 202 | 1324 |
| ஈ. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 412 | 492 | 904 |
| மொத்தம் | 9608 | 3018 | 12626 |

| 9. வரப்பெற்ற கடிதங்கள் | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| அலுவலகப் பணியாளர்கள் சார்நிலை அலுவலர்கள் ஆகியோரிடமிருந்து வரப்பெற்றவை | 3322 | 1263 | 4585 |

10. தட்டச்சுப் பொறிகள்

தமிழ்ப் பொறிகள் - 12
ஆங்கிலப் பொறிகள் - 10 உள்ளன.

11. தட்டச்சுச் செய்த பக்கங்கள் (கடந்த 6 திங்களில்)

| | | |
|---|---|---|
| தமிழ் | - | 18174 |
| ஆங்கிலத்தில் | - | 8134 |
| கூடுதல் | - | 26308 |

கலந்துரையாடல்

ஆய்வுக்குப்பின்னர் தமிழ் வளர்ச்சி, பண்பாட்டு அரசுச் செயலாளர் அவர்கள் சமூக நலம் மற்றும் சத்துணவுத் துறை அரசுச் செயலாளர் அவர்களுடன் 15.9.99 முற்பகல் கலந்துரையாடினார். கலந்துரையாடலில் "வருகைப் பதிவேடு முதலாக அனைத்துப் பதிவேடுகளிலும் அனைவரும் தமிழில் ஒப்பமிட வலியுறுத்தப்பட வேண்டும்; அலுவலக நடைமுறை ஆணைகள் அதிகமாக ஆங்கிலத்தில் வெளியிடும் போக்கைத் தவிர்க்க வேண்டும்; அரசாணைகள் அனைத்தையும் தமிழில் வெளியிட்டு துறைத் தலைமை சார்நிலை அலுவலகங்களின் பணிகள் தமிழில் அமைய செயலகத் துறை வழிகாட்டியாக இருக்க வேண்டும். குறிப்பாக வாலாயமான அரசாணைகளும், நிலையாணைகளும் அதிக அளவில் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டுள்ளன. இந்நிலை முற்றிலும் மாற்றப்பட வேண்டும். பதிவேடுகள் எவற்றுக்கும் ஆட்சிமொழித் திட்டத்தில் விதிவிலக்கு ஏதும் இல்லை. எனவே அனைத்துப் பதிவேடுகளையும் தமிழில் மட்டுமே எழுத வேண்டும். கடிதப் போக்குவரத்தில் கவனம் செலுத்தி ஆங்கிலக் கடிதங்களின் எண்ணிக்கையைக் குறைக்க வேண்டும். செயலகத்திற்கு அனுப்பும் கடிதங்களைத் தமிழில் மட்டுமே அனுப்புமாறு துறைத் தலைமை அலுவலகங்களுக்கும், சார்நிலை அலுவலகங்களுக்கும் சுற்றறிக்கை வாயிலாக அறிவுறுத்தல்கள் வழங்கப்படவேண்டும். மீண்டும் 3 திங்களுக்குள் இத்துறை ஆய்வு செய்யப்படும். அதற்குள் இக்குறைகள் அனைத்தும் களையப்படவேண்டும் என தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத் துறை அரசுச் செயலாளர் அவர்கள் தெரிவித்தார். சமூக நலம் மற்றும் சத்துணவுத்துறை அரசுச் செயலாளர் மூன்று திங்களுக்குள் இக்குறைகளைக் களைந்து ஆட்சிமொழிச் செயலாக்கத்தில் முன்னேற்றம் காட்டுவதாக உறுதி அளித்தார்.

8.10.99 அன்று துறை அமைச்சர் சற்குணபாண்டியனுக்கும் செயலாளர் காசிநாதனுக்கும் நேர்முக மடல்கள் அளிக்கப்பட்டன.

இது தொடர்பாக எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் குறித்து அவர்கள் இருவரிடமிருந்தும் மடல் எதுவும் வரவில்லை. எனினும் இத்துறை இன்னும் கொஞ்சம் கவனம் செலுத்தினால் 80%க்கு மேல் கொண்டுவந்துவிட முடியும்.

28. ஆதிதிராவிடர் நலத்துறை

தமிழ் வளர்ச்சித் துறை மற்றும் அறநிலையத்துறைக்கு அடுத்தபடி தமிழில் அதிக அளவில் அக்கறை கொண்டுள்ள துறையாக இருந்தது இது. 31.8.99 அன்று இத்துறை ஆய்வு செய்யப்பட்டது. ஆய்வுச் சுருக்கத்தைப் பாருங்கள்.

1. கையொப்பங்கள்

113 பேர்களில் 67 பேர் தமிழில் 45 பேர்
ஆங்கிலத்தில் : ஒப்பமிடுகின்றனர்

ஒருவர் - தமிழ் ஆங்கிலம் கலந்து -
பற்றொப்பப் பதிவேட்டில் 130 பேர்களில்
55 பேர் தமிழில் 65 பேர் ஆங்கிலத்தில் : ஒப்பமிடுகின்றனர்

2. கடிதப்போக்குவரத்து

| | தமிழில் | ஆங்கிலத்தில் | மொத்தம் |
|---|---|---|---|
| அ. பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 1801 | 286 | 2087 |
| ஆ. துறைத்தலைமை அலுவலகங்களுக்கு | 4713 | 303 | 5016 |
| இ. சார்நிலை, சமநிலை அலுவலர்களுக்கு | 259 | 77 | 336 |
| ஈ. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 1738 | 478 | 2216 |
| கூடுதல் | 8511 | 1144 | 9655 |

3. வருகைப் பதிவேடுகள்

விடுப்புகள் அலுவல் பணி அனுமதி, பெயர்களின்
தலைப்பெழுத்துகள் ஆகியவை : ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன

4. அலுவலகச் செயல்முறை ஆணைகள் - வெளியிடப்பட்ட செயல்முறை ஆணைகள் : 582

தமிழில் - 468

ஆங்கிலத்தில் - 114

5. அலுவலக நிர்வாகம் தொடர்பான ஆணைகள் வெளியிடப்பட்ட 7 ஆணைகளும் தமிழில் உள்ளன.

| 6. அரசாணைகள் (1.1.99 முதல் 26.8.99 முடிய) | தமிழில் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| பத்தாண்டு | 165 | 11 | 176 |
| இருபதாண்டு | 27 | 6 | 33 |
| முப்பதாண்டு | 14 | 14 | 28 |
| நாற்பதாண்டு | 2 | - | 2 |
| நிலை | 84 | 17 | 101 |
| வாலாயம் | 229 | 65 | 294 |

7. பணிப்பதிவேட்டில் பதிவுகள்

| | |
|---|---|
| பணிவரன்முறை, பதவிப்பெயர் முத்திரை விடுப்புப் பயணச்சலுகை, பணிச்சார்புச் சான்று, மருத்துவ விடுப்பு, ஒப்படைப்பு விடுப்பு, ஈட்டிய விடுப்பு, விவரம், ஊதிய நிர்ணயம் | (விடுப்பு வழங்கல் ஆணைகள் தமிழில் இருந்தும், பதிவுகள் ஆங்கிலத்தில் பயிற்சி செய்யப்படுகின்றன) |
| 8. கருவூலப்பட்டியல் பதிவேடு, சில்லறைச் செலவினப் பதிவேடு, தொலைபேசிக் கட்டணப்பதிவேடு, சேமிப்பு நிதிமுன்பணப் பதிவேடு, பிடித்தங்கள் பதிவேடுகள் | உள்ளிட்ட 27 பதிவேடுகள் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன இவை தவிர 24 பதிவேடுகள் தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதப்படுகின்றன |

9. தட்டச்சுப்பொறிகள்

தமிழ் : 16
ஆங்கிலம் : 7

தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் போதுமான எண்ணிக்கையில் உள்ளன.

10. தட்டச்சுச் செய்த பக்கங்கள் (கடந்த 6 திங்களில்)

தமிழ் : 47610
ஆங்கிலம் : 7024
கூடுதல் : 54634

தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை மிகுதியாகப் பயன்படுத்தி ஆங்கிலத்தில் தட்டச்சுச் செய்யப்படும் பக்கங்களின் எண்ணிக்கையைக் குறைக்க வேண்டும்.

31.8.99 அன்று காலை 11.00 மணிக்கு தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைச் செயலாளர் அவர்கள் ஆதிதிராவிடர் நலத்துறை செயலாளர் அவர்களுடன் கலந்துரையாடினார்.

கலந்துரையாடலின்போது வருகைப் பதிவேடுகளில் சுட்டிக்காட்டப்பட்டுள்ள குறைகளை உடனே களைய வேண்டுமெனத் தெரிவித்தார். ஆங்கிலத்தில் கையொப்பமிடுவோர் அனைவரும் இன்று முதலே தமிழில் ஒப்பமிட வேண்டும் என அறிவுறுத்தினார். அலுவலகச் செயல்முறை ஆணைகள் ஆங்கிலத்தில் வெளியிடுவதை முற்றிலுமாகத் தவிர்க்கவேண்டும்; அரசாணைகள் அரசின் செயற்பாட்டை துறைத் தலைமை சார்நிலை அலுவலகங்களுக்குத் தெரிவிக்கும் முக்கிய ஆணைகள். ஆகையால் அவை அனைத்தையும் தமிழில் மட்டுமே வெளியிட்டு தேவைப்படும் அரசாணைகளை மட்டும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டுக் கொள்ளவேண்டும் என்றும் வலியுறுத்தினார். பதிவேடுகள் அனைத்தையும் தமிழிலேயே எழுத வேண்டும்; பணிப்பதிவேட்டில் தமிழிலேயே பதிவுகளை மேற்கொள்ள வேண்டும். கடிதப் போக்குவரத்தில் இப்போதுள்ள ஆங்கிலப் பயன்பாட்டையும் (9655க்கு 1144 ஆங்கிலக் கடிதங்கள்) குறைக்க வேண்டும் எனச் சுற்றறிக்கை வெளியிட வேண்டும்; (54634 பக்கங்களில் 7024 ஆங்கிலம்) என்று பல்வேறு கருத்துகளை தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறைச் செயலாளர் அவர்கள் வலியுறுத்திக் கூறினார்கள். 100க்கு 100 தமிழில் செயற்பாடுகள் அமைந்திருந்த இத்துறையில் இவ்வளவுக்கு ஆங்கிலத்தில் செயற்பாடுகள் வளர்ந்து வருவது நல்லதல்ல. மீண்டும் இத்துறையில் 100க்கு 100 தமிழ் என்னும் நிலை வரவேண்டும் என்று தெரிவித்தார்.

இக்கருத்துகள் அனைத்தையும் ஏற்றுக்கொண்ட ஆதி திராவிடர் நலத்துறைச் செயலாளர் அவர்கள் "இக்குறைபாடுகளை விரைவாகக் களைந்து 31.12.99 க்குள் இத் துறையில் 100க்கு 100 தமிழ்ச் செயற்பாடுகள் அமைந்துள்ளன" எனக் கூறும் நிலைக்கு உயர்த்துவதாக உறுதியளித்தார்.

முன்னேற்றம் - ஆய்வறிக்கையில் சுட்டிக்காட்டிய இனங்களில் இன்னும் முன்னேற்றம் தேவை.

துறை கொண்டுள்ள ஈடுபாடு : ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் இத்துறை நல்ல ஈடுபாடு கொண்டுள்ளது. பின்னடைவு, ஏற்படாமல் பார்த்துக்கொள்ளவேண்டும்."

ஏற்கெனவே, இதில் கிறித்துதாசு காந்தி செயலராக இருந்தபோது 100க்கு 100 என்று இருந்த ஆட்சிமொழிச் செயலாக்கத்தில் செயலர் சம்பத்குமார் காலத்தில் பின்னடைவு ஏற்பட்டுள்ளது.

30.9.99 இல் அமைச்சர் செல்வராசுக்கும், 1.10.99 இல் செயலருக்கும் நேர்முக மடல்கள் தரப்பட்டன.

29. தொழிலாளர் (ம) வேலை வாய்ப்புத்துறை

இத்துறையில் 29.11.99 அன்று ஆய்வு மேற்கொள்ளப்பட்டது .

ஆய்வறிக்கை

1. வருகைப்பதிவேடு மற்றும் தொடர் குறிப்புப் பதிவேடுகள் தற்செயல் விடுப்பு, ஈட்டிய விடுப்பு மருத்துவ விடுப்பு, அலுவல் பணி, தகவலின்மை, இல்லப்பணி, மாறுதல் பணி, சமய விடுப்பு / பெயர்களின் தலைப்பெழுத்துக்கள் : ஆங்கிலத்தில் உள்ளன

2. தற்செயல் விடுப்பு விண்ணப்பங்கள் அவற்றின் மீதான ஆணைகள் : தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ளன

3. கையொப்பங்கள் (வருகைப் பதிவேடு) 139 பேர்களில் 119 பேர் தமிழிலும், 20 பேர் ஆங்கிலத்திலும் : ஒப்பமிடுகின்றனர்

4. பற்றொப்பப்பதிவேடு :

146 பேர்களில் 32 பேர் தமிழிலும் 114 பேர் ஆங்கிலத்திலும் : ஒப்பமிடுகின்றனர்

5. ஆணைகள் :

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. அலுவலக நடைமுறை (வாலாயம்) | 253 | 550 | 803 |
| 2. நிலையாணை | 61 | 147 | 208 |
| 3. பத்தாண்டு | 611 | 445 | 1056 |
| 4. இருபதாண்டு | 23 | 86 | 109 |
| 5. முப்பதாண்டு | 6 | 8 | 14 |
| 6. நாற்பதாண்டு | 6 | 22 | 28 |
| மொத்தம் | 960 | 1258 | 2218 |

6. பதிவேடுகள் :

பணக்கணக்குப் பதிவேடு, வழங்கப்படாச் சம்பளப்பதிவேடு, காசோலைப் பதிவேடு, வங்கிப் பதிவேடு, கருவூலப் பதிவேடு, துணைக் கணக்குப் பதிவேடு, சம்பளம் வழங்கல் பதிவேடு போன்றவை தன் பதிவேடு/ அனுப்புகைப் பதிவேடு — ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன (தற்போது தமிழில் எழுதப்படுகின்றன)

7. பணிப்பதிவேடுகள் :

| | |
|---|---|
| மாறுதல், நியமனம், ஈட்டிய விடுப்பு, விடுப்பு ஒப்புவிப்பு, ஊதியம் அறுதியிடல் | தமிழிலும், ஆங்கிலத்திலும் பதிவுகள் மேற்கொள்ளப்படுகின்றன |

| 8. கடிதப் போக்குவரத்து | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| அ. பொது மக்களுக்கும், அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 302 | 465 | 767 |
| ஆ. துறைத் தலைமை அலுவலகங்களுக்கு | 2342 | 2637 | 4979 |
| இ. சார்நிலை / சமநிலை அலுவலகங்களுக்கு | 178 | 184 | 362 |
| ஈ. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 956 | 2112 | 3068 |
| மொத்தம் | 3778 | 5398 | 9176 |
| 9. வரப்பெற்ற கடிதங்கள் அலுவலகப் பணியாளர், சார்நிலைப் பணியாளர் ஆகியோரிடமிருந்து வரப்பெற்றவை | 1363 | 2079 | 3442 |

10. தட்டச்சுப்பொறி

அ. தமிழ்த் தட்டச்சுகள் - 18
ஆ. ஆங்கிலத் தட்டச்சுகள் - 5
இ. மின்னணுப் பொறி - 1

11. கடந்த ஆறுதிங்களில் தட்டச்சுச் செய்யப்பட்ட பக்கங்களின் எண்ணிக்கை

1. தமிழில் - 33738
2. ஆங்கிலத்தில் - 24325

மொத்தம் - 58063

இப்படிப் பல நிலைகளில் ஆங்கிலம் மேலோங்கி நிற்கிறது

ஆறு திங்களில் தமிழில் தட்டச்சுச் செய்யப்பட்ட பக்கங்கள் : 33738, ஆங்கிலத்தில் : 24325. இதில் முன்னேற்றம் உள்ளது. தமிழில் 18 பொறிகள். ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் 5 மட்டும். இவற்றை வைத்துக்கொண்டு எத்தனை பக்கங்கள்? போதுமான தட்டச்சர்களும் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளும் இருந்தும் இவர்கள் சரியாகப் பயன்படுத்தவில்லை என்பதே உண்மை. இந்த ஆய்வு குறித்து 6.12.99 அன்று அமைச்சர் இரகுமான்கானுக்கும், செயலர் இரத்தினசாமிக்கும் நேர்முக மடல்கள் அளிக்கப்பட்டன.

4.1.2000 அன்று அமைச்சர் எனக்கு விடை எழுதினார்.

"இத்துறையில், தமிழ்மொழி செயலாக்கத் திட்டம் குறித்து 29.11.1999- ஆம் நாளன்று தமிழ் வளர்ச்சி - பண்பாடு (மற்றும்) அறநிலையத்துறை செயலாளர் அவர்கள் நடத்திய ஆய்வின் மீதான குறைகளைப் பற்றி தங்களின் நேர்முக மடலில் குறிப்பிட்டுள்ளதை கவனத்தில் கொண்டு, அவற்றினைக் களைந்து தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தினை முழுமையாகவும், செம்மையாகவும், முனைப்புடனும் மார்ச் 2000 திங்களில் மீண்டும் இத்துறையில் நடைபெறவிருக்கும் ஆய்வுக்கும் முன்னர் நூறு விழுக்காடு நடைமுறைப்படுத்த அனைத்துப் பணியாளர்களும் / அலுவலர்களும் அறிவுறுத்தப்பட்டுள்ளனர். இத்துறையின் கீழ் செயல்பட்டு வரும் அனைத்துத் துறைத் தலைவர்களையும், அவர்களது அலுவலகங்களில் அனைத்து இனங்களிலும் தமிழ் மொழியை முழுமையாகப் பயன்படுத்த நடவடிக்கை எடுக்கவும், அவ்வாறு எடுக்கப்பட்ட நடவடிக்கை பற்றிய அறிக்கை ஒன்றினை அரசிற்கு அனுப்பவும் கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளனர்.

2. தாங்கள் குறிப்பிட்டுள்ள குறைகள் அனைத்தினையும் மார்ச் 2000 திங்களில் மறு ஆய்வு நடப்பதற்கு முன்னர் களைவதற்கான நடவடிக்கைகள் யாவும், இத்துறையில் எடுக்கப்படுகின்றன என்பதனைத் தங்களுக்கு அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்."

30. நெடுஞ்சாலைத்துறை

10.12.99 அன்று இத்துறை ஆய்வு செய்யப்பட்டது. வருகைப் பதிவேட்டில் 61 பேர்களில் 4 பேர் மட்டுமே தமிழில் கையொப்பமிடுகின்றனர்.

பற்றொப்பப் பதிவேட்டில் 77 பேர்களில் 10 பேர்தான் தமிழில் ஒப்பமிடுகின்றனர்.

1.1.99 முதல் 30.11.99 வரையிலான 11 மாதங்களில் வெளியான அரசாணைகள் தமிழில் 210 அதே நேரத்தில் 645 ஆணைகள் ஆங்கிலத்தில்,

தமிழில் 240 கடிதங்கள் என்றால் ஆங்கிலத்தில் 660, 65% தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் இருக்கவேண்டும் என்பதை எத்தனையோ துறைகளைப் போல் இத்துறையும் பின்பற்றவில்லை.

அதனால்தான் தமிழில் 10,000 பக்கங்கள் தட்டச்சுச் செய்திருந்தால் ஆங்கிலத்தில் 19,700 பக்கங்கள்.

ஆய்வுக்குறிப்புகளைத் தொகுத்து அமைச்சர் தா. கிருட்டிணனுக்கும் செயலர் அபுல் ஹசனுக்கும் 20.12.99 அன்று நேர்முக மடல்கள் அளிக்கப்பட்டன. அவர்களிடமிருந்து எந்த விடையும் வரவில்லை.

31. கூட்டுறவு, உணவு (ம) நுகர்வோர் பாதுகாப்புத்துறை

3.12.99 அன்று இத்துறையில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

ஆய்வறிக்கை

1. கையொப்பங்கள் (வருகைப்பதிவேடு)

| | | |
|---|---|---|
| 114 பேர்களில் 25 பேர் தமிழில் 89 பேர் ஆங்கிலத்தில் | : | ஒப்பமிடுகின்றனர் |
| பற்றொப்பப்பதிவேடு 139 பேர்களில் 10 பேர் தமிழிலும் 129 பேர் ஆங்கிலத்திலும் | : | ஒப்பமிடுகின்றனர் |
| அனுமதி, தகவலின்மை, பெயர்களின் தலைப் பெழுத்துக்கள், இல்லப்பணி, விடுப்பு ஆகியவை | : | தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன |
| தற்செயல்விடுப்பு விண்ணப்பங்கள் அவற்றின் மீதான ஆணைகள், குறிப்புகள் | : | தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன |

2. அரசாணைகள் (1.1.99 முதல் 31.11.99 வரை)

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. அரசாணை (வாலாயம்) | 164 | 403 | 567 |
| 2. நிலையாணை | 64 | 106 | 170 |
| 3. பத்தாண்டு | 107 | 197 | 304 |
| 4. இருபதாண்டு | 14 | 90 | 104 |
| 5. முப்பதாண்டு | 1 | 8 | 9 |
| 6. நாற்பதாண்டு | - | 4 | 4 |
| மொத்தம் | 350 | 808 | 1158 |

தமிழில் - 350, ஆங்கிலத்தில் - 808

3. பதிவேடுகள் :

திருமண முன்பணம், கல்வி முன்பணம்,
கைத்தறி, மருத்துவச் செலவினம், வழங்கப்படா
பதிவேடு, பணக்கணக்கு பதிவேடு,

| | | |
|---|---|---|
| துணைக் கணக்கு பதிவேடு, வீடுகட்டும் முன்பணப் பதிவேடு, பொது வருங்கால வைப்பு நிதிப் பதிவேடு, தொலைபேசிப் பதிவேடு, சில்லரைச் செலவினப் பதிவேடு, பயணச் செலவினம், ஊர்திப் பதிவேடு, நில எண்ணெய்ப் பதிவேடு, காசோலைப் பதிவேடு, வங்கிப் பதிவேடு போன்றவை | : | ஆங்கிலத்தில் பேணப்படுகின்றன |
| தன்பதிவேடு / அனுப்புகைப் பதிவேடு | : | தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன |

4. பணிப்பதிவேடுகள் :

| | | |
|---|---|---|
| நியமனம் மாறுதல், விடுப்பு ஒப்புவிப்பு, பணி சரிபார்த்தல், ஊதிய மறுநிர்ணயம், நீண்ட கால கடன்கள் (வீடு கட்டும் முன்பணம், ஊர்திக் கடன்) போன்றவை | : | பதிவுகள் ஆங்கிலத்தில் உள்ளன |

5. கடிதப் போக்குவரத்து :

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| அ. பொதுமக்களுக்கும் அரசுச் சார்பற்ற நிறுவனங்களுக்கும் எழுதப்பட்டவை | 10114 | 6102 | 16216 |
| ஆ. துறைத்தலைமை அலுவலர்களுக்கு | 4137 | 3209 | 7346 |
| இ. சார்நிலை / சமநிலை அலுவலர்களுக்கு | 12731 | 10214 | 22945 |
| ஈ. அரசின் மற்ற அலுவலகங்களுக்கு | 20113 | 13034 | 33147 |
| கூடுதல் | 47095 | 32559 | 79654 |

தமிழில் - 47095

ஆங்கிலத்தில் - 32559

6. வரப்பெற்ற கடிதங்கள் :

| | தமிழ் | ஆங்கிலம் | மொத்தம் |
|---|---|---|---|
| அ. அலுவலகப் பணியாளர் சார்நிலை அலுவலகம் ஆகியோர்களிடமிருந்து வரப்பெற்றவை | 69024 | 50066 | 119090 |

7. தட்டச்சுப்பணி :

அ. தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கை - 17

ஆ. ஆங்கிலத் தட்டச்சுகளின் எண்ணிக்கை - 8

இ. மின்னணு தட்டச்சு - 2

8. கடந்த ஆறு திங்களில் தட்டச்சு செய்யப்பட்ட எண்ணிக்கை

| | | |
|---|---|---|
| தமிழில் | - | 67213 |
| ஆங்கிலத்தில் | - | 38314 |
| கூடுதல் | - | 105527 |

அலுவலகத்தின் பெயர்ப்பலகைகள்
இருக்கைகளின் பெயர்கள் : தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ளன

இவை தொடர்பாக 8.12.99 அன்று அமைச்சர் நேருவுக்கும் செயலர் திரிபாதிக்கும் நேர்முக மடல்கள் அளிக்கப்பட்டன.

நடவடிக்கைகள் குறித்த மடல்கள் எவையும் விடையாக வரவில்லை.

## 32. கால்நடை பராமரிப்பு, மீன்வளம் (ம)பால்வளத்துறை

26.7.99 அன்று இத்துறை ஆய்வு செய்யப்பட்டது. மூன்றுக்கும் வெவ்வேறு அமைச்சர்கள் இருந்தாலும் செயலர் ஒருவரே.

துறையின் தமிழ்ப்பயன்பாடு என்று சொன்னால் 50% மட்டுமே இது எவ்வளவு பெரிய பின்னடைவு என்று சொல்ல வேண்டியதில்லை.

ஆய்வறிக்கை கையொப்பங்கள்

வருகைப் பதிவேட்டிலும், பிற பட்டியல்களிலும் பணியாளர்கள் சிலர் ஆங்கிலத்தில் ஒப்பமிடுகின்றனர். அரசாணைப்படி அரசுப்பணியாளர் அனைவரும் தமிழில் மட்டுமே ஒப்பமிட வேண்டும். இதைக் கருத்தில் கொண்டு இக்குறையினை உடனே களைந்திட வேண்டும்.

கடிதப்போக்குவரத்து

கடந்த ஆறு திங்களில் அனுப்பப்பட்ட 47764 கடிதங்களில் 24347 கடிதங்கள் ஆங்கிலத்தில் உள்ளன. 23417 கடிதங்கள் தமிழில் உள்ளன. கடிதப்போக்குவரத்தில் அதிகமாக ஆங்கிலப் பயன்பாடு உள்ளது. இந்நிலை ஆட்சிமொழித் திட்ட மேம்பாட்டிற்குத் துணைபுரியாது. செயலகத் துறையிலிருந்து செல்லும் கடிதங்கள் அனைத்தும் தமிழில் இருந்தால் தான் துறைத்தலைமை,

சார்நிலை அலுவலகங்களில் இக்கடிதங்களின் தொடர்ச்சியான நடவடிக்கைகள் தமிழில் அமைய வாய்ப்பு ஏற்படும். இதைக்கருத்தில் கொண்டு இனி, கடிதப்போக்குவரத்தில் தமிழ்ப் பயன்பாட்டை மிகுதியாக்கும் நடவடிக்கைகளை விரைவு படுத்த வேண்டும். போதிய அளவிற்குத் தமிழ்த் தட்டச்சு இருந்தும் ஆங்கிலத்தில கடிதப்போக்குவரத்து அதிகமாக உள்ளது வருந்துதற்குரியது.

அலுவலகப் பணியாளர்கள், சார்நிலை அலுவலர்களிடமிருந்து வரப்பெற்ற 10363 கடிதங்களில் 3127 ஆங்கிலத்தில் உள்ளன. இந்நிலையும் ஆட்சிமொழித் திட்டத்திற்கு ஏற்புடையதாக இல்லை. அலுவலகப் பணியாளர்களும், சார்நிலை அலுவலகங்களும் செயலகத்துறையுடன் தமிழில் மட்டுமே கடிதத் தொடர்பு கொள்ளவேண்டுமென்பதை வலியுறுத்தி இத்துறை சுற்றறிக்கை வாயிலாக அறிவுறுத்தவேண்டும்.

அரசாணைகள்

இத்துறையில் கடந்த ஆறுதிங்கள்களில் வெளியிடப்பட்ட அரசாணைகளின் எண்ணிக்கை 250 இவற்றில் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டவை 160 தமிழில் 90. இந்நிலை ஆட்சிமொழிச் செயலாக்கத்தைப் பெரிதும் பின்னடையச் செய்வதாகும். விதிவிலக்கு இனங்கள் நீங்கலாக பிற அரசாணைகள் அனைத்தையும் தமிழிலேயே வெளியிட வேண்டும். தலைமைச் செயலகத்துறையின் அரசாணைகளே துறைத்தலைமை, சார்நிலை அலுவலகங்களின் பணிகளுக்கு முதன்மை ஆதாரமாக விளங்குவனவாகும். இவை ஆங்கிலத்தில் இருக்குமாயின் இவற்றின் அடிப்படையில் பணியாற்ற வேண்டிய அலுவலகங்களின் செயற்பாடுகளும் ஆங்கிலத்தில் அமைந்துவிடும் என்பதைக் கருத்தில் கொள்ளவேண்டும். செயலகத்துறை அலுவல்களிலும் ஆட்சிமொழித்திட்டச் செயற்பாட்டை உறுதிப்படுத்தமுடியும். இனி வெளியிடப்படும் அரசாணைகள் அனைத்தும் தமிழில் அமையத்தக்க நடவடிக்கையை விரைவாக மேற்கொள்ள வேண்டும். மாவட்ட ஆட்சியர் அலுவலகம் துறைத்தலைமை அலுவலகங்கள், சார்நிலை அலுவலகங்களின் ஆய்வின்போது தலைமைச் செயலகத்திலிருந்து ஆணைகள் ஆங்கிலத்தில் வருவதால்தான் தமிழை முழுமையாக ஆட்சிமொழியாகப் பயன்படுத்த முடிவதில்லை என்று கூறப்பட்டுவருகிற குற்றச்சாட்டை இத்துறை ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ள அரசாணைகளின் எண்ணிக்கை உறுதிப்படுத்துகிறது. இப்போக்கு தவிர்க்கப்பட்டாக வேண்டும்.

பதிவேடுகள்

இத்துறையில் உள்ள 748 பதிவேடுகளில் 476 தமிழிலும், 238 தமிழ் ஆங்கிலம் கலந்தும், 34 ஆங்கிலத்திலும் எழுதப்படுகின்றன. ஆட்சி மொழித் திட்டத்தில் பதிவேடுகளுக்கு விதிவிலக்கு ஏதும் இல்லை. இத்துறையில் குறிப்பாக, சிறப்புக்கடிதங்கள் / நேர்முகக் கடிதங்கள்; தற்செயல் விடுப்புகள்; கூட்ட நடவடிக்கைகள்; பட்டிகள்; ஒருங்கிணைந்த காலமுறை அறிக்கைகள் ஆகியவை தொடர்பான வாலாயமான பதிவேடுகள் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன. இந்நிலை

விரும்பத்தக்க தல்ல. இனி இத்துறையின் பதிவேடுகள் அனைத்தும் தமிழில் மட்டுமே எழுதப்படவேண்டும்.

தட்டச்சுப் பொறிகள்

தட்டச்சர்கள்- 17. தமிழ்ப் பொறிகள் - 17; ஆங்கிலப் பொறிகள் - 6. தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் போதிய அளவில் உள்ளன. கடிதப்போக்குவரத்துக்கு அவற்றின் பயன்பாடு குறைவாகவே உள்ளது. தமிழ்த் தட்டச்சுகளின் எண்ணிக்கை அளவிற்கு தமிழ்க் கடிதங்கள் அதிகமாயிருக்கவேண்டும்; ஆங்கிலக் கடிதங்கள் குறைந்திருக்க வேண்டும். இத்தகைய நிலையைக் கடிதப்போக்குவரத்தில் காண முடியவில்லை. இதைக்கருத்தில் கொண்டு விதிவிலக்கு இனங்கள் நீங்கலாக பிற அனைத்துக் கடிதங்களையும் தமிழில் தட்டச்சிட்டால்தான் தமிழ்த்தட்டச்சுப் பொறிகளின் பயன்பாட்டை உறுதி செய்ய முடியும்.

காலமுறை அறிக்கைகள்

தமிழில் இருக்கவேண்டிய 5 காலமுறை அறிக்கைகளில் 3 மட்டுமே தமிழில் உள்ளன. இனி, அனைத்துக் காலமுறை அறிக்கைகளையும் தமிழில் தயாரிக்க வேண்டும்.

கலந்துரையாடல்

ஆட்சிமொழித்திட்ட ஆய்வு குறித்த கலந்துரையாடலின்போது (26.7.99) கால்நடைப்பராமரிப்பு மற்றும் மீனளத்துறைச் செயலாளரும், அத்துறையின் பற்றாளரும், அலுவலர்களும், பணியாளர்களும் உடன் இருந்தனர்.

கலந்துரையாடலின்போது தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறைச் செயலாளர் அவர்கள் "தமிழில் எழுதுவதற்கு தயக்கம் காட்டக்கூடாது. அரசாணைகளையும் படிவங்களையும் மொழி பெயர்ப்புத்துறையின் உதவியுடன் தமிழில் ஆக்கிக்கொள்ள வேண்டும்: மொழிபெயர்ப்புத்துறை அவசர மொழிபெயர்ப்புக்களை உடனுக்குடன், 20 மணித்துளிக்குள் மொழிபெயர்த்துத்தர நடவடிக்கை மேற்கொள்ளும். பற்றாளர் திங்கள்தோறும் துறையில் கூட்டம் நடத்தி அவ்வப்போது ஆட்சிமொழித் திட்ட முன்னேற்றத்தை ஊக்குவிக்க வேண்டும்; செந்தமிழ் - இலக்கணத் தமிழ் எழுதவேண்டும் எனக் கருதாமல் இயல்பாக அறிந்த தமிழில் எழுதினாலும் போதுமானது; பிற மாநிலத்திற்குரிய கடிதங்கள் குறைவாகவே இருக்கும். எனவே அவற்றைத்தவிர்த்து மற்ற கடிதங்கள் அனைத்தையும் தமிழில் அனுப்பவேண்டும். ஊராட்சிகள், ஊராட்சி ஒன்றியங்களில் உள்ளவர்களுக்கு ஆங்கிலம் புரியாது. அவர்கள் மற்றவர்களின் உதவியை நாடும் நிலைதான் உள்ளது; இதைக் கருத்தில் கொண்டு கடிதங்களைத் தமிழில் அனுப்பவேண்டும்; சுற்றோட்டக் குறிப்புகளைப் போலவே பிற குறிப்புகளையும் தமிழில் எழுத வேண்டும். மாண்புமிகு தமிழ் வளர்ச்சி பண்பாடு (மற்றும்) இந்து

சமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் அரசுச் செயலர்கள் அனைவருக்கும் அனுப்பிய நேர்முகக் கடிதத்தை நினைவிற்கொள்ள வேண்டும்; இத்துறையில் உள்ள தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் காட்சிப் பொருள்களாக இருக்கக்கூடாது. இத்துறை வெளியிடும் கடிதங்களும், அரசாணைகளும் அவற்றைப் பெறுபவர் உடனே புரிந்து பயன்பெறும் வகையில் தமிழில் இருக்கவேண்டும். செயலகத்துறையில் செயற்பாடுகள் தமிழில் அமைந்தால்தான் அதைத்தொடர்ந்து துறைத்தலைமை, சார்நிலை அலுவலகங்களின் செயற்பாடுகள் தமிழில் அமையும் என்பதை மறந்துவிடக்கூடாது; வருகைப்பதிவேடு, காசோலை முதலான அனைத்திலுமே தமிழில்தான் கையொப்பங்கள் இடவேண்டும்; இரப்பர் முத்திரைகள், பெயர்ப்பலகைகள் தமிழில் இருக்கவேண்டும். இத்துறையின் பற்றாளர் ஆட்சிமொழிச் செயலாக்கத்தில் தனிக்கவனம் செலுத்தவேண்டும்" எனப் பல்வேறு கருத்துகளை எடுத்துரைத்தார்கள். "இத்துறை 3 திங்கள்களுக்குள் இக்குறைபாடுகளைக் களைந்திட வேண்டும் என்றும் 3 திங்களுக்குப்பிறகு மீண்டும் ஆய்வு செய்யப்படும்" என்றும் தெரிவித்தார்கள்.

முன்னேற்றம் : போதுமான அளவில் இல்லை

காட்டும் ஈடுபாடு : இன்னும் தேவை

(சு. இராமகிருட்டிணன்)
தமிழ் வளர்ச்சிச் செயலாளர்

* * *

இவ்வளவுக்கும் முதல்வர் கலைஞர் ஒரு குறிப்பு எழுதினார்.

"இனிமேல் கோப்புகளைத் தமிழில் அனுப்பலாமே" என்று; இதை அப்படியே படியெடுத்து, தலைமைச் செயலர் ஏ.பி. முத்துசாமி அனைத்துச் செயலாளர்களுக்கும் அனுப்பி வைத்தார். ஆனாலும் என்ன? ஆங்கிலம் முழுமையாகவும் பகுதியாகவும் இடம்பெறும் கோப்புகள் 5482 என்றால் தமிழில் மட்டுமே உள்ளவை 1960 தான்.

இது ஒரு துறையில் மட்டும். பிறதுறைகளில் உள்ள நிலைமைகளைக் கற்பனை செய்து பாருங்கள். இந்தக் கோப்புகளை உருவாக்குபவர்கள் கீழ் நிலை அலுவலர்கள் - குறிப்பாகப் பிரிவு அலுவலர்கள் போன்றவர்கள்.

பெரும்பாலான கோப்புகள் அமைச்சர்கள் ஒப்பத்துடன் நின்றுவிடும். 10% கோப்புகள் தான் முதல்வர் ஒப்பங்களைப் பெறும். அங்கும் தமிழில் அனுப்பலாமே!

வெளிமாநிலம்,மத்திய அரசு போன்றவற்றுக்கு அனுப்பவேண்டிய கோப்புகளின் குறிப்புகள் 10க்குள் தான் இருக்கும்.

தேவைப்படும் போது அவற்றை ஆங்கிலத்தில் அனுப்பத் தடையில்லை. அதற்காக தலைமைச் செயலகத்தோடு முடிந்துவிடும் கோப்புகளை ஏன் ஆங்கிலத்தில் அனுப்பவேண்டும்?

1.1.99 முதல் ஆறுமாதங்களில் பிறப்பிக்கப்பட்ட அரசாணைகள் :

தமிழில் 90 என்றால் ஆங்கிலத்தில் 160.

இந்த ஆய்வுக் குறிப்புகளைச் சுட்டிக் காட்டி 2.8.99, 3.8.99 ஆகிய நாள்களில் அமைச்சர்கள் சுந்தரம், செங்குட்டுவன், ஜெனிபர் சந்திரன் ஆகியோர்க்கும் செயலர் மோகன் வர்கீஸ் சுங்கத்துக்கும் நேர்முக மடல்கள் அளிக்கப்பட்டன.

செயலர் நேரிலேயே உறுதியளித்தார். ஜெனிபர் சந்திரன் உறுதிமொழி மடல் எழுதினார்.

மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி அமைச்சர் அவர்களுக்கு

வணக்கம்.

தங்களின் 2.8.99 நாளிட்ட நேர்முக மடல் கிடைக்கப்பெற்றேன். அதில் எடுத்துச்சொல்லப் பட்டிருந்த குறைகளை அறிந்தேன். அதற்குரிய நடவடிக்கைகளை அக்டோபர் மாத இறுதிக்குள் எடுப்பதற்கு துறை செயலர் அவர்களுக்கு அறிவுறுத்தப்பட்டுள்ளது என்பதை தங்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

(எஸ். ஜெனிபர் சந்திரன்)

26.10.99அன்று திருநெல்வேலியில் ஆட்சிமொழிக் கருத்தரங்கில் பேசும்போது பின்வருமாறு குறிப்பிட்டேன்.

"ஏற்கெனவே தமிழ் என்றால் ஓர் இளக்காரம்; அலுவலர்களிடத்தில் ஒரு மெத்தனப் போக்கு. இந்தப் போக்குகளுக்கு ஒரு முடிவு கட்டியே ஆகவேண்டும். அப்போதுதான் தமிழ் முழுமையான ஆட்சி மொழியாகும்."

கலைஞர் தந்த ஊக்கத்தாலும், ஆட்சிமொழி அமைச்சர் தலைமைச் செயலகத்தில் ஆய்வு செய்து அனைத்துச் செயலர்கள் இடமும் நேரில் பேசியதாலும், பலரும் எடுத்துக்கொண்ட முயற்சியாலும் நிலைமை சீர்திருந்தியது. எடுத்துக்காட்டாக 29% மட்டுமே தமிழ் ஆட்சி செய்த வேளாண்மைத்துறையில் முதல் ஆய்வு முடிந்து இரண்டாவது ஆய்வு தொடங்கியபோது 54% தமிழ் ஆட்சி வந்துவிட்டது.

இந்த நிலை தொடர்ந்து நீடிக்குமானால், அரசுச் செயலர்கள் தக்க கவனம் எடுத்துக் கொள்வார்களானால் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் பெரும் வெற்றி பெற்றுவிடும் என்பதில் ஐயமில்லை.

இதுதொடர்பாக, ஐந்து ஆண்டு காலத்தில் அமைச்சர்களோடும் அரசுச் செயலர்களோடும் எவ்வளவு வலியுறுத்திப் பணி செய்துள்ளோம் என்பதை நாடு உணர்ந்தால் போதும். அதற்காகவே புள்ளி விவரங்கள் தரப்பட்டன. குறைகள் சுட்டிக் காட்டப்பட்டன. உறுதிமொழிகள் பெறப்பட்டன.

இதற்குமேல். . . . . ?

## இயல் - இருபத்தேழு

## முதல்வர் ஆதரவும் அவர் சார்ந்த துறைகளின் போக்கும்

எப்போதும் முதல்வரிடத்தில் மிக முக்கியமான துறைகள் எல்லாம் இருக்கும். சில நேரம் நிதித்துறை மட்டும் வேறு யாராவது ஒருவர் பொறுப்பில் வரும். ஆனால் கலைஞர் அதனையும் சேர்த்தே கவனித்து வந்தார். என் போன்றவர்கட்கு, நிதியமைச்சரிடம் ஒருமுறை பேசி, பின் முதலமைச்சரிடமும் பேசித்தான் ஒப்புதல் பெறவேண்டிய நிலை எழவில்லை. இருவரும் ஒருவரே என்பதால்தான் 9 கோடியில் இருந்து தமிழ் வளர்ச்சித் துறையை 36கோடிக்குக் கொண்டுவர முடிந்தது. அந்த அளவுக்கு அவர் நிதி வழங்கினார் என்பதைச் சொல்லியே ஆகவேண்டும்.

அதேபோலத் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கத்துக்கும் அவரது முழு ஆதரவு இருந்தது என்றாலும், அவ்வப்போது என் வேகத்துக்குச் சிறு தடை விதித்ததும் உண்டு.

அரசு அலுவலர்கட்கு நான் எச்சரிக்கை விடுத்தால் அடுத்த நாள் எனக்கொரு 'கடிந்துரை' இருக்கும். இந்நிலையில் தலைமைச் செயலகத் துறைகளை ஆய்வு செய்த போது, முதல்வர் சார்ந்த துறைகள் அதிக அளவில் ஆங்கிலத்தில் ஆழ்ந்திருந்தன என்பதைக் காண முடிந்தது.

1. உள்துறை 2. தகவல் தொழில் நுட்பத்துறை 3. திட்டம் (ம) வளர்ச்சித்துறை 4. தொழில் துறை 5. நிதித்துறை 6. பணியாளர் (ம) நிர்வாக சீர்திருத்தத் துறை 7. மதுவிலக்கு (ம) ஆயத் தீர்வைத் துறை 8. வணிக வரித்துறை 9. விழிப்புப் பணித்துறை - ஆகியவை முதல்வர் பொறுப்பில் இருந்தன.

முதல் சுற்றில் ஆய்வு செய்தபோது மிகுந்த பின்னடைவு இருந்தாலும் இரண்டாம் சுற்று ஆய்வு நடந்தபோது முன்னேற்றம் ஏற்பட்டிருப்பதைக் கண்டோம். அந்தந்தத் துறைகளில் அந்த முன்னேற்றம் காட்டப்பட்டுள்ளது.

நீண்ட காலமாகவே ஆங்கிலத்தில் மூழ்கியிருந்துவிட்டு, திடீரென்று மேலே வந்து தமிழின் பக்கம் நிற்பதில் பலருக்குத் தயக்கம் இருந்தாலும், எங்கள் விடாப்பிடி அவர்களையும் மாற்றியமைத்தது.

எல்லோரும் ஆதரவாகவே செயற்பட்டார்கள். சில முத்திரைகளையும் படைத்தார்கள் என்ற அளவோடு இந்த இயலை முடிக்கிறேன்.

## இயல் - இருபத்தெட்டு

## ஆட்சித் தமிழ் நூலும், தகுதி காண் பருவமும்

ஆட்சிமொழிச் செயலாக்கத்தில் முக்கியமான தடை இ.ஆ.ப., இ.கா.ப. அலுவலர்கள் பலர் பிற மாநிலத்தைச் சேர்ந்தவர்களாகவும், தமிழ் அல்லாத பிற மொழிகளைத் தாய்மொழியாகக் கொண்டவர்களாகவும் இருப்பதுதான்; எனினும், இது ஒரு குறைதானே தவிர; அவர்கள் அப்படித்தான் இருப்பார்கள் என்று எடுத்துக்கொள்ள முடியாது.

குசராத் மாநிலத்தில் குசராத்தியிலும், கர்நாடக மாநிலத்தில் கன்னடத்திலும் எழுதாத - நடவடிக்கைகளை மேற்கொள்ளாத இ.ஆ.ப., இ.கா.ப. அலுவலர்களை அந்த அந்த மாநில மக்கள் விட்டு வைக்கமாட்டார்கள். ஆனால் தமிழ்நாட்டில் அந்தக் கண்டிப்பு இல்லாததாலேயே தமிழ் ஆட்சிமொழித் திட்டம் மேல்மட்ட அளவிலேயே சாகடிக்கப்படுகிறது.

அதற்காக எல்லா இ.ஆ.ப. அலுவலர்களும் அப்படி என்று சொல்லமாட்டேன்.

சி.பி.சிங், சந்தீப் சாக்சேனா , பேடி போன்ற பிற மாநில இ.ஆ.ப. அலுவலர்கள் தாங்கள் தமிழ் நாட்டில் வாழ்கிறோம்; தமிழால் ஆள்கிறோம் என்பதை உணர்ந்து செயற்பட்டு வருபவர்கள். எனவே ஒட்டு மொத்தமாக அவர்களைக் குறை சொல்லமாட்டேன்.

ஆனால் சன்வந்த்ராம், சௌத்ரி போன்ற இ.ஆ.ப. அலுவலர்கள் தமிழைப் பற்றிக் கவலைப்படுவதே இல்லை. இவர்களை என்ன செய்வது என்பதுதான் கேள்வி.

(தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களிலும் சிலர் தமிழைப் புறக்கணித்து இயன்ற வரை ஆங்கிலத்திலேயே ஆட்சி செய்து வருகின்றனர் என்பதையும் கவனத்திற் கொள்ளவேண்டும்)

தமிழ் அறியாத இ.ஆ.ப., இ.கா.ப. அலுவலர்க்கான தமிழ்த் தேர்வுகளைத் தமிழ்நாடு தேர்வாணையம் நடத்துகிறது.

தமிழ்நாட்டுப் பணிக்கு ஒதுக்கப்பட்ட இ.ஆ.ப., இ.கா.ப., இ.வ.ப. (I.F.S.) ஆகியோர் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களாக இருந்தாலும் தங்கள் தேர்வுக்காலத்தில் தமிழை ஒரு பாடமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளாதவர்களாக இருந்தாலும் பட்ட வகுப்பிலோ பள்ளியிறுதி வகுப்பிலோ தமிழில் எந்தவொரு தேர்விலும் வெற்றி பெறாதவர்களும் ஆறாண்டு காலப் பணிக்காலத்தை நிறைவு செய்யாதவர்களும் தங்களுக்கான தமிழ்த் தேர்வை எழுதியாக வேண்டும்.

இது பற்றிய ஒரு விளம்பரம் தரப்பட்டுள்ளது.

TAMILNADU PUBLIC SERVICE COMMISSION

PROFICIENCY TEST IN TAMIL - SEPTEMBER '97

It is hereby noticed that the Proficiency Test in Tamil for I.A.S., I.P.S., and I.F.S., Officers borne on Tamilnadu State Cadre, whose mother tongue is not Tamil and who have not taken Tamil as a subject or passed any Examination in Tamil in the S.S.L.C., and / or Degree course and who will not complete six years of Service on 18th September '97 will be held by the Tamilnadu Public Service Commission at its office on the 18th and 19th September '97. Persons who pass the test will be entitled to a monetary award of Rs.1,000/-. The last date for receipt of applications for the test is 5.45 p.m. on 20.8.97. Persons other than I.A.S., I.P.S., and I.F.S., Officers are not eligible to apply for this Examination. Application forms may be obtained on written requisition from the Controller of Examinations, Tamilnadu Public Service Commission, Government Estate, Anna Salai, Chennai-600 002

இவர்களுக்கெல்லாம் 4 வார காலம் தமிழ்ப் பயிற்சி அளிக்கப்பட்டு வந்தது. தமிழ்ப் பல்கலைக்கழகம் இவர்களுக்குப் பயிற்சி அளிக்கும் பொறுப்பை ஏற்றிருந்தது. காலப்போக்கில் ஒரு வார காலம் தமிழ்த் திட்டப் பயிற்சி அளித்தால் போதும் என்ற அளவுக்கு அது சுருக்கப்பட்டது.

எனவே இ.ஆ.ப. அலுவலர்கள் பத்தாம் வகுப்புத் தரத்திலான ஒரு தேர்வை எழுதி வெற்றி பெற்று விட்டால் போதும். அதன்பின் அவர்களுக்கு எந்தத் தொல்லையும் இல்லை. தகுதிகாண் பருவமும் முடிந்து விடுகிறது. இதேபோல மற்ற அரசு ஊழியர்களும் உள்ளார்கள்.

தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாமல் ஆங்கிலத்தில் தேர்வெழுதி வெற்றி பெற்று அரசுப்பணிக்கு வந்து விடுபவர்கள் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குமுன் பணியாளர் தேர்வாணையம் தமிழில் - பள்ளி இறுதித் தேர்வுத் தரத்தில் நடத்தும் தேர்வுகளில் வெற்றி பெற வேண்டும் எனும் விதி வகுக்கப்பட்டது. இத்தேர்வில் வெற்றி பெற்றால்தான் அவர்கள் தகுதிகாண் பருவத்தை (Probation Period to be declared) நிறைவு செய்ய முடியும். ஒருவேளை தொடர்ந்து இந்தத் தேர்வில் வெற்றிபெற முடியாமல் போனால் அவர்கள் பதவியிலிருந்து நீக்கப்படவேண்டி வரும் என்பவை யெல்லாம் விதி முறைகள் ஆகும்.

67 அரசுக் கல்லூரிகளில் மட்டும் தான் பட்டவகுப்புகளில் தமிழ்ப் பயிற்றுமொழி வகுப்புகள் உள்ளன. அதே நேரத்தில் அந்தக் கல்லூரிகளில் ஆங்கிலப் பயிற்று மொழி வகுப்புகளும் இணையாக உள்ளன.

அரசு உதவி பெறும் (Aided College) 136 கல்லூரிகளிலும் ஒருசில கல்லூரிகளில் ஒரு சில பாடங்கள் தவிரப் பிற எல்லா நிலைகளிலும் ஆங்கிலப் பயிற்றுமொழி வகுப்புகளே உள்ளன.

மேலும் தற்போது உரிமை பெற்று இயங்கிவரும் 140க்கும் மேற்பட்ட சுயநிதிக் கல்லூரிகளிலும் (Self Finance Colleges) ஆங்கிலம் மட்டுமே பயிற்றுமொழியாக உள்ளது.

இவர்கள் ஆங்கிலத்தில் பயின்று விட்டுத் தேர்வாணையத்தின் வாயிலாக அரசுப் பணியாளர்களாக வருபவர்கள். தமிழில் என்ன எழுதுவார்கள்? எப்படி எழுதுவார்கள்? ஆங்கிலத்தில் எழுதிவிட்டுத் தப்பிக்கத்தானே முயல்வார்கள்?

பணியின் தொடக்க காலத்தில் அவர்கள் தொட்ட ஆங்கிலம் பிற்காலத்தில் அவர்கள் பதவி உயர்வு பெற்ற பிறகு யாரும் கேட்பாரற்ற முறையில் முழுமையாக ஒட்டிக் கொள்கிறது!

எனவே அரசு அலுவலர்கள் தமிழில் தேர்ச்சிபெற வேண்டும் எனும் விதி இருப்பதை நான் உணர்ந்திருந்தேன். ஆனால் தேர்ச்சி பெறுவதற்கான பாடப்பகுதியோ, கேட்கப்படும் விடையோ இத்தகையவர்கள் 'தகுதிகாண் பருவத்தை'த் தாண்டச் செய்யும் அளவில் மிகமிக எளிமையாக இருந்தனவே தவிர, தொடர்ந்து வரைவுகளை, குறிப்புகளைத் தமிழில் எழுத வேண்டும் என்று தூண்டச் செய்பவையாக இல்லை.

இதனை உணர்ந்திருந்த நான் இத்தேர்விலும், பாடத்திட்டத்திலும் தக்க மாறுதல்களைக் கொண்டுவர வேண்டும் என்று கருதினேன்.

இதற்காகவே 'ஆட்சித் தமிழ்' எனும் நூலை உருவாக்கினோம்.

எங்கள் காலத்தில் செய்யப்பட்ட பணிகளில் 'ஆட்சித் தமிழ்' நூல் அரும் பெரும் பணியாகும் என்றே கருதுகிறேன். ஐந்து உதவி இயக்குநர்கள் அரும்பாடுபட்டு இதற்கான கட்டுரைகளை எழுதினார்கள். கூ.வ. எழிலரசு, இரா. உமாமகேசுவரி, வை. கண்ணபுரக் கண்ணன், து.சு. வேங்கடராமன், மு. மாரியப்பன் ஆகிய ஐவருக்கும் என் பாராட்டுகள்! ஒருங்கிணைத்த இயக்குநர் நாகராசனுக்கும் வாழ்த்துகள்!

நூலை முழுமையாகப் படித்து, கலைஞர் ஓர் அணிந்துரை வழங்கினார்; நானும் ஓர் அணிந்துரை வழங்கினேன். அதைவிட முக்கியம், சிங்கப்பூரில் தமிழ் எந்த அளவுக்கு ஆட்சிமொழியாகப் பயன்படுத்தப்படுகிறது எனும் விவரங்களை நூலில் இணைத்தேன். நான் சிங்கப்பூர் சென்றிருந்தபோது அதற்கான அரசாணைகளை வாங்கிக் கொண்டு வந்தேன். நாம் 27.12.56 இல் தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தைக் கொண்டு வந்தோம். ஆனால் சிங்கப்பூரில் 9.2.56 அன்றே தமிழ் 'ஆட்சிமொழி' எனும் சட்டபூர்வமான ஏற்பினைப் பெற்றுவிட்டது.

மேலும் 7.10.56 அன்று குளித்தலையில் நடைபெற்ற தமிழ் ஆட்சிமொழி மாநாட்டு

அழைப்பிதழ் கிடைக்கப்பெற்றோம் (நன்றி : பொற்செல்வி இளமுருகுக்கு) அந்த அழைப்பிதழை இந்த நூலில் இடம்பெறச் செய்தோம். 7.10.56 ஆட்சிமொழி மாநாடு. 1.11.56 தமிழ்நாடு தனிமாநிலம் 27.12.56 தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் என்ற வரலாற்று உண்மைகளை இணைத்து வழங்கியதுடன் ஒவ்வோர் ஆட்சிமொழிக் கருத்தரங்கிலும் இவை போன்ற கருத்துகள் வலியுறுத்தப்பட்டன. தமிழ் வளர்ச்சி மன்ற உறுப்பினர் கட்கு 'ஆட்சித் தமிழ்' நூல் அன்பளிப்பாக வழங்கப்பட்டது.

உரூ.1,61,781 செலவில் 5000 படிகள் அச்சிடப்பட்டன. 322 பக்கங்களைக் கொண்ட நூல் உரூ.37/-க்கு விற்கப்படுகிறது. அதுவும் 10% கழிவுடன்.

11.3.99 ஆம் நாளன்று 'ஆட்சித் தமிழ்' நூலுக்கு நான் அளித்த அணிந்துரையிலேயே போதுமான விளக்கங்கள் உள்ளன. அதனை அப்படியே தருகிறேன்.

"இன்று தலைமைச் செயலகத்தில் தொலைபேசிக் குறிப்பேட்டைத் தமிழில் வெளிக்கொணரும் அளவுக்கு நிலைமைகள் முன்னேறியுள்ளன. அரசாணைகள், வரைவுகள், மடல்கள் தமிழில் வெளிவர வேண்டுமென்பதில் அரசு விழிப்பாகவே உள்ளது.

அலுவலகத்தில் பணியாற்றும் பலருக்கு அரசாணைகள் பல மேற்போக்காகவே தெரியும். எனவே, இன்னதற்கு இது என்று திட்டவட்டமாகக் கூறும் அருமையயான தொகுப்பு நூலாக இது அமைந்துள்ளது.

அன்றைய சட்டமன்ற நிகழ்ச்சிகளில் தமிழ் ஆட்சிமொழியாக வேண்டும் என்று முழு மூச்சாக உழைத்தவர், உரையாற்றியவர், போராடியவர் என்ற முறையில் அ. கசபதி நாயக்கரின் தொண்டினை மறக்க முடியாது.

"அந்த அளவுக்கு நம் மனம் மாற வேண்டும்; அதற்கான முயற்சிகள் செய்யவேண்டும். அதிகாரத்தில் இருக்கிறவர்கள் உறுதியாகச் செய்யமுடியும்" என்று முழங்கியவர் கசபதி நாயக்கர்.

இந்த நூல் வெளியீடு பற்றி நானே பல இடங்களில் பேசியிருக்கிறேன். 15.12.97 ஆம் நாளிட்ட 'தினமணி'இதழில் வந்த செய்தி :

"விரைவில் தமிழ் ஆட்சிமொழிப் பணி குறித்த நூல்' சென்னை, டிச.14 -

தமிழ் ஆட்சி மொழி மற்றும் பண்பாட்டுத்துறை மேற்கொண்ட தமிழ் வளர்ச்சிப் பணிகள் குறித்த நூல் விரைவில் வெளியிடப்படும் என்று ஆட்சி மொழித் துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் தெரிவித்தார்.

சென்னையில் ஞாயிற்றுக்கிழமை நடைபெற்ற பேராசிரியர் சி.எஸ்.எஸ். சோமசுந்தரம்

எழுதிய 'தமிழினைத் தமிழன் போற்றின்' என்ற நூலை வெளியிட்டு அவர் பேசியதாவது :

தமிழ் ஆட்சி மொழித் துறை மற்றும் பண்பாட்டுத் துறைக்கு 77 துறை சார்ந்த பணிகள் உள்ளன. இவற்றை நூல் வடிவில் இம் மாத இறுதிக்குள் வெளியிடுவோம்.

வெளிநாட்டுத் தமிழர்கள் மொழி, இன உணர்ச்சியுடன உள்ளனர். அவர்களிடமிருந்து தமிழ் உணர்ச்சியை இறக்குமதி செய்யும் நிலையில் நாம் இருக்கிறோம் என்றார்."

கோவையில் 'அகவி' (Pager) வெளியீட்டு விழாவில் பேசும் போதும் 'ஆட்சித் தமிழ்'பற்றிப் பேசியுள்ளேன். 10.8.1998 ஆம் நாளைய 'தினமலரி'ல் செய்தி உள்ளது.

தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை - 'ஆட்சித் தமிழ்' நூலைக் கற்றாலே பதவி நிலைக்கும்

தமிழக அரசு வெளியிட உள்ள ஆட்சித்தமிழ் என்ற நூலைக் கற்றுத் தேர்ச்சி பெறும் அரசு ஊழியர்கள் மட்டுமே தொடர்ந்து பணியில் இருக்க முடியும் என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரித்துள்ளார்.

கோவை உஷா மார்டின் டெலிகாம் நிறுவனத்தின் தமிழ் பேஜர் அறிமுக விழா நேற்று முன்தினம் நடந்தது. இதில் தமிழக அறநிலையத்துறை மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் கலந்து கொண்டு பேசியதாவது :-

பேஜர் என்பதற்கு தமிழில் 'அகவி' என்று கூறவேண்டும். இந்த கருவி எழுப்பும் ஓசை மெல்லியதாக மயில் அகவும் ஓசை போல் உள்ளதால் இதற்கு 'அகவி' என்று பெயரிட்டுள்ளோம்.

மாறாக 'பேஜ்' என்றால் 'பக்கம்' என்றும், 'பேஜர்' என்றால் 'பக்கி' என்று பொருள் கொள்ளக்கூடாது. புதிய ஆங்கிலச் சொற்கள் தமிழகத்தில் நுழையும்போதே அதற்கு முறையான தமிழ்ச் சொற்களையும் நாங்கள் அறிமுகப்படுத்துகிறோம். புதிய சொற்களை உருவாக்குவதை விட்டு, ஆங்கிலச் சொற்களை அப்படியே ஏற்றுக்கொள்வது தான் ஆக்கம் தரும் என்று சிலர் கூறுவது 'அடிமை மோகத்தை'த் தான் காட்டுகிறது.

தமிழக அரசு 'ஆட்சித்தமிழ்' என்ற நூலை வெளியிட உள்ளது. இந்த நூலைக் கற்றுத் தேர்ச்சி பெறும் அரசு ஊழியர்கள் மட்டுமே தொடர்ந்து அரசுப் பணியில் இருக்க முடியும். இது தொடர்பாக, தமிழக அரசுப் பணியாளர் தேர்வாணையத்துடன் பேசியாகிவிட்டது."

இதற்கிடையில் மயிலாடுதுறை அரசு மகளிர் கல்லூரி 'ஆட்சித் தமிழ்'என்பதையே ஒரு பாடமாக வைத்துள்ளது என்பதை அறிந்து மகிழ்ந்தோம்.

அடுத்து, மிக இன்றியமையாத செய்தி ஒன்று - சென்னை மாநகராட்சியில் தமிழ்த்

தேர்வில் வெற்றி பெறாத ஒருவர் பதவியிறக்கம் செய்யப்பட்டார். 7.11.2000 அன்று அந்த ஆணை பிறப்பிக்கப்பட்டது. அந்த வாசகம் இதுதான் :

"திரு. ஆர்.என். வெங்கட்டராவ், இளநிலை உதவியாளர், மத்திய கணக்குக் குழுமம் என்பவர் செயல்முறை ஆணையில் விதிக்கப்பட்ட நிபந்தனையின்படி தமிழ்மொழித் தேர்வில் தேர்ச்சி பெறாத காரணத்தால் இளநிலை உதவியாளர் பதவி உயர்வு பெறுவதற்கு முன்னர் வகித்த பதவியான துப்புரவுப் பணியாளர் பதவிக்கு பதவியிறக்கம் செய்து ஆணையிடப்படுகிறது.'

எனவே உரிய தமிழ்த் தேர்வில் வெற்றி பெறவில்லை என்றால் பதவி இறக்கம் அல்லது பணிநீக்கம் உண்டு என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

நூலை வெளியிட்டுவிட்டோம்; முறைப்படி செயலுக்குக் கொண்டு வரவேண்டுமே?

ஏற்கெனவே உள்ள பாடம் ஒன்றினை மாற்றிவிட்டு அந்த இடத்தில் 'ஆட்சித்தமிழ்'நூலைப் பாடமாக வைத்து, 200 மதிப்பெண் ஒதுக்கி அதில் 100 மதிப்பெண்கள் பெற்றுத் தேறவேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டது. இது தொடர்பாக விதித்திருத்தம் செய்யுமாறு பணியாளர் சீர்திருத்தத் துறைக்குத் தெரிவிக்கப்பட்டது. அதன் பின் எல்லா ஏற்பாடுகளும் முடிந்து, முதல்வரின் ஆணையைப் பெற்றுச் செயற்படுத்தலாம் என்பதை எங்கள் துறைச் செயலரிடம் பேசி, முறைப்படி கோப்பினை அணியம் செய்து முதல்வர்க்கு அனுப்பினோம். இது முக்கியமான மாறுதல் என்பதாலும், 12 இலட்சத்துக்கு மேற்பட்ட அரசு ஊழியர்களோடு தொடர்புடையது என்பதாலும் 'இதனை அமைச்சரவைக் கூட்டத்தில் 'வைக்கலாம்' என்று முதல்வர் குறிப்பெழுதினார்.

அதன்படி அமைச்சரவைக் கூட்டத்திலும் வைக்கப்பட்டது. இதனைப் 'பின்னர் பார்க்கலாம்' என்று முதல்வர் கூறிவிட்ட காரணத்தால் முடிவெடுக்க முடியாமல் 'ஆட்சித்தமிழ்'நின்றுவிட்டது; நின்று கொண்டிருக்கிறது. முதல்வர் நினைத்திருந்தால் ஒரு நொடியில் முடிந்திருக்கும். அவரோ அடுத்த தேர்தலை மனத்திற் கொண்டும், அரசு ஊழியர்கள் என்ன நினைப்பார்களோ என்று கருதியும் நிறுத்திவிட்டார். தமிழின் பெயரைச் சொல்லி வந்த ஆட்சி, தமிழுக்குப் பெருமை சேர்க்கும் ஒரு முடிவை எடுப்பதில் இவ்வளவு தயக்கமா!

அரசு ஊழியர்களை மயிலிறகால் தடவிக் கொடுத்தே நீண்டகாலமாகக் கெடுத்துவிட்டோம். ஆனால், இன்றைய தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவி அவர்கள் அரசு ஊழியர்கள் மீது எத்தகைய நடவடிக்கைகளை எடுத்தார் என்பதை நாடறியும். இனிமேலாவது அரசு ஊழியர்கள் தங்கள் கடமைகளைச் செய்வார்களா? அதுவும் தமிழில் செய்வார்களா? தமிழில் மட்டுமே செய்வார்களா?

## இயல் - இருபத்தொன்பது

## ஆட்சிமொழி உரைகள்

நீண்டகாலமாகவே நான் ஒரு பேச்சாளராக இருந்து வருகின்றேன். இலக்கியப் பேச்சாளராகவும், பட்டிமன்ற வழக்காடுபவராகவும், நடுவராகவும், அரசியல் பேச்சாளராகவும் இருந்து வருகின்றேன்.

அதிலும் 1989இல் சட்டப் பேரவைத் தலைவராகவும், 1996இல் அமைச்சராகவும் வந்த பிறகு என் பேச்சுகள் சுருக்கமாகவும் விரிவாகவும் பல இதழ்களில் வந்துள்ளன என்றாலும் எல்லாவற்றையும் அப்படியே தந்துவிடாமல் மிகச் சிலவற்றை மட்டும் இங்குத் தந்துள்ளேன்.

அதிலும் 96 முதல் 2001 வரையிலான காலத்தின் பேச்சுகள் தரப்படுகின்றன. இவற்றைப் படித்தால் என் மனப்போக்கும், செயற்பாடும் உங்களுக்கு விளங்கும். வேறு கட்டுரைகளிலும் என் பேச்சுகள் மேற்கோள்களாகக் காட்டப்பட்டுள்ளன. ஆட்சி மொழிக் கருத்தரங்குகளில் முழுமையான உரைகளே வந்துள்ளன.

இங்குத் தரப்படுபவை இங்கொன்றும் அங்கொன்றுமாக இருந்தாலும் என் போராட்டத்தை உணர்த்த இவை போதும் என்று கருதுகிறேன்.

தமிழ்ச்சான்றோர்கள் பேரவை தொடங்கப்பட்ட காலத்தில் திங்கள் தொடர் கூட்டங்களை நடத்தியது. அதன் தொடக்கவிழாவில் நான் பேசிய பேச்சு இது.

### கொள்கைதனில் வெல்வோம்

அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன்

கி.ஆ.பெ. அவர்களின் கடைசிக்காலங்களில் மிக நெருக்கமாக இருந்தவன். குன்றக்குடி அடிகளாரின் உணர்வுகளைப் புரிந்தவன். தேவநேயப் பாவாணரின் கனவுகளை, எண்ணங்களைத் தெரிந்து பல்வேறு காலகட்டங்களில் பணியாற்றி இருக்கிறேன். இதனையெல்லாம் இனங்கண்டுதான் என்னிடம் பொறுப்பை ஒப்படைத்திருக்கிறார்கள்.

தமிழுக்கென ஏறத்தாழ 300 ஆணைகள் போடப்பட்டுள்ளன. எல்லா அரசுகளும் ஆணை

போட்டுள்ளன.

08.05.1974 இல் பாவாணர் அவர்களின் பொறுப்பில் 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்' தொடங்கப்பட்டு 22 ஆண்டுகளில் இரண்டே தொகுப்புகள்தான் வந்திருக்கின்றன. ஒரு தொகுப்பு வெளிவர 11 ஆண்டுகள். பொறுப்புக்கு வந்தபிறகு நான் கண்டறிந்த உண்மை என்னவென்றால் 14.3.95இல் தொடங்கப்பட்டு மெய்ப்புத் திருத்தும் பணி ஓர் ஆண்டாகக் கிடப்பில் போடப்பட்டுள்ளது. இப்போது நான் திருத்திக் கொண்டிருக்கிறேன். இன்னும் அய்ந்தே ஆண்டுக்குள் அவரின் (பாவாணரின்) முழுக்கனவையும் நிறைவேற்றி விடுவேன்.

ஆக்கித்தருவதற்கும் சொற்களை உருவாக்கித் தரவும் அறிஞர்கள் இருக்கிறார்கள். படைத்துத் தரவும், அறிமுகப்படுத்தவும் இதழ்கள் இருக்கின்றன. ஆனால் நீங்கள் பயன்படுத்துகிறீர்களா? அண்ணாசாலை என்று பெயர் வைத்து நீண்ட நாள் ஆகிவிட்டது. இன்றைக்கும் மவுண்ட்ரோடு என்றுதானே சொல்கிறார்கள், எழுதுகிறார்கள். கார்ல் மார்க்ஸ் தெரு என்றிருப்பதை பெர்லினில் எவனாவது மாற்றி எழுத முடியுமா? மாற்றி எழுதும் நெஞ்சுரம் வருமா?

நான் மட்டும் இந்தப் பாழ்பட்ட பாதையைச் சீர்படுத்தி விட முடியுமென்று கனவு காணவில்லை. உங்கள் எல்லோர்க்கும் கடமை இருக்கிறது. இது ஒரு மக்கள் இயக்கமாக மாற வேண்டும்.

மலாய் மொழி. இது தான் சிங்கப்பூர் மண்ணின் முதல்மொழி. லீகுவான்யூவின் பெருந்தன்மையைப் பாராட்ட வேண்டும். 73 விழுக்காடு சீன மக்கள் இருந்தாலும் அவர் வல்லாண்மையுடன் சீன மொழியைத் திணிக்கவில்லை. தேசிய மொழி என்பது மலாய் மொழிதான். நான்கு ஆட்சிமொழிகளில் மலாய் முதல் மொழி, இரண்டாவது சீன மொழி, மூன்றாவது ஆட்சி மொழி தமிழ். 7 விழுக்காடு மட்டுமே வாழ்கின்ற தமிழர்களை அங்கீகரித்துச் சீன மொழிக்கு நிகராகத் தமிழ் மொழியை அங்கீகரித்திருக்கிறார்கள். இதற்கு இடம் கொடுத்தவர் லீகுவான்யூ ஆவார். அதற்குப் போரிட்டவர் உண்டென்றால் அவர் தமிழவேள் சாரங்கபாணிதான்.

இந்தியாவிலிருந்து 13 பேர் கொண்ட குழு அங்கு சென்று எந்த மொழியை அங்குள்ள இந்தியர்களுக்குக் கற்றுத்தருவதென்று ஆய்ந்து சமஸ்கிருதம் கற்றுத்தர வேண்டுமென்று பரிந்துரை செய்தார்கள். ஆனால் சாரங்கபாணி தலைமையில் போராடி, அரசிடம் முறையிட அரசு முறையிகம் (நிபந்தனை) வைத்துத் தமிழைச் சொல்லித்தரவேண்டுமென்றால் ஓரிலக்க வெள்ளியைத் திரட்டி அரசில் வைப்பு நிதியாக வைத்தால் பரிசீலிப்பதாகக் கூறினார்கள். உடனே திரட்டித் தந்தனர். அந்த நிதிக்குப் பெயர் 'தமிழ் உயிர்க் காப்புநிதி'. அந்த நிதியால் தான் தமிழ் இன்று அங்கு ஆட்சி மொழியாக இருக்கிறது.

இங்கிருந்து சிலோபாக் என்ற பாதிரியார் இங்கிலாந்து போகிறார். ஓய்வு பெற்ற அவருக்கு இலத்தீன் மொழியில் பாராட்டுப் படித்தார்கள். "நான் ஆங்கிலம் படித்தவன், ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கொண்டவன். என்னை ஏன் ஆங்கிலத்தில் பாராட்டவில்லை" என்று கேட்டார் பாதிரியார். "உலகில் மிகச் சிறந்த சேவை செய்த உங்களை மிகத் தொன்மை வாய்ந்த இலத்தீன் மொழியில் பாராட்ட வேண்டுமென்பதற்காகவே அப்படிச் செய்தோம்" என்றனர். "அப்படியானால் நான் தமிழில் நன்றி கூறுகிறேன்" என்று பதிலளித்தார் சிலோபாக். "எனக்குத் தெரிந்தவரை உலகத்தில் சிறந்த மொழியும், இறக்காத மொழியும் தமிழ் மட்டுமே" என்றார் அவர்.

இறுதியாக என் கவிதையுடன் முடிக்கின்றேன்.

இன்றேனும் கலையட்டும் தூக்கம், நாட்டில்

இனியேனும் பெருகட்டும் ஆக்கம்; வாழ்வில்

ஒன்றேனும் நல்லதையே செய்வோம் - தாயாம்

ஒண்டமிழ்க்குப் பகைவர் தலை கொய்வோம் - அன்னை

என்றேனும் அரியணையில் ஏறும் - காட்சி

எப்படியும் வந்தே தான் தீரும் - நாமே

நன்றாய்ந்து தீதகற்றிச் செல்வோம் - எந்த

நாள் வரினும் கொள்கை தனில் வெல்வோம்; வாழ்க!

*20.02.1997இல் இராமலிங்கர் பணிமன்றமும் அண்ணாமலை அரசர் அறக்கட்டளையும் இணைந்து நடத்திய விழாவில் உரை ஆற்றினேன். 21.2.97 தினமலர் இதழில் அந்தப் பேச்சு வந்துள்ளது.

தமிழ் மொழிக்கு இது பொற்காலம் : தமிழ்க்குடிமகன்

"இந்தக் காலகட்டம் தான் தமிழ் மொழிக்குப் பொற்காலமாக அமையும்" என்று தமிழ் ஆட்சிமொழி மற்றும் பண்பாட்டுத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் கூறினார்.

"தமிழை ஆட்சிமொழியாக்கவில்லை என்றால் எனது அமைச்சர் பதவிக்குப் பொருள் இருக்காது" என்றும் அமைச்சர் தமிழ்க்குடிமகன் தெரிவித்தார்.

அமைச்சர் தமிழ்க்குடிமகன் விழாவுக்குத் தலைமை வகித்துப் பேசியதாவது:

எனக்குப் பாடத் தெரியாவிட்டாலும் பாடுகின்ற இசையைப் புரிந்து கொண்டு மகிழும்

நெஞ்சு இருக்கிறது. இங்கே விருது பெறும் பிரமீளா 1982ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் வவுனியாவில் நடந்த நிகழ்ச்சியில் இசைத்துறையின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். நானும் இயல்துறை சார்பாகக் கலந்து கொண்டேன். பிரமீளா இசைத்துறையில் பிரமிக்கவைத்தவர். இரத்னசபாபதி தத்துவத் துறையில் வல்லவர்; மனிதனுக்கு நிறைவு தருவது தத்துவங்கள்தாம்.

இங்கே பொள்ளாச்சி மகாலிங்கம் பேசும்போது பல கருத்துகளைத் தெரிவித்தார். நீங்கள் ஒரு குழுவாகச் சென்று முதல்வரைச் சந்தித்து இந்தக் கருத்துகளைத் தெரிவிக்கவேண்டும்.

1968ஆம் ஆண்டு அண்ணா இருமொழிச் சட்டத்தைக் கொண்டு வந்தார். வருகிற 5 ஆண்டுகளில் தமிழ் ஆட்சிமொழியாக - பயிற்று மொழியாகச் செயல்படுத்த வேண்டும் என்றார். இப்போது தமிழ்மொழியை ஆட்சி மொழியாக்கக் கடும் முயற்சி செய்து கொண்டிருக்கிறோம். எல்லாத் துறைகளிலும் தமிழ்த் தட்டச்சுகள் அறிமுகப்படுத்தியுள்ளோம். இதை சில ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் விரும்பி ஏற்றுக்கொண்டனர். சிலர் வேறு வழியில்லாமல் ஏற்றுக்கொண்டனர். இதனைச் செயல்படுத்தியே ஆக வேண்டும். இன்னும் ஆங்கிலத்தில் உத்தரவு இடுவது என்பது ஆட்சிமொழியைக் கேவலப்படுத்துவது போலாகும்.

தமிழை ஆட்சிமொழியாக்க எல்லோரும் முனைந்தோம். ஆனால் வெற்றி பெறவில்லை. இப்போது முழுமையாக வெற்றி பெற முடியும். கண்டிப்பாகச் செயல்படுத்துவோம். அவ்வாறு செயல்படுத்தவில்லை என்றால் இந்த அமைச்சர் பதவிக்குப் பொருள் இருக்காது.

''தமிழிலும் அர்ச்சனை செய்யப்படும்'' என்று இருந்ததை ''தமிழில் அர்ச்சனை செய்யப்படும்'' என்று மாற்றினோம். நீங்கள் யாராவது ஓதுபவர்களைப் பார்த்துத் தமிழில் ஓதுங்கள் என்று சொல்லியிருக்கிறீர்களா? ஏன் திருவாசகம், தேவாரம் பாடக்கூடாது? மக்கள் இயக்கமாக ஆகும் வரை எந்த ஒரு இயக்கத்துக்கும் முழுமையாக வெற்றி கிடைக்காது.

இந்தத் துறையில் ஈடுபாடு இருந்தால்தான் அதனைச் செயல்படுத்த முடியும். இதில் களப்பணியாளர்கள் கிடையாது. பிற துறைகளில் ஊடுருவல் செய்துதான் இந்தப் பணிகளைச் செய்கிறோம். அறிவியல் தொடர்பான நூல்கள் தமிழில் வெளியிட 64 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. இதனைக் கல்வித்துறை செயல்படுத்துகிறது. விளம்பரப் பலகைகள் தமிழில் வைக்க வேண்டும் என்று கூறியுள்ளோம். இதனைத் தொழிலாளர் நலத்துறை கவனிக்கிறது. அடுத்த மாதம் 31ம் தேதிக்குள் விளம்பரப் பலகைகளை தமிழில் வைத்துவிடுவோம் என்று வணிகர்கள் கூறியுள்ளனர்.

எதிர்க்கட்சித்தலைவர்களுக்கு கூடத் தமிழ் இலக்கியத்தைக் காப்பாற்ற வேண்டும் என்பதில் மாறுபட்ட கருத்து இல்லை. எனவே இந்த காலகட்டம் தமிழ் மொழிக்குப் பொற்காலமாக

அமையும் என்று நம்புகிறேன்.

தமிழ்மொழியில்தான் பாடம் நடத்தவேண்டும் என்று வலியுறுத்தப்பட்டது. 216க்கும் மேற்பட்ட மழலையர் பள்ளிகளின் நிர்வாகத்தினர் ஒரு மாநாடு நடத்தினர். அதில் தாய்மொழி வாயிலாகத் தான் கல்வி கற்பிக்க வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றியுள்ளனர்.

ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் மொழிகளைப் படிப்பதில் யாருக்கும் மாறுபட்ட கருத்துக் கிடையாது. பிற மொழிகள் கற்பது என்பது என் கையில் இருக்கும் கண்ணாடி போன்றது. தேவையான நேரத்தில் கண்ணாடியைப் பயன்படுத்திக் கொள்ளலாம். வீட்டிலும் வைத்துக்கொள்ளலாம்.

ஆனால் தமிழ் மொழி என்பது என் இரு கண்கள் போன்றது.

கால்நடை, வேளாண்மைக் கல்லூரிகளில் முழுமையாக தமிழை கொண்டு வரவேண்டும் என்று மகாலிங்கம் கூறினார். இதனை மனதில் வைத்துச் செயல்படுவோம். எடுத்த எடுப்பிலேயே எம்.பி.பி.எஸ்.க்கு போகாமல் முதலில் செவிலியர் படிப்பைத் தமிழில் கொண்டு வரவேண்டும்." இவ்வாறு அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

*தலைநகர்த் தமிழ்ச் சங்கம் சார்பாகத் தமிழ் வளர்ச்சி மாநாடு நடைபெற்றது. அதில் வ.சுப. மாணிக்கனார் படத்தைத் திறந்து வைத்து நான் பேசினேன். - தினகரன் 28.4.97.

### தமிழைத் திணிப்பதாக என் மீது குறை கூறுவதா?
### தமிழ்க்குடிமகன் கேள்வி.

நான் தமிழைத் திணிப்பதாகக் கூறுகிறார்கள். தமிழ்நாட்டில், தமிழ்க்குடியில் பிறந்துவிட்டுத் தமிழைத் திணிப்பதாகக் கூறமுடியுமா?

மழலையர் பள்ளிகள் பற்றி இங்கே கூறினார்கள். அந்தப் பள்ளிகளிலும் தமிழ் கற்பிக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். மழலையர் பள்ளிகள் பற்றிக் கல்வி அமைச்சரிடமும் தமிழறிஞர்கள் கூறவேண்டும்.

மழலையர் கல்வி மற்றும் தமிழ் ஆட்சிமொழி பற்றி எல்லாம் தமிழ் அறிஞர்களுடன் பேசவேண்டும் என்று இங்கு கூறினார்கள். தமிழறிஞர்களில் பலவிதமாக இருக்கிறார்கள் என்றும் குறிப்பிட்டார்கள். எங்களுக்கு யார் எப்படிப்பட்ட தமிழ் அறிஞர்கள் என்பது தெரியும். நேரம் வரும்போது தமிழறிஞர்களைக் கூப்பிட்டுப் பேசுவோம். அதுபற்றித் தமிழ் அறிஞர்கள் கவலைப்படத் தேவை இல்லை.

மழலையர் பள்ளி

மழலையர் பள்ளிக்கூடம் நடத்த முதல் தேவை இல்லை. மழலையர் பள்ளிகளில் 2100 பள்ளிக் கூடங்கள்தான் பதிவு பெற்றிருக்கின்றன. பதிவு பெறாமல் ஆயிரக்கணக்கான பள்ளிகள் இருக்கின்றன.

அனைத்து நிலைகளிலும் தமிழைக் கொண்டு வரத் தமிழறிஞர்கள் களத்தில் இறங்கவேண்டும். தமிழில் பெயர்ப் பலகைகளை எழுதுமாறு செய்யவேண்டும்."

*தமிழ்க்குடிமகன் தமிழைத் திணிக்கின்றார் என்பவரது குற்றச்சாட்டுக்கு விடைசொன்னேன். ஆனால் கோவையில் நடைபெற்ற ஆட்சிமொழிக் கருத்தரங்கில் இன்னும் கடுமையாகப் பேசியுள்ளேன். இதே செய்தியை 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' இதழ் 28.4.97 இல் வெளியிட்டுள்ளது.

இ.ஆ.ப. அலுவலர்கள் குறித்து நான் பேசிய செய்தியும் இந்த இதழில் உள்ளது.

Minister asks scholars to promote Tamil

Express News Service

Chennai, April 27: Tamil Development and Culture Minister Tamizhkudimagan on Saturday, urged Tamil Scholars to agitate for the implementation of Tamil in all spheres.

Inaugurating the two - day Tamil Development Conference, organised by Thalainagar Tamil Sangam, he advised Tamil Scholars not to be concerned only with seminars and conferences but to be more practical.

He refuted the charge of ímpostion'of language and added it was wrong to call the efforts taken by the Government for the development of Tamil as ímposition'.

The conference passed resolutions urging the government to implement Tamil as a compulsory language and Tamil as the medium of instruction in all educational institutions including medical and engineering studies. A resolution demanded that the Tamil Nadu Public Service Commission exams be conducted in Tamil was also adopted. The conference also urged the government to provide more job opportunities to Tamil medium students.

*இந்தியப் பல்கலைக்கழக தமிழாசிரியர் மன்ற 30ஆவது கருத்தரங்கு சென்னையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நடைபெற்றது. அதில் நான் நிறைவுரை ஆற்றினேன்.

அச்செய்தியை முழு அளவில் 24.5.99ம் நாளைய 'தினமலர்' வெளியிட்டுள்ளது.

சென்னை, மே 24- "தகுதியுடையவர்கள் மட்டும் ஆசிரியர் பணிக்கு வரவேண்டும்;

தகுதியில்லாதவர்கள் வரக்கூடாது" என்று ஆட்சிமொழித் துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் கூறினார். தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கு நிறைவு விழாவில், ஆட்சி மொழித் துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் நிறைவுரை ஆற்றினார். அப்போது அவர் பேசியதாவது:

இந்த மன்றக் கருத்தரங்குகளுக்குக் கட்டுரைகள் எழுதித் தந்தவர்களைப் பாராட்டுகிறேன். தமிழின் வளர்ச்சிக்குப் பல நூல்கள் எழுதித் தந்தவர்களையும் பாராட்டுகிறேன். இந்த மன்றம் வலிமை மிக்க அமைப்பாக விளங்க அரசு பல உதவிகளைச் செய்துள்ளது.

ஆசிரியர்களில் தலை, இடை, கடை என்ற பிரச்னை எழுந்துள்ளது. மாணவர்களில் வேண்டுமானால் தலை, இடை, கடை என்ற இருக்கலாம். ஆசிரியர்களில் அப்படி இருக்க முடியாது. கற்புக்கு தலை, இடை, கடை என்று இருக்க முடியாது. அப்படித்தான் ஆசிரியர்களின் நிலையும். ஆசிரியர் என்ற சொல்லிலேயே ஒரு தெளிவு இருக்கிறது. தகுதி உடையவர்கள் இந்தப் பணிக்கு வரவேண்டும். மற்றவர்கள் வரக்கூடாது.

புரட்சிகரமான கருத்துகள் வெளிவரவேண்டும். சங்கத் தமிழ் முதல் இக்காலம் வரை பல ஆய்வுகள் நடக்கின்றன. அவற்றில் முரண்பாடுகள் இருந்தாலும், புதுமையான கருத்துகள் வெளிப்படும். அப்படிப்பட்ட கருத்துகள் வராமல் இருந்தால்தான் தவறு. உங்கள் நூல்கள், பேச்சுகள், படைப்புகள் மற்றவர்களுக்கு வழி காட்ட வேண்டும். தமிழாசிரியர்கள் சிறுகதை, புதினம் போன்றவற்றைப் படைக்கக்கூடாது என்றில்லை. மு. வரதராசனார் சிறந்த படைப்பாளி. அதுபோல் மற்றவர்களும் படைப்பிலக்கியத்தில் ஆர்வம் செலுத்த வேண்டும். கடினச் சொற்களைப் பயன்படுத்தாமல் பெருஞ்சித்திரனார் சிறந்த கவிதைகளைப் படைத்தார். அதுபோல் சிறந்த புதினங்களை மு.வ., படைத்தார். அதுபோல் மற்றவர்களும் செய்யலாம்.

'ஜூஸ் சென்டர்' என்பதற்கு 'பழச்சாற்றுக் கடை' என்று மொழி பெயர்த்து அனைவருக்கும் அனுப்பினோம். ஆனால், யாரோ ஒருவர் அதை விட்டுவிட்டு எல்லாப் பழங்களையும் பலகையில் வரைந்து 'பழமுதிர்சோலை' என்ற பெயர் வைத்துவிட்டார். அதை மற்றவர்களும் பின்பற்றத் தொடங்கிவிட்டனர். அந்தச் சொல்லே தற்போது நிலைத்துவிட்டது அதை வரவேற்க வேண்டும். பொருத்தமாக இருந்தால் ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆனால், பழமுதிர்சோலை என்ற சொல்லுக்குப் பொருள் வேறு.

எந்த ஒரு சொல்லையும் நாம் தமிழ்ப்படுத்தும்போது நேரடியாகத் தமிழுக்கு வந்ததில்லை. 'டீச்சர்' என்ற சொல் 'உபாத்யாயர்'என்று மாறி பின்னர்தான் 'ஆசிரியர்' என்று நிலைத்தது. அதேபோல் 'பைசைக்கிள்' என்பதும் 'துவிசக்கர' மாகி பின்னர் ஈருருளியாகி தற்போது மிதிவண்டி என்று வழங்கப்படுகின்றது. எனவே, தமிழ்ச் சொற்களை அனைவரும் பயன்படுத்தவேண்டும். நல்ல தமிழிலேயே சட்டசபையில் ஒரு மணிநேரம் பேசியதாகச் செய்திகள் வெளியாயின. அதுபோல்

தமிழிலேயே பேசமுடியும். கேலி பேசும் காலம் போய்விட்டது. கேலி செய்வதற்குத் தகுதி இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். இலக்கிய, இலக்கணத் தமிழில் நீங்கள் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் வேளையில், 'இணையத் தமிழுக்கு' அரசு சென்று கொண்டிருக்கிறது.

தமிழ் படித்தவர்களுக்குச் செருக்கு இருக்க வேண்டும். இந்தச் செருக்கு பிறரை அழிப்பதற்காக அல்ல. செறிவு காரணமாகச் செருக்கு வரவேண்டும். தமிழாசிரியர்கள் நிமிர்ந்து நின்று வாழ்ந்தால் அரசு மேலும் உறுதுணையாக இருக்கும்.

தமிழ் அமைப்புகளிலேயே சிறந்த அமைப்பாக இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் இருக்கின்றது. அனைவரையும் ஒன்றிணைக்கும் அமைப்பாக விளங்குவது பாராட்டத்தக்கது.

இவ்வாறு அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் சார்பில் அதன் தலைவர் தமிழண்ணல் வரவேற்புரை நிகழ்த்துகையில் கூறியதாவது:

"மன்றத்தின் சார்பில் 30 ஆண்டுகளாகக் கருத்தரங்குகள் தொடர்ந்து நடக்கிறது. ஆனால், இந்த ஆண்டு ஒரு திருப்பம். கருத்தரங்கு நடத்த ரூ.3.5 இலட்சம் நிதியுதவியை அரசு வழங்கியுள்ளது. அடுத்த ஆண்டு முதல் சிறந்த புதினத்திற்குப் பரிசு என்று தொடக்க விழாவில் அறிவித்தேன். அப்போதே சிறந்த சிறுகதைக்கு நான் பரிசு தருகிறேன் என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன் அறிவித்தார். இதுபோன்று தமிழின் வளர்ச்சிக்கு முதல்வரும், அமைச்சரும் ஆர்வமுடன் உள்ளனர். இசைத் தமிழுக்கு இடம் தர வேண்டும் என்று கோரிக்கை விடுத்தனர். செயற்குழுவில் ஆலோசனை நடத்தி இசைத் தமிழுக்கு சிறப்பிடம் வழங்கப்படும்."

அதில் தமிழண்ணல் பேசிய பேச்சும் முக்கியம். தமிழக அரசு எந்த அளவுக்கு உதவி செய்து வருகிறது என்பதை அவரே குறிப்பிட்டுள்ளார்.

*நீலகிரி மாவட்டச் சார்பில் உதகையில் நடைபெற்ற ஆட்சிமொழிக் கருத்தரங்கில் நான் பேசியதை, தினபூமி (8.6.99) இதழ் விரிவாக வெளியிட்டுள்ளது.

இதுபோன்று, எல்லா இதழ்களும் போட்டி போட்டுக்கொண்டு வெளியிடுவதால் தமிழின் சிறப்புகளைத் தமிழ்மக்கள் அனைவரும் உணர்ந்து கொள்ள முடிகிறது.

மம்மி - டாடி கலாசாரத்திற்கு முற்றுப்புள்ளி வையுங்கள். அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேச்சு

ஊட்டி, ஜுன் 8 - தமிழ்மொழியை தமிழ்க் கலாசாரத்தை, தமிழ் பண்பாட்டை வளர்க்க மம்மி - டாடி காலசாரத்திற்கு முற்றுப்புள்ளி வையுங்கள் என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன்

கூறியுள்ளார்.

கருத்தரங்கு

தமிழக அரசு தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் நீலகிரி மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கம் ஊட்டியிலுள்ள தமிழகம் மாளிகையில் மாவட்ட கலெக்டர் பி.சிவசங்கரன் முன்னிலையில் நடைபெற்றது. இந்நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிய தமிழ் ஆட்சி மொழி அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் பேசும்போது கூறியதாவது :-

1956ஆம் ஆண்டுவாக்கிலேயே தமிழ் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்ற அரசாணை பிறப்பிக்கப்பட்டது. இருப்பினும் இதுவரை இந்தத் துறையில் நாம் எதிர்பார்த்த பயனை அடையவில்லை என்பதுதான் உண்மை.

தமிழக வரலாற்றிலே கடந்த காலங்களில் நடைபெற்றுள்ள பல்வேறு ஆட்சி மாற்றங்களினாலும், பல்வேறு சூழ்நிலைகளாலும் தமிழுக்கு அதிகம் முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. எந்த ஒரு வேற்று மொழிச் சொல்லாக இருந்தாலும், அதற்கு இணையான தமிழ்ச் சொற்கள் இருந்தும் அதைச் சரியாகப் பயன்படுத்தாததும், தமிழ் மொழியிலே பிற மொழிச் சொற்களின் ஆதிக்கம் பெருகுவதற்கு வாய்ப்பாக அமைந்துவிட்டது. ஆட்சி மொழியாகத் தமிழ் முழுமை பெற இயலாததற்கு தலைமைச் செயலகத்திலுள்ள அலுவலர்களும் காரணம் என்பதை மறுக்க முடியாது.

அதுபோக, மக்களின் பொறுப்பற்ற மனப்போக்கு ஒரு காரணம். ஆங்கிலம் கற்றுக்கொள்ளலாம்; அதுபோல் வேறு பல மொழிகளையும் கற்றுக்கொண்டு தெரிந்து வைக்கலாம். அது தவறு கிடையாது. ஆனால் தமிழ்நாட்டிலே வாழ்ந்து கொண்டிருக்கும் போது தமிழ் மொழி மீது பற்றும், தமிழ் உணர்வும் வேண்டும்.

இங்கு எனக்கு முன்னே பேசிய ஒருவர் கூறும்போது, பிற்காலத்தில் பிழைப்புத் தேடிக் கொள்ள, பிள்ளைகளை ஆங்கில வழிப் பள்ளிகளிலே படிக்க வைப்பதாகச் சொன்னார். ஆங்கிலம் மட்டுமே பேசி மம்மி - டாடி என்று பெற்றோர்களை அழைக்கும் குழந்தைகளுக்குத்தான் வேலை தருவேன் என்று யாராவது சொல்லியிருக்கிறார்களா? ஆங்கில மோகத்தால் போலித்தனமான வாழ்க்கை வாழ முயலக் கூடாது.

இந்த மம்மி - டாடி கலாசாரம் நமது மொழியை மட்டும் சிதைப்பதில்லை. தமிழ் கலாசாரத்தை. தமிழ்ப் பண்பாட்டை சிதைக்கின்றது. இதற்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும். தமிழ் மொழிக்காக எத்தனையோ பேர் உயிர்த் தியாகம் செய்துள்ளனரே, அவர்களின் மொழி உணர்வை, தியாகத்தை எண்ணிப் பார்க்க வேண்டும்.

ஆங்கிலம்

ஆங்கிலத்தை தெரிந்து வைக்கலாம். கூடாது என்று சொல்லவில்லை. தமிழ்மொழி தெரியாதவர்களிடத்தில் பேசுவதற்கும், பிற மாநிலங்களில், பிறநாடுகளில் உள்ளவர்களோடு தொடர்பு கொள்ளவும், ஆங்கிலத்தைப் பயன்படுத்துங்கள். தமிழநாட்டிலே இருக்கும்போது தமிழ்மொழியையே பயன்படுத்துங்கள். ஜெர்மனி, பிரான்சு நாடுகளில் அவரவர் தாய்மொழிக்குத்தான் அங்கு மதிப்புத் தருகிறார்கள். ஆங்கில மொழியை ஒரு உலக மொழி என்று அவர்கள் ஏற்றுக்கொள்வதில்லை.

தண்டம்

தமிழ்நாட்டிலே உள்ள கடைகள், வர்த்தக நிறுவனங்களில் பெயர் மற்றும் விளம்பரப் பலகைகள் தமிழில் பெரிய அளவில் எழுதி வைக்கப்படவேண்டும் என்று அரசாணை உள்ளது. இதை மீறுபவர்களுக்கு விதிக்கப்படும் தண்டத் தொகையை உயர்த்த நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

நடவடிக்கை

தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை நிறைவேற்ற தேவைப்படும் அனைத்து நடவடிக்கைகளும் எடுக்கப்படும். தலைமைச் செயலகத்திலே உள்ள துறை அலுவலகங்களில் தமிழ் ஆட்சி மொழி குறித்தான ஆய்வு நடந்ததே கிடையாது. எனவே தலைமைச் செயலகத்தில் தமிழ்மொழியை ஆட்சி மொழியாகப் பயன்படுத்தாத அதிகாரிகள், அலுவலர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படும்.

தொன்மை வாய்ந்த தமிழ் மொழியைப் பயன்படுத்தி , பெருமை அடைய வேண்டும். அதற்கு மக்கள் ஆதரவு முழுமையாகத் தர வேண்டும் என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசும்போது கூறினார்.

அதே கருத்தரங்கு குறித்த பேச்சினைத் 'தினகரன்' இதழ் (8.6.99) முழு அளவில் வெளியிட்டுள்ளது. ஒரு கருத்தரங்கில் எத்தனை வகையாக செய்திகள் பேசப்படுகின்றன என்பதனை இந்தப் பேச்சிலிருந்து காணமுடியும். கிட்டத்தட்ட 5 கலம் அளவில் செய்திகள் வெளியாகி மிகப்பெரும் பயனைத்தருகின்றன. இதழ்களின் தொண்டினை என்றும் மறக்க முடியாது.

நீலகிரி மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கு - ஆங்கில மழலையர் பள்ளிகள் ஒழுங்குபடுத்தப்படும் அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேச்சு

ஊட்டி, ஜூன் 8 - ஆங்கில மழலையர் பள்ளிகள் ஒழுங்குபடுத்தப்படும் என மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கில் அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

"இவ்வாண்டுக்கான மாவட்ட அளவிலான ஆட்சிமொழிக் கருத்தரங்கு உதகையில்

தொடங்கி உள்ளது. அது உவகையுடன் நடைபெறுகிறது.

தமிழ்நாட்டில் இவ்வாண்டு 8 கருத்தரங்குகள் நடைபெறுமளவில் முதல் கருத்தரங்கம் இங்குதான் நடத்தப்படுகிறது. அதோடு தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் பதவி ஏற்றபிறகு அவருக்கும் இது முதல் கருத்தரங்கமாகும்.

பாராட்டு

நீலகிரி மாவட்ட ஆட்சித் தலைவர் சிவசங்கரன் இங்கு நிறைய மாறுதல்களைச் செய்து உள்ளார். அவர் தமிழ் வளர்ச்சிப் பணியில் ஈடுபட்டுள்ள ஆர்வத்தைப் பாராட்டுகிறேன்.

ஆட்சிமொழி வளர்த்தவர்கள்

இந்தளவிற்கு ஆட்சி மொழியை வளர்க்க - வெற்றி பெறச் செய்த மூன்று பேர்களுக்கு வணக்கம் செலுத்த வேண்டும்.

முதலமைச்சர்

தமிழக முதல்வர், கலைஞர் ஆட்சியில் ரூ.4ஆயிரத்து 144 கோடி கல்வித் துறைக்காக ஒதுக்கப்பட்டதில் தமிழ் வளர்ச்சிக்கு ரூ.9கோடியை ஒதுக்கியதோடு தமிழ் வளர்ச்சித் துறையை ஏற்படுத்தினார். நிதி ஒதுக்கீடு பெரிதல்ல. மதி ஒதுக்கீடுதான் பெரியது.

சி. சுப்பிரமணியம்

1.11.1956ம் நாளன்று தமிழ்நாடு தனி மாநிலம் ஆக்கப்பட்டது. அன்று கல்வி அமைச்சராக இருந்த சி. சுப்பிரமணியம் தமிழ் ஆட்சி மொழியைச் சட்டபூர்வமாக்கினார். அவருக்கு வணக்கம் செலுத்திப் பாராட்டுகிறேன்.

கசபதி நாயக்கர்

1956ம் ஆண்டுக்கு முன்பு தமிழ் ஆட்சிமொழி சட்டமாவதற்கு முன்பு, சட்டமன்றத்தில் தி.மு.க. பிரதிநிதிகள் இடம் பெறாமல் இருந்தபோது 'தமிழை ஆட்சி மொழியாக்க வேண்டும்' என்று கஜபதி நாயக்கர் சட்டமன்றத்தில் பலமுறை குரல் கொடுத்துக் கொண்டிருந்தார்.

திருச்சி குளித்தலையில் தமிழை ஆட்சி மொழியாக்க வேண்டும் என்று நடத்தப்பட்ட மாநாட்டில் பாவேந்தர் பாரதிதாசன், கஜபதி நாயக்கர் உள்பட பல தமிழ் அறிஞர்கள் முழங்கினார்கள். தமிழ் ஆட்சி மொழியாக்க பாடுபட்ட கஜபதி நாயக்கருக்கு வணக்கம் செலுத்துகிறேன்.

ஆணை

தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் 27.12.1956ம் நாள் பிறந்தது. முதல் ஆணையை அரசு சார்பில் ஒரு இந்திய ஆட்சி பணி துறை அதிகாரி பிறப்பித்தார். அதில் தமிழ் ஆட்சி மொழியை அமுலாக்க கீழ்க்கண்ட அலுவலர்கள் பொறுப்பேற்பார்கள் என்று மட்டும் குறிப்பிடப்பட்டது. ஆனால் எப்படி அமுல்படுத்துவது என்பதைக் குறிப்பிடவில்லை. 1963ம் ஆண்டுவரை தமிழ் ஆட்சிமொழிபடுத்த ஆணை வரவில்லை.

தமிழால் முடியும்

தமிழால் முடியும், தமிழால் முழுமை அடையமுடியும் என்று நினைத்துச் செயல்பட வேண்டும். நான் மதுரை யாதவர் கல்லூரியில் முதல்வராக இருந்தேன். 42 ஆண்டுகள் தமிழைப் பயிற்சி இடமாக, நோன்பாக கொண்டு செயல்பட்டேன் . எல்லோருக்கும் உணர்வான ஈடுபாடு தேவை. எந்தச் சொல்லையும் தமிழாக்க முடியும். பயன்படுத்த முடியும்.

பாதிப்பு

கடந்த காலத்தில் பலருடைய ஆட்சியில் தமிழ் வளர்ச்சியில் பல பாதிப்புகள் இருந்தன. பல்லவர் ஆட்சியில் பிறமொழி சொற்களின் தாக்கம் இருந்தது. சங்க கால இலக்கியங்களிலும் ஓரளவு தாக்கம் இருந்தது. ஒவ்வொரு ஆட்சிக் காலங்களிலும் வளர்ச்சி குன்றியது. சில ஆட்சிக் காலங்களில் தமிழ் வளர்க்கப்பட்டது.

விழிப்பு

தமிழர்கள் தம்மை முன் நிறுத்தித் தமிழை பின்நிறுத்தியதனால்தான் தமிழ்ச் சமுதாயம் சிதறி போய்விட்டது. இதற்குப் பல வரலாற்றுச் சான்றுகளை கூறலாம். தமிழ்ச் சமுதாயம் ஒன்றாக இருக்கத் தமிழை முன்னிலைப்படுத்த வேண்டும். விழிப்புடன் இருந்து தமிழைக் காப்பாற்ற வேண்டும்.

மிதிவண்டி

மிதிவண்டி நிலையம் என்று விளம்பரப் பலகை வைக்கப்பட்டுள்ளது. அங்கு சைக்கிள் வேண்டும் என்று கேட்கிறார்களே தவிர மிதிவண்டி வேண்டும் என்று கேட்பதில்லை. மிதிவண்டி என்ற சொல்லைப் பயன்படுத்த வேண்டும்.

ஆங்கில மோகம்

ஆங்கில மோகம் நம்மீது முழுமையாக ஊடுருவிக் கிடக்கிறது. நாம் தமிழில் தான் கடித தொடர்புகள் வைத்து கொள்ள வேண்டும். பிற மாநிலங்களுக்கு ஆங்கிலத்தில் தொடர்பு வைத்து கொள்ளலாம் என்று மாவட்ட ஆட்சியர் பேசினார்.

பேரரசி எலிசபெத்

ஆங்கிலேய பேரரசி எலிசபெத் வந்தபோது அவரிடம் நான் ஆங்கிலத்தில் பேசினேன். கலைகள், கலைச் சிற்பங்களைப் பற்றி விளக்கங்களை ஆங்கிலத்தில் அளித்தேன்.

மேட்டுக்குடியினர்

மேட்டுக்குடியினத்தில் உள்ளவர்கள் இந்த தவற்றை செய்கிறார்கள். ஏழை, எளிய நடுத்தர மக்கள் நல்ல நிலைமையில் உள்ளார்கள். அவர்களை கெடுத்துவிடாதீர்கள் அவர்கள் நல்ல நிலைமைகளில் முன்னேறுகிறார்கள்.

தியாகம்

சின்னசாமி, சிவலிங்கம், ராசேந்திரன், அரங்கநாதன் ஆகியோர் தமிழுக்காகத் தியாகம் செய்தார்கள். அதுபோன்ற சம்பவங்கள் இனி ஏற்பட்டுவிடக் கூடாது. அந்த இளைஞர்கள் உணர்த்தியதை உணர்ந்து நாம் தமிழைக் காப்பாற்ற வேண்டும். அந்தத் தியாக இளைஞர்களை நினைவில் கொண்டு தமிழ் வளர்ப்புப் பணியை தொடங்க வேண்டும்.

சி.பா. ஆதித்தனார்

உனக்கு நாடு விடுதலை வேண்டும் என்றால் தாய்மொழி பேசக்கூடாது. தாய்மொழி பேசினால் நாடு சுதந்திரம் கிடையாது. இதில் எது உனக்கு வேண்டும் என்று கேட்ட போது டிவேலரா தாய்மொழிதான் வேண்டும் என்றான். அது அந்தக் கலைஞர் தாய்மொழி மீது வைத்திருந்த பாசம். அதே பாணியில்தான் சி.பா. ஆதித்தனார் நாம் தமிழர் கட்சியைத் தொடங்கினார்.

பாரீஸ், ஜெர்மன்

பாரீஸ் நகரில் அனைத்து விளம்பரப் பலகைகளும் பிரெஞ்சு மொழியில் எழுதப்பட்டுள்ளன. ஜெர்மன் நாட்டில் கார்ல் மார்க்சு தெருவில் அனைத்தும் ஜெர்மன் மொழியில் எழுதப்பட்டுள்ளன.

ஜெர்மன், பிரான்சு நாடுகள் உள்பட பல வெளிநாடுகளில் மற்ற மொழிகள் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை. அவர்கள் மொழியிலேயே விளம்பரப் பலகைகளை வைத்துள்ளார்கள்.

பெருந்தன்மை

இங்கு நாம் பெருந்தன்மையோடு விளம்பரப் பலகையில் முதலில் பெரிய எழுத்துக்களில் தமிழிலும், அடுத்து ஆங்கிலத்திலும் எழுதி அதற்கு பின்னர் அவரவர் விருப்பப்படி பல மொழிகளில் எழுதி வைத்துக்கொள்ள இடம் கொடுத்துள்ளோம். இதில் அரசு ஆணை பெருந்தன்மையுடன்

வெளியிடப்பட்டுள்ளது. இந்த பெருந்தன்மையான ஆணைப்படி தமிழில் பெயர்களை எழுதாதவர்களை என்ன செய்வது? ரூ.50 அபராதம் விதிக்கின்றோம். விளம்பரப் பலகை எழுத எவ்வளவு செலவாகும்? அபராத தொகை எவ்வளவு? இதை கணக்கிட்டு ரூ.50 அபராதம் குறைவுதானே என்று அபராதம் கட்டிவிட்டு விளம்பர பலகையில் தமிழ் எழுதாமல் அப்படியே விட்டு விடுகிறார்கள்.

ரூ. ஆயிரம் அபராதம்

அரசு விதிக்கும் அபராத தொகை ரூ.50 ஒரு அடையாளம்தான். தமிழ் மீது ஆர்வம் கொண்டு தமிழ் வளர்க்க அரசோடு ஒத்துழைப்புக் கொடுக்கவேண்டும். அரசைக் கிள்ளி பார்க்கக் கூடாது. விளம்பரப் பலகையில் கட்டாயமாக தமிழில் எழுத வேண்டும் என்ற ஆணைகளை அரசு விரைவில் அறிவிக்கும் ரூ.ஆயிரம் அபராதம் போட்டாலும் என்ன? என்பதையும் பரிசீலனை செய்ய வேண்டியுள்ளது.

களை அகற்றம்

தமிழ் ஆட்சிமொழி முழுமை பெற இயலாததற்கு தலைமைச் செயலகத்திலுள்ள சில அலுவலர்களும் காரணமாக உள்ளார்கள் என்தை மறுக்க முடியாது. தமிழ் மக்கள் பாதிப்பு அடைகிறார்கள் என்பதை நினைத்து பார்க்க வேண்டும். நாம் நினைத்தால் களையை அகற்றிவிடலாம்.

அதிரடி நடவடிக்கை

சென்னைத் தலைமை செயலகத்தில் 40 ஆண்டுகளாக 31 துறைகளில் தமிழ் ஆட்சி மொழி பற்றி ஆய்வு நடத்தவில்லை. இனிமேல் தலைமை செயலகத்தில் மாதந்தோறும் அமைச்சர் தலைமையில் ஆய்வு செய்யப்படும். தமிழ் ஆட்சி மொழிச் சட்டப்படி அரசு ஆணைகள் நடவடிக்கைகள், கடிதத் தொடர்புகளில் தமிழ் பயன்படுத்தவேண்டும். தமிழ் பயன்படுத்தாமல் ஆங்கிலத்தைப் பயன்படுத்தினால் அதிரடி நடவடிக்கை எடுக்கப்படும்.

தமிழ் ஆட்சி மொழி ஆணையைப் பிறப்பித்த ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் ஆங்கிலத்தில் அரசு ஆணையைப் பிறப்பித்து தமிழில் பிறப்பிக்காமல் மெத்தனமாக உள்ளார்கள். இந்த நிலைமை நீக்கப்படும்.

தமிழ் கம்ப்யூட்டர்

தமிழக முதல்வரின் முயற்சியால் தமிழ் கணினி, மின்அஞ்சல், இணையம் மயமாகி வருகிறது. கலைஞர் பக்கம், தமிழ்நாடு பக்கம் என்று நம்முடைய பல்வேறு துறைகளை பற்றி மலேசியா உள்பட பல நாடுகளில் தெரிந்து வருகிறார்கள். திருநெல்வேலி மாவட்ட ஆட்சியர்

பொதுமக்களிடமிருந்து பெறும் மனுக்களை தமிழ் கணினி முறையில் பதிவு செய்தும், அதற்கான ரசீது கொடுத்தும், எடுக்கப்படும் நடவடிக்கைகள் பற்றி அறிவித்துச் செயல்படுகிறார். அதே முறையை நீலகிரி மாவட்டத்திலும் செயல்படுத்த மாவட்ட ஆட்சியர் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

கல்வி அள்ளல்கள்

மழலைப் பள்ளிகளில் குழந்தைகளைப் படிக்க வைப்பதற்குப் போலி சமாதானம் சொல்லக் கூடாது. இவர்கள் பச்சையப்பா, அழகப்பா ஆகியோர்களை போலக் கல்வி வள்ளல்களா? இல்லை கல்வி அள்ளல்கள். இந்த கல்வி அள்ளல்கள் 10வது வகுப்பு வரை கூடப் படிக்காதவர்கள்; ஆசிரியராக இருப்பதற்கு தகுதியற்றவர்கள். இவர்கள் பள்ளிக்கூடம் நடத்துகிறார்கள்; அனைத்துப் பாடங்களையும் நடத்துகிறார்கள்; அதுவும் அரசு அங்கீகாரம் இல்லை. அங்கு படிப்பவர்களுக்குச் சான்றிதழ் கொடுக்க எங்களிடம் அங்கீகாரம் கேட்கிறார்கள்; கொடுக்கமாட்டோம்.

ஆட்சி பணி தகுதி

தமிழ்நாட்டில் ஆட்சிப் பணியில் தகுதி பெற ஆட்சித் தமிழ் புத்தகம் உள்ளது. அதைப் படித்து தேர்ச்சி பெற்றால்தான் பணிகளில் தகுதிபெற முடியும். இல்லையெனில் எக்காலத்திலும் முடியவே முடியாது.

இவ்வாறு அவர் பேசினார்.

*அதேபோல் திருநெல்வேலியில் நடைபெற்ற ஆட்சிமொழிக் கருத்தரங்கில் பேசிய பேச்சின் ஒரு பகுதியைப் 'பிற்பகல்' எனும் இதழ் வெளியிட்டுள்ளது. சிங்கப்பூரின் தமிழ்ப் பற்றினை இந்த இதழ் தலைப்பாக்கியுள்ளது.

சிங்கப்பூர் நகைக்கடைகளுக்கு 'அணிமணிப் பொற்சாலை' என பெயர் - தமிழகத்தில் ஜுவல்லர்ஸ் என்பதில்தான் பெருமை - மந்திரி தமிழ்க்குடிமகன் கவலை

திருநெல்வேலி அக் - 28 சிங்கப்பூரில் உள்ள நகைக்கடைகளில் 'அணிமணி பொற்சாலை' என பெயர் பலகைகளில் எழுதியுள்ளனர். ஆனால் தமிழ்நாட்டில் ஜுவல்லர்ஸ் என பெயர் வைப்பதில்தான் இனிமை தெரிகிறது என்று மிகவும் கவலையுடன் பேசினார்.

தமிழகத்தில் அனைத்து துறைகளிலும் கடிதங்கள், உத்தரவுகள் தமிழில் இருக்கவும் இதனை வரும் மார்ச் மாதத்திற்குள் செயல்படுத்தவும் அவ்வாறு செயல்படுத்தாத அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கவும் செய்வோம் என அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

ஆட்சி மொழியாகத் தமிழ் செயல்படுவது என்பது கடந்த 43 ஆண்டுகளாக நடந்து வரும் முயற்சியில் தட்டுத் தடுமாறி வந்தது தற்போதுதான் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தப்பட்டுள்ளது. பயிற்றுமொழியாக, ஆட்சி மொழியாக, தமிழ் செயல்படவேண்டும் என்பது எங்கள் விருப்பமாக உள்ளது. 1968 ம் ஆண்டில் இதற்காகத்தான் தமிழகத்தில் இருமொழிச் சட்டத்தை அண்ணா கொண்டுவந்தார். அவை தமிழும், ஆங்கிலமுமாக இருக்க தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அவற்றை நிறைவேற்றுவதிலும் முதல்வர், துறை அமைச்சர் என சிலர் முயன்றாலும் அவற்றைச் செயல்படுத்தும் அரசு அலுவலர்கள் அதனை முழுமையாக செயல்படுத்துவதில்லை. அரசு வெளியிடும் எல்லா உத்தரவுகளும் தமிழில் இருக்க வேண்டும் என்றுதான் அரசு விரும்புகிறது.

சிங்கப்பூரில் 73 சதவீதம் சீனர்களும், 6 சதவீதம் தமிழர்களும் மீதம் தான் அந்த நாட்டின் மண்ணின் மைந்தர்களான மலாய் மக்களும் உள்ளனர். ஆனால் அங்கேயே நான்கு மொழி ஆட்சி செயல்படுகிறது. எல்லா மொழிக்கும் சம வாய்ப்பு தரப்படுகிறது. இருப்பினும் அங்குள்ள பெயர்ப் பலகைகளில் முதலில் மலாய், இரண்டாவது சீனம், மூன்றாவதாக தமிழ் நான்காவதாக ஆங்கிலம் என அறிவிப்புகள் உள்ளன. அங்குள்ள கடைகளில் அணிமணி பொற்சாலை என நகைக்கடைகளுக்கு பெயர் வைக்கிறார்கள். ஆனால் நம்மூரில் நகைக்கடைகளுக்கு ஜுவல்லர்ஸ் என பெயர் வைப்பதில்தான் இனிமை தெரிகிறது. இந்த மாதிரி உத்தரவுகளை அரசு மட்டும் போட்டால் போதுமா, சம்பந்தப்பட்டவர்களும் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். சிங்கப்பூரில் இருந்து சென்னைக்கு வரும் விமானங்களில் அறிவிப்புகள் தமிழில் இருக்கிறதென்றும், ஆனால் இந்தியாவுக்குள்ளாக செல்லும் விமானங்களில் அறிவிப்புகள் தமிழில் வெளியிடப்படவில்லையே என கேட்டுக்கொண்டார்கள். சிங்கப்பூரில் இருந்து நேராக சென்னைக்கு விமானம் வந்து விடுகிறது. ஆனால் டில்லியில் இருந்து வரும் விமானம் ஐதராபாத்திற்கு வரும்போது தெலுங்கிலும், மும்பைக்கு செல்லும்போது மராத்தியிலும் பின்னர் இந்தியிலும் அறிவிக்க வேண்டிய நிலை இருப்பதாகக் கூறினர். இருப்பினும் அந்த அறிவிப்புகள் தமிழில் இருக்க முயற்சிகள் எடுக்கப்படும்.

தமிழகத்தில் அரசின் அனைத்து உத்தரவுகளும், கடிதங்களும் தமிழில் இருக்க நடவடிக்கை எடுக்கப்படுகிறது. இதற்காகவே ஒவ்வொரு துறையிலும் ஆய்வுப்பணிகள் நடக்கிறது.

இதுவரை 12 துறைகளில் ஆய்வுப்பணிகள் நடந்துள்ளன. வரும் மார்ச் மாதத்திற்குள் அரசின் அனைத்து நடவடிக்கைகளும், உத்தரவுகளும், கடிதங்களும் தமிழில் இருக்க நடவடிக்கை எடுக்கப்படுகிறது. தொடர்ந்து அதனைக் கடைப்பிடிக்காத அதிகாரிகள், அலுவலர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும்.

நெல்லை மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கில் பேசிய பேச்சினை 6.11.99ஆம் நாளிட்ட "மணிச்சுடர்" இதழ் வெளியிட்டது.

அதிகாரிகளின் மெத்தப் போக்கினைக் கடுமையாகச் சாடியுள்ளேன். பேச்சு சுருக்கமாக வெளியிடப்பட்டிருந்தாலும் நறுக்குத் தெறித்தாற் போல அமைந்துள்ளது.

தமிழ் ஆட்சி மொழி அதிகாரிகள் ஒத்துழைப்பு தரவேண்டும் - இல்லையேல் கடும் நடவடிக்கை அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேச்சு

நெல்லை நவ.6- தமிழ் வளர்ச்சித் துறைசார்பில் நெல்லை மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கம் பாளை, தூய சவேரியார் கல்லூரியில் நடைபெற்றது. இக்கருத்தரங்கிற்கு தலைமை வகித்து அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசியதாவது:

கடந்த 1968ம் ஆண்டு பேரறிஞர் அண்ணா இருமொழிச்சட்டத்தை கொண்டு வந்தார். 1969ம் ஆண்டு வரை அவர் உயிரோடிருந்த காலத்தில் அந்தக் கனவு நிறைவேறவில்லை. அமைச்சர்களுக்கும், மேல்மட்டத்தில் உள்ள ஒரு சில அதிகாரிகளுக்கும் தமிழை ஆட்சி மொழியாக்குவதில் ஆர்வம் இருக்கலாம். ஆனால் நமது அலுவலர்கள் செயல்படுத்தவில்லை.

ஆட்சி மொழி செயலாக்கப்படவில்லை என்றால் கடுமையான தண்டனை வழங்க நடவடிக்கை எடுக்கப்படும். அதிகாரிகளுக்கு இதில் மெத்தனப் போக்கு இருக்கிறது.

தமிழில் 10 மருத்துவ கலைக் களஞ்சிய நூல்கள் வெளிவந்துள்ளன. அனைத்து அமைச்சர்களும் தமிழில்தான் கையெழுத்திடவேண்டும். அனைத்துக் கோப்புகளும் தமிழில்தான் இருக்க வேண்டும் என்று அரசு உத்தரவிட்டுள்ளது. முதன் முறையாக தலைமைச் செயலகத்தில் தமிழ் ஆட்சிமொழி ஆய்வு செய்யப்படுகிறது.

வருகிற 2000ம் ஆண்டு மார்ச் மாதத்திற்குள் அனைத்து அரசுத் துறை மடல்களும் தமிழில் இருக்கின்ற வகையிலும் எங்களது நடவடிக்கை இருக்கும். தமிழைப் படித்தவர்களுக்கே தமிழ்நாட்டில் வேலைவாய்ப்பு என்பதுதான் எங்களது இலக்காக இருக்கும்.

இவ்வாறு அவர் பேசினார்.

30.3.2000 நாளிட்ட 'தினமணி' இதழ் தமிழறிஞர்கட்கு நான் விடுத்த வேண்டுகோளைச் சிறப்பாக வெளியிட்டுள்ளது.

இதுவரை 'தமிழ் இலக்கிய வரலாறு' என்றால் தொல்காப்பியம் தொடங்கி, இக்காலப் புதுக்கவிதை வரை விரித்துரைப்பதுதான் வழக்கம். ஆனால், என் துறை, தமிழ் இலக்கிய வரலாற்றுக்குப் புதுவடிவம் தந்துள்ளது. அரசும் ரூ.3 இலட்சம் அதற்காக நிதி ஒதுக்கியுள்ளது. அதன்படி, இலங்கை, சிங்கப்பூர், மலேசியா நாடுகளில் எழுதப்பட்ட தமிழ் இலக்கியங்களையும், அவற்றை எழுதிய ஆசிரியர்களையும் இணைத்து இலக்கிய வரலாறு எழுதத் திட்டமிட்டுள்ளோம். அதுதான் 'உலகத் தமிழ் இலக்கிய வரலாறு'. அது தொடர்பான பேச்சுதான் இது.

தமிழுக்குப் பணியாற்றக் கிடைத்த வாய்ப்பைச் சரியாகப் பயன்படுத்துங்கள்.
தமிழறிஞர்களுக்கு தமிழ்க்குடிமகன் வேண்டுகோள்

சென்னை, மார்ச் 29- தமிழுக்குப் பணியாற்றக் கிடைத்த வாய்ப்பைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளுமாறு தமிழ் அறிஞர்களுக்குத் தமிழ் ஆட்சி மொழிப் பண்பாட்டு அமைச்சர் தமிழ்க்குடிமகன் வேண்டுகோள் விடுத்தார்.

உலகத் தமிழ் இலக்கிய வரலாறு நூலைத் தயாரிப்பதற்கான பயிலரங்கம் சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் திங்கள் கிழமை தொடங்கி மூன்று நாள்களாக நடைபெற்றது. புதன் கிழமை நடந்த நிறைவு விழாவில் அமைச்சர் பேசியதாவது:

உலகத் தமிழ் இலக்கிய வரலாற்று நூல் என்பது ஒரு புதிய முயற்சி. இதில் இலங்கை, சிங்கப்பூர், மலேசிய நாட்டைச் சேர்ந்த தமிழறிஞர்கள் பங்கேற்றுள்ளனர்.

இந்நூல் வரும் அக்டோபருக்குள் வெளியிடப்படும் என்ற யாழ்ப்பாணப் பேராசிரியர் சிவத்தம்பி கூறினார். இந்த நூல் வெளிவந்த பின்னர் இலங்கைத் தமிழ் வரலாற்றை இங்குள்ள மாணவர்கள் படிப்பார்கள். சிங்கப்பூர்த் தமிழ் வரலாற்றைச் சிதம்பரம் மாணவர் படிப்பார்.

பொதுவாக நமது பேச்சில் இருக்கும் வல்லமை செயலில் இல்லை. தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் பதிப்புத்துறை என்று தனியாக ஒரு துறை உள்ளது. இத்துறைக்கு கடந்த காலத்தில் ரூ.32 இலட்சம் செலவில் பொறிகள் வாங்கிக் கொடுக்கப்பட்டன. 19 ஊழியர்கள் பணிபுரிந்து வருகின்றனர். ஆனால் கடந்த ஆண்டு 7 நூல்கள் தான் வெளியிடப்பட்டன. ஆனால் பதிப்புத்துறை என்று தனித்துறை இல்லாமல் தனி நிதி ஒதுக்கீடு இல்லாமல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் கடந்த ஆண்டு 28 நூல்களை வெளியிட்டுச் சாதனை படைத்துள்ளது. இதுபோன்ற நாம் செயல் படவேண்டும். அரசு தரும் வாய்ப்பைத் தமிழ் அறிஞர்கள் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாவிட்டால் மீண்டும் அதுபோன்ற வாய்ப்புக் கிடைக்காது என்றார் தமிழ்க்குடிமகன்.

11.2.2000 'தமிழ் மாருதம்' இதழில் 'தினமணி'யில் வெளிவந்த பேச்சு மறுபதிப்புச் செய்யப்பட்டிருக்கிறது.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் நாடகம், கல்கத்தாவில் தமிழ் மையம் என்று பல செய்திகள் இங்குத் தரப்பட்டுள்ளன.

மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகனார் பேசுகின்றார்

"தமிழர்களின் வாழ்வுடன் ஒட்டியது நாடகக்கலை!

கோடைகாலத்தில் தமிழர்கள் நாடகம் நிகழ்த்தினர் என்பதைப் 'பட்டினப்பாலை' என்னும் சங்க இலக்கியத்தின் மூலம் அறிகிறோம்.

நாடகத் துறையில் ஏற்படும் மாற்றம் திரைப்படத் துறையிலும் பிரதிபலிக்கும். டி.கே. சண்முகம், ஆர்.எஸ். மனோகர் போன்றவர்கள், வரலாறு புராண, இதிகாச நாடகங்களைப் படைத்தனர். அப்போது, வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட திரைப்படங்களும் வெளிவந்தன!

தற்போது, புராண, இதிகாசங்களையோ, நேரடி வரலாற்றையோ, வரலாற்றுடன் கற்பனை கலந்த நாடகங்களையோ தயாரிப்பதில்லை! 10,15 ஆண்டுகளுக்கு முன், நம்மிடமிருந்த நல்ல நெறிகள் கூடத் தற்போது பாழ்பட்டுள்ளன!

சாதி அமைப்புப் போன்ற சமத்துவமற்ற நிலையிலிருந்து, சமத்துவம் நோக்கிச் செல்ல மக்களின் மனமாற்றத்திற்காக நாடக இயக்கங்களும், கலைஞர்களும் பணியாற்ற வேண்டும்!"

இவ்வாறு தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகத்தில் நாடகக்கலை விழாவைத் தொடங்கிவைத்து உரை நிகழ்த்தினார்.

"ஆண்டு நிதியாக ரூ.113 இலட்சம் பெற்றுக்கொண்டு வந்த தமிழ்ப்பல்கலைக்கழகத்துக்கு இப்போது ரூ.354 இலட்சமாக உயர்த்தியுள்ளது தமிழக அரசு" என்றார் அமைச்சர்.

கல்கத்தாவில் 'தமிழ்மையம்'

கல்கத்தா நகரில், தமிழக அரசின் சார்பில், 'தமிழ்மையம்' ஒன்று தொடங்கப்பட்டுள்ளது. அதனைத் தொடங்கி வைத்து அமைச்சர் பேசியதாவது:

"தற்காலத் தகவல் தொடர்பு வசதிக்கேற்பத் தமிழ்பற்றிய அனைத்துத் தகவல்களையும் பெறும் மையமாக இது விளங்கும்! தமிழ் கற்க விரும்புபவர்களுக்குத் தமிழைக் கற்றுத் தர அனைத்து வசதிகளும் செய்யப்பட்டுள்ளன. மேலும் வாரந் தோறும் திருக்குறள் வகுப்பும், திங்கள் தோறும் தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகளும், ஆண்டுக்கு ஒருமுறை கலை நிகழ்ச்சிகளும் வழங்கிடும் வகையில் இம் மையத்தின் பணிகள் இருக்கும்! அன்றியும் ஓர் இசைப் பள்ளியும் ஏற்படுத்தப்படும்!" - தினமணி 11.2.2000

* * *

இந்தப் பேச்சுகளை இங்குத் தருவதற்கு ஒரு காரணம் உள்ளது. தமிழை ஆட்சிமொழியாக்குவது தொடர்பான செய்திகள் அனைத்தும் ஆட்சிமொழிக் கருத்தரங்குகளில் இடம் பெறுகின்றன. நாங்களே 75 வகையான தமிழ்ப் பணிகளைச் செய்துள்ளோம். அவற்றைத் தொகுத்து நூலாகவும் வெளியிட்டுள்ளோம். அவை தொடர்பாகவெல்லாம் எங்கள் சிந்தனை எவ்வாறுள்ளது, எங்கள் பேச்சு எவற்றைத் தொட்டுச் செல்கிறது என்பவற்றை ஓரளவுக்காவது உணர்த்தினால்தான் தமிழ் வளர்ச்சித் துறையின் பல்துறைப் பணிகளின் பாங்குகள் தெரிய வரும்.

இன்னும் எத்தனையோ உரைகள் உள்ளன.

என்றாலும் 'ஒரு பதமாக' மட்டும் இங்கு உரைகள் தொகுக்கப்பட்டுள்ளன.

## இயல் - முப்பது

## தமிழ் வளர்ச்சி மன்றம்

தமிழ் வளர்ச்சி மன்றம் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறையில் உயர்மட்டக்குழு. முறைப்படி முதல்வர்தான் இதன் தலைவர். தமிழ் வளர்ச்சி அமைச்சர் இதன் துணைத் தலைவர். ஆனால் 'நீங்களே இருந்து நடத்துங்கள்' என்று முதல்வர் சொல்லிவிட்டதால், தொடர்ந்து நானே தலைமை தாங்கி நடத்திக்கொண்டிருந்தேன்.

அரசாணைப்படி இதில் உள்ள உறுப்பினர்கள் : 40 பேர்

முதற் கூட்டம் 30.6.1998 அன்றும் இரண்டாவது கூட்டம் 1.9.98 அன்றும் மூன்றாவது கூட்டம் 4.11.98 அன்றும் நடைபெற்றன. 14.12.99 இல் 4 ஆம் கூட்டமும் 5.10.2000த்தில் 5 ஆம் கூட்டமும் நடைபெற்றன. விரிவாக இல்லாவிட்டாலும், பெருமளவுக்கு உறுப்பினர்கள் பேசிய பேச்சுகளும் அவற்றிற்கு அவ்வப்போது அமைச்சர் தந்த விளக்கங்களும் முழுமையாக அச்சிடப்பட்டு, 'கூட்டக் குறிப்புரை' எனும் பெயரில் அனைவர்க்கும் வழங்கப்பட்டன.

அதில் பின்வரும் கூட்டக் குறிப்புகளைப் பார்த்தால் தெரியும். அரசின் சில செயற்பாடுகளைத் திறனாய்வு செய்தவர்களும் உண்டு. அவற்றுக்கும் தக்க விடை தரப்பட்டுள்ளதையும் காணலாம்.

இந்த மன்றத்தின் தகுதி குறித்து, சிலம்பொலி செல்லப்பன் கூறுகிறார்.

"முன்பு எழுத்துச் சீர்திருத்தம் என்கிற முறையில் ஐ, ஔ வரி வடிவங்களும் சேர்ந்தே வந்தன. அது பற்றிய கூட்டம் நடைபெற்றபோது வ.சுப. மாணிக்கனார், கி.ஆ.பெ. விசுவநாதம் போன்றோர் கடுமையாக எதிர்த்தார்கள். விவாதத்திற்குப் பிறகு ஏற்றுக்கொள்கிறோம் என்பதை அந்தக் கூட்டத்திலேயே தெரிவித்தார்கள். முடிவும் எடுக்கப்பட்டது. எதிர்ப்பு இருக்கும் என்று நம்பினார்கள். பிறகு பலராலும் கடைப்பிடிக்கப்பட்டது. இப்போது இம் மன்றக் கருத்தை அனைவரும் ஏற்க வாய்ப்புள்ளது. ஏனெனில் இந்த மன்றத்திலே இருப்பவர்கள் தமிழகத்தைப் பிரதிபலிக்கிற வகையில் உள்ள அறிஞர்கள். எனவே இந்த மன்றம் சொல்கிற கருத்தை, ஆய்ந்து தெளிந்து உறுதியான முடிவாக எடுத்தல் வேண்டும். முன்பு செய்யப்பட்ட சீர்திருத்தத்தைக் கூடச் சில ஆண்டுகள் சிலர் பின்பற்றாமலிருந்தார்கள். நூல்களில் சீர்திருத்திய எழுத்துக்கள் இல்லாவிட்டால் தமிழ் வளர்ச்சித் துறையின் பரிசுப் போட்டிக்கு அவை கருதப்படமாட்டா என்று தெரிவித்த பிறகு சீர்திருத்திய எழுத்துக்களை நூல்களில் பயன்படுத்தத் தொடங்கினார். தேவையான மாற்றத்தையும். கால எல்லையையும் வகுத்துக்கொண்டு செய்யலாம்."

இதில் பேசப்பட்ட பல செய்திகள் ஆணைகளாகவும் மேல் நடவடிக்கைகளாகவும் செயலுக்கு வந்துள்ளன.

அவற்றுள் சிலவற்றைப் பார்ப்போம்.

அ.தி.மு.க. ஆட்சிக் காலத்தில் ஆட்சி மொழிக் குழு அமைக்கப்பட்டிருந்தது. அ.தி.மு.க. ஆட்சியின்போது அக்குழுவின் அறிக்கை வந்துவிட்டது. கூட்டத்திற்குத் தலைமையேற்றுப் பேசிய மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி அமைச்சர், முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் ஆட்சிமொழிச் செயலாக்கம், தமிழ் வளர்ச்சி மன்றம் தொடர்பான பணிகளையும், முன்னேற்றத்தையும் தெரிவித்தார். தமிழ் வளர்ச்சிப் பணியில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் காட்டி வரும் அக்கறையையும் ஆழ்ந்த ஈடுபாட்டினையும் விவரித்தார். மாண்புமிகு முதல்வர் அவர்கள் அண்மையில் பேசும்போது நீதிமன்றங்களில் போதுமான அளவிற்கு வழக்கறிஞர்கள் தமிழில் தங்கள் கருத்துகளைத் தெரிவிப்பதில்லை என்பதையும், நீதிமன்றங்கள் தமிழில் தீர்ப்புகள் வழங்குவதில்லை என்பதையும், பொதுமக்களிடையே இது மிகப் பெரியகுறையாக இருக்கிறது என்பதையும் சுட்டிக் காட்டியுள்ளதை நினைவு படுத்தினார். எனவே தமிழ் வளர்ச்சி பற்றித் திட்டவட்டமான முடிவுகளை எடுத்திட ஒரு வாய்ப்பாக இக்கூட்டம் அமையவேண்டும் என்றும், எல்லோரும் தங்கள் கருத்துகளைத் தயக்கமின்றித் தெரிவிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

ஆட்சி மொழிச் செயலாக்கம் பற்றியும், தமிழ் வளர்ச்சிப் பணிகள் பற்றியும் அரசு எடுத்துள்ள நடவடிக்கைகள் பற்றி நானே தயாரித்துத் தற்போது உங்களிடம் கொடுத்திருக்கின்ற குறிப்பேட்டிலிருந்தே நீங்கள் நன்கறிந்து கொள்ளலாம். தலைமைச் செயலகத்தில் இருக்கின்ற நம்முடைய இந்திய ஆட்சிப் பணி அலுவலர்கள் ஆட்சி மொழித் திட்டத்தை இன்னும் முழுமையாக மேற்கொள்ளவில்லை. இதுபற்றி ஒரு முழுமையான புள்ளி விவரத்தையும் தயார் செய்துள்ளேன். அண்மையில் அமைச்சரவைக் கூட்டத்தில் பேசும்போது மாண்புமிகு முதல்வர் அவர்கள் என்னை முழுமையாக இதைப் பற்றிப் பேசச் சொன்னார்கள். பல துறைகளில் கோப்புகள் தொடங்கும்போது தமிழில் தொடங்கும்; இடையில் ஆங்கிலத்தில் இருக்கும்; கடைசியாக என்னிடத்தில் வரும்போது தமிழில் வரும். அதுவும் எனக்கு அனுப்பப்படுகிறது என்பதால் மிகவும் சிரமப்பட்டுத் தமிழில் வரும். கோப்புகளைத் தொடங்கும்போதே தமிழில் தொடங்கவேண்டும். அவை கடைசிவரை தமிழிலேயே எழுதப்படுதல் வேண்டும். ஒரு துறையை ஆய்வு செய்யும்போது, ஆய்வுக்கு முன்னால் 87 ஆயிரம் மடல்கள் பொதுமக்களுக்கு எழுதப்பட்டிருக்கின்றன. அதில் கிட்டத்தட்ட 25 ஆயிரம் மடல்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக்கின்றன. இதையும் அமைச்சரவைக் கூட்டத்தில் தெரிவித்தேன். பொதுமக்களிடமிருந்து தமிழில் வரும் கடிதங்களுக்குத் தமிழில்தான் மறுமொழி எழுதவேண்டும். தலைமைச் செயலாளர், இந்திய ஆட்சிப்பணி அலுவலர்களின் கூட்டத்தை நடத்துவதென்றும், தவறு செய்பவர்களைத் தண்டிக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டுமென்றும் 20.08.98 அன்று நடைபெற்ற அமைச்சரவைக் கூட்டத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது. அனைத்துத் துறைகளின் செயலாளர்களுக்கும் நானே

கைப்பட நேர்முக மடல் எழுதியுள்ளேன். அரசாணைகள் தமிழில்தான் வெளியிடப்படவேண்டும். ஆங்கிலத்தில் வெளியிட வேண்டுமென்ற இன்றியமையாமை ஏற்பட்டால் கூட அந்த ஆங்கில அரசாணையுடன் தமிழ் அரசாணையும் வெளியிடப்படவேண்டும். இதையும் மீறி ஆங்கிலத்தில் மட்டுமே அரசாணை வெளியிட்டால் தண்டனை வழங்கப்படவேண்டும். ஒரு துறையில் 1.4.1997 முதல் 3.12.1997 வரை வெளியிடப்பட்ட அரசாணைகள் கணக்கெடுக்கப்பட்டன. அத்துறையில் ஆங்கிலத்தில் 296 அரசாணைகள் வெளியிடப்பட்டுள்ளன. அனைத்துச் செயலாளர்கள் கூட்டம் விரைவில் நடத்தப்படவிருக்கிறது. பொதுவாக மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களில் ஆட்சி மொழித் திட்டம் நன்றாகச் செயற்படுகிறது. சார்நிலை அலுவலகங்களில் ஏறத்தாழ 75 விழுக்காடு அளவில் செயற்பாடு அமைந்துள்ளது.'

தமிழ்ப் பயன்பாடு பற்றி வா.செ. குழந்தைசாமி கேட்டார். அமைச்சர் ஆட்சி மொழிக் கருத்தரங்குகளை மேற்கோள் காட்டி விளக்கமளிக்கிறார்.

'பெரும்பாலான மாவட்டங்களில் ஆட்சிமொழிப் பயன்பாடு எந்த அளவு இருக்கிறது என்பதை ஆட்சி மொழிக் கருத்தரங்குகள் மூலம் அறிந்திருக்கிறோம். ஆட்சி மொழிக் கருத்தரங்குகளில் நானே நேரடியாகப் பங்கு கொண்டு வருவதனால் நல்ல பயன் விளைகிறது. இராமநாதபுரம் மாவட்டத்தில் அந்த மாவட்டக் கருத்தரங்கிற்கு நான் வருகிறேன் என்ற அறிவிப்பு ஆங்கிலத்தில் இருந்தது. இதை மேடையிலேயே சுட்டிக் காட்டித் திருத்தினேன். நடைபெறுவது தமிழ் ஆட்சி மொழிக் கருத்தரங்கு; என் வருகை பற்றி அறிவிப்பு ஆங்கிலத்தில். அமைச்சரவைக் கூட்டத்திலும் இதைச் சொல்லிக் கடுமையான நடவடிக்கைகள் வாயிலாகவே இத்தகைய நிலைமைகளைத் தவிர்க்க முடியும் என்றும் வலியுறுத்தினேன்.'

மூன்றாம் கூட்டம் நடைபெற்றபோது நிகழ்ச்சி நிரல் வழங்கப்பட்டது. தமிழ் ஆட்சிமொழித் திட்டம், மழலையர் பள்ளிகளில் தமிழ், தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் ஆகிய தலைப்புகளில் அறிஞர்கள் விரிவான முறையில் தங்கள் கருத்துகளை எடுத்து வைத்தனர்.

ஒவ்வொன்று குறித்தும் அது தொடர்பாக எழுதப்படும் 'நூலில்' இடம்பெறும் வகையில் கருத்துகளை ஆராய்வோம்.

விளம்பரப் பலகைகள் குறித்து முனைவர் பு.பா. இராசராசேசுவரி குறிப்பிடுகிறார். அதற்கு அமைச்சரின் விளக்கமும் உள்ளது.

'வணிக நிறுவனப் பெயர்ப்பலகைகளில் தமிழ்' என்ற நூலில் ஒரு சொல்லுக்கு மூன்று பெயர்கள் உள்ளன. ஒன்று மட்டும் இருந்தால் அதையே பயன்படுத்த வசதியாக இருக்கும்.

மாண்புமிகு அமைச்சர்:

எடுத்துக்காட்டாக ஜுவல்லர்ஸ் என்பதற்கு அணிமணிப்பொற்சாலை நகைக்கடை - நகை மாளிகை என்று கொடுக்கப்பட்டுள்ளது. இதில் விரும்பியதை அவர்கள் எழுதிக்கொள்ளட்டும் என்றுதான் அவ்வாறு கொடுத்துள்ளோம். எப்படியாவது முதலில் தமிழில் எழுதும் நிலை வரட்டும்.

வாகனங்களில் தமிழில் எழுதிக்கொள்வது குறித்துத் தெளிவான ஆணை இருக்கிறது.

மராட்டியத்தில் எண்களும் மராட்டிய எண்கள் தான். நாம் பயன்படுத்தும் பொதுவான எண்கள் அல்ல. எனினும் தமிழக அரசு பெருந்தன்மையோடும் தெளிந்த சிந்தனையோடும் ஆணையைப் பிறப்பித்துள்ளது.

தினமலர் ஆசிரியர் திரு. இரா. கிருஷ்ணமூர்த்தி

வாகனங்களில் எண்கள் எழுதுவதில் புதிய குழப்பம் உள்ளது. இந்தச் செய்தி மதுரையிலிருந்து வந்த செய்தி. ஒரு செய்தியை மக்கள் ஏற்றுக்கொள்கிறார்களா என்பது பத்திரிக்கை மூலமாகத்தான் தெரியும்.

மாண்புமிகு அமைச்சர்

தமிழ்நாட்டில் வேறு எங்கும் இதற்கு எதிர்ப்பு இல்லை. திறனாய்வு செய்தால் முழுமையாகச் செய்யவேண்டும். தமிழ்நாட்டில் நாம் விரும்பினால் ஊர்திகளில் தமிழில் எழுதலாம். எண்ணும் தமிழில் இருக்கலாம். எண்களைப் பொறுத்தவரை உலக எண்களை எழுதிகொள்ளலாம். எண்களைத் தமிழில் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று சட்டத்தில் இடமிருக்கிறது என்றாலும் சில எண்களும், எழுத்துகளும் ஒரே மாதிரியாக இருப்பதால் எண்களைப் பொறுத்தவரை உலக எண்களையே பயன்படுத்தலாம்.

அலுவலர்கள் அலட்சியப் போக்குபற்றி மா. நன்னன் குறிப்பிடுகிறார்.

ஆட்சிமொழித் திட்ட அரசாணைகளைப் புறக்கணிக்கும் அலுவலர்களுக்குத் தண்டனை வழங்கப்படவேண்டும். 'கொட்டினால்தான் தேள். இல்லாவிட்டால் பிள்ளைப் பூச்சி' என்றுதான் அலட்சியம் காட்டுவார்கள்.

இவர் ஏற்கெனவே தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநராக இருந்தவர்.

தினமலர் ஆசிரியர் கூறும் கருத்து கவனிக்கத்தக்கது.

ஒரு பத்திரிகை நடத்துவது என்பது எளிதான காரியம் அல்ல. தமிழில் எம்.ஏ., பி.எச்.டி., படித்தவர்களை வைத்துத்தான் செய்தியைத் தருகிறோம். அவர்களே சந்திப் பிழைகளோடு எழுதும்போது நாங்கள் என்ன செய்யமுடியும்? ஆங்கிலத்தில் இருப்பதுபோல தமிழில் 'ஸ்பெல் செக்'என்ற கருவி இல்லை. கர்நாடகத்திலும், குஜராத்திலும் வந்து விட்டது. அடிப்படை 'ஸ்பெல் செக்'கருவி வரவேண்டும்.

'Spell checker' தமிழில் இல்லை என்று கூறியுள்ளார். ஏற்பாடு செய்யலாம் என்றார் அமைச்சர். தற்போது வந்துவிட்டது என்பதுதான் வளர்ச்சி.

க.ப. அறவாணன், முத்துப்பிள்ளை, முனைவர் ச. முத்துக்குமரன் போன்றவர்கள் தமிழ் வளர்ச்சித் துறைப் பணிகளைப் பட்டியலிட்டுப் பாராட்டினர்.

'கடந்து ஆண்டுகளை ஒப்பிட்டுப் பார்க்கும்போது தமிழ் வளர்ச்சித் துறை அருமையாகச் செயலாற்றி இருக்கிறது என்பதை இந்தப் பட்டியல் எடுத்துக் காட்டுகிறது. ஆட்சிமொழிக் கருத்தரங்குகள், இணையம், இலக்கியம், தமிழ் வளர்ச்சி வளாகம், தமிழ் அறிவியல் நூல்கள், சான்றோர் நூல்கள் நாட்டுடைமையாக்கம், வெளிநாடுகளுக்கு நூல்கள் நன்கொடை போன்ற சீரிய பணிகள் மகிழ்ச்சியைத் தருகின்றன.

தமிழ் வளர்ச்சித்துறை தொடங்கப்பட்ட காலத்தில் நான்கு ஆண்டுகள் நான் பணியாற்றியுள்ளேன். தற்போது அமைச்சர் அவர்களின் முயற்சியால் மிகச் சிறப்பான பணிகள் நிறைய நடந்தேறி வருகின்றன. ஊர்திகளில் தமிழ், அகரமுதலி மடலங்கள் வெளியீடு, தமிழைச் செம்மொழியாக்கும் முயற்சி, தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் உருவாக்கம் முதலிய பல முயற்சிகள் பாராட்டத்தக்கன.

இரண்டு ஆண்டுகளில் என்ன செய்திருக்கிறோம் என்பதைக் குறிப்பேட்டில் பார்த்த பிறகுதான் செய்துள்ள பணிகளின் பெருமை தெரிகிறது. செயல்பாடுகள் மிக மிக அதிகம்.

ஆட்சிமொழித் திட்ட நிறைவேற்றத்தில் நிறையவே நிறைகள் இருக்கின்றன. எடுக்கின்ற முடிவுகளை அரசு அருமையாகச் செயற்படுத்தி வருகின்றது. மாண்புமிகு அமைச்சர் அவர்கள் கொடுத்துள்ள அறிக்கையில் விவரம் முழுமையாக உள்ளது. இதற்காக அரசைப் பாராட்டத்தான் வேண்டும். ஆனாலும் இந்தத் திட்டம் இன்னும் முழுமையடையவில்லை என்பது நம் எல்லோருக்கும் தெரியும். அமைச்சர் அவர்கள் எடுத்து வரும் முயற்சிகள் பற்றியும் நமக்கும் தெரியும். அமைச்சரவைக் கூட்டத்திலேயே எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அதுமட்டுமல்லாமல் செயலாளர்களையெல்லாம் ஒன்று கூட்டித் தலைமைச் செயலாளர் கூட்டம் நடத்தவும் அமைச்சர் அவர்கள் முயற்சி செய்து வருகிறார்கள். இந்த முயற்சிகள் நல்ல பயன்தரும்.'

'ஆட்சித் தமிழ்' நூல் பற்றித் தமிழ் வளர்ச்சி மன்றத்தில் அமைச்சர் கூறியதாவது:

அண்மையில் தேர்வாணைய அலுவலகத்திற்கு நான் நேரில் சென்று கலந்தாய்வு செய்துள்ளேன். தேர்வாணையத் தேர்வுகளில் தமிழ்நாட்டில் பணிபுரிபவர்கள் என்ற முறையில் தமிழில் விடைகள் எழுத வகைசெய்யப்படவேண்டும். 'ஆட்சிமொழி'பற்றியும் ஒரு தேர்வு எழுதி வெற்றி பெற வேண்டும் என்றும் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. இதில் தேர்ச்சி பெற்றால்தான் தகுதிகாண் பருவம் முடிக்கப்படும் என்று செயல்முறைப்படுத்த வேண்டும்.

தமிழ் வளர்ச்சி மன்றம்

அரசினால் அமைக்கப்பட்டுள்ள தமிழ் வளர்ச்சி மன்றம் சிறப்பாக இயங்கி வருகிறது. தமிழ் வளர்ச்சி தொடர்பான எதனையும் அலசி ஆராய்ந்து பரிந்துரைக்கும் தகுதியை இந்த மன்றம் பெற்றுள்ளது.

தமிழக அரசின் தமிழ் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம் குறித்துத் தமிழ் அறிஞர்களின் கருத்தினைத்தான் மேலே கண்டோம்.

வெளியில் இருக்கிற, சிலர் இவற்றை அறியாமல் மனம்போன போக்கில் கருத்துத் தெரிவிக்கின்றார்களே என்பதுதான் என் வருத்தம்.

தமிழ் வளர்ச்சி மன்றக் கூட்டம் நாள் : 4.11.98 கூட்டத் தீர்மானம்

அ. ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம்

1 தமிழ் ஆட்சி மொழித் திட்டம் முழுமையாகவும் முனைப்பாகவும் நடைமுறைப்படுத்தப் படப் பல்வேறு வகையில் பெரும் பங்காற்றி வரும் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களையும், மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி - தமிழ்ப் பண்பாடு, மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களையும் இம்மன்றம் மனதாரப் பாராட்டி நன்றி தெரிவித்துக்கொள்கிறது.

அமைச்சர் பெருமக்களின் ஆணைகளின்படியும் வழிகாட்டுதலின்படியும் பல்வேறு துறைகளில் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதை இம்மன்றம் வரவேற்கிறது; பாராட்டி மகிழ்கிறது. எனினும் இன்னும் பல துறைகளில் அலுவலர்கள் முழுமையாகச் செயற்படவில்லை என்பதை இம்மன்றம் வருத்தத்துடன் சுட்டிக்காட்டுகிறது.

2. அனைத்துத் துறைகளிலும் அரசாணைகள் பிறப்பித்தல், கோப்புகளை எழுதுதல், பொதுமக்களுக்குக் கடிதம் எழுதுதல் முதலிய அனைத்தும் முழு அளவில் தமிழிலேயே அமைய முனைப்பான நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமென அரசை இம்மன்றம் கேட்டுக்கொள்கிறது.

3. தேர்வாணையத்தில் தமிழுக்கு எந்த அளவுக்கு இடம் தரப்படுகிறது என்பதை முழுமையாக அறிந்து, அது தொடர்பான ஒரு முழுமையான அறிக்கையை அனைத்து உறுப்பினர்களுக்கும் வழங்குமாறு கேட்டுக்கொள்கிறது.

4. தமிழ்நாடு அரசு அலுவலர்கள் / பணியாளர்கள் தேர்வாணையத்தால் நடத்தப் பெறவுள்ள 'ஆட்சித்தமிழ்' எனும் தேர்வினை எழுதித் தேர்ச்சி பெற்றால்தான், அவர்களின் தகுதிகாண் பருவம் முடிக்கப்பெறும் என எடுத்துள்ள முடிவினை இம்மன்றம் வரவேற்பதுடன், இதைத் தொடர்ந்து செயற்படுத்த வேண்டுமென்றும் வற்புறுத்துகிறது.

5. அரசாணைகள் அனைத்தும் தமிழிலேயே பிறப்பிக்கப்பட வேண்டும் என்றும், தேவைப்படும் நேர்வுகளில் மட்டும் ஆங்கிலத்திலும் பிறப்பிக்கலாம் எனும் வகையிலும் ஆணை வெளியிடப் பெற வேண்டும் என்று இம்மன்றம் கேட்டுக்கொள்கிறது.

மாண்புமிகு முதல்வர் அவர்கள் அமைச்சரவையிலேயே ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் குறித்து அறிவிப்புச் செய்துள்ளதற்கும், தலைமைச் செயலாளர் அவர்கள் அனைத்துச் செயலாளர்களையும் கூட்டி, இத்திட்டச் செயலாக்கம் குறித்துத் தக்க நடவடிக்கைகள் மேற்கொள்ள ஆணை பிறப்பித்தமைக்கும் மாண்புமிகு முதல்வர் அவர்களுக்கு இம்மன்றம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது. தலைமைச் செயலாளர் நடத்தும் கூட்டத்தில் அனைத்துத் துறைகளிலும் இத்திட்டச் செயலாக்கம் முழுமையாக அமைந்திட உறுதியான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டுமென இந்த மன்றம் கேட்டுக்கொள்கிறது.

ஆ. மழலையர் பள்ளி

1. தமிழை ஒரு பாடமாகச் சொல்லித் தரும் மழலையர் பள்ளிகளுக்கே ஏற்பு வழங்க வேண்டுமென இம்மன்றம் கேட்டுக்கொள்கிறது.

2. மழலையர் பள்ளிகளில் அனைத்துப் பாடங்களையும் தமிழ் மொழியிலேயே சொல்லித் தருதல் வேண்டும் என்பதைக் கொள்கை அளவில் ஏற்றுக்கொண்டு, முதற்கட்டமாக பூகோளம், வரலாறு, சமூக அறிவியல், கணிதம் ஆகிய பாடங்களை வரும் கல்வியாண்டிலிருந்து தமிழில் நடத்துதல் வேண்டுமென்றும், அடுத்த கல்வியாண்டு முதல் அறிவியல் பாடங்களையும் தமிழில் சொல்லிக்கொடுக்க நடவடிக்கை எடுக்கப்பட வேண்டுமென்றும் இம்மன்றம் கேட்டுக்கொள்கிறது.

3. தமிழில் பயிற்றுவிக்கும் மழலையர் பள்ளிகளுக்குச் சலுகைகள் வழங்கப்படலாம் என இம்மன்றம் பரிந்துரைக்கிறது.

1. ஏற்புக் கட்டணத்தைப் பாதியாகக் குறைக்கலாம்.
2. அரசின் பாடநூல்களை இலவசமாக வழங்கலாம்.
3. பேருந்துக் கட்டணச் சலுகை அளிக்கலாம்.
4. வகுப்பறை, குடிநீர் வசதி, கழிப்பிட வசதி போன்ற வசதிகளைச் செய்து தரலாம்.
5. பள்ளி வளாகத்தில் தமிழில் பேசினால் தண்டனை என்ற நிலையைக் கடைப்பிடிக்கும் பள்ளிகளின் ஏற்பு உடனே நீக்கப்படலாம்.

தமிழ் அறிஞர்களின் கருத்துகளைக் கேட்டு, அரசின் கொள்கைகளை இன்னும் கூர்மையாக்கிக் கொள்ளவும் அரசின் பணிகளை அனைவரும் அறியச் செய்யவும் தமிழ் வளர்ச்சி மன்றக் கூட்டங்கள் பயன்படுகின்றன.

## இயல் - முப்பத்தொன்று

## இதழ்கள் - தவறான புரிந்துணர்வுகள் - திறனாய்வுகள்

தமிழ்நாட்டில் தொடங்கப்பட்ட எத்தனையோ நாளிதழ்கள், கிழமை, மாத இதழ்கள் காணாமல் போய்விட்டன. ஆனால் சில புதிய இதழ்களும், பழைய இதழ்களும், சில சிற்றிதழ்களும் நிலைத்து நின்று மக்களிடம் சென்று சேருகின்றன. செல்வாக்குடன் வலம் வருகின்றன.

1996இல் நான் அமைச்சர் பொறுப்பேற்ற பின்பு 'தமிழ் வளர்ச்சி' தொடர்பாக நான் எடுத்த முயற்சிகளுக்கு எத்தனையோ இதழ்கள் வரவேற்பளித்தன. பக்கம் பக்கமாகவும் சில நேரம் சிறு சிறு துணுக்குகளாகவும் செய்திகளை வெளியிட்டன. சில இதழ்கள் திட்டமிட்டு என்னைக் கேலியும், கிண்டலும் செய்தன.

சிலர் பொறுப்போடு திறனாய்வு செய்தார்கள். அப்படிப்பட்ட திறனாய்வுகளில் குறைகள் தென்பட்டால் நானே அவர்கட்கு விளக்க மடல் எழுதுவதுண்டு. அவர்கள் அதையும் வெளியிட்டுத் தெளிவு படுத்தியுள்ளார்கள்.

அதன்பின் நான் அறநிலையத்துறைப் பொறுப்பையும் ஏற்றபின் - தமிழ் அருச்சனையை வலியுறுத்திய பின் அதற்கெனத் தனிப் படையெடுப்புகள் - ஆகமங்களைத் துணைக்கொண்டு என்மீது தாக்குதல்கள்.

தமிழ்வழிக் கல்வி தொடர்பாக நாங்கள் எடுத்த முயற்சிக்குப் பெரிய இதழ்கள் சில அருமையான வரவேற்பைத் தந்தன. ஆனால் சில இதழ்களில் சிலரது மறுப்புகளும் வந்தன.

ஒரு சில தமிழறிஞர்களே கூட, நாங்கள் என்ன செய்கிறோம், எந்த அளவுக்கு முன்னேற்றம் இருக்கிறது என்பன பற்றியெல்லாம் கொஞ்சமும் கவலைப்படாமல் தங்கள் கருத்துகளைத் தெரிவித்துள்ளனர்.

ஒரு 'எட்டு'என் அறைக்கோ, வீட்டுக்கோ வந்து, ஐயா, நாம் இந்த முயற்சியில் எந்த அளவுக்கு வென்றிருக்கிறோம், எதுவரையிலும் சென்றிருக்கிறோம் என்று கேட்டு விட்டுச் சென்றிருந்தால் அவர்களுக்கு விளக்கம் கிடைத்திருக்கும்.

ஆனால் அவர்களுக்கு அதற்கெல்லாம் நேரமில்லை. தங்கள் சொந்தக் கோரிக்கைக்காக என்னிடம் நடையாய் நடந்தவர்கள் கூடத் 'தமிழ் ஆட்சிமொழி' பற்றிக் கேட்டுத் தெரிந்துகொள்ளவில்லை. ஆட்சிமொழிக் கருத்தரங்குக்கு வந்து செல்வதில்லை.

இந்நிலையில், பலபேருடைய தவறான அணுகுமுறைகளைச் சுட்டிக்காட்ட வேண்டியது இந்த நூலுக்குத் தேவையான ஒன்றாகும்.

வாழும் காலத்திலேயே, என்னோடு தொடர்பு உள்ள போதே, சரியாகப் புரிந்துகொள்ளாமல் புலம்புபவர்கள் பழைய வரலாறுகளை எந்த அளவுக்குச் சரியாக எழுதுவர்? வருங்காலத்தில் தங்கள் அறியாமையால் உண்மை வரலாறுகளை எந்த அளவுக்கு மறைக்கப் போகிறார்கள் என்பதை எண்ணி நான் இப்போதே வருந்துகிறேன்.

இவற்றையெல்லாம் மனத்திற்கொண்டுதான் இந்தக் கட்டுரை வரையப்படுகிறது. இன்றும் இந்த 'இருள் நிலை' தொடர்கிறது.

உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் தமிழ் வளர்ச்சித் துறையின் கீழ் வருவது. 1996 முதல் 2001 வரை என் ஆளுகைக் கீழ் இருந்து வந்தது. அதிலும் எத்தனையோ சீர்திருத்தங்கள், ஆக்கப்பணிகள் நிகழ்த்தப்பெற்றன. அங்கு பணியாற்றும் மு. வளர்மதி 'தமிழ் வள்ளல் பாண்டித்துரைத் தேவர்' பற்றிய நூலை எழுதியுள்ளார். 1998இல் வெளியான இந்நூல் பாண்டித்துரைத் தேவர் பற்றிய சரியான படப்பிடிப்பாகும். எனினும் இன்னும் நயமாகச் சொல்லப்பட வேண்டிய செய்திகள் சில விடுபட்டுள்ளன.

இவ்வளவு எழுதிய வளர்மதி - துறையில் பணியாற்றுபவர். துறை அமைச்சரின் பணிகளை நன்குணர்ந்தவர். ஆனால் நூலை முடிக்கும் போது அவரே இப்படி முடிக்கிறார்.

"ஆனால் ஆண்டுகள் பல கடந்தும் ஆட்சியில் தமிழ் இல்லை; . . . ."

இவரைப் போன்றவர்களே ஏற்பட்டுள்ள வளர்ச்சி பற்றிச் சரியாக உணராமலும் உணர்த்த முடியாமலும் இருக்கும்போது, எளிய பாமரன் எப்படி உணர்வான்? எங்கோ ஓர் அலுவலகத்தில் அமர்ந்து பணியாற்றும் - அ.1, மேசையில் அமர்ந்து பணியாற்றும் ஒருவர் அரசாணைகளையெல்லாம் அறிந்து வைத்துப் பணியாற்றுவார் என்று எப்படி எதிர்பார்க்கமுடியும்! தெளிவும் திறனும் உள்ள மு. வளர்மதி போன்றவர்கள் பலர் மக்களை விட்டு வெகுதொலைவில் விலகி நின்றுதான் நூல் எழுதுகிறார்கள் என்று தெளிவாகி விடுகிறது.

உண்மையறியாத இவர்களுக்கும் உண்மையை உணர்த்தத்தான் இந்த நூல்.

18.8.1997ஆம் நாளிட்ட தினகரன் இதழில் ஓர் ஆசிரியவுரை. முதலில் அதில் உள்ள சில பகுதிகளை அப்படியே தருகிறேன்.

"எங்கும் தமிழ் - எதிலும் தமிழ் - சரிதான்: அங்கும் தமிழ் - அதிலும் தமிழ் சரியா?

இன்று தமிழ் மண்ணில் ஆங்கிலத்துக்கு உள்ள இடம் என்ன? இனியும் தொடர்ந்து தமிழ் மண்ணில் ஆங்கிலம் பெற்றிருக்க வேண்டிய இடம் என்ன?

இன்று தமிழ்நாட்டில் சில பல தமிழ்மொழிப் பற்றாளர்களும் இவர்கள் சார்ந்திருக்கும் இயக்கங்களும் ஒரு சில அரசியல் கட்சிகளும் கூட ஆங்கில ஒழிப்பை உரிய கோணத்தில் அணுகாமல் அவ்வப்போது களம் இறங்கிய வண்ணம் இருக்கிறார்கள்.

ஆங்கிலம் ஒழிக்கப்பட்டால் தமிழ்மொழிக்கு ஏற்படும் ஏற்றம் எவ்வளவு? ஆங்கிலம் ஒழிக்கப்பட்டால் தமிழ்ச் சமுதாயத்துக்கு ஏற்படும் இறக்கம் எவ்வளவு? இந்த வினாக்களை தமிழ்நாடு மாநில அளவில் மட்டும் அணுகக்கூடாது. இந்தியத் தேசிய அளவிலும் - அனைத்துலக அளவிலும்கூட அணுகவேண்டும். காமராசரும், அவருடைய சூத்திரத்தை உணர்ந்த அண்ணாவும், கலைஞரும் ஆங்கிலத்தின் இரு பரிமாணங்களையே அடிப்படையாகக் கொண்டிருந்தார்கள். அதாவது -

தமிழ்நாட்டு மாநில எல்லைக்குள் மட்டுமான ஆங்கிலம் - இந்தியத் தேசிய எல்லைக்குட்பட்டுத் தமிழ்நாட்டவர்கள் இணைப்பு மொழியாகப் பயன்படுத்தும் ஆங்கிலம் ஆகியவையே அந்த இரு பரிமாணங்கள். இவை இரண்டுக்கும் மேலாக - உலகளாவிய பன்னாட்டு எல்லைகளையும் கடந்து தமிழ் நாட்டவர்கள் இணைப்பு மொழியாகப் பயன்படுத்த வேண்டியதும் ஆங்கிலமே. இதுதான் மூன்றாம் பரிமாணம்.

தமிழ்நாடு வளர வேண்டுமானால் அதற்கு இன்றியமையாத் தேவையாகவும் இன்று ஆங்கிலம் உள்ளது. எங்கும் தமிழ் - எதிலும் தமிழ் என்பது நம் உயிரனைய கொள்கை முழக்கம்தான். ஆனால் தமிழ்நாட்டுக்கு வெளியேயும் உலகம் பரந்து கிடக்கிறது. "அங்கும் தமிழ் - அதிலும் தமிழ்" என்றாக்க நம்மால் முடியுமா? ஒரு மொழி வைத்து "உலகாண்ட" தமிழன் என்று பழம் பெருமை பேசலாம். ஆனால், இன்றைய உலகம் விரிந்து கிடப்பது. அதற்கு ஆங்கிலமே சரியான திறவுகோல். இதை உணர்ந்து தமிழ்மொழி வளர்ப்போம் - தமிழ்ச் சமுதாயத்தையும் வளப்படுத்துவோம்."

இது நல்ல செய்திதான். வரவேற்கிறேன். அறிஞர் அண்ணா கொண்டு வந்த இருமொழிச் சட்டம் தந்த தெளிவையே அரசு, ஆணைகளாகப் பிறப்பித்துள்ளது.

தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் தொடர்பான அரசாணையில் தெளிவான விளக்கம் உள்ளது.

வெளிநாடுகள், வெளிமாநிலங்கள், உச்ச நீதிமன்றங்கள் ஆகியவற்றோடு தொடர்பு கொள்ளவும் மேல்முறையீட்டுக்குச் செல்லக்கூடிய சில செய்திகளை ஒழுங்காக எடுத்துச் சொல்லவும் ஆங்கிலத்தைப் பயன்படுத்த வேண்டும் என்பதுதான் அரசின்கொள்கை.

எனவேதான் இங்கு ஆங்கிலமொழி மொழிப் பாடமாக உள்ளது. அது கட்டாயத் தேவை என்பதை உணர்ந்தே உறுதி செய்யப்பட்டுள்ளது.

இதில் இரண்டு மூன்று சிந்தனைகள்.

1. வெளித் தொடர்புகட்குத்தான் நமக்கு ஆங்கிலம். எனவே ஒரு பாடமாக ஆங்கிலத்தைப் படித்தாலே போதும்; அதில் தெளிவான தேர்ச்சி பெற முடியும். அப்படியிருக்கும்போது எல்லாவற்றையும் ஆங்கில வழியிலேயே படிக்க வேண்டும் என்று சிலர் கூறுவது எப்படிச் சரியாகும்? இப்படிப் பேசுபவர்கள் யாரும் தமிழ்நாட்டில் வேலைக்குப் போவதில்லையா?

எனவே, ஆங்கிலேயர் காலத்திற் கூட இல்லாத அளவில் அக்கறையை நாம் இப்போது கூடுதலாக ஆங்கிலக் கல்விக்குத் தருகிறோம் என்பது ஒரு புறம்.

2. சரியான முறையில் தமிழைப் படிக்காமல், சரியான முறையில் தமிழில் வரைவுகளை, குறிப்புகளை எழுதத் தெரியாமல் அரைகுறையாகப் படித்துவிட்டுத் தமிழக அரசு ஊழியர்கள் செய்கின்ற 'தமிழ்க்கொடுமைகள்' கொஞ்ச நஞ்சமல்ல.

'எங்கும் தமிழ் - எதிலும் தமிழ்' என்பதை இவர்களில் பலர் கடைப்பிடிக்கிறார்களா?

இதிலிருந்து ஒன்றை உணர்ந்து கொள்ள வேண்டும். 5ஆம் வகுப்பில் கல்வி பயிலும் பல இலட்சக் கணக்கானோர் கல்லூரிக் கல்விக்கே வருவதில்லை. பலர் 12 ஆம் வகுப்புக்கே வருவதில்லை. எனவே, தமிழ்நாட்டில் தமிழை உரிய இடத்தில் வைத்துப் பேணத் - தவறுவதால் தமிழ் தாழ்கிறது. இது போக்கப்படவேண்டும். ஆங்கிலம் தேவை என்பதற்கான எல்லைகளைத் தாண்டி ஆங்கிலம் மட்டுமே தேவை என்பது போல ஒரு தோற்றம் கல்வி உலகில் கொடிகட்டிப் பறக்கிறது. இது தடுக்கப்படவேண்டும். குறை களையப்படவேண்டும்.

'தினகரன்' ஆசிரியருக்கு என் விடை இதுதான்.

3. மூன்றாவதாக ஒன்று; தமிழ்நாட்டில் ஆங்கிலமே தேவையில்லை என்று கருதுவதும் மிகப்பெரிய தவறு. இதில் 'தினகரன்' கருத்து முற்றிலும் சரியே.

"இன்று தமிழ்நாட்டில் சிலபல தமிழ்மொழிப் பற்றாளர்களும் இவர்கள் சார்ந்திருக்கும் இயக்கங்களும் ஒருசில அரசியல் கட்சிகளும் கூட ஆங்கில ஒழிப்பை உரிய கோணத்தில் அணுகாமல் அவ்வப்போது களம் இறங்கிய வண்ணம் இருக்கிறார்கள்."

சிறந்த தமிழறிஞர், கல்லூரிமுதல்வராக இருந்தவர், துணைவேந்தராக இருந்தவர் - வ.சுப. மாணிக்கனார் நடத்திய சில ஊர்வலங்களில் பின்வரும் முழக்கங்கள் கேட்டன.

"அன்னைத் தமிழே! ஆட்சி பெறு! ஆங்கிலமே வெளியேறு"

முதல்வரி சரி; அடுத்த வரி சரியா?

தமிழ்ப் பற்றாளர்கள் நடுநிலையோடும், தற்போதைய தேவைகளை எண்ணியும், நாம் இந்தியாவில் ஒரு மாநிலமாக இருக்கிறோம் என்பதை உணர்ந்தும் தெளிவுபடுத்த வேண்டும்.

பார்த்தது - படித்தது - கேட்டது பகுதியில் 5.4.98 ஆம் நாளிட்ட தினமலர் - வாரமலரில் ஒரு செய்தி.

முதலில் செய்தியைப் படியுங்கள்.

"பொறுப்பாசிரியரை சந்திப்பதற்காக காத்திருந்தார் நடுத்தெரு நாராயணன். அவரது தோளில் தொங்கிக் கொண்டிருந்த ஜோல்னாப் பையை வாங்கி, அதனுள் இருந்த புத்தகங்களைப் பார்க்க ஆரம்பித்தேன்.

குறளியம், செந்தமிழ்ச் செல்வி, தமிழ்ப் பாவை என்றெல்லாம் பெயர்கள் கொண்ட இதழ்களை சேகரித்து வைத்திருந்தார். அந்தப் புத்தகங்களை கையில் எடுத்துக்கொண்டு, நாராயணன் சார் முகத்தைப் பார்த்தேன்.

அவர் சொன்னார் :

"தமிழ் வளர்ச்சிக்காக பாடுபடுவதாக சொல்லிக்கொண்டு இது போன்ற சில சிற்றேடுகள் வருதுப்பா. இவையெல்லாம் தமிழக அரசால் ஆதரிக்கப்பட்டு, பல ஆண்டுகளாக நூலகங்களில் வாங்கறாங்க. படிப்பதற்குதான் வாசகர்கள் இல்லை" என்றார்.

"சார் - ரெண்டு நாள் 'ஓசி' கொடுங்களேன் - 'படிப்பதற்கு வாசகர்கள் தான் இல்லை' என்று பொத்தாம் பொதுவாகக் குறை சொல்கிறீர்களே. அப்படி என்னதான் எழுதி இருக்கிறார்கள் என படித்துவிட்டுத் தருகிறேன்" என்றேன்.

"சரி - எடுத்துக்கப்பா. ஆனா இதப் படிச்சிட்டு ஒனக்கு ஏதும் ஆச்சுன்னா, நான் பொறுப்பு கிடையாது. கோடைகாலம் வேற ஆரம்பிச்சுட்டுது. ஜாக்கிரதை" என எச்சரித்தார்.

அன்று மாலை 'மதுரை எக்ஸ்பிரசில்' பயணப்பட வேண்டியது இருந்ததால், புத்தகங்களை ரயிலில் படித்துக்கொள்ளலாம் என எண்ணி பெட்டியில் பத்திரப்படுத்திக்கொண்டேன்.

இப்போதெல்லாம் மதுரை செல்லும் ரயில்கள் சென்னை எழும்பூர் ரயில் நிலையத்தில் இருந்து கிளம்புவது இல்லை. சென்ட்ரலில் இருந்து மாலை நான்கு மணிக்கே கிளம்பி விடுகின்றன. தலையைச் சுற்றி மூக்கைத் தொடும் கதையாக ஊர் உலகை எல்லாம் சுற்றி, மறுநாள் அதிகாலை மதுரையை அடைகின்றன.

ரயில் கிளம்பியது. எடுத்துச்சென்ற புத்தகங்களில் இருந்து 'தமிழ்ப்பாவை' என்ற புத்தகத்தை எடுத்துப் படிக்க ஆரம்பித்தேன்.

அந்தப் புத்தகத்தில் இருந்த ஒரு சிறு குறிப்பு.

தமிழ்மொழியின் கொச்சை சொற்கள் பல. அவற்றுள் 'பாவக்காய்' குறிப்பிடத்தக்கது. 'பாவம்' என்னும் சொல் தமிழ்ச் சொல் அன்று! பொருள் : தீவினை. பாவக்காய் எனின் தீவினைக்காய் என்பது திரள் பொருள். இத்தகு காயைத் தின்றால் என்னமிகும்? தீவினையன்றோ? பாகற்காய் என்பதே உண்மையான, சரியான சொல்! தமிழ் நலம் பேணுவோர் பாகற்காய் எனப் பலுக்குக! பாவக்காய் என்று எந்த மடவன் பலுக்கினானோ?

அதுபோல் சாதம் என்பது தமிழன்று. 'சோறு' என்பதே சரி. தமிழ்மக்(கு)கள், 'சோறு'தாழ்வான சொல் என்றும், சாதம் உயர்மட்டச் சொல் என்றும் கருதி 'சாதம்' எனச் செப்புகின்றனர். இவர்களின் அறியாமையை என்னவென்பது? நீங்கள் தமிழராயின், உடலில் ஓடுவது தமிழ்க் குருதியாயின் சோறு என்று சொல்வீராக!

- புத்தகத்தை மடித்து வைத்தேன். நாராயணன் சார், 'படிப்பதற்கு தான் வாசகர்கள் இல்லை' என்று கூறியதன் பொருள் அப்போதுதான் புரிந்தது.

* * *

இந்த இதழ்களைப் படித்துவிட்டு 'ஏதேனும்' ஆகிவிட்டால் நான் பொறுப்பில்லை என்றாராம் "நடுத்தெரு நாராயணன்"

அதில் 'தமிழ்ப்பாவை'யில் இருந்த செய்தியைக் குறிப்பிடுகிறார். அந்தச் செய்தியில் என்ன தவறு! 'பாகல்'காய் - பாகற்காய் என்பதே சரியானது; 'பாவக்காய்' என்பது தவறு.

'சோறு' எனும் சொல்லை மலையாள மொழியினர் என்ன அருமையாகக் கையாள்கின்றனர். 'மூளை' என்பதையே 'தலைச்சோறு' என்று சொல்பவர்கள் அவர்கள். இங்கு வடமொழி தந்த சாதத்தையும், ஆங்கிலம் தரும் 'Rice'யும் பயன்படுத்தாதவர்கள் விவரம் தெரியாதவர்களா? 'Rice' என்றால் அரிசியையும் குறிக்கும்; சோற்றையும் குறிக்கும் என்பது தெரிந்திருந்தும் கவலைப்படாமல் பயன்படுத்தும் 'மேதாவிகள்' விவரம் தெரிந்தவர்களா?

தமிழ்ப்பாவை இதழை நடத்தும் அருளாளன் நல்ல தமிழ்ப்பற்றாளர். அந்த இதழில் வந்த செய்தி நமக்கு அறிவூட்டுகிறது; ஒரு செய்தியைச் சொல்கிறது. Educative and Informative.

இதைக் கேலி செய்பவர்களும் இதழ் நடத்துகிறார்கள். அதிகம் பேர் படிக்கிறார்கள் என்பதற்காகவோ, பத்து இடங்களில் வெளியாகிறது என்பதற்காகவோ நல்ல தமிழ்ச் சொற்களை எழுதுபவர்களைக் கேலி செய்பவர்களை என்ன செய்வது' இந்தக் கட்டுரை எழுதப்பட்ட நாளன்று (4.2.2002) வெளிவந்த தினமலர் இதழில் உள்ள சிலவற்றை அப்படியே தருகின்றேன்.

பக்கம் 1. உஷார் புதிய டெலிபோன் எண்கள். (தொலைபேசி என்ற சொல் எல்லார்க்கும் தெரியும் - அதனைப் பயன்படுத்த இந்த இதழ் விரும்பவில்லை)

'லிப்ட்' ரெடி : 'சூப்பர் பிளான்' பக்கம் 4 சிட்டி ஷாட்

பக்கம் 9. 'செகண்ட் பிரண்ட் பேஜ்' பக்கம் 12 'ரிங் ரோட்டில்'

இப்படியெல்லாம் எழுதினால்தான் வாசகர்கள் பெருகுவார்கள் என்பது உண்மையானால், தமிழ்ப்பாவை, செந்தமிழ்ச் செல்வி போன்ற இதழ்கள் அப்படிப்பட்டவர்களைத் தேடப்போவதில்லை. திட்டவட்டமான கொள்கைகளின் அடிப்படையில் நடைபோடுபவை அவை. வணிகத்தைத் தலையாய நோக்கமாகக் கொண்டு, தரப்படும் செய்திகளின் அடிப்படையில் வாசகர்களின் எண்ணிக்கையைப் பெருக்கிக் கொள்வதாலேயே, நல்ல தமிழ் இதழ்களைக் கிண்டல் செய்யும் தகுதி இவர்களுக்கு எப்படி வந்துவிடும்? இவர்கள் தந்த செய்தியிலேயே எத்தனை ஒற்றுப் பிழைகள்! இந்த அரை குறை அறிவாளிகளைப் பற்றி 'தினமலர்' ஆசிரியர் கிருட்டிணமூர்த்தி என்ன சொல்லியிருக்கிறார் என்பதைத் 'தமிழ் வளர்ச்சி மன்றம்' குறித்த கட்டுரையில் பார்க்கவும்.

'தினமலர்' தமிழ் வழிக் கல்வியில் எங்கள் போக்கினைப் பாராட்டி எத்தனையோ, செய்திகளை வெளியிட்டுள்ளது. ஆனால் மற்றோர் இதழைக் கேலி செய்வதை விட்டுவிட்டு உங்கள் வேலையைப் பாருங்கள் என்று கூற வேண்டியது என் கடமை.

நானும் தனித்தமிழ்ப் பற்றாளன்; ஒரு மணிநேரம் பேசினாலும், பிறமொழிச் சொல்லே கலவாமல் பேசக் கூடியவன். என்னைவிட இன்னொருவர்க்குக் கூட்டம் அதிகம் வருகிறது என்பதற்காக, நானும் அவரைப் போல் பேசவேண்டும் என்று அறிவுரை கூறுகிறதா "தினமலர்" உங்களைத் திறனாய்வு செய்கிற நான் தேவையா? உங்கள் குடும்பம் குழந்தைகளையெல்லாம் தெருவுக்குக் கொண்டு வந்து காது கொடுத்துக் கேட்க முடியாத அளவுக்குப் பேசுபவர்கள் தேவையா? நல்ல தமிழ் இதழ்களைக் கேலி செய்வது எவ்வளவு தவறு என்பதை இப்போதாவது உணர்வார்கள் என்று நம்புகிறேன்.

24.4.1998 ஆம் நாளிட்ட "தினமணி" இதழில்; நடுப்பக்கக் கட்டுரை ஒன்று. (இது இந்த இதழுக்கு மட்டுமே உள்ள தனிச்சிறப்பு) 'தள்ளிப் போகும் தமிழ் ஆட்சி' எனும் தலைப்பில் பிருந்தாவன் சி. மோசஸ் என்பவர் எழுதிய கட்டுரை வெளிவந்தது. நமக்குத் தொடர்பில்லாத ஒரு சிலவற்றைக் குறைத்துவிட்டு, மீதி உள்ள கட்டுரைப் பகுதியை அப்படியே தருகிறேன்.

"தமிழக அரசு அலுவலகங்களில் அனைத்து நடவடிக்கைகளும் தமிழில் நடைபெற வேண்டும் என்று அரசு ஆணை இட்டு 40 ஆண்டுகளாகிவிட்டன. ஆனால் எந்த அதிகாரியும் அதனைப் பொருட்படுத்தவில்லை.

இது உண்மைதான்; ஆனால் ஒரு திருத்தம் : 1998 இல் உள்ள நிலை சில அதிகாரிகள் அதனைப் பொருட்படுத்தவில்லை என்பதுதான். இதுபற்றிய கட்டுரை பின்னால் வருகிறது.

"ஆனால் தமிழிலேயே அலுவலக நடைமுறைகள் நடைபெற வேண்டுமென்று சொன்னால் அதை அரசு அதிகாரிகள் கடைப்பிடிக்க வில்லை என்று அமைச்சர்கள் பொதுமேடைகளிலேயே கூறி அதிகாரிகளை எச்சரிப்பதைக் காண்கிறோம்."

அரசு ஆணையை மீறுபவர்கள் ஒரு சிலராக இருந்தால் நடவடிக்கை எடுத்துவிடலாம். ஆனால் மிகப்பலர் மீறும்போது முதலில் எச்சரிக்கை தானே செய்யமுடியும்? இந்த எச்சரிக்கைகள் நாங்கள் பேசிய அடுத்த நாளில் எல்லாச் செய்தித் தாள்களிலும் வருகின்றன. அதனைப் பல அரசு ஊழியர்கள் படிப்பார்கள். தலைமைச் செயலகத்திலிருந்து சுற்றறிக்கையை மட்டும் அனுப்பிக்கொண்டிருந்த காலம் ஒன்று; இப்போது நேரடியாக எச்சரிக்கைகள் விடப்படுகிற காலம். இது தேவைதான் என்பதை மோசசு உணர்வார் என்று கருதுகிறேன்.

அடுத்தது, தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் பற்றியது. இதுபற்றிய தனிக்கட்டுரை இந்த நூலிலேயே உள்ளது. அதிலேயே முழுமையான விளக்கங்களும் உள்ளன.

"ஆனால் தமிழ்மொழிக்கு முதன்மை தரத் தட்டச்சு வாங்கி வழங்க முடியாத அரசு, அதிகாரிகளின் அறைகளுக்கு குளுகுளு வசதி செய்து கொடுத்தது. குளிர்சாதனப் பொருள்கள் வாங்க மட்டும் நிதிவசதியும் பிறவசதிகளும் இருந்தன.

அந்த அரசு போய் இந்த அரசு வந்து தலைமைச் செயலகத்தில் மட்டும் 500 தமிழ்த் தட்டச்சுகள் வாங்கியுள்ளது. மாவட்ட ஆட்சியர் அலுவலகம் முதற்கொண்டு கீழ்மட்ட அலுவலகங்களுக்கு இன்னும் வாங்கவில்லை. ஆனால் அதிகாரிகள் சவாரி செய்யும் புதிய கார்கள் வாங்கப்பட்டுள்ளன. (மாவட்ட அலுவலகங்கட்காகவும் 500 பொறிகள் வாங்கப்பட்டன)

அடுத்து, பொதுப்பணித்துறை பற்றி. இந்தக் கருத்து முற்றிலும் சரி.

"ஆனால் தமிழ்நாடு அரசு தனது நிர்வாகத்தின் கீழுள்ள அலுவலகங்களில் தமிழில் அனைத்து நடவடிக்கைகளும் நடத்த இயலாமலிருக்கிறது. அன்னியர்களான ஆங்கிலேயர்கள் ஆங்கிலத்தை ஆட்சி மொழியாகக் கொண்டு ஆங்கிலேயர்களையே அதிகாரிகளாக அமர்த்திக்கொண்டு நடத்தி சர்வாதிகார ஆட்சியில் அடிமைக்குடிமக்களான தமிழர்களின் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு தமிழில் மதிப்பீட்டுப் பட்டியலும் அறிவிப்புகளும் வெளியிட்டிருக்கின்றனர்.

எவ்வளவு உண்மையான வரிகள்?

பொதுப்பணித்துறையில் தமிழ் ஆட்சிமொழிச் செயல்பாட்டின் உண்மை நிலை 'தலைமைச் செயலக ஆய்வில்' படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளது. என் கருத்துக்கு வலுச் சேர்ப்பதாக மோசசு கருத்து உள்ளது.

"இப்போது நடைபெறும் தமிழ்நாடு அரசில் மாவட்ட ஆட்சியாளர்களாகவும் மற்றும் துறையின் தலைமை அதிகாரிகளாகவும் பெரும்பாலும் பச்சைத் தமிழர்களே பதவியில் இருக்கின்றனர். ஆனால் ஆணையினை மதித்துத் தங்கள் நிர்வாகத்தின் கீழுள்ள அலுவலகங்களில், தூய தமிழில் இல்லாவிட்டாலும் சாதாரணத் தமிழிலாவது அனைத்து நடவடிக்கையும் நடைபெறச் செய்யவில்லை."

இது குறித்து 'அதிகாரிகளின் மெத்தனம்' எனும் தலைப்பில் விரிவாக விளக்கியுள்ளேன். 12 இலட்சம் அரசு ஊழியர்களில் இ.ஆ.ப. அலுவலர்கள் 129 பேர் மற்றும் இ.கா.ப., இ.வ.ப., அலுவலர்கள் ஏறத்தாழ 100 பேர் என்ற அளவில்தான் பிற மொழியைத் தாய்மொழியாகக் கொண்டு, தமிழே அறியாதவர்கள் உள்ளனர். பிறரெல்லாம் தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாவிட்டாலும் தமிழ் அறிந்தவர்கள். பிறகு ஏன் தமிழ் ஆட்சிமொழியாகவில்லை! சிந்திப்போம்.

அடுத்து எழுதுகிறார்.

"தங்கள் அலுவலகங்களில் தமிழில் நடவடிக்கைகளை மேற்கொள்ளாமல் முரண்டு பிடிக்கும் தமிழ்நாடு அரசின் அதிகாரிகளை விட்டு விட்டு வர்த்தகர்களின் கடைகளில் வைக்கப்பட்டுள்ள பெயர்ப்பலகைகளைத் தேர்ந்தெடுத்தனர் போலும்."

தமிழை ஆட்சிமொழிச் செயலாக்கத்திற்கு உட்படுத்தாமல், போடப்பட்ட அரசாணைகளையே மீறி நடக்கும் அலுவலர்களைப் பலவகையில் நெருக்கியுள்ளோம். மிகப் பலர் எங்கள் நெருக்குதலுக்குப் பின் தங்களை மாற்றிக் கொண்டனர். தலைமைச் செயலக ஆய்வில் உள்ள ஒப்பீட்டு, புள்ளி விவரங்களைக் கவனிக்கவும்.

12 இலட்சம் பேரில் குறைந்தது 2 இலட்சம் அரசு ஊழியர்களாவது தமிழைப் பேணவில்லை என்பதை ஒப்புக்கொள்ளலாம். அவர்கள் மீது நடவடிக்கை எடுப்பது என்பது வேறு. அதன்படி அமைச்சர்கள். செயலர்களுக்கு அப்படிப் பேணுபவர்கள் மீது நடவடிக்கை எடுக்கச் சொல்லியுள்ளோம். அதற்கான எடுத்துக்காட்டுகள் பல இடங்களில் உள்ளன. ஆனால் அதற்காக வணிகர்களின் கடைகளில் உள்ள விளம்பரப் பலகைகளை ஒழுங்கு செய்யக்கூடாது என்று சொல்லுவதும் தவறு; அரசு ஊழியர்களையெல்லாம் சரிசெய்துவிட்டு விளம்பரப் பலகைக்கு வாருங்கள் என்று சொல்வது அறிவார்ந்த கூற்று அன்று; 'அபத்தமான' கருத்து. அடிப்படையிலேயே தவறான அணுகுமுறையைக் கொண்ட மோசசு அதனால்தான் தமிழ் வளர்ச்சித் துறை வெளியிட்ட மொழிபெயர்ப்புச் சொற்களை எடுத்துக்கொண்டு ஆராய்வதாகச் சொல்லித் தன் அறியாமையை வெளிப்படுத்துகிறார்.

அ.கி.பரந்தாமனாரின் நூலில் உள்ள துணுக்கை அப்படியே எடுத்திருக்கிறார். ஆறுமுக நாவலர்கூற்றை மேற்கோள் காட்டுகிறார். தான் ஆங்கிலத்தில் விடை சொல்லக் கூடாது என்று வேண்டுமென்றே மறுத்த ஆங்கிலேய நீதியரசர்க்குப் பாடம் புகட்டுவதற்காக ஆறுமுக நாவலர் வேண்டுமென்று, திட்டமிட்டுச் சொன்ன செய்தி இது. பொருத்தமற்ற முறையில் இங்கு எடுத்துக் கையாண்டுள்ளார் மோசசு. இதே ஆறுமுக நாவலர்தான் கடுமையான நன்னூல் விருத்தியுரைக்கு மாறாக எளிமையான காண்டிகையுரையைத் தந்தவர்.

நாங்களும் எளிய தமிழ் விரும்புபவர்கள் என்பதை மோசசு உணரவேண்டும்.

'எளிய பதங்கள். . . . ' பாரதியார் பாஞ்சாலி சபதத்தில் எழுதிய முன்னுரை.

'எளிய நடையில். . . ' பாவேந்தர் கூற்று.

. . . சிலம்பொலி செல்லப்பன், ம.இ.லெ. தங்கப்பா போன்றவர்களை - தமிழும் ஆங்கிலமும் நன்கறிந்தவர்களைக் கொண்டு தொகுத்து நேரடியாக என் மேற்பார்வையில் சரிபார்க்கப்பட்டு வெளியான நூல்தான் வணிகச் சொற்பட்டியல்.

நகை மாளிகை நகைக்கடை என்றும் 'அணி மணிப் பொற்சாலை'(சிங்கப்பூரில் எழுதப்படுவது) என்றும் நாங்கள் சொன்னபிறகும் இன்றும் 'ஜுவல்லர்ஸ்' என்று எழுதிக் கொண்டிருப்பவர்களுக்காகவா தோழர் பரிந்து பேசுகிறார்.

முதலில் நாங்கள் தந்துள்ள எளிமையான சொற்களைப் பயன்படுத்துங்கள். கடுமையான சொற்கள் என்று கருதினால் எங்களுக்கு எழுதுங்கள்.

ஆறுமுக நாவலர் நடையைப் போய் எங்கள் சொற்பட்டியலோடு ஒப்பிடுவது கையாலாகாத ஒருவரின் புரியாத்தனம் என்றே கருதுகிறேன்.

ஆட்சிமொழி அகராதியில் 20000 படிகள் அச்சிடப்பட்டு தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்கள் வாயிலாக எல்லா அலுவலர்கட்கும் நேரிடையாக வழங்கப்பட்டுள்ளன.

புதிய சொற்கள் தொடர்பாக இவர் கூறும் கருத்துகள் ஏற்றுக்கொள்ளத்தக்கவையாக இல்லை. காரணம் இன்று பல தீர்ப்புகள் தமிழில் வந்துவிட்டன. 'சட்டக்கதிர்' போன்ற இதழ்கள் சட்டத் தொடர்பான கட்டுரைகளை எல்லார்க்கும் புரியும் தமிழில், முறையான கலைச் சொற்களைக் கொண்டு சிறப்பாக வெளியிட்டு வருகிறது.

குழப்பமே இல்லாத ஒரு தெளிவு நிலை நோக்கி நாங்கள் நடைபோடும் போது, 'புதிய சொற்களை உண்டாக்குவது குழப்பத்தை உண்டாக்குகிறது' என்று சொல்லிக் குழப்பத்தை

உண்டாக்குகிறார் தோழர். எங்களுக்கு உதவி செய்கிறோம் என்று இறங்கி 'உள்ளது சிதைக்கும்' இவர்களைப் போன்றவர்களிடம் நாங்களும் எச்சரிக்கையாகத்தான் இருக்க வேண்டியுள்ளது.

அவர் ஒரு வணிகராக இருப்பார் என்றே கருதுகிறேன். 'வணிகர்களை' அச்சுறுத்தாதீர்கள் என்றே கடைசியிலும் வலியுறுத்துகிறார்.

'வாணிகர் தம் முகவரியை...' எனும் பாவேந்தர் பாடலையும்

'ஊரைத் திருத்துமுன்....'எனும் பாவலரேறு பாடலையும் தான் . . . . . அவர்க்குச் சுட்டிக்காட்ட வேண்டும்.

அதிகாரிகள்

இது பெருமளவுக்கு உண்மையாகவே இருந்தது. ஆனால் தலைமைச் செயலகத்தில் ஆய்வுசெய்தபின் அதிகாரிகள் எங்கள் ஆணையைப் பொருட்படுத்த வேண்டிய தேவை ஏற்பட்டது. ஒரு வகையில் கட்டாயம் ஏற்பட்டது.

தமிழ்த் தட்டச்சுகள் : - தலைமைச் செயலகத்திற்கு என 500ம் அடுத்த கட்டமாக மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள், துறைத் தலைமை அலுவலகங்களுக்கு 500 தட்டச்சுப் பொறிகளும் வாங்கி வழங்கப்பட்டன.

பச்சைத் தமிழரான பல அலுவலர்கள் நடவடிக்கையைச் சரியாக மேற்கொள்ளவில்லை என்பது உண்மையே.

* * *

24.4.98 அன்று பல்வேறு தமிழ் அமைப்புகள் இணைந்து நடத்தும் முற்றுகைப் போராட்டம் நடைபெற்றது. எனினும் பெரிய பயன் விளையவில்லை.

ஏற்கெனவே நாங்கள் பாதி செய்துகொண்டிருக்கிறோம். ஒருவகையில் என் பணிக்குப் பிறரை ஒத்துழைக்க வைக்கும் உதவியாகக் கூட இப்போராட்டம் அமையும்.

ஆனால் அவர்கள் தருகின்ற விளக்கங்கள் தாம் 'விளங்காத்தனமாக' உள்ளன.

1. தமிழ் ஆட்சிமொழிச் செயல்பாடு தொடர்பாக தமிழ், ஆங்கிலம் இவற்றுள் எதிலும் அரசு அலுவலர்கள் கோப்புகள், சுற்றறிக்கைகள், ஆணைகள் இவற்றை வழங்கலாம் என்னும் தெளிவற்ற கொள்கையை அரசு கடைப்பிடிப்பதால், பெரும்பாலும் அரசுப் பணிகள் ஆங்கிலத்திலேயே நடைபெறுகின்றன.

2. தமிழ் ஒன்றே தமிழகத்தின் ஆட்சிமொழி என்னும் நடைமுறையினை அரசு பின்பற்றத் தவறிவிட்டது. பெயர்ப்பலகைகளில் தமிழ் முன்னுரிமை என்னும் சட்டம் தொடர்பான தன் செயல்பாட்டைத் திறந்த மனத்துடன் நடைமுறைப்படுத்தவில்லை.

(தமிழ்தான் ஆட்சிமொழி என்பது சட்டம். கடிதங்கள் எழுதும்போது சில இனங்கள் விதிவிலக்குக்கு உட்பட்டுள்ளன.)

3. தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தில் விதிவிலக்காக இதுவரை பிறப்பித்துள்ள ஆணைகள் அனைத்தையும் திரும்பப்பெற வேண்டும்.

தமிழ்நாட்டில் அனைத்து நிலைகளிலும், தமிழ் ஒன்றே ஆட்சிமொழியென அரசு ஆணை பிறப்பிக்கவேண்டும்.

* * *

இந்தியாவின் ஒரு மாநிலமாக இருக்கும் நாம் இந்த விதிவிலக்குகளைத் தந்துதான் ஆகவேண்டும்.

ஆனால் தமிழ்நாட்டுக்குள் எதற்கும் விதிவிலக்கில்லை. அனைத்தும் தமிழிலேயே அமைந்தாக வேண்டும் என்பதுதான் ஆணை. ஆனால் தோழர்கள் புரிந்து கொள்ளாமலேயே எழுதியுள்ளனர். தலைமைச் செயலகத்தில் ஏற்பட்டு வரும் மாற்றங்களையும் கேட்டுத் தெரிந்துகொள்ளத் தவறிவிட்டனர். தமிழ் அமைப்புகளை நான் குறை கூறமாட்டேன். நானும் அத்தகையதோர் தமிழ் அமைப்பைச் சார்ந்தவன்.

ஆனால் அரசு செய்த சிலவற்றைப் பாராட்டிவிட்டு இன்னும் செய்யப்படா தவற்றைச் சுட்டிக் காட்டிப் போராடினால் பயன். அதைவிட்டு விட்டு இப்படிச் செய்வது பொருத்தமாக இல்லை என்பது மட்டுமன்றி, 'கூட்டத்தோடு கூட்டமாகக் கூவுவதை விட' வேறெந்தப் பயனையும் விளைவிக்கப்போவதில்லை. இதுதான் வரலாற்று உண்மை.

'முகம்' இதழ் - எப்போதும் நல்ல தமிழுக்காகப் பாடுபட்டு வரும் இதழ். ஆசிரியர் 'மாமணி' நல்ல முற்போக்குச் சிந்தையும், தமிழ்ப்பற்றும் உடையவர்.

அடிக்கடி என் செயல்களைப் பாராட்டி எழுதுபவர். 'தமிழ்ப் பயிற்றுமொழி' தொடர்பான போராட்டத்தில் 'தனித்து நின்று' சண்டையிட்ட என்னை வெகுவாக உயர்த்திப் பிடித்தவர்.

ஆனாலும் அவரும் இன்னும் உள்நோக்கி வந்து, எங்களிடம் கலந்து பேசிய பின் தங்கள் கருத்தைத் தெரிவிக்கலாம். எல்லோரையும் போலவே அவரும் 'Table Work' செய்துள்ளாரோ என்று எண்ண வைக்கிறது அவர் வெளியிட்ட செய்தி.

"அவருக்குப் பிறகு வந்த கலைஞரும், 'தமிழ்தான் ஆட்சிமொழி' 'பயிற்சி மொழி'என்ற வாக்குறுதியைக் கண்டு கொள்ளவே இல்லை. அதை நினைவு படுத்த ஊர்வலம் சென்ற தலைநகர்த் தமிழ்ச்சங்கப் புலவர் சுந்தரராசனை அடித்த காவல் துறை அதிகாரியையும் கண்டிக்கவில்லை. சினிமாக்காரர்களை மதிப்பதில் பத்தில் ஒரு பங்கு கூடத் தமிழறிஞர்களை மதிப்பதில்லை. கலைஞர்!

விசுவநாதத்தின் 'ஆவி' தான் கலைஞரை இப்படியெல்லாம் அலைக்கழிக்கிறது! அதற்கு ஒரே பிராயச்சித்தம் 'இந்த ஆண்டு ஜுன் 98 முதல் தமிழ்நாட்டில் தமிழ்தான் ஆட்சிமொழி. பயிற்சி மொழி' என்று அறிவித்துப் பார்க்கட்டும், அவரைப் பிடித்த பீடை ஒழிகிறதா, இல்லையா பாரும்!" என்கிறார் கிழவர்."

தமிழ்தான் ஆட்சிமொழி என்று ஏற்கெனவே அறிவிக்கப்பட்டுச் செயற்பட்டிருக்கும்போது 'முகம்' மாமணிக்கு ஏன் இந்தத் தடுமாற்றம்!

சுந்தரராசனை அடித்த காவல்துறை அதிகாரியைத் தொலைபேசியில் அழைத்துக் கண்டித்தவன் நான். அன்று மாலையே அவர்களை விட்டுவிடும்படி கூறி அதன் படி விடுவிக்கச் செய்தவன் நான். இதைக் கலைஞர் செய்ய வேண்டியதில்லை; நானே செய்துவிடுவேன். செய்துவிட்டேன்.

இருந்தாலும் 'முகம்' மாமணி இப்படிப் பேசுவதுதான் வியப்பாக உள்ளது.* * *

சூலை 98இல் 'தென்மொழி' தன் ஆசிரியவுரையில் சில கருத்துகளைத் தெரிவித்துள்ளது.

'மொழி பற்றி முறையாக உசாவியோ, தக்கவர்களை அழைத்துப் பேசியோ ஆக்கவழிச் செயற்பாடுகளில் அக்கறை கொள்ளாத முதலமைச்சர் கலைஞர்' என்கிறது ஆசிரிய உரை.

அதுபற்றி முதல்வர் அவர்கள் என் போன்றாரிடம் விரிவாகப் பேசியபின் அறிவிப்புகளும், ஆணைகளும் வந்தன. முதல்வர் இவற்றைச் செய்தாலும் இவர்கள் எந்த நிறைவும் அடைவதில்லை. பலரும் என்னைச் சந்தித்துப் பேசிப் பல கருத்துகள் பற்றிப் பேசியுள்ளனர். அருணாசலம், தமிழண்ணல், சிலம்பொலி போன்றவர்களும் விரிவாக உரையாடியுள்ளனர். மதுரையில் நான் கல்லூரி முதல்வராக இருந்தபோது தமிழ்ப் பயிற்றுமொழியை வலியுறுத்தி ஓர் ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெற்றன. இதில் வ.சுப. மாணிக்கமும், தமிழண்ணலும், கருணை தாசன் போன்றவர்களும் கலந்து கொண்டனர்.

இந்த நிகழ்ச்சியை முழுமையாக ஏற்பாடு செய்தவன் நான். பதாகையைப் பிடித்துக்கொண்டு நடந்தவர்களும், மேடை ஏற்பாடு செய்தவர்களும் யாதவர் கல்லூரித் தோழர்கள். எனவே என் போன்றவர்கட்குப் பயிற்றுமொழி பற்றிய விவரங்கள் முழுமையாகத் தெரியும். சிலர் வந்து ஒரு குழுவாகச் சொன்னால் தான் தெரியும் என்பதில்லை.

யாதவர் கல்லூரி முதல்வராக இருந்தபோது அதுவரை ஆங்கிலப் பயிற்றுமொழியில் இயங்கிய வரலாற்று இளங்கலை வகுப்பைத் தமிழ்வழியில் மாற்றியவன் நான்.

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் பி.காம் வகுப்பில் பாகம் 1 இல் தமிழ் பாடமாக வைக்கப்படவேண்டும் என்று தீர்மானம் கொண்டு வந்து பேசி, ஒப்புதல் பெற்று, பாடத்திட்டம்

வகுத்து, நூல் வெளியிடப்பட்டபின் பி.காம் வகுப்பில் நானே அதைப் பாடமாக எடுத்துவந்தவன் என்பதையும் சுட்டவேண்டும்.

இதில் தென்மொழியின் கூற்று மிகவும் தவறு. தமிழ்ப் பல்கலைக்கழகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இவற்றிலெல்லாம் எத்தகைய தமிழ்ப் பணி நடக்கிறது என்று தொடர்புடைய அமைச்சர்களுக்கே கூடத் தெரியவில்லை' என்கிறது தென்மொழி.

இப்படி அறிவுகெட்டதனமாக எழுதுவதால்தான் நாங்களும் இவர்களைப் போன்றவர்களைக் கண்டு கொள்ளாமல் விடவேண்டியதாயிற்று. ஒன்று இவர்கள் கண்டிப்பது, திறனாய்வு செய்வது என்று 'பணி' தொடரட்டும். நாங்களும் அவ்வப்போது எங்கள் மறுப்பைத் தந்துவிடுகிறோம். ஆனால் இவர்களே பின்பு, கலைஞரிடம் வந்து நிதியுதவி வேண்டி விண்ணப்பத்தை நீட்டி விடுகிறார்கள். அவரையே விழாவுக்கும் அழைக்கிறார்கள்.

இவர்களது இரட்டை நிலை தெரிந்தவர்கள் என்ன நினைப்பார்கள்?

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்குரிய நிதி ஒதுக்கீடு 29 இலட்சமாக இருந்ததை 62 இலட்சமாக உயர்த்தியுள்ளோம். பல நூல்களைச் சிறப்பாக வெளியிடும் நிறுவனம்; பல கருத்தரங்குகளைச் சிறப்பாக நடத்தும் நிறுவனம் என்ற பெயரை எடுத்துள்ளது. அதேபோல் தமிழ்ப் பல்கலைக்கழகம் 113 இலட்சம் நிதியுதவி பெற்ற நிலையை மாற்றி 353 இலட்சமாக்கினோம். தொடர்ந்து த.ப.க.வைத் தொல்லைப் படுத்திக்கொண்டிருந்த 5 பேரை முறைப்படி பணிநீக்கம் செய்தோம். 4 ஆண்டுகளில் 28 நூல்களை வெளியிட்ட பதிப்புத்துறையின் கழுத்தை நெருக்கி இரண்டே மாதத்தில் 26 நூல்களை வெளியிட வைத்தோம். த.ப.க. வின் நூல்களை சென்னை, மதுரை, சேலம் போன்ற இடங்களில் விற்பனைக்குக் கொண்டுவந்தோம். இவற்றையெல்லாம் அறிந்துகொள்ள முடியாத இவர்கள் தங்கள் அறியாமையை வெளிப்படுத்துவதுதான் வியப்பாக உள்ளது.

'ஆட்சிமொழி'ச் செயலாக்கம் குறித்து நான் எடுத்துக்கொண்ட முயற்சிகளைப் பற்றிய இந்த நூலைப் பார்த்தாவது இவர்கள் உண்மை உணர்வார்கள் என்று நம்புகிறேன்.

திருக்கோயில்களில் வழிபாட்டுக்கென வெளியிடப்பட்ட அர்ச்சனை நூல்கள் பற்றியும் இவர்கள் அறிந்துகொள்ள வேண்டும். 'திருக்கோவில்களிலும் இனி அவர் (தமிழ்க்குடிமகன்) தமிழ் பற்றிப் பேச முடியாது' என்கிறது 'தென்மொழி.'

ஆனால் வெறுமனே பேசவில்லை. செயற்படுத்தியே காட்டியிருக்கிறேன் என்பதைக் கண்கூடாகக் காணலாம்.

'தமிழ், இலக்கிய அளவிலேயே நிற்க, எவ்வகைக் கல்வி, கலைகளும் பிறமொழி வாயிலாகவே பயிலும் நிலை ஏற்பட்டால், தமிழ் நாளடைவில் மக்கள் வழக்கற்று, நூல்வழக்கு

மட்டுமே கொண்ட மொழிகளின் பட்டியலில் இடம்பெற்றுவிடும் அந்தத் திசையிலேயே நாம் விரைந்துகொண்டிருக்கிறோம்!

இந்தக் கருத்து மட்டுமே வரவேற்கக் கூடியது.

ஆட்சிமொழியாக்க முற்படும்போது அணுவளவும் கண்டுகொள்ளாத அமைச்சர்கள் உண்டு. ஊர்திகளில் தமிழில் எழுத ஆணை பிறப்பித்தவர்களே தங்கள் ஊர்திகளை மறந்ததும் உண்டு.

எனவே, ஆசிரியவுரை எழுதுபவர்கள் எழுதும் முன் உண்மையில் இதுவரை நடந்தது என்ன என்பதைத் தெரிந்கொண்ட பின் முழு மூச்சில் எழுதலாம்; சாடலாம்; அவற்றை ஏற்க நாங்கள் மறுக்கமாட்டோம்.

சங்கப்பலகை நிறுவுவதும், விருதுகள் வழங்குவதும், பலரது நூல்களை நாட்டுடைமையாக்கிப் பரிவுத் தொகை வழங்குவதும் இவர்களது கண்களை உறுத்துகின்றன. அந்தப் பணிகளைச் செய்து இப்படித் திசை திருப்புகிறோமாம். என்ன "ஞானோதயம்?" இவர்கள்தாம் பெருஞ்சித்திரனார் நூல்களை நாட்டுடைமையாக்குங்கள் என்று கரடியாய்க் கத்துபவர்கள். மறைமலையடிகள், பாவாணர், பாவேந்தர் நூல்களை நாட்டுடைமையாக்குவது திசை திருப்பலாம். பெருஞ்சித்திரனார் நூல்களை நாட்டுடைமையாக்கியிருந்தால் இவர்கள் இப்படி எழுதுவார்களா? எல்லாரும் உள்ளுக்குள் ஒரு மனப்புழுக்கத்தை வைத்துக்கொள்கிறார்கள். கையில் இதழ் இருப்பதனால் எழுதித் தள்ளுகிறார்கள். 'தென்மொழி' போன்ற இதழ்களைப் பற்றித் 'தினமலர்' எழுதியதை இதே இயலில் பாருங்கள். மறுபக்கம் தெரியும்.

திறனாய்வுகள்

திறனாய்வினை நான் வெகுவாக வரவேற்பவன் தான். எங்களது செயல்கள் அறிவிப்புகள், நடவடிக்கைகள் குறித்து எத்தனையோ இதழ்கள் திறனாய்வு செய்து எழுதுகின்றன.

இவற்றை வரவேற்கும் அதே நேரத்தில் செய்பவர் யார் என்பதையும் பார்க்க வேண்டியுள்ளது. அப்போதுதான் அவர்களது விவாதத்தின் உண்மை விளங்கும்.

16.11.98 'தினமணி' இதழில் ஒரு செய்தி.

'தமிழ் ஆட்சிமொழி : திராவிட இயக்க ஆட்சியாளர் இடறிவிட்டனர்'

இது தலைப்பு.

இதில் கவிஞர் சிற்பி சில செய்திகளைக் கூறியுள்ளார்.

'வெள்ளையர்கள் ஆட்சியின்போது இல்லாத அளவுக்குத் தமிழகத்தில், தற்போது 65 ஆயிரம் நர்சரி, மெட்ரிகுலேஷன் பள்ளிகள் உள்ளன. இவை உருவாக யார் காரணம்? கிடாவை வளர்த்துவிட்டு மார்பில் பாய்கிறது என்று கூறுவது யாரை ஏமாற்ற? தமிழ் இல்லாத முள் காடாகக் கல்வியை மாற்றியதற்கு முழுப்பொறுப்பு தி.மு.க.வினரே' என்று கூறியுள்ளார்.

இவற்றை ஒழுங்கு செய்திட நாங்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகளை அனைவரும் அறிவர்.

ஆனால் வருந்தத் தக்கது என்னவென்றால் 'மொழி'பற்றிய திட்ட வட்டமான கொள்கையுடைய தி.மு.க. கல்வி அமைச்சர் காலத்தில்தான் ஏராளமான மெட்ரிகுலேசன் பள்ளிகளுக்கு அனுமதிகள் வழங்கப்பட்டுள்ளன. மழலையர் பள்ளிகளைக் கட்டுப் படுத்துவதற்கு மாறாக ஒரு விதியைப்போட்டுவிட்டுத் தொடர்ந்து அதற்கு விதிவிலக்கு அளித்துக்கொண்டே வந்துவிட்டனர்.

மேலும் மெட்ரிகுலேசன் பள்ளிகளிலும் மழலையர் பள்ளிகளிலும் 1 முதல் 5 ஆம் வகுப்பு வரை தமிழே பயிற்று மொழி எனும் ஆணை பிறப்பிக்கப்பட்டபோது அதைத் தடுத்து நிறுத்த முதல்வர் மு. கருணாநிதி வீட்டிலேயே பலபேர்.

'நாங்கள் 45 இலட்சம் வாக்காளர்கள்' என்று மெட்ரிகுலேசன் சங்கம் மிரட்டவும், அதை நம்பி முதல்வர் தரப்பு மெல்லப் பின்வாங்கியது என்பதோடு, நான் எவ்வளவு கடிந்து கொள்ளப்பட்டேன் என்பதும் எனக்குத்தான் தெரியும். ஆனால் 'ஆட்சிமொழி' தொடர்பான கருத்துகள் ஏற்கத்தக்கவையல்ல.

"50 ஆண்டுக்கும் மேலாகத் திராவிட இயக்கத்தினர் தமிழ் உணர்ச்சியை வளர்த்தனர். ஆனால் அவர்கள் இடறி விழுந்த இடம் தமிழை ஆட்சி மொழி ஆக்குவதில்தான். அண்ணா இருந்திருந்தால் இந்த துர்க்கதி ஏற்பட்டிருக்காது."

96,97,98 ஆம் ஆண்டுகளில் நாங்கள் எடுத்த முயற்சிகள் அதனால் ஏற்பட்ட வளர்ச்சிகள் குறித்து ஏதும் குறிப்பிடாமல் பொத்தாம் பொதுவாக 'தமிழை ஆட்சிமொழி ஆக்குவதில் இடறி விழுந்தோம்' என்பது முற்றிலும் அறியாமையாகும். இதுபோன்ற செய்திகளைப் பேசுவதற்கு முன் நன்கு தெரிந்து கொண்டு பேசுவது ஒரு பல்கலைக் கழகத்தின் பேராசிரியர்க்கு ஏற்புடையது. ஆனால் இவர் என்ன நடந்தது என்பது குறித்து அறியாமலேயே எழுதியுள்ளார். இவரைப் போன்ற மெத்தப் படித்தவர்கள் - தமிழறிஞர்களே தெளிவில்லாமல் இருக்கும்போது பாமரத் தமிழன் தெளிவு பெறுவது எப்படி?

சி. சுப்பிரமணியத்தின் முயற்சிகள் 10% என்றால் எங்கள் முயற்சிகள் 75 விழுக்காட்டுக்கு மேல் என்பதை எங்களால் மெய்ப்பிக்க முடியும். சுப்பிரமணியம் காலத்தில் 1966 வரை எந்த அரசாணையும் தமிழில் வெளியிடப்படவில்லை.

வெளிவந்துள்ள கலைக்களஞ்சியங்கள் பற்றித் தனிக் கட்டுரையில் காணவும். அப்போதுதான் வளர்ச்சி புரியும்.

இன்று அரசினர் கல்லூரிகள் 67லும் அனைத்துப் பாடங்களும் தமிழ்ப் பயிற்றுமொழியில் உள்ளன. அரசு உதவி பெறும் 136 கல்லூரிகளில் பலவற்றிலும் ஒரு சில பாடங்களாவது தமிழ்ப் பயிற்றுமொழியில் உள்ளன. அரசுக் கல்லூரிகளில் இணைப் பயிற்சி மொழி உள்ளது. மதுரை மீனாட்சி அரசினர் கல்லூரியில் பி.எசி. வேதியியலையும், இயற்பியலையும் தமிழ் வழியில் படிக்க முடியும்!

'அதிகாரிகள் சொன்ன இடத்தில் கையெழுத்துப் போட்டனர்' என்கின்றார் சிற்பி. இப்படிப் பொறுப்பற்றுப் பேசுவதற்கு ஒரு தமிழ்ப் பேராசிரியர் தேவையில்லை. தெருவில் போகிற ஒரு பிச்சைக்காரனே போதும்.

இனிமேல் "கோப்புகள் தமிழில் வரவேண்டும்" என்று முதல்வர் குறிப்பெழுதினார்.

தலைமைச் செயலர் அனைத்துச் செயலர்களுக்கும் மடல் எழுதினார். தமிழ் ஆட்சி மொழி அமைச்சர் அனைத்து அமைச்சர்கட்கும் நேரடி மடல் எழுதினார். அனைத்துச் செயலர்கட்கும் 'துறையில் ஆட்சிமொழிப் பயன்பாடு' குறித்து விளக்க அறிக்கை தந்து நேரில் அழைத்து வலியுறுத்தினார். பல அமைச்சர்களும் பல செயலாளர்களும் தமிழ் ஆட்சி மொழி அமைச்சரின் கருத்தினை ஏற்று விடை எழுதினர்.

இப்படியிருக்கும்போது இந்த முயற்சிகள் பற்றி எந்த அறிவுமில்லாமல் 'அதிகாரிகள் சொன்ன இடத்தில் அமைச்சர்கள் கையெழுத்துப் போட்டனர்' என்பது பொறுப்பற்ற எழுத்து என்பது மட்டுமின்றி இது போக்கிரித் தனமான எழுத்து என்றும் குறிப்பிட விரும்புகிறேன்.

இருமொழித் திட்டம் குறித்து அவரது கருத்து இது.

'இருமொழித் திட்டத்தால், தமிழின் எதிர்காலம் பாழடிக்கப்படும் சூழ்நிலை உள்ளது. இந்தி ஆதிக்கத்தைத் தடுக்கும் கேடயம் என்று ஆங்கிலம் கூறப்படுகிறது. ஆனால், கேடயமே நெஞ்சில் குத்தும் வாளாக மாறிவிட்டது' என்கிறார் சிற்பி பாலசுப்பிரமணியம்.

ஆனால் அதில் ஓர் அடிப்படை உண்மையை மறந்துவிட்டார். சப்பான், செர்மனி, பிரான்சு போல தமிழ்நாடு ஒரு தனி நாடன்று. இந்தியாவில் - பல மொழியினரைக் கொண்ட இந்தியாவில் - தமிழ்நாடு ஒரு மாநிலம்.

எனவே பிறமாநிலத் தொடர்பு, நடுவண் அரசுடனான தொடர்பு, வெளிநாட்டுத் தொடர்பு ஆகியவற்றுக்கு ஓர் இணைப்பு மொழி (Link Language) தேவை. எப்போது இந்தியை நாம் ஏற்கவில்லையோ அப்போது இணைப்பு மொழியாக, இந்தியாவின் ஆட்சிமொழியாக நாம் ஆங்கிலத்தைத்தான் ஏற்கவேண்டும்.

எனினும் கேடயமாகக் கருதப்பட்ட ஆங்கிலம் நெஞ்சில் குத்தும் வாளாக மாறிவிட்டது என்பதில் உண்மையிருக்கிறது. இதை நான் மறுக்கவில்லை. இதுபற்றி மற்றோர் இடத்தில் விரிவாகப் பேசுவோம்.

தமிழ்ப் பயிற்றுமொழி (1 முதல் 5 வரை) தொடர்பாக அரசு ஆணை பிறப்பித்தது. அதனை எதிர்த்து வழக்கு; நீதிமன்றத்தில் அரசு ஆணை நீக்கம் - பின் உச்ச நீதிமன்றத்தில் மேல்முறையீடு - இது நிலைமை. சட்டமன்றத்தில் கூடச் சிலர் இதற்கான சட்டம் இயற்றவேண்டும் என்று கேட்டபோது கல்வி அமைச்சர் அதற்கான ஆதரவோடு விடை சொல்லவில்லை. முதல்வரும் அதை ஏற்று உறுதிமொழி அளிக்கவில்லை.

இருவருக்குமே 'தமிழ்ப் பயிற்றுமொழிக்கான சட்டம்' இயற்றுவதில் உடன்பாடு இல்லையா? அல்லது குடும்பத்தார், நண்பர்கள் பேச்சுகளை நம்பிப் பின்வாங்கிவிட்டார்களா? தேர்தலை அது பாதிக்கும் என்று கைவிட்டார்களா?

இதுதான் எனக்கும் விளங்கவில்லை. ஆணை பிறப்பிக்க நான் எடுத்த முயற்சிக்கே எனக்கு வசவுகளும், சொல்லடிகளும் பரிசாகக் கிடைத்தன. இதற்குமேல் 'தமிழ் வழிக் கல்வி' நூலில் உண்மையை விளக்குவேன்.

'சட்டத்தால் சாதிக்கமுடியும் என்ற நிலை இருக்கும்போது, அதைச் செய்ய ஆட்சியாளர்கள் ஏன் மறுக்கிறார்கள் என்பது புதிராக உள்ளது. தமிழ் தோற்றுப்போன வரலாற்றை ஆயிரக்கணக்கான பக்கங்களில் எழுதலாம்' என்று பூவண்ணன் கேட்பதில் உண்மை உள்ளது.

சட்டத்தைக் காட்டி மிரட்டித்தான் இந்த அளவுக்காவது பலரைத் தமிழில் எழுத வைத்திருக்கிறோம்.

டாக்டர் இராமாத்தாள் கருத்தும் சரியானது. தமிழ் அருச்சனை முயற்சிகள் பற்றித் தனி நூலில் விளக்கம் உள்ளது. மற்றபடி, நல்லநோக்கில் பேசப்பட்ட நல்ல கருத்துகளை வரவேற்றுப் பாராட்டுகிறேன்.

* * *

தமிழப்பன் ஒரு தமிழ்ப் போராளி என்று சொல்லிக் கொள்பவர். 24.3.99 ஆம் நாளிட்ட 'தினமணி'யில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் ஒரு பகுதியை மட்டும் தந்துள்ளேன்.

''தமிழ், கல்வி கற்பதற்கு ஏற்றதில்லை என்ற கருத்து எப்படியோ இந்த நாட்டில் உருவாகிவிட்டது. அதனால் இந்த நாட்டுக் குழந்தைகள் எல்லாம் 'மம்மி, டாடி' என்கின்றன. ஆங்கிலேயர் ஆண்டபோது கூட, தாய்மொழிக் கல்வியையே அவர்கள் வற்புறுத்தினர். இன்று

நம்மை நாமே ஆளுகின்ற காலத்தில்தான் அங்கிங்கெனாதபடி ஆங்கிலம் கோலோச்சுகிறது. ஆட்சி, தமிழில் நடக்கவில்லை. வழிபாடு, தமிழில் நடக்கவில்லை. நீதிமன்றங்களில் தமிழ் நுழைய முடியவில்லை. விளம்பரப் பலகையெல்லாம் வேற்றுமொழியில். சென்னையைச் சுற்றிப் பார்ப்பவர்க்கு இது தமிழ்நாடா, ஆங்கில நாடா என்ற ஐயம் ஏற்படாமல் இருக்காது. பேச்சிலும் ஆங்கிலக் கலப்பு. எழுத்தாளர்களோ ஆங்கிலச் சொற்களைக் கலந்து எழுதுவது தங்கள் உரிமையென்றும் அதுவே தமிழ் இலக்கியம் என்றும் அறைகூவல் விடுக்கின்றனர்."

எல்லாரையும் போலவே இவரும் புழுதி வாரித் தூற்றியிருக்கிறார். "ஆட்சி தமிழில் நடக்கவில்லை" என்கிறார். தமிழ் ஆட்சிமொழித் தொடர்பாக எடுக்கப்பட்ட நடவடிக்கைகள், அதில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம், அமைச்சர் எடுத்த கடும் முயற்சிகள் ஆகியவை குறித்து எந்த அறிவும் இல்லாத இவர்கள் 'தமிழ்ப்பணி' என்ற பெயரில் தாங்கள் தியாகிகள் ஆகிவிடலாம் என்று பார்க்கிறார்களே தவிர, இவர்களால் ஆகப் போகிற செயல் எதுவும் இல்லை; கூட்டத்தில் கூடிநின்று கூவிப் பிதற்றும் இவர்களைப் போன்ற போலிகளை நிறையவே பார்த்துவிட்டோம்.

சென்னையில் பளிச்சென மின்னும் - பல இலட்சக்கணக்கான உருபாய் செலவில் உருவான மாபெரும் விளம்பரத் தட்டிகள் (Hoardings) தமிழ்நாட்டை ஆங்கிலக் காட்டுக்குள் மூழ்கடித்து, இருளடையச் செய்கின்றன என்பது உண்மையே. அதுபற்றி மற்றோர் இடத்தில் பேசுவோம்.

ஆனால் அவரது திறனாய்வு முழுவதும் உண்மையா என்று பார்க்க வேண்டும்.

* * *

நாங்கள் இவ்வளவு செய்தும் தமிழ்ப் பற்றாளர்களாகக் காட்டிக்கொள்ளும் ஒரு கூட்டம் வெளியில் எப்படிச் செய்தியைப் பரப்புகிறார்கள் என்பதைப் பார்த்தால் வியப்பாக இருக்கும்.

"ஆங்கில வழிப்பள்ளிகளின் வளர்ச்சிக்குக்கொம்பு சீவிக் குளிப்பாட்டி - மஞ்சளிட்டு அழகூட்டும் பணியினை நீண்ட காலமாக தமிழக அரசியல் தலைவர்கள் செய்து வருகிறார்கள். ஆங்கில மழலையர் மற்றும், தொடக்கப் பள்ளிகள் நடத்தும் மாநாடுகளில், தமிழக முதல்வர், தமிழ் ஆட்சிமொழித் துறை அமைச்சர், சென்னை மாநகர மேயர், கல்வி அமைச்சர், மற்றும் அமைச்சர்கள் சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்கள் ஒரு சேரக் கலந்து கொண்டு - ஆங்கிலக் கல்விக்குப் பல்லவி பாடிய நிகழ்வுகள் ஏராளம்.

23.1.1999 அன்று சென்னையில் கூட்டப்பட்ட ஆங்கிலப் பள்ளிகள் கருத்தரங்கு மாநாட்டு அமைப்பாளர்கள் எய்யப் பயன்படுத்திய அம்பானது அவர்களையே தாக்கிய நிகழ்ச்சியாக அமைந்தது. ஆங்கில வழிப்பள்ளிகளில் காப்பாளர்களான அமைச்சர் சற்குண பாண்டியனும், இரமணிபாய் அவர்களும், தமிழ் ஆட்சிமொழித்துறை அமைச்சரைத் தங்கள் கருத்திற்கு

"சுத்தமான தமிழச்சிதான். பள்ளி, கல்லூரியில்தான் தமிழ் படிக்கவில்லை என்றால் சுற்றியிருந்தவர்களாவது தமிழ் பேசினார்களா என்றால் அதுவும் இல்லை. அனைவரும் ஹிந்திக்காரர்கள். அதனால் தான் இந்த நிலை!"

"அதிர்ச்சி எங்களுக்கு ஏற்படவில்லையென்றாலும் இதைத் தமிழ்க்குடிமகன் படித்தால் கண்டிப்பாக அதிர்ச்சியடையத்தான் செய்வார்."

* * *

தமிழக அரசின் அறிவிப்புகளுக்கு நல்ல வரவேற்பு இருந்தது. 'சுரபி'எனும் வணிகவரிச் சட்டத் தகவல் இதழ் தன் முகவுரையை இப்படி எடுத்து வைக்கிறது.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு'

தமிழின் வேதம் கூறி ஆரம்பிக்கின்றேன். தமிழ் பிறந்த மண்ணில், தமிழைக் கற்கச் சட்டம் ஒன்று வேண்டுமா? தமிழைப் படிக்காமலேயே, தமிழ்நாட்டில் ஒருவர் பட்டம் பெறமுடியும் எனும் நிலையை நீக்கிய தமிழ்க் காவலன் வாழ்க எனக் கூறி, அவன் வழி வந்தயாம், தமிழில் வாணிக வரிச் சம்பந்தப் பட்ட செயல்பாடுகளையும், வாணிகவரிச் சட்டத்தின் பல்வேறு அம்சங்களையும் தொகுத்து இம்மலரில் பல இதழ்களாக வெளியீடு செய்ய ஆரம்பித்துள்ளேன். - டி. துரைபாண்டியன் ஆசிரியர், "சுரபி"

சில இதழ்களில் அறிவுக்குப் பொருந்தாத தருக்கங்களும் வருவதுண்டு. அதிலும் துக்ளக் 'சோ'வின் விவாதங்கள் ஏன் இவ்வளவு மோசமாக இருந்தன என்பது தெரியவில்லை.

அதிலும் பொறியியற் கல்லூரிகளில் தமிழ் வழியில் பயிற்றுவிப்பது எனவும், முதலாண்டுக்கு 90 மாணவர்கட்கு மட்டும் வாய்ப்பளிப்பது எனவும் நான் தெரிவித்தபோது இதை மிகவும் கேலி செய்து எழுதியவர் 'சோ'தான். அதன்பிறகு, உண்மையான கருத்து அறிந்ததும் 'நான் அவசரப்பட்டுவிட்டேன்' என்று எழுதிய பெருந்தன்மையாளர். எனினும் தொடக்க நாளில் துக்ளக்கின் துடுக்குத்தனத்தைப் பாருங்கள். (அவர் மொழியில்தான் சொல்லியிருக்கிறேன்)

"பொறியியல் மற்றும் தொழிற்கல்வி பாடங்களைத் தமிழில் கற்றுக்கொடுக்க தமிழக அரசு நடவடிக்கை எடுக்கிறதாகப் பேப்பர்லே படிச்சேன். அதேமாதிரி, இங்கிலீஷைக் கூட தமிழிலேதான் எழுதிப் படிக்கணும்னு சட்டம் கொண்டு வந்தா தமிழ் சீக்கிரம் வளரும்னு நினைக்கிறேன். நீங்க என்ன நினைக்கிறீங்க?"

படிக்கும் நண்பர்களை நான் கேட்கிறேன்.

"இதை எழுதியவரைப் பற்றி நீங்க என்ன நினைக்கிறீங்க?"

திறனாய்வு செய்வதில் எல்லாரும் பங்கு பெறுகிறார்கள். சிலபேர் குறைகள் இருந்தால் சுட்டிக் காட்டுவார்கள். சில பேர் "இது ஏற்கத்தக்கது அல்ல" என்று அடித்துச் சொல்வார்கள். சிலபேர் கண்டனம் செய்வார்கள். சிலபேர் கேலியும் கிண்டலும் செய்வார்கள். சிலபேர் 'அதி புத்திசாலித்தனமாக' எழுதுவதாக நினைத்துக்கொண்டு, தங்கள் முட்டாள்தனத்தை வெளிப்படையாகவே அரங்கேற்றுவார்கள். 11.8.99ம் நாளைய 'துக்ளக்' இதழில் ஒரு செய்தி. எழுதியவர் சந்திரன் என்பவர்.

இந்தச் செய்திக்கும் 'துக்ளக்'ஆசிரியர் 'சோ'விற்கும் தொடர்புஇல்லை. எனவே, இதிலே அவரை வம்புக்கு இழுக்க விரும்பவில்லை.

செய்தி இதுதான்.

"இங்கே தமிழ்நாட்டில், 'தமிழ் வழிக் கல்வி'என்ற பேரில் தமிழ் மொழி பெயர்ப்பு வேலைதான் நடக்கிறது. 'பஸ்ஸை 'பேருந்து'என்று மொழி பெயர்த்து முப்பதாண்டுகளுக்கு மேலாகிவிட்டன. ஒரு தமிழன் கூட "பேருந்தில் வந்தேன்" என்று சொல்வதில்லை. என்ன தவறு? சென்னையிலுள்ள விமான நிலையத்தில் 'உள்நாட்டு முனையம், வெளிநாட்டு முனையம்' என்றெல்லாம் பல்லை உடைக்கிற மாதிரி எழுதித் தமிழரும் சேர்ந்து கண்ணீர் விடுகிறார்கள். தமிழையும் தமிழரையும் கொஞ்சம் வாழ விடுங்கள்."

தையலகம் என்பது விளங்கியிருந்தும் ஒரு தமிழன் கூடச் சொல்வதில்லை. ஆனால் 'Tailors' என்று எல்லாரும் சொல்கிறார்கள்.

'முருகன் மிதிவண்டி நிலையம்' என்ற ஒருவன் கடையில் எழுதிப் போட்டிருந்தாலும் எல்லாரும் 'சைக்கிள்' கொடுங்கள் என்றுதான் சொல்கிறார்கள்.

இப்படியே சொல்லிக் கொண்டு போகலாம். சந்திரன் என்ன சொல்ல வருகிறார். எழுத்தில் புழக்கத்துக்கு வந்துவிட்ட சொல், எல்லாருக்கும் விளங்கும். அதனை யாரும் மறுக்கமுடியாது. சந்திரன் 'பஸ்' என்று சொல்வதனாலேயே 'பஸ்'தமிழ்ச் சொல் என்று ஏற்றுக்கொண்டு அகராதியில் சேர்த்துவிடவேண்டுமென்று சொல்கிறாரா? 'சந்திரன் ஒரு கஸ்மாலம்' என்று எவனோ சொல்வதனாலேயே 'கஸ்மாலம்' தமிழாகி விடுமா? அப்படிப்பார்த்தால் சென்னைத் தமிழ் தான் தமிழாக இருக்கும்? நெல்லை, மதுரைத் தமிழ் எல்லாம் கைவிடப்பட்டிருக்கும்.

அப்படித்தான் வரவேண்டுமென்கிறாரா சந்திரன்?

Terminal என்றால் சந்திரனுக்குப் பளிச் சென விளங்குகிறதாம். 'முனையம்' என்று சொல்லிவிட்டால் பல்லை உடைக்கிறதாம். சொல்பவர் யார்? இங்கிலாந்திலேயே பிறந்து,

ஆங்கிலப்பால் குடித்து வளர்ந்த ஆங்கிலக் குஞ்சு சந்திரன்தான். கண்டவன் சொல்வதையெல்லாம் அறிஞர்கள் - தமிழுக்கு ஆக்கம் சேர்ப்பவர்கள் கேட்க வேண்டிய தேவையில்லை. சந்திரன் போன்றவர்கள் கூற்றையெல்லாம் தாண்டி, எத்தனையோ நல்ல தமிழ்ச் சொற்கள் புழக்கத்திற்கு வந்துவிட்டன என்பதை நாடறியும். இந்த முனையம் என்ற சொல்லை, மலேசியத் தமிழர் சிலர் என்னிடம் பாராட்டிச் சொன்னார்கள்.

தங்கள் தாய்மொழிச் சொல்லுக்குப் பொருள் தெரிந்ததனால்தான் இந்தத் திறனாய்வெல்லாம்? ஆங்கிலத்திலோ பிறமொழிகளிலோ தரப்படும் எந்தச் சொல்லும் நமக்கு இடுகுறிப் பெயர்கள்தான். அவற்றை அப்படியே கேட்டுக்கொண்டு, கிளிப்பிள்ளை போலப் பேசுவதைத் தவிர அதற்குள்ளே போய் ஆராய்ந்து எழுதிட, சந்திரன் 'மூளை'யில் சரக்கே இல்லை.

Terminal என்பதை Torminal என்றாலும் Tarminal என்றாலும் இவர்கள் அப்படியே சொல்பவர்கள்தான். அதுதான் இனிக்கிறதாம் இவர்களுக்கு.

ஆனால் Super fast என்பதையெல்லாம் விட்டு விட்டோமாம்! விட்டுவிடவில்லை. அடுத்த கட்டமாக அதைச் செய்வோம்! இப்போது 'mail' என்றால் அஞ்சல் விரைவு வண்டி - Super fast- மிகுவிரைவு வண்டி - என்று மொழி பெயர்த்து எழுதி வைப்பதில் எந்தத் தவறும் இல்லை.

வேதநாயகம் பிள்ளை சொன்னதைத்தான் இங்கே நினைவூட்ட வேண்டியுள்ளது.

நான் எங்கோ யாரிடத்திலோ ''Thank you'' என்று சொன்னேனாம். அதனால் ' நல்ல தமிழில் பேசும் என் கொள்கை போய்விட்டதாம்'

கவலை கொள்கிறது இந்தக் கரிச்சான் குஞ்சு. அண்மையில் ஒருவர் மேடையில் 'தமிழ்க்குடிமகனே ஓரிடத்தில் ஆங்கிலத்தில் கையொப்பமிட்டுள்ளார்' என்று கூறினாராம். தலைமை தாங்கியவர் அதனை மறுத்துவிட்டதோடு தக்க சான்றோடு அதனை மெய்ப்பிக்க வேண்டும் என்று கூறிவிட்டார்.

இதனைக் கேள்விப்பட்டதும் நானும் அந்தத் தோழரின் தலைவரைக் கூப்பிட்டு 'உடனே இதை மெய்ப்பிக்க வேண்டும்' என்றேன். தோழரின் தலைவரோ 'அவர் அப்படிப் பேசவில்லை' என்று கூறிவிட்டார். அந்தக் கதைதான் இங்கும்.

அடேயப்பா! இவர்களெல்லாம் ஆங்கிலப் புலமையுள்ளவர்களாம். ஆட்டன்பரோ நிகழ்ச்சியெல்லாம் எழுதித் தங்கள் அதி மேதா விலாசத்தையும் புலப்படுத்துகிறார்களாம்! நாங்கள் இவர்கள் கூறும் போலித்தனத்தை ஏன் ஏற்கவேண்டும்?

இந்து, இந்தியன் எக்ஸ்பிரஸ் போன்ற இதழ்கள் நேரடியாக எங்கள் கருத்தை மறுப்பது என்பது குறைவுதான். ஆனால் 'அன்பர்கள் கடிதம்' எனும் பெயரால் எதைவேண்டுமானாலும் வெளியிடுவார்கள்.

ஒரு செய்தியைப் பாருங்கள்.

Tamilomania

The State government's Tamil Development Department in its Zeal to Tamilise each and every English used in Tamil Nadu has suggested that the Southern Railway rename the Express and Fast Passenger trains in Tamil as 'Viraivu vandi' and 'viravu thodar vandi'respectively creating more confusion among passengers. But it has conveniently omitted to Tamilise the superfast / passenger and mail trains/ probably unable to find exact Tamil equalents. A senior government official made a sarcastic comment on the eagerness of the Tamil Official Language and Tamil Development Minister M. Tamilzhkudimagan for his Tamilomania.

The other day the Minister visited a government office. He ensured that he conversed only in Tamil with the officials. While leaving he said a big 'thank you' to them / perhaps a slip of the tongue/ instead of saying 'mikka nandri'in Tamil. Reminds us all of a classic. 'The Great Escape' when Richard Attenborough / playing the role of a British officer / is caught by a German squad for his slip when he says, Thank you, in English despite having trained his juniors in how to stick to the German language all the time as part of their escape mission.

'to Tamilise each and every English word used in Tamilnadu'

என்கிறார் அதில் என்ன தவறு? இப்படி எழுதுபவர்கள் இங்கிலாந்துக்குப் போய்விடலாமே! அங்கே போய் வீட்டிலோ வெளியிலோ தமிழ் பேசாமல் ஆங்கிலத்தையே பேசிக் கொண்டிருக்கலாம். மொழி பெயர்க்க வேண்டிய தேவையே இராது.

'பாண்டியன் எக்ஸ்பிரஸ்' என்று ஆங்கிலத்தில் உள்ளது. அதனைத் தமிழிலும் பாண்டியன் எக்ஸ்பிரஸ் என்று எழுதி வந்தார்கள். ஆங்கிலத்தில் உள்ள பெயர்ப்பலகை அப்படியே உள்ளது. தமிழில் எழுதும்போது பாண்டியன் விரைவு வண்டி என்று எழுதச் சொன்னோம். Thanjavur Fast Passenger என்பது அப்படியே உள்ளது. தமிழில் "தஞ்சாவூர் வேகத் தொடர் வண்டி" என்று எழுதச் சொன்னோம்.

தமிழர் அல்லாத வடபுலத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும், தமிழக அரசு 'தமிழ்த் தொடர்பாக' என்ன சொல்கிறதோ அதனை ஏற்பது கடமை என்ற முறையில் திரு அக்னிகோத்ரி நாங்கள் சொன்னபடி எழுதிவைத்தார். ஆனால் இந்த மண்ணின் உப்பைத் தின்று வளரும் புல்லுருவிகள் சொல்லுகின்றன 'Creating more confusion among passengers' என்று. இப்படி எழுதுகிறவன் ஆங்கிலத்தில் எழுதுவதைப் படித்துவிட்டு வண்டியில் ஏற வேண்டியதுதானே? "Thanjavur Passenger" என்று வண்டியில் எழுதியிருக்கும். ஏறி உட்கார்ந்து விடலாமே!

நான் கேட்கிறேன். Thanjavur Passenger என்றால் 'தஞ்சாவூர்ப் பயணி அல்லவா? அவன் மீதா ஏறி உட்காருகிறோம்? தஞ்சாவூர் Passenger Train என்றா எழுதி வைத்துள்ளார்கள்? அது தஞ்சாவூர்த் தொடர்வண்டி Thanjavur Train என்பதைத்தான் குறிக்கிறது என்று தெளிவாக உணர்ந்து வண்டியில் ஏறவில்லையா? பயணி என்பதற்குரிய சொல்லையே தொடர்வண்டி (Train) யைக் குறிக்கவும் பயன்படுத்தினால் அதில் குழப்பமே இல்லாமல் தெளிவாக இருக்கிறதாம் இந்த மடல் எழுதிய மேதாவிக்கு. ஆனால் நாங்கள் விரைவு வண்டி, வேகத் தொடர் வண்டி என்று எழுதிவிட்டால் ஒரே குழப்பமாக இருக்கிறதாம்!

உள்ளுக்குள் ஒன்றை வைத்து வெளியே ஒன்று பேசும் இந்தப் போலிக் கூட்டம் தான் குழப்பம் செய்து வருகிறது. 'திருவாடானை'யை 'அஜகஜபுரம்' என்று மாற்ற நினைத்த மாபாவிகள் இவர்கள். எனவே குழப்பம் இல்லாத ஒன்றைக் குழப்பம் என்று கூறிக் குழப்பம் விளைவிப்பதும் குழப்பமான ஒன்றைக் கூடத் தெளிவாகப் புரிந்து கொண்டதாகப் பசப்புவதும் இவர்களுக்கு வாடிக்கை.

## நல்ல தமிழ் இதழ்களும் அதிகம் விற்பனையாகும் 'தமிழில்'வரும் இதழ்களும்

14.4.98 'நக்கீரன்' இதழில் சின்னக்குத்தூசி எழுதிய கட்டுரையில் சில பகுதியை முதலில் இங்கே தந்துவிடுகிறேன்.

தமிழ்நாட்டிலே பிறந்து; - தமிழ் மொழியிலேயே பேசி - எழுதி பிழைப்பு நடத்திக்கொண்டிருக்கும் சில பேருக்கு தமிழ் என்றால் வேப்பெண்ணெய் குடித்தது போல ஒரு முகச்சுளிப்பு. யாராவது ஒரு சரியான தமிழ்ச் சொல்லைச் சொல்லிவிட்டால் கெக்கெக்கெக்கே என்று ஒரு இளிப்பு! வாய்ப்பு கிடைத்தபோதெல்லாம் தமிழைக் கேலி செய்வதும் - தமிழ் ஆர்வலர்களை வம்புக்கிழுப்பதும் இவர்களது வாடிக்கையாக இருக்கிறது.

இதோ, இந்த வாரம் - ஒரு ஏட்டில் வந்த நையாண்டி.

'தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபடுவதாகச் சொல்லிக் கொண்டு இதுபோன்ற சிற்றேடுகள் வருதுப்பா. இவையெல்லாம் தமிழக அரசால் ஆதரிக்கப்பட்டு, பல ஆண்டுகளாக நூலகங்களில் வாங்குறாங்க. படிப்பதற்குத்தான் வாசகர்கள் இல்லை என்றார்.

சரி. . . எடுத்துக்கப்பா . . . ஆனா இதைப் படிச்சுட்டு ஒனக்கு ஏதும் ஆச்சுன்னாநான் பொறுப்பு கிடையாது; கோடைகாலம் வேற ஆரம்பிச்சுட்டுது. ஜாக்கிரதை என எச்சரித்தார்.

பாவாக்காய் என்று சொல்லாதே; பாகற்காய் என்று சரியாகச் சொல்; சாதம் என்பது வந்தவர் மொழி; சோறு என்பது செந்தமிழ்ச் சொல் என்று எழுதப்படுபவைகளைப் படித்தால் படிப்பவர்களுக்கு ஏதாவது ஆகிவிடுமாம்! அதுவும் கோடை காலத்தில் படித்தால். என்று கிண்டல் கேலியும் பொங்கி எழுதியிருக்கிற அந்தக் கட்டுரையாசிரியர் 'அம்மா'என்று அழைக்காமல் 'மம்மி' என்று அழைப்பது பற்றியோ - அப்பா என்பதற்கு பதிலாக 'டாடி'என்று அழைப்பது பற்றியோ ஒரு

போதும் கோபம் வருவதில்லை; மம்மி - டாடி என்ற சொற்கள் எல்லாம் அவர்களுக்குப் பாரம்பர்யப் பெருமையை நினைவு படுத்தும் அமுதூறும் சொற்கள். ஆனால் சாதம் என்பதைச் 'சோறு' என்றால் அவர்கள் சிரித்துச் சிரித்துத் தங்கள் வயிற்றைப் புண்ணாக்கிக் கொள்கிறார்கள்."

இதே தினமலர் வார இதழ் (8.7.2001) தன் தமிழறிவை எப்படிப் புலப்படுத்துகிறது என்பதற்கு அதன் அட்டையையே உங்களிடம் காட்டியுள்ளேன்.

"செயற்கை த் தீவு என்று அவர்களுக்குப் போடத் தெரியாது.

'இதயங்களை க் கொள்ளை கொள்ளும் என்று அவர்களுக்கு எழுதத் தெரியாது. எங்கு ஒற்று வரவேண்டுமோ அங்கு வரவேண்டியதில்லையாம்; ஏனென்றால் தமிழ்நாட்டில் 'தினமலர்' சொல்லும்படியும் எழுதும்படியும் தான் நாமும் பேசவேண்டும், எழுத வேண்டும்.

ஆனால் ஒற்று - தேவைப்படாத இடத்தில் தாராளமாகப் போடுவார்கள்.

'அடுத்த படம்' என்று தான் இருக்கவேண்டும். இதோ தினமலரின் தமிழ் நடை:

ரஜினியின் அடுத்தப்பட க் கதாநாயகி.




'தமிழ்'என்ன சொல்கிறதோ அதன்படி இவர்கள் எழுதமாட்டார்களாம். இவர்கள் எப்படி எழுதுகிறார்களோ அப்படி எழுதுவதுதான் தமிழ் வளர்ச்சி என்கிறார்கள்.

இப்படி ஆளாளுக்குத் தமிழைப் பதம்பார்க்கக்கூடாது என்றுதான் தமிழ் தன் இலக்கணத்தைக் கட்டுக்கோப்பாக வைத்துள்ளது. அதனால்தான் கி.பி.2001 இலும் தமிழ் நிமிர்ந்து நிற்கிறது.

தினமலர் காசு சம்பாதிக்கலாம்; ஆனால் கற்றவர்களின் நன்மதிப்பைப் பெறவேண்டாமா?

* * *

இன்னும் எத்தனையோ திறனாய்வுகள் இருந்தாலும் அங்கொன்றும் இங்கொன்றுமாக எடுத்துத் தந்திருக்கின்றேன்.

அரசு அலுவலர்கள் பலர் நேரடியான ஆணைகளையும் மேலிடத்துச் சுற்றறிக்கைகளையும் பெற்றுத் தமிழ் வழியில் தங்களை மாற்றிக் கொண்டிருக்கின்றனர். நிதித்துறையே அரசாணையைத் தமிழில் வெளியிட்டுள்ளது. 'தினமலர்' அதனை வியந்து பாராட்டியிருக்கிறது.

ஆனால் தூவல் பிடித்த சிலர் மட்டும் 'கண்டதே காட்சி; கொண்டதே கோலம்'என்ற போக்கில் எழுதி வருவதைத்தான் காணமுடிகிறது. தூவலில் மை நிரப்பியவர்கள் எழுதும் முன் தங்கள் மூளையில் கொஞ்சம் செய்தி அறிவையும் நிரப்பிக் கொண்டிருந்திருக்கலாம்.

பாவம்! மறந்து விட்டார்கள்.

மூளையற்ற வேலைக்கு அதிகமாகவே மையைச் செலவழித்திருக்கிறார்கள். இந்த நூல் அவர்களுக்கு ஒரு பாடமாக அமையும் என்று எதிர்பார்ப்போம்.

8 தினமணி சென்னை




இடம்: சென்னை மெரினா கடற்கரை கண்ணகி சிலை எதிரே

# இயல் - முப்பத்திரண்டு

# என் நேர்காணல்கள்

நேர்காணலில் வெளியான செய்திகள்

துக்ளக் : 22.1.97 மற்றும் 29.1.97 (சனவரி 1997 மலர்) நந்தன் : சூன் 1-14, 1997, சூனியர் விகடன் : 23.12.98, இதயம் பேசுகிறது : 2.1.2000.

ஏற்கெனவே என்ன நடக்கிறது என்பது குறித்துத் தொடர்ந்து கண்காணித்து வருகின்றவன் எனும் முறையில் என்னென்ன சீர்திருத்தங்கள் செய்யப்படவேண்டும் என்பதில் எந்த இடர்ப்பாடும் இல்லை.

பல்வேறு இடங்களில் பல்வேறு அறிவிப்புகளைச் செய்தேன். அவை பரபரப்பாகப் பேசப்பட்டன. அதிரடியாகச் சில நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டன. பதவியேற்று 8 மாதம் கழித்து, 'துக்ளக்'இதழ் பின்வருமாறு எழுதியது.

'தி.மு.க. ஆட்சி அமைந்த பிறகு, புதிதாக உருவாக்கப்பட்ட இலாகா என்பதாலோ, என்னவோ - அடிக்கடி சலசலப்புக்கு உள்ளானது அமைச்சர் தமிழ்க்குடிமகனின் பேச்சும், அவரது தமிழ் ஆட்சி மொழி மற்றும் பண்பாட்டுத்துறையின் சில அறிவிப்புகளும், அரசு அலுவலகங்களில் தமிழ் வழித் தொடர்பு முன்பிருந்ததை விடக் கட்டாயத்தின் பேரில் நடைமுறைப்படுத்தப்பட்டுக் கொண்டிருக்கிறது.

இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது 'அரசு அலுவலகங்களில் தமிழ் வழித் தொடர்பு முன்பிருந்ததை விடக் கட்டாயத்தின் பேரில் நடைமுறைப்படுத்தப்பட்டுக் கொண்டிருக்கிறது.' துக்ளக் இதழில் வெளிவந்த நேர்காணலை அப்படியே தந்துவிட்டு அதை ஒட்டி முன்பின் ஆராய்ந்தாலே நிலைமை தெளிவாகிவிடும்.

22.1.97 இதழில் நேர்காணல் பகுதி வெளிவந்துள்ளது : -

அமைச்சர் தமிழ்க்குடிமகனின் பேச்சுக்கள் அடிக்கடி தினப் பத்திரிகைகளில் தவிர்க்கவியலாமல் இடம் பெற்றுக்கொண்டிருந்தாலும், பேட்டிக்காக அவரைச் சந்தித்தபோது, மிகவும் இணக்கமான முறையில், கடுமையான கேள்விகளுக்குக் கூட நிதானமாகப் பதில் அளித்தார் அமைச்சர்.

கேள்வி : 'எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்' என்ற முழக்கத்தை முன் வைத்த ஜெயலலிதா தலைமையிலான ஆட்சி போன பிறகு, மொழி மற்றும் பண்பாட்டுத் துறைக்கென தி.மு.க. ஆட்சி தனி அமைச்சகமே உருவாக்கியது. கடந்த ஏழு மாதங்களில், அதன் குறிப்பிடத்தக்க பணி என்ன?

பதில் : 'மெட்ராஸ்' என்றிருந்ததை 'சென்னை' என்று மாற்றுவதை வரவு செலவுத் திட்டத்தில் அறிவித்தோம். சட்டமன்றத்தில் அறிவித்ததுடன் மட்டுமில்லாமல், முறைப்படி உள்துறை அமைச்சகத்தின் ஒப்புதலையும் பெற்று, அதற்கென்றே அரசாணையும் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. அதுபோல 'தொடர் வண்டி'த் துறையில் நாங்கள் சொன்னதைக்கேட்டு 'Express' எல்லாவற்றையும் 'விரைவு வண்டி'என்று மாற்றியிருக்கிறார்கள். இது தவிர - தலைமைச் செயலகத்திலிருந்து தான் அரசாணைகள் ஆங்கிலத்தில் வந்துகொண்டிருந்தன. அங்கு தமிழ் முழுமையாக இல்லாதது ஒரு குறை. இப்போது மதுரை மாவட்ட ஆட்சியாளர் அலுவலகத்தில், 90 சதவிகிதம் தமிழ் ஆட்சி மொழியாக இருக்கிறது; ஆனால் தலைமைச் செயலகத்தில் இருப்பது 25 சதவிகிதம்தான். அதுவும் நாற்பதாண்டுகளாக இருக்கிறது. அதனால் தான் தமிழ் ஆட்சி முழுமையடைய வேண்டுமென்று - முதல்வர் இத்துறையை உருவாக்கியிருக்கிறார்.

முதற்கட்டமாக ஐம்பது லட்சம் ரூபாய் ஒதுக்கி, ஐந்நூறு தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைத் தலைமைச் செயலகத்திற்கென வாங்கிக் கொடுத்திருக்கிறோம். இப்போது 65 சதவிகித தமிழ்த் தட்டச்சுப்பொறி, 35 சதவிகித ஆங்கிலத் தட்டச்சுப்பொறி என்ற விகிதத்தில் வைத்திருக்கிறோம். அடுத்து விளம்பரத்தில், 'தமிழகத்தின் தமிழ்த் தெருவில் தமிழ்தானில்லை' என்பது பாரதிதாசனின் கூற்று. இதற்காகவே 'வணிகத் தொடர்பான சொற்பட்டியல்' நூலை 515 சொற்களுடன் வெளியிட்டிருக்கிறோம். அது இன்னொரு சாதனை.

கேள்வி : 1956 லேயே தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் இயற்றப்பட்டுவிட்டது. அதற்குப் பிறகு கடந்த முப்பதாண்டுகளாக திராவிடக் கட்சிகள்தான் தொடர்ந்து இங்கு ஆட்சியில் இருந்திருக்கின்றன. இருந்தும் அரசு அலுவலகங்களில் கூட முழுமையாகத் தமிழைக் கொண்டு வரமுடியாத நிலை ஏன்?

பதில் : பேராயக் கட்சி (காங்கிரஸ்) கூட 67 வரை தமிழகத்தில் சட்டத்தை இயற்றிய பின்னரும் ஆட்சி புரிந்திருக்கிறார்கள். அதை மறந்து விடக்கூடாது. அவர்களே பல அரசாணைகள் போட்டிருக்கிறார்கள். ஏன் நிறைவேற்ற முடியவில்லை?

கேள்வி : அதை நடைமுறைக்குக் கொண்டு வருவதில் என்ன சிக்கல்கள் இருக்கின்றன?

பதில் : அதிகாரிகள் முழுக் கவனமும் இதில் செலுத்தவில்லை. இதுதான் உண்மை. ஆங்கிலத்தில் எழுதினால், அதைத் தமிழில் எழுதச் சொல்லாதது ஒரு குறை. இப்போது எல்லாத் துறைகளுக்கும் இதைத் தெளிவுபடுத்திவிட்டோம். தமிழில் எழுதத் தவறினால் - பக்தவச்சலம் காலத்திலிருந்து வருகிற அரசாணையை மீறிய குற்றமாகி விடும் - என்று இப்போது உடனே கேட்கிறோம். கவனம் செலுத்துகிறோம். தலைமைச் செயலாளரே தமிழில் தொடர்பு கொள்வதை வலியுறுத்தியிருக்கிறார். இனி அதையொட்டிய செயல்பாடு இருக்கும்.

கேள்வி : தமிழை வளர்ப்பதற்காக எழுபதுகளின் துவக்கத்தில் ஆரம்பிக்கப்பட்ட 'தமிழ் வளர்ச்சித் துறை'யில் கூட, பல பணியிடங்கள் நிரப்பப்படாமல் இருக்கிறதே! அதற்குக் கூட ஜெயலலிதா ஆட்சியில் 'தமிழ் படித்தவர்களைத்தான் நியமிக்க வேண்டும்'என்று வழக்குக் கூட நடந்ததே?

பதில் : தமிழ் ஆய்வு அலுவலர்கள் என்று 11 பேருக்கு 89, 90 இல் வேலைகொடுத்தோம். அப்போது உள்ளே ஏற்கெனவே வேலை பார்த்துக் கொண்டிருந்தவர்கள் இவர்களுக்கு இந்த வாய்ப்புக் கொடுக்கக்கூடாது. அந்தப் பணியிடங்கள் எங்களுக்குத்தான் தரப்பட வேண்டுமென்று வழக்குத் தொடர்ந்தார்கள். இன்று வரைக்கும் அந்த வழக்கு நீடிக்கிறது. ஆனால் இப்போது பேச்சு வார்த்தை நடந்து - அதில் தகுதியுள்ள ஐந்து பேருக்கு உதவி இயக்குநர் பதவி கொடுக்க இருக்கிறோம். தகுதியுள்ள இன்னொருவருக்கு விதிவிலக்கு அளித்து, நிர்வாகத் துறையில் உதவி இயக்குநர் பதவி கொடுக்க இருக்கிறோம். மீதியுள்ள எட்டுப் பணியிடங்களுக்கு நேரடியாக முனைவர் பட்டம் பெற்றவர் பட்டியல், வேலை வாய்ப்பு அலுவலகங்களிலிருந்து கேட்கப்பட்டு, அவர்களில் தகுதியுள்ளவர்களுக்குக்கொடுக்க இருக்கிறோம். இதையொட்டி வழக்குகளைத் திரும்பப் பெறச் சொல்லியிருக்கிறோம்.

கேள்வி : தமிழ் ஆய்வுக்காகத் துவக்கப்பட்ட உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் போன்றவை நிதிப் பற்றாக்குறையினால் தொடர்ந்து இயங்குவதிலேயே சிக்கல் நீடிக்கிறதே?

பதில் : நீங்கள் தெரிவித்த இரண்டிற்குமான ஆய்வறிக்கைளை வா.செ. குழந்தைசாமி குழுத் தலைவராக இருந்து கொடுத்திருக்கிறார். அந்த அடிப்படையில் - ஆளுநர் குழுக்கூட்டம் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் நடந்து முடிந்து மேலும் தேவைப்படுகிற 14 இலட்ச ரூபாய் கொடுத்துவிட்டால் அந்த நிறுவனம் தொடர்ந்து சிறப்பான முறையில் இயங்க ஆரம்பித்துவிடும். அதற்கான கோப்பு இப்போது முதல்வரிடம் போயிருக்கிறது. விரைவில் அதற்கான வெள்ளிவிழாவைக் கொண்டாட இருக்கிறோம். தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்கும் இது போன்ற ஆய்வறிக்கை கொடுக்கப்பட்டது. அதன் பரிந்துரைகள் அனைத்தும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. அதற்கான ஆட்சிக் குழுக்கூட்டம் முடிந்ததும் அவற்றுக்கான தீர்வுகள் முறையாகக் காணப்படும்.

கேள்வி : அங்கேயே பதினைந்து ஆண்டுகளாக - பல ஆய்வுகள் முடிக்கப்பட்டு வெளியிட முடியாத நிலை இருக்கிறதே! குறிப்பாகத் தமிழ் அகரமுதலி அகராதிகள் இன்னும் வெளியிட முடியவில்லையே?

பதில் : தற்போது தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு 20 இலட்சம் ரூபாய் வழங்கப்பட்டிருக்கிறது. அகரமுதலி அச்சாகிக் கொண்டிருக்கிறது.

கேள்வி : டெல்லியிலும், கேரளாவிலும் கூட நன்கு படித்தவர்கள் தங்களுடைய தாய்மொழியில் இயல்பாக உரையாடுகிறார்கள். ஆனால் தமிழ்நாட்டில் சில நகரங்களில் படித்தவர்கள் என்றாலே தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் என்றாலும் கூட, ஆங்கிலத்திலேயே உரையாடுவது இயல்பானதாகியிருக்கிறது. அதோடு சாட்டிலைட், டிவிக்கள் சினிமாக்கள் மேற்கத்தியக் கலாச்சாரத்தைச் சகல வழிகளிலும் திணித்துக் கொண்டிருக்கின்றன. இந்த நிலையில் இங்குள்ள இளம் தலைமுறையினர் மத்தியில் இந்த விதமான தமிழ், தமிழ்க் கலாச்சார முயற்சிகளுக்கெல்லாம் எந்தவிதமான பிரதிபலிப்பு இருக்கும் என்று நினைக்கிறீர்கள்?

பதில் : அடிப்படையிலேயே தமிழர்களிடம் கோளாறு இருப்பது தவிர்க்க முடியாத உண்மை. 'தமிழைப் போல் சிறந்த மொழி தரணியெங்கும் கண்டதில்லை. ஆனால் தமிழரைப் போல் மொழிக் கொலையில் தலைசிறந்தோர் எவர் உளரே' என்று திரு.வி.க. சொல்லியிருக்கிறார். ஆங்கிலத்தை அதிகமாகக் கலந்து பேசுவது என்கிற போலியான நாகரிக மோகம் இங்கு உண்டாகியிருக்கிறது. ஆனாலும் இதை மாற்றிவிடமுடியும். முன்பு ஏகப்பட்ட வடமொழிச் சொற்கள் தமிழில் கலந்திருந்த நிலை மாறி இன்று நூற்றுக்கணக்கானவர்கள் சிற்சில வடமொழிக் கலப்பிருந்தாலும் நல்ல தமிழில் பேசுகிறார்கள. இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் பாலுடன் தண்ணீர் கலந்த மாதிரி இருந்த வடமொழிக் கலப்பையே அகற்றிவிட இப்போது முடிந்திருக்கிறது. ஆனால் ஆங்கிலக் கலப்பு என்பது பாலுடன் எண்ணெய் கலந்த மாதிரி. எளிதில் தெரிந்துவிடும். ஆங்கிலத்தின் தேவையை நாம்விட்டு விடப்போவதில்லை. ஆனால் இந்தக் கலப்பை மாற்றவேண்டும்.

கேள்வி : உங்களைப் பொறுத்தவரை, தனிப்பட்ட முறையில் தனித்தமிழ் இயக்கத்தின் பின்னணி கொண்டிருக்கிறீர்கள். இன்றைக்குத் தமிழ் மீதான ஈடுபாடு என்கிற நிலை தீவிரமாகி தமிழ் தேசியவாதம் என்கிற எல்லைக்குப் போயிருக்கிறது. இந்த போக்கு பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

பதில் : அந்த மிகையான சூழ்நிலைகளை என்றைக்கும் நாங்கள் ஏற்கமாட்டோம். அதாவது இந்தியா என்கிற நாட்டிற்குள் அதன் இறையாண்மையை ஏற்றுக்கொண்டு நாம் நம்முடைய மொழியுரிமையைப் பாதுகாத்துக்கொண்டு இயங்க வேண்டும் என்பதுதான் எங்களது கொள்கை. அப்படி இருக்கிறபோது இம்மாதிரியான தீவிரவாதங்களை இந்த அரசு ஏற்காது. அது பொருந்தாததும் முடியாததும் கூட. தொடக்க காலத்தில் திராவிட இயக்கமே பிரிவினை கேட்ட இயக்கம்தான். 'தமிழ்நாடு தமிழருக்கே' என்று சொன்னவர்தான் பெரியார். கி.ஆ. பெ. விசுவநாதம், ஆதித்தனார் எல்லோருமே அந்த நிலையில் இருந்தவர்கள்தான். ஆனால் இன்றைக்கு அந்த நிலையிலிருந்து மாறி, காலப்போக்கில் இந்திய இறையாண்மைக்குள் ஒருங்கிணைந்து வரும் ஒரு தெளிவான நிலை இருக்கிறது. இந்த நிலையிலிருந்து நாங்கள் மாறமாட்டோம். அதே நிலையில் இதை மிகையாக எடுத்துக் கொண்டு தீவிரமாகச்

செய்கிறவர்களையும் தெளிவுபடுத்தி - 'நாங்கள் எடுக்கிற முறையான முயற்சிகளில் ஈடுபட்டாலே அது நல்ல வெற்றி' என்பதை உணர்த்துவோம்.

கேள்வி : கடந்த ஏழெட்டு வருடங்களாக - தமிழ் தேசிய வாதத்தை முன்னிறுத்திய இயக்கங்கள் அதிகரித்திருக்கின்றனவே?

பதில் : இல்லை. அப்படி ஒரு கூட்டம் இருந்து கொண்டு தானிருக்கிறது. ஒரு காலத்தில் அந்தக் கூட்டம் கூட எனக்கு உடன்பாடான கூட்டமாக இருந்திருக்கலாம். அல்லது எனக்குப் பிடித்தமானதாக இருந்திருக்கலாம். நான் கூட ஒரு காலத்தில் அந்தக் கோட்பாட்டைச் சொன்னவன்தானே! திராவிட நாடு திராடவிருக்கே என்று எழுதி முழங்கியவன் தான். ஆனால் காலப்போக்கில் பிரிவினை வாதத் தடைச் சட்டங்கள்; இந்திய ஒருமைப்பாட்டிற்குள் இணங்கி வரவேண்டிய தேவைகள் எல்லாம் உருவானபோது அண்ணா போன்றவர்கள் எங்களுக்கு வழிகாட்டுகிறபோது அதைக் கடைப்பிடிக்க வேண்டிய கடமை இருக்கிறது.

நான் கல்லூரி மாணவனாக இருந்தபோது, பேரவைச் செயலாளராக இருந்தபோது, நான் நடத்திய பட்டிமன்றத் தலைப்பு 'தமிழ்நாடு தனித்து இயங்கவேண்டுமா? வேண்டாமா?' என்பதுதான். நான் வேண்டும் என்று பேசியவன். ஆனால் இரண்டு நாட்களுக்குப் பிறகு கல்லூரி விடுதியை விட்டு வெளியேற்றப்பட்டு விட்டேன். அது அன்றைக்கு இருந்த நிலைமை. அன்றைக்குச் சில இயக்கங்கள் அந்தக் கோட்பாட்டை வைத்திருந்தன. அதையெல்லாம் இன்று தாண்டி வந்துவிட்டோம் என்பது எனது கருத்து. ஆனால் தீவிரவாதத்தை நம்முடைய தோழர்கள் கைவிட்டு இந்திய இறையாண்மைக்குட்பட்டு தமிழகத்தில் முழுமையான ஆட்சி மொழித் தன்மையுடன் தமிழுக்கு முன்னுரிமை கொடுக்க - தமிழினம் முன்னேற அவர்கள் ஆற்றலை மடை மாற்றம் செய்யவேண்டும்.

கேள்வி : தமிழ் மீது ஈடுபாடு கொண்டவர் என்கிற முறையில் தமிழ் ஆட்சி மொழி, பண்பாட்டுத் துறை அமைச்சராகப் பொறுப்பேற்றுக்கொண்டபோது உங்களுக்கு இருந்த எதிர்பார்ப்புகள் என்ன? அவை நிறைவேறியிருக்கிறதா?

பதில் : நீங்களே ஒரு திறனாய்வாளராக இருந்து பார்த்தால், நீங்கள் எதை எதிர்பார்த்தீர்களோ, அதை ஆழ்ந்து சிந்தித்து வேகமாக நான் செயல்படுத்திக்கொண்டிருப்பதை ஒப்புக்கொள்வீர்கள் என்று கருதுகிறேன். இதற்கு முன்னால் கிடைத்த பரபரப்பை விட இப்போது - தமிழ் ஆட்சிமொழி குறித்த கருத்துகள் பல செய்தித்தாள்களில் வந்து கொண்டிருக்கின்றன. இப்போது பலரிடமும் விழிப்புணர்ச்சி இருக்கிறது. இப்போது நாங்கள் எங்களுடைய துறையில் ஏற்றுக்கொண்டிருக்கிற வேலைகளின் எண்ணிக்கை 75. ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வகையான வேலைகள்; மழலையர் பள்ளிகள் ஓவிய நுண்கலைக் குழு இப்படி, தமிழறிஞர்கள் பலருக்கு அவர்களது எதிர்பார்ப்பை நாங்கள் நிறைவேற்றுகிறோம் என்கிற நம்பிக்கை வந்திருக்கிறது.

கேள்வி : உங்களது தரப்பு வாதத்தை இது வரை சொன்னீர்கள். இருந்தும் உங்களது செயல்பாடுகளுக்கு மட்டும் ஒரு விதமான சலசலப்பு ஏன்?

பதில் : இப்போது எந்தவிதமான பரபரப்போ, எதிர்ப்போ இல்லை. வணிகர்கள் சிலவற்றிற்கு எதிர்ப்புத் தெரிவிப்பர். எங்களுடைய முயற்சிகளுக்கு அவர்களாகவே முன் வந்து ஒத்துழைப்புக் கொடுக்கிறார்கள். நான் இப்போது செய்வது கூட அனைவரின் ஒத்துழைப்புடன் தான். நான் வன்மையாக எதையும் செய்யவில்லை. அதில் எதுவும் இடர்ப்பாடு இல்லை. அதையும் மீறி ஒரு தரப்பார் இருக்கிறார்கள். "ஏவவும் செய்கிலார்; தான் தேறார்" என்கிற மாதிரி மனித இனத்தில் எப்போதும் ஒரு பிரிவு இருக்கும். நோய் மாதிரி உள்ள அவர்கள் தாங்களாகவும் எதையும் செய்வதில்லை. பிறர் செய்தாலும் செய்யவிடுவதில்லை. அவர்களைப் பற்றி நாங்கள் கவலைப் படுவதில்லை. நோய் என்று ஒதுக்கி விடுகிறோம்.

* * *

என் வருத்தம் இதுதான்.

'சோ' துணிச்சலுடன் பல செய்திகளை எடுத்துச் சொல்பவர்.

அரசு அலுவலகங்களில் தமிழ்வழித் தொடர்பு என்பது தமிழகத்தின் மொழி வாரி மாநில உரிமை. தமிழ் மக்களின் கடமை. தமிழக அரசு ஊழியர்கட்கு 1956 முதலே அரசாணைகள் வாயிலாகப் பிறப்பிக்கப்பட்ட கட்டளை.

இவ்வளவு காலமும் இதனைச் சரியாகச் செயற்படுத்தவில்லை என்பதை உணர்ந்து நான் அலுவலர்கட்கு எச்சரிக்கை செய்தேன். மெத்தனமாக இருந்த பலர் விழித்துக்கொண்டு தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கத்தில் ஈடுபட்டனர். இதில் எந்தக் கட்டாயத்துக்கும் இடம்இல்லை. நான் ஒன்றும் வலிந்து திணித்துவிடவில்லை.

ஆனால் துக்ளக் 'கட்டாயத்தின் பேரில்' நடைமுறைப்படுத்தப்படுவதாக எழுதுகிறது. இது என்ன விந்தை? தமிழ்நாட்டில் தமிழில் எழுதுங்கள் என்றால் அது கட்டாயப்படுத்தலா?

எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே! கட்டாயம் என்றால் என்ன? கடமை என்றால் என்ன? எல்லோர்க்கும் தெரியும்.

'துக்ளக்' இதழ் பொருள் உணராமல் 'கட்டாயம்' என்ற சொல்லைப் பயன்படுத்தலாம்.

இப்போதாவது சிந்திக்கட்டும்.

1997 சூன் (1-14) 'நந்தன்' இதழில் ஒரு நேர்காணல்.

முதல்பணியாக, ஆங்கிலத்தில் மட்டுமே வெளியிடப்பட்டு வந்த அரசாணைகள் இப்போது தமிழ் ஆங்கிலம் இரண்டிலும் வர உத்தரவிடப்பட்டுள்ளது. ஆட்சி மொழி தொடர்பாக 872 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளும் 334 தமிழ்த் தட்டச்சுப் பொறிகளும் இருந்த நிலையை தலைகீழாக மாற்றி 834 தமிழ்த் தட்டச்சுப்பொறிகளும் 372 ஆங்கிலத் தட்டச்சுப்பொறிகளும் ஆக 500 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளை வெளியில் எடுத்துவிட்டு தமிழ்த் தட்டச்சுப் பொறிகளைக் கொண்டு வந்துள்ளோம். அடுத்து சார்நிலை அலவலகங்களில் 100 விழுக்காடு தமிழ்த் தடடச்சும் மாவட்ட அலுவலங்களில் 75 விழுக்காடும் இருக்க வேண்டுமென்பது ஆட்சி மொழிச் சட்டம். அதை இப்போது முழுமையாக நிறைவேற்ற கடும் முயற்சி எடுத்துள்ளேன். மதுரை மாவட்டத்தில் 90 விழுக்காடு சார்நிலை அலுவலகங்களில் முழுமையாகக் கொண்டு வந்துவிட்டோம். இதற்காக மேலும் 1000 தமிழ் தட்டச்சுப் பொறிகள் வாங்கப்படும்.

+சென்னையில் உள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஓர் அநாதைப் பிள்ளைபோல் உள்ளதே. . . அது உங்கள் துறையில்தானே உள்ளது?

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வெள்ளிவிழா விரைவில் நடத்த உள்ளோம். அதற்காக 43 இலட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

பழங்கால ஓலைச் சுவடிகள் நுண்படக் கருவி மூலம் பதிவு செய்யப்பட உள்ளன. இதற்காக 25 இலட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. மேலும் கடந்த 5 ஆண்டுகளாக இயங்காமலிருந்த ஓவிய நுண் கலைக் குழுவை இயங்கச் செய்திருக்கிறேன். நடிகர் சிவகுமார், ஆதிமூலம் போன்றவர்கள் அந்தக் குழுவில் இயங்குகிறார்கள். ஓவியக் கண்காட்சி உட்படப் பல பணிகள் தென்னக ஓவியர்களை ஒருங்கிணைத்து நடந்து கொண்டிருக்கிறது.

கலை, பண்பாட்டு மண்டல அலுவலகம் ஒன்றுதான் இருக்கிறது. இப்போது திருவாரூர், காஞ்சிபுரம், சேலம், திருநெல்வேலி என்று நான்கு துணை இயக்ககங்கள் அமைக்க உள்ளோம்.

தமிழைச் செம்மொழியாக்க ஏற்கெனவே தேவகவுடாவுக்குக் கலைஞர் கடிதம் எழுதியிருந்தார். இப்போது குஜ்ராலுக்கும் கடிதம் எழுதியுள்ளார். விரைவில் தமிழ் செம்மொழிப் பட்டியலில் இடம் பெறும்.

+அகர முதலித் திட்டம், ‘எழுநிலை மாடம்’ஆகியவைகள் எந்த நிலையில் உள்ளன?

அகர முதலித் திட்டம் விரைந்து நடந்துகொண்டிருக்கிறது. 3-ஆவது தொகுதி அச்சாகி வெளியிடத் தயாராக உள்ளது. 3 ஆண்டுகளில் எல்லாச் சொற்களும் ஆய்வு செய்து முடிக்கப்படும். நான்காவது ஆண்டில் வல்லுநர் குழுவை வைத்து கலந்துரையாடல் செய்து அனைத்து நூல்களும் வெளியிடப்படும்.

எழும்பூர் அருங்காட்சிய வளாகத்தில் தமிழ் வளர்ச்சி வளாகம் அமைக்கப்பட உள்ளது. அதில் எழுநிலை மாடம் கட்டப்படும். இதற்காக அரசு 2 கோடி ரூபாய் ஒதுக்கியுள்ளது. இதன் கீழ்த்தளத்தில் அரசு வெளியிடுகின்ற அனைத்துப் புத்தகங்களும் விற்பனைக்கு வைக்கப்படும். இது தவிர தமிழகத்தில் உள்ள அனைத்துப் பதிப்பகங்களின் பெயர், ஊர், முகவரி விலைப்பட்டியல் அனைத்தும் இங்கே இருக்கும். வெளிநாட்டிலிருந்து வரும் தமிழர்கள் உட்பட அனைவரும் தேவைப்படும் புத்தகங்களை உடனடியாக வாங்க இந்த வசதி செய்து தரப்படும். வெளிநாட்டுத் தமிழர்கள் எந்த நூலை வாங்கினாலும் தமிழ் வளர்ச்சித் துறையே வாங்கிக்கொடுக்கும்.

அதில் தமிழ் வளர்ச்சி இயக்ககம், ஓவிய நுண்கலைக் குழு, அகரமுதலித் திட்டம், தொல்பொருள் ஆய்வு இயக்ககம் எல்லாமே ஒரே கட்டடத்தில் அமையும். அதற்கான பணிகள் இப்போது துவங்கிவிட்டன. தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்கள் விரைவில் நியமிக்கப்பட உள்ளார்கள். இப்போது நேர்காணல் நடக்க உள்ளது.

+தமிழில் சில பத்திரிகைகள் தொடர்ந்து தமிழில் பேசுவதையே கேலியாகவும், குறிப்பாக உங்களை ஒரு கேலிப் பொருளாகவும் சித்தரிக்கிறார்களே இது குறித்து என்ன கருதுகிறீர்கள்?

நான் அவர்களை இலட்சியம் செய்வதில்லை. அவர்கள் கேலி செய்வது என்னையல்ல. அவரவர் தாயைக் கேலி செய்கிறார்கள். இது உங்கள் தாய்மொழிதானே. இதைக் கொச்சைப்படுத்துவது உங்கள் தாயையே கொச்சைப் படுத்துவதாக இல்லையா. ஒரு நல்ல மகன் தன் தாயைத் தானே இழிவாகப் பேசுவானா?

கடைகளின் பெயர்ப் பலகைகளைத் தமிழில் மாற்ற மிக அதிக பட்சமாக ஓராண்டு நேரம் கொடுத்திருந்தீர்கள். அந்தக்கெடு முடிந்த பின்னும் இன்னும் பெயர்ப்பலகைகள் ஆங்கிலத்திலேயே இருக்கின்றனவே?

உண்மைதான். இருபது சதவீதம் அளவுக்கும் குறைவாகவே பெயர்ப்பலகைகள் தமிழில் மாற்றப்பட்டுள்ளன. எனவே இப்போது சட்டத்தைக் கடுமையாக்கியுள்ளோம். கடைகளின் உரிமத்தைப் புதுப்பிக்க வரும்போது பெயர்ப்பலகைகள் தமிழில் இல்லாவிட்டால் உரிமம் ரத்து செய்யப்படும் என்று அறிவித்து உள்ளோம். மேலும் வணிக வரித் துறையில் கடைகளின் உரிமையாளர்களிடம் பெயர்ப்பலகை உள்ளதா என்று கேட்பார்கள். இப்போது தமிழில் பெயர்ப்பலகை உள்ளதா என்று கேட்கப்படுகிறது. இதனால் பெயர்ப்பலகைகள் தமிழில் இருந்தால் மட்டுமே அனுமதி வழங்கப்படும் என்பது புரிய வைக்கப்படுகிறது.

+சன் டிவி பெயர்ப்பலகை எப்போது தமிழில் மாறும்?

சம்பந்தப்பட்டவர்களோடு பேசி இருக்கிறேன். விரைவில் மாற்ற முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகிறது.

+விரைவில் என்றால் எப்போது?

விரைவில் என்றால் விரைவில்தான்.

குறிப்பாக 'சன்' டி.வி. பெயர்ப்பலகை பற்றி ஒரு வினா. என் விடையைப் பொதுவாகத்தான் சொல்லியுள்ளேன்.

நானே 'சன்' தொலைக்காட்சி என்றாவது வெளியில் பெயர்ப்பலகை வையுங்கள் என்று கலாநிதி மாறனிடம் எழுதிக்கொடுத்தேன். ஆனால் அவர் 'டி.வி.'யைக் கைவிட விரும்பவில்லை. அதற்குப் பிறகு பல தொலைக்காட்சி அலைவரிசைகளைத் தொடங்கிவிட்டார்கள். 'K.T.V.' வரை. அதைக் கூடத் தமிழில் போடுவதில்லை. தமிழைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை என்ற முரசொலி மாறனின் மனப்பாங்கு இதில் அப்படியே செயற்படுத்தப்பட்டுள்ளது. தொலைக்காட்சித் தமிழ் பற்றி மற்றொரு கட்டுரை எழுதப்படுவதால் அங்கு மீதியைக் காணலாம்.

'நந்தன்' இதழாசிரியர்கட்கு கலைஞரின் குடும்பத் தொலைக்காட்சியாவது தொலைக்காட்சி எனும் சொல்லைப் பயன்படுத்தி விடாதா என்ற நப்பாசைதான். ஆனால் நடக்கவில்லை என்பதுதானே உண்மை.

சூனியர் விகடன் இதழில் என்னைக் கேலி செய்தெல்லாம் கட்டுரைகள் - துணுக்குகள் வந்துள்ளன. என் பெயரையே கேலி செய்தார்கள். Tamil - drink - son என்று.

ஆனால் ஒரு காலகட்டத்துக்குள் நல்ல செய்திகள் பல வந்தன. 1998 திசம்பரில் மக்கள் பேட்டி எனும் ஒரு பகுதியைத் தொடங்கி அதில் நேயர்கள் பலர் கேட்கும் வினாக்களுக்கு என்னை விடை சொல்லச் சொல்லியிருந்தார்கள்.

அவை முழுமையாக வெளிவந்தன.

அவற்றில் 'மொழி' 'இனம்' 'வழிபாடு' தொடர்பான வினா விடையை மட்டும் இங்குத் தந்துள்ளேன்.

1. கேள்வி : புதுமடம் மு. நூர்முகம்மது, திருச்சி - 8

கோயில்களில் கட்டாய தமிழ் அர்ச்சனை தேவையா? தமிழ் பக்தனுக்கா தெய்வத்திற்கா? பக்தன் எந்த மொழியில் போற்றினாலும் விளங்கும் ஆற்றல் படைத்ததுதானே தெய்வம். பின் எதற்காக உங்கள் அரசியலை (தமிழை) புகுத்த வேண்டும்?

ஆர். ஷம்மு குடந்தை

ஆண்டவனே ஆகாது என்பார்கள், அதே ஆண்டவனுக்கு தமிழில்தான் அர்ச்சனை செய்யனும் என அறிவிப்பது முரண்பாடாக உள்ளதே?

விடை : நூர்முகம்மது இந்த வினாவைக் கேட்பதுதான் வியப்பு. என்றாலும் எல்லார்க்கும் இதைக் கேட்க உரிமை உண்டு என்பதால் விடை சொல்கிறேன். ஓர் இசுலாமியர் இந்துக் கோயிலில் தமிழ் அர்ச்சனை பற்றிக் கேட்கலாமா? என்று நான் கேட்டு இதை ஓர் அரசியலாக்கிவிடலாம்.

நான் அப்படி ஆக்க மாட்டேன். எனவே, தமிழ் அர்ச்சனை தொடர்பான செய்திகளை அரசியலாக்குவது முற்றிலும் தவறு.

'கோயில்களில் தமிழில் அர்ச்சனை வேண்டும்' என்று கேட்பது தமிழ் மக்களின் உரிமை என்று மாண்புமிகு முதல்வர் அவர்கள் சட்டமன்றத்தில் பேசியுள்ளதைப் படிக்கவும்.

'பக்திமானாகிய' மாண்புமிகு சட்டப் பேரவைத் தலைவரும், த.மா.கா. முதலான பிற கட்சிகள் அனைத்தும் தமிழ் அர்ச்சனையின் பெருமையை உணர்த்தும்போது இது எப்படி அரசியல் ஆகும்?

'சண்முகம்' என்பதை 'ஷம்மு' என்று நல்ல (?) தமிழில் அழைத்துக்கொள்ளும் அன்பர் வினாவுக்கும் இதுதான் விடை.

கேள்வி : ஆர். ஜெயா, குடந்தை - 1

"பிறமொழிக் கலப்பின்றி, தமிழை உச்சரிப்பது என்பது, இன்றைய நடைமுறையில் அவ்வளவு எளிதான காரியமில்லை என்கிறேன். அப்ப, நீங்க என்ன சொல்றீங்க...?

விடை : நீண்டகாலமாகத் தமிழில் வடமொழியைக் கலந்து எழுதியும் பேசியும் வந்தார்கள். அதற்கு 'மணிப்பிரவாள நடை' என்றும் பெயர் வைத்தார்கள். மறைமலையடிகள் போன்ற தனித்தமிழ் அறிஞர்கள் வடமொழியை அறவே விலக்கியதால் இன்று நல்ல தமிழ் நடை என்பது வேரூன்றி விட்டது. சில இதழ்களும் சில எழுத்தாளர்களும் வீம்புக்குக் கலந்து எழுதுவதை எடுத்துக்காட்டாகக் கொள்ள இயலாது. ஆனால், பேச்சிலும் எழுத்திலும் நல்ல தமிழைப் பயன்படுத்துவது என்பது இன்று நடைமுறை.

அறிஞர்கள் தனித்தமிழ் பற்றி முயற்சி எடுத்தபோது அறிஞர் அண்ணா, கலைஞர், நாவலர் போன்ற திராவிட இயக்கத் தலைவர்கள் நல்ல தமிழ்ச் சொற்களை நாட்டுக்கு அறிமுகப்படுத்தி (வேட்பாளர் போன்ற) இளைஞர்களிடையே செல்வாக்குப் பெற வைத்தார்கள் என்பது வரலாறு.

இன்று ஆங்கிலம் கலந்து பேசுவதையே எளிதில் மாற்றிவிடமுடியும். எப்படி யென்கிறீர்களா?

தங்கள் முகவரியில் 'எம்.எஸ். காலணி' என்று உள்ளது. காலனி (Colony) என்று நினைத்துக்கொண்டு எழுதிவிட்டீர்கள். 'காலணி' என்றால் 'செருப்பு' என்று தெரியுமே!

ஒழுங்காகக் 'குடியிருப்பு' என்று எழுதியிருந்தால் இப்படி ஆகியிருக்குமோ?

தமிழறிவு பெறவும் முயலலாமே!

கேள்வி : கே. ராம்குமார், மதுரை

"இப்போது புல்லட்டில் உலாவரும் ஆசை யெல்லாம் கிடையாதா? எத்தனை புல்லட்டுகளைப் பயன்படுத்தியிருப்பீர்கள்?"

விடை : நான் பயன்படுத்திய மிதியுந்து (Motor Cycle) 'குருசேடர்' எனும் பெயரை உடையது. ஒரே வண்டியை 1971 முதல் 1989 வரை வைத்திருந்தேன். சட்டமன்ற உறுப்பினரான பின் அந்த ஆசை போய்விட்டது.

கேள்வி : ஆர். வேணுகோபால், பெரியகுளம்

"ஆங்கிலப் படங்கள் பார்ப்பதுண்டா? இல்லை, தமிழ்ப்படங்கள் மட்டும் தானா? உங்களுக்கு பிடித்த ஆங்கிலப் படம் எது?"

விடை : படங்கள் பார்ப்பதில் எந்த மொழிப் படம் என்ற வேறுபாடே கிடையாது. 'சங்கராபரணம்' தெலுங்குப் படம் பார்த்து உருகாமல் இருக்க முடியுமா? 'Psycho' ஆங்கிலப்படத்தைப் பார்த்துவிட்டுத் திகிலடையாமல் இருக்க முடியுமா? 'Titanic' பார்த்து வியப்படையாமல் இருக்க முடியுமா? 'தோ ஆங்கேன் பார ஹாத்' எனும் சாந்தா ராமின் இந்திப் படம் இன்றும் என் கண்ணில் நிற்கிறது.

இன்றும் தொலைக்காட்சியில் மலையாளப் படங்களைப் பார்க்கிறோம். எனவே, இதில் எந்தக் கருத்து வேறுபாடும் இல்லாத கலையுணர்ச்சிதான் மேலோங்கி நிற்கிறது.

கேள்வி : செ. மணிகண்டன், திருத்துறைப்பூண்டி

"நம்நாட்டு இளைஞர்களிடையே வளர வேண்டியது மொழி உணர்வா? தேசிய உணர்வா?

விடை : 'மொழியால் தமிழன்; இனத்தால் திராவிடன்; நாட்டால் இந்தியன்' என்று கலைஞர் குறிப்பிடுவதிலேயே விளக்கம் உள்ளது. தமிழில் பற்று என்பது ஒவ்வொரு தமிழனுக்கும் வேண்டும். தமிழை வைத்துத்தான் 'தமிழன்' எனும் இனப்பெயரும், 'தமிழ்நாடு' எனும் நாடும் பிறக்கின்றன. எனவே, இன நாட்டுப்பற்றும் உடன் சேர்ந்து உருவாகின்றன.

நான் இந்தியாவில் வாழும் இந்தியன். என் தமிழ்நாடும் சேர்ந்ததுதான் இந்தியா. என் இந்தியா வறுமை நீங்கி, வளம் பெருக்கி, வலிமை கொண்டு வல்லரசாக வேண்டும். இதுதான் நாட்டு அதாவது தேசிய உணர்வு.

இளைஞர்களின் தேவை இப்போது புரிகிறதா? இரண்டும் தொடர்புடையவை; வேறானவை அல்ல.

கேள்வி : த.கு.பா. பட்டுதுரை, சிதம்பரம்

"தங்களின் பெயர் புனைப்பெயரா? பட்டப்பெயரா?"

எஸ். இராஜேந்திரன், கபிஸ்தலம்.

"உங்களுக்கு பெற்றோர் வைத்த 'சாத்தையா' என்ற பெயரும் தமிழ்ப் பெயர்தானே அதை ஏன் 'தமிழ்க்குடிமகன்' என்று மாற்றிக்கொண்டீர்?

விடை : சாத்தையா என்பது பெற்றோர் இட்ட பெயர். 1958 இல் தனித்தமிழ் இயக்கத் தாக்கத்தால் வைத்துக்கொண்ட பெயர் தமிழ்க்குடிமகன் என்பது. அன்று புனைபெயராக இருந்ததையே சட்டப்படி பதிவு செய்துகொண்டேன். எனினும் 'சாத்தையா' என்பதும் நல்ல தமிழ்ப் பெயர்தான்.

கேள்வி : கே.எஸ். ராமையா, பாண்டிச்சேரி - 8

"விருப்பப்பட்டு பேராசிரியரானீர்களா, அல்லது வேறு வேலைகள் கிடைக்காத காரணத்தால் பேராசிரியர் வேலையில் சேர்ந்தீர்களா?"

விடை : நான் படித்து முடித்ததும் வேலை என்று பார்க்க நினைத்ததே 'ஆசிரியப் பணி' ஒன்றுதான். சரபோசிக் கல்லூரிக்கு - காமன்கோட்டை உயர்நிலைப் பள்ளிக்கு நேர் காணலுக்குச் சென்றேன். முன்னது கிடைக்கவில்லை. பின்னது கிடைத்தும் போகவில்லை.

விரும்பி ஏற்ற 'ஆசிரியப்பணி'யில் 23 ஆண்டுகள் என்பதை இன்றும் பெருமையோடு திரும்பிப் பார்க்கிறேன்.

வெ. கணேசன், அருப்புக்கோட்டை

கேள்வி : அமைச்சர் என்ற அந்தஸ்தில், நீங்கள் ஆற்றிவரும் பணிகளில் உங்களுக்கு மிக மன நிறைவைத் தந்த, ஒரு சாதனையைப் பகிர்ந்து கொள்ளலாமா?

விடை : தமிழை ஆட்சி மொழியாக்குவதில் ஏற்பட்ட தேக்கத்தைப் போக்கியதால் தலைமைச் செயலகத்திலேயே இன்று பெரும் மாறுதல் ஏற்பட்டுள்ளது. கோயில்களில் 'தமிழ் அர்ச்சனை'நடைமுறைக்கு வந்துவிட்டது. ஆக்கிரமிப்பில் இருந்த கோயில் நிலங்கள் பல மீட்கப்பட்டுள்ளன. தமிழ் பற்றிய விழிப்பு உணர்ச்சி இன்று தமிழகமெங்கும். உலகமெங்கும் ஏற்பட்டிருப்பதே பெரிய பணிதான்.

பாண்டு பால்ராஜ், திருச்சி - 2

கேள்வி : 'குடும்ப பொறுப்பு' 'பேராசிரியர்' 'அரசியல்வாதி' தாங்கள் அதிகம் விரும்புவது?

விடை : என் தாய்க்கு மகனாக, என் மனைவிக்குக் கணவனாக, என் மகளுக்குத் தந்தையாக விளங்கும் நான் யார் மீது அதிகமான பாசம் வைத்துள்ளேன் என்று பிரித்துக் கூறமுடியுமா?

கேள்வி : இந்தி எதிர்ப்பு தமிழகத்தில் கொழுந்து விட்டு எரிந்தபோது நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?

விடை : 1965ஆம் ஆண்டு பறம்புக்குடி ஆயிரவைசிய மேல்நிலைப் பள்ளியில் பணியாற்றிக் கொண்டிருந்தேன். மாணவர்கள் போராட்டத்தில் ஊர்வலத்தை முன்னின்று நடத்திச் சென்றேன். அது தொடர்பாகத் தலைமையாசிரியருக்கும் எனக்கும் ஏற்பட்ட பிணக்கு சட்டமன்றம் வரை வர நேர்ந்தது. ஆசிரியனாக இருந்தாலும் இந்தித் திணிப்பு எதிர்ப்பில் என் பங்கை முறையாகவே செய்துள்ளேன். பரபரப்பு மிக்க அந்த நேரத்தில் அ. இரகுமான்கான், கா. காளிமுத்து ஆகியோர் பங்குபெற்ற பட்டிமன்றத்தில் நடுவராக இருந்து இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போரில் கனல் கக்கப் பேசியதை நினைவில் கொள்கிறேன்.

ஆர்.டி. இளங்கோ, இராசிபுரம்

கேள்வி : நீதிமன்றத் தீர்ப்புகளில் - பாமரனும் புரியும் வண்ணம் நடைமுறைத் தமிழில் தீர்ப்பு வழங்க என்ன நடவடிக்கை எடுத்து உள்ளீர்கள். .?

ஏற்கெனவே உயர்நீதிமன்றம் தவிர அடுத்த நிலையில் இருக்கின்ற நீதிமன்றங்கள் அனைத்திலும் சாட்சிகளைப் பதிவு செய்யும்போதும், தீர்ப்புகளை வழங்கும்போதும் அவை தமிழில் பேணப்படவேண்டும் என்று தெளிவான ஆணைகள் உள்ளன. அவ்வாறே நடைமுறையும் உள்ளது. இதில் ஏதேனும் மாறுபட்ட சூழல் இருக்குமானால் எங்களுக்குச் சுட்டிக்காட்டலாம்.

த. சிவாஜி மூக்கையா, தர்காஸ்

கேள்வி : தலைக்கனம், தலைக்கர்வம் என்ன வேறுபாடு?

இரண்டும் ஒன்றுதான். ஆனாலும் 'தலைக்கர்வம்' என்பது ஒருவர் தன்னை மிகையாகக் கருதிக் கொண்டு ஆணவத்தோடு செயற்படுவதைக் குறிக்கும். மழையில் நனைந்து அதனால் உங்களுக்குத் தடுமன் (சளி) பிடித்தால் அப்போது உங்களுக்கு ஏற்படுவதுதான் தலைக்கனம். இரண்டுமே இறக்கி வைக்கப்பட வேண்டியவைதான்.

* * *

'சண்முகம்' என்ற தன் பெயரையே 'ஷம்மு' என்று மாற்றிக் கொள்பவர்களும் வினாத் தொடுத்தார்கள். 'காலனி'க்கும் 'காலணி'க்கும் வேறுபாடு தெரியாதவர்களும் வினாத்தொடுத்தார்கள்.

என்றாலும் தயக்கமின்றிப் பலர் தங்கள் ஐயங்களை வினாவாகத் தொடுத்து மகிழ்ந்தார்கள் என்பது பாராட்டுக்குரியது.

சனவரி 2000 வெளிவந்த 'இதயம் பேசுகிறது' இதழில் ஒரு விரிவான நேர்காணல்.

கன்னியாகுமரியில் புதிய நூற்றாண்டு தினத்தில் திருவள்ளுவர் சிலை திறக்கும் ஏற்பாடுகளில் 'பிஸி'யாக இருந்த மாநில இந்து சமய மற்றும் தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் நமக்களித்த பிரத்யேகப் பேட்டி இது :

2000ல் தமிழ் வளர்ச்சி எப்படி இருக்கும்?

வளர்ச்சி என்று பார்த்தால் அனைத்துத் துறைகளிலுமே நல்ல வளர்ச்சிதான். இந்த வளர்ச்சி விகிதம் புதிய நூற்றாண்டிலும், அதன் பிறகும் மேலும் அதிகரிக்கும். தமிழை ஆட்சி மொழியாக்கிட நாங்கள் மேற்கொண்டு வரும் முயற்சிகள் புதிய நூற்றாண்டில் உறுதிப்படும். நிர்வாகத்தரப்பில் இ.ஆ.ப. அதிகாரிகள் குழு ஒத்துழைப்புத் தருகின்றது. எனவே, வளர்ச்சி என்பது உறுதி செய்யப்பட்டதுதான்.

அது எப்படிப்பட்ட வளர்ச்சி என குறிப்பிட்டுச் சொல்லமுடியுமா?

தமிழில் கணினி வளர்ச்சியை முக்கியமாகக் கூறலாம். வரும் நூற்றாண்டு முழுக்க முழுக்கக் கணினி உலகமாய் இருக்கும். கணினியில் தமிழைப் பயன்படுத்துவது. தமிழ் வளர்ச்சிக்குக் கணினியைப் பயன்படுத்துவது என்ற இரண்டு அம்சங்களும் ஒரே நிலையில் இடம்பெறும். தற்போது முதல்வர் அறையிலும் என் அறையிலும் மின் அஞ்சல் தொடர்பு முறைதான் நடைமுறையில் உள்ளது. அனைத்துத் துறையிலும் இதே நிலை வரும். இப்போது கணினி மயமாக்கலுக்கு திருவாரூர் மாவட்டம் முன்னோடியாக உள்ளது. நெல்லை மாவட்டத்தில் விண்ணப்பங்கள் அனைத்தும் கணினி மூலம் பெறப்பட்டு உடனடி விளக்கம் தரப்படுகிறது. இந்த வளர்ச்சி மாநிலம் முழுவதும் அதிகரிக்கும்.

ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். அதிகாரிகளில் சிலருக்குத் தமிழ் தெரியாத நிலையில், நிர்வாகத் தமிழ் எந்த அளவிற்குச் சாத்தியப்படும்?

எந்த ஒரு உயரதிகாரியையும் நினைத்த நேரத்தில் நினைத்த மாநிலத்திற்கு இடமாற்றம் செய்து விடுவதாக நினைப்பது தவறு. டெல்லியிலிருந்து தமிழகத்திற்கும் தமிழகத்திலிருந்து டெல்லிக்கும்தான் அதிகாரிகளை இடமாற்றம் செய்வதுண்டு. அப்படிச் செய்கிற போதும், டெல்லியில் இருந்து மாறுதல் செய்யப்படும் அதிகாரியும், அவர் பொறுப்பேற்றுப் பணியாற்ற இருக்கும் குறிப்பிட்ட மாநில மொழியைத் தெரிந்துவைத்திருக்க வேண்டும். இதற்காக அந்தந்த

மாநில மொழிகளுக்கான பயிற்சி வகுப்புகளும் நடைபெறும். எனவே, தமிழ் தெரியாத அதிகாரிகள் என்பது தவறான வாதம். 1956இல் ஆட்சி மொழிச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. ஆனால், 43 ஆண்டு காலமாக அதை நிறைவேற்றுவதில் பலப்பல இடையூறுகள் இருந்தன. இப்போது அப்படி இல்லை. நம் மாநிலத்தில் நிர்வாகத் தமிழ் செம்மையோடு உள்ளது.

நிர்வாகத் தமிழ், ஆட்சி மொழி போன்ற அம்சங்கள் தனியார் துறைகளில் எந்த அளவு சாத்தியப்படும்?

தனியார் துறைகளிலும் நிர்வாகத் தமிழை நடைமுறைப்படுத்த எங்கள் அரசு முழு முயற்சி மேற்கொண்டுள்ளது. குறிப்பாக, தொலைக்காட்சி, பத்திரிகைகள், வானொலி போன்ற தொடர்புச் சாதனங்களில் தமிழை மட்டும் பயன்படுத்த அறிவுறுத்தியுள்ளோம். காலப்போக்கில் வாசகர்களிடம் இந்தத் தமிழுணர்வு அதிகரிக்கும்போது, பத்திரிகைகளும் தங்களை மாற்றிக் கொள்ளத்தான் வேண்டும். சிலர் தமிழ்ப் பத்திரிகை நடத்திக்கொண்டு ஆங்கிலத்தில் தான் தலைப்பு வைப்பேன் என்றால் என்ன பொருள்? வணிகத்துக்காக அவர்கள் தமிழைப் பயன்படுத்துகிறார்கள் என்பதே இதன் பொருள்.

தமிழ், தமிழ் வளர்ச்சி ஆகிய விஷயங்களை வைத்து தி.மு.க. அரசியல் செய்வதாகக் கூறப்படும் குற்றச் சாட்டு பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

அதற்கான தேவை எங்களுக்கு இல்லை. எங்களின் முயற்சிகளை அனைத்துக் கட்சிகளும் பாராட்டுகின்றன. - காங்கிரஸ் தவிர! அக்கட்சிக்குத் தமிழ் வளர்ச்சி பற்றிய மனப்பாங்கு கிடையாது. அதேபோல், தமிழுக்காக நாங்கள் மட்டும் செய்வதாகவும் கூறவில்லை. எம்.ஜி.ஆர். முதல்வராக இருந்தபோதும், ஜெயலலிதா முதல்வராக இருந்துபோதும் கூட தமிழ் வளர்ச்சிக்கான முக்கிய அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. இதை நாங்கள் பாராட்டத் தயங்கவில்லை. கலைஞர் இயல்பாகவே தமிழறிஞர் என்பதால் அவர் முதல்வராக உள்ள அரசில், தமிழ் வளர்ச்சி நடவடிக்கைகள் அதிகரிக்கப்பட்டுள்ளன. அதுதான் உண்மை. நீங்கள் கூறுவது போல, தமிழை வைத்து நாங்கள் அரசியல் செய்யவில்லை. அதற்கான தேவையும் இல்லை.

* * *

மிகுந்த நம்பிக்கையுடன் தரப்பட்ட இந்தச் செய்திகளில் பல நடைமுறைக்கு வந்துவிட்டன. எனினும் நிறைவேறாத பல பகுதிகளும் உள்ளன.

சில நேர்காணல்களை மட்டுமே தந்து, அதில் தமிழகம் என்னிடம் என்ன எதிர்பார்க்கிறது? தமிழுக்கு என்ன செய்யப்படவேண்டும் என்பன போன்றவற்றிற்கான தீர்வுகளை நோக்கி இவை நடை போட்டிருப்பதைக் காணலாம்.

## இயல் - முப்பத்துமூன்று

# அரசு அலுவலர்களின் மெத்தனப்போக்கு

நான் இதுவரை தந்துள்ள தலைப்புகளில் வருவனவெல்லாம் நடைமுறை நிலைகள், அரசு ஆணைகள், கோப்புகள் என்று பல்வேறு புள்ளி விவரங்களையும் அடக்கியவை.

தமிழ்ப் பற்றும், தமிழ் அறிவும் உள்ள தமிழ்க்குடிமகனும் இந்த அரசு அலுவலர்களுடன் போராடிப் பார்த்துவிட்டான்; மிரட்டி விட்டான்; எச்சரிக்கை கொடுத்து விட்டான். ஆய்வுக்கு உட்படுத்திப் பார்த்துச் சுட்டிக்காட்டியும் சொல்லிவிட்டான்.

இவ்வளவுக்கும் பின்னால் - அரசு அலுவலர்கள் தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தைச் செயற்படுத்தக் கூடிய அரசு ஊழியர்கள் - இ.ஆ.ப. அலுவலர் முதல் கடைநிலை ஊழியர் வரை - எப்படியிருக்கிறார்கள் என்று பார்த்தால்தான் என் இந்த முயற்சி முழுமையடையும்: தமிழக அரசு அலுவலர்களில் மூன்று வகை உண்டு.

1) இந்திய அரசின் தேர்வாணையத்தால் (U.P.S.C.) தேர்ந்தெடுக்கப்பட்டுத் தமிழகத்துக்கு என்று ஒதுக்கப்பட்ட இ.ஆ.ப., இ.கா.ப., இ.வ.அ. எனப்படும் உயர்நிலை அலுவலர்கள்.

அவர்களில் 2 உட்பிரிவுகள்

1 அ) தமிழைத் தாய்மொழியாகக் கொண்டோ, தமிழ்நாட்டில் நீண்டகாலம் வாழ்ந்து தமிழை நன்கறிந்தோ உள்ள இ.ஆ.ப. அலுவலர்கள்.

ஆ) இந்தியாவின் பிற மாநிலங்களில் பிறந்து வளர்ந்து தமிழல்லாத பிற மொழிகளைத் தாய்மொழியாகக் கொண்டு வளர்ந்து, தேர்வுக்குட்பட்டவர்; தமிழ் நாட்டில் பணிபுரிய வரும் அலுவலர்கள் (TN Cadre)

2. தமிழ்நாடு தேர்வாணையத்தில் தேர்வெழுதி வெற்றி பெற்றுத் தமிழக அரசு ஊழியர்கள் ஆகின்றவர்கள்.

இவர்களில் வேறு தாய்மொழியைக் கொண்டு, ஆங்கிலத்தில் தேர்வெழுதி வெற்றி பெற்றுப் பணிக்கு வந்தவர்கள் ஒருவகை.

தமிழைத் தாய்மொழியாகக் கொண்டு தமிழிலோ, ஆங்கிலத்திலோ, தேர்வெழுதி வென்று அரசுப் பணிக்கு வருபவர்கள் மற்றொருவகை.

இவர்கள் தான் தமிழக ஆட்சியை முழுமையாகக் கவனிப்பவர்கள். நிதி ஒதுக்கீடு, புதுத் திட்டங்கள் ஆகிய அனைத்துக்கும் அரசாணைகள் பிறப்பித்து அவற்றை மக்களுக்கும் கொண்டு சேர்ப்பவர்கள்.

இவர்கள் நிலை என்ன?

தந்தை பெரியார் "மந்திரி மார்களுக்கு வேண்டியோர்" எனும் பெயரில் ஒரு கட்டுரை எழுதினார்: அதில் வரும் பகுதியைப் பாருங்கள்.

"மேற்கண்ட மாதிரியான நாட்டு மொழி தெரியாத அன்னிய மொழியாளர்களை அதிகாரிகளாக நியமிப்பதென்றால் குடிமக்கள் அதிகாரிகளிடம் எப்படிப் பேச முடியும்? அதிகாரிகளுக்குக் குடிமக்கள் எந்த மொழியில் விண்ணப்பங்களையும் வேண்டுகோள்களையும் எழுத முடியும்?" - பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம் - 835

இதில் தந்தை பெரியார் கூறும் கடைசிப் பகுதியைப் பாருங்கள்.

நாட்டு மொழி தெரியாத அன்னிய மொழியாளர்கள் அதிகப் பேர் இருந்தால் குடிமக்கள் அதிகாரிகளிடம் எப்படிப் பேச முடியும்? என்று கேட்கிறார்.

வேறு வழியின்றி இந்திய அரசுப் பணியில் அன்னிய மொழியாளர்களும் வந்து பணியாற்றுவது தவிர்க்க முடியாததாகிவிட்டது. இவர்களிடம் பாமரத் தமிழ்க்குடிமகன் எப்படிப் பேசமுடியும்?

ஆனால் அதற்குச் சில தீர்வுகள் காணப்பட்டுள்ளன. காணப்பட்டுள்ளன என்பதை விடச் "சொல்லப் பட்டுள்ளன" வெறும் வாய்மொழியாக அல்ல; அரசாணைகளின் மூலமாக.

தமிழ் தெரியாத இ.ஆ.ப., இ.கா.ப. அலுவலர்கட்குத் தமிழில் பயிற்சி அளிக்கப்படுகிறது. எனவே, எங்களுக்குத் தமிழ் தெரியாது என்று சொல்லித் தப்பிக்க முடியாது. அதே நேரத்தில் தமிழக அரசுப் பணிகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் - தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாதிருப்போரும், ஆங்கிலத்தில் தேர்வெழுதி அரசுப் பணியில் நுழைந்திருப்போரும் என எவராக இருந்தாலும் தேர்வாணையத்தின் மூலம் நடத்தப்படும் 'தமிழ்த் தகுதித் தேர்வில்' கட்டாயம் வெற்றி பெற்றாக வேண்டும்; தவறினால் அவர்கள் 'தகுதிகாண் பருவத்தை' நிறைவு செய்ய முடியாது.

அதுமட்டுமின்றி, தொடர்ந்து சில தேர்வுகளில் வெற்றி பெற முடியாமலேயே போய்விட்டால் அவர்கள் வேலையிலிருந்து நீக்கப்படுவார்கள்.

இவ்வளவு கட்டுப்பாடுகள் உள்ளன.

ஆனாலும் 'தமிழ் முழுமையான ஆட்சிமொழியாக வில்லை.' மேலும், தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களே தமிழில் எழுதுவதில்லை எனும் வியப்பான, எரிச்சல் தரத்தக்க இழி நிலையும் உள்ளது. ஒருவேளை இவர்களெல்லாம் 'தமிழ்த் தாய்க்குப் பிறந்து விட்டோமே!' என்று வருத்தப்படுகிறார்களா?

"தமிழ்த் தாயின் பிள்ளையா நீ?" என்று ஒரு கவிஞன் காட்டத்துடன் கேட்ட வினா என் காதில் ஒலிக்கிறது. "தோட்டா இல்லாத துப்பாக்கி - இதை ஒரு தாய் போட்டாளே வேலையற்றுப் போய்" என்றாரே கண்ணதாசன். ஒருசிலர் ஆங்கிலத் தாய்க்குப் பிறக்காவிட்டாலும் தாங்கள் ஆங்கிலத் தாய்க்குப் பிறந்தவர்கள்தான் என்று அடம் பிடிக்கிறார்கள் என்பதையும் மறுக்க முடியாது.

அந்த வகையில் தான் அலுவலர்களின் மெத்தனம் குறித்து அலசி ஆராய வேண்டியுள்ளது.

அதே நேரத்தில் தமிழை ஆட்சிமொழியாக்கி அழகு பார்த்திட அயராது உழைக்கும் - ஆர்வம் மிகவுடைய - அக்கறை படைத்த - தமிழில் எழுதி மகிழ்ந்து வரும் - எண்ணற்ற அரசு ஊழியர்களையும் மனம், மொழி, மெய்களால் வாழ்த்திப் பாராட்டுகின்றேன்.

கல்கி எழுதிய 'அலையோசை'புத்தகத்தைக் கல்லூரிக் காலத்தில் படித்தேன். ஏதோ ஒரு வாய்ப்பில், அண்மையில் இரண்டே நாட்களில் 1062 பக்கங்களைக்கொண்ட "அலையோசை" யை மீண்டும் படித்து முடித்தேன்.

"இந்து முஸ்லீம் பிளவை இப்போது வளர்த்து வருகிறவர்கள் பதவி மோகங்கொண்ட அரசியல் வாதிகளும் அதிகார மோகங்கொண்ட சர்க்கார் உத்தியோகஸ்தர்களுந்தான்."

"உத்தியோகஸ்தர்களைப் பற்றி ஏதாவது குறை சொல்லாவிட்டால் அன்றைக்கு உனக்கு இராத்தூக்கம் வராது போலிருக்கிறது" என்றான் சௌந்தரராகவன்.

"சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் தான் இந்தியாவிலேயே படிப்புள்ள அறிவாளிகள், அவர்கள் அன்னிய ஆட்சியை இங்கே நிலைநாட்டுவதில் தங்களுடைய படிப்பையும் அறிவையும் செலவழித்து வருகிறார்கள். அவர்களைக் குற்றம் சொல்லாமல் வேறு யாரைக் குற்றம் சொல்வது?" அலையோசை (பக்கம். 455)

அரசு அலுவலர்கள் தாம் அன்னிய ஆட்சியை இங்கே நிலைநாட்டுவதில் தங்களுடைய படிப்பையும் அறிவையும் செலவழித்து வருகிறார்கள் என்று அடித்துச் சொல்கிறார் கல்கி.

இது அயலவர் ஆட்சி இங்கு நிலவிய காலத்து நிலை. அயலவர் ஆட்சி அகன்று நமக்கு நாமே ஆட்சி புரிந்துகொள்ளும் இந்நாளில், மொழிவாரி மாநிலப் பிரிவினைகள் நேர்ந்த பின்னால் தமிழ் ஆட்சிமொழியான பின்னால் இந்த அரசு ஊழியர்கள் எப்படியுள்ளார்கள்!

அவர்கள் தங்கள் படிப்பையும் அறிவையும் செலவழித்து அயல் மொழி வல்லாண்மையை வாழ்த்தி வரவேற்று, வலிந்து செயற்படுத்திக் கோடானகோடி ஏழைப் பாமரத் தமிழர்களையெல்லாம் ''அன்னியர்''களாக ஆக்கி வைத்திருக்கிறார்கள் என்று அடித்துச்

சொல்கிறேன் நான். அலுவலர்களின் தன்மை என்ன என்பதற்கு நான் சொன்ன எடுத்துக்காட்டுகள் சிலர்க்காவது கட்டாயம் பொருந்தும் என்பதை யாரும் மறுக்க முடியாது.

நான் பொறுப்பேற்கு முன் 1995 இல் நடைபெற்ற உலகத்தமிழ் மாநாட்டுக்குப் பின் அ.தி.மு.க. அரசால் சில முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

29.3.1996 இல் தமிழ் ஆட்சிமொழித் திட்டச் செயலாக்க வல்லுநர் குழுக் கூட்டம் நடைபெற்றது.

இக்குழுவின் தலைவர் பேராசிரியர் திரு. முத்துக் கண்ணப்பன் அவர்கள் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். உறுப்பினர்களாக அரசு சட்டத்துறைச் செயலர் அவர்களும், அரசு பணியாளர் - நிருவாகச் சீர்திருத்தத்துறைச் செயலர் அவர்களும், குழுவின் உறுப்பினர் - செயலர் (தமிழ் வளர்ச்சி செயலர்) அவர்களும் வருகை புரிந்திருந்தனர். மற்றொரு உறுப்பினர் டாக்டர் ஔவை நடராசன் அவர்கள் தாம் வருகை தர இயலவில்லையெனவும், ஆனால் தலைவர் முடிவை அப்படியே ஏற்றுக் கொள்வதாகவும் தெரிவித்திருந்தார்.

கூட்டத்தில் தமிழ் ஆட்சிமொழியாகச் செயல்படுவதற்கென, அரசு வெளியிட்டுள்ள ஆணைகள் தலைவரால் படித்துக் காட்டி விளக்கப் பட்டன. அவ்வாணைகளில் குறிப்பிடத்தக்கவை 2.12.71 நாளிட்ட ஆணை எண். 2070; 31.7.89 நாளிட்ட அரசு தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைக் கடிதம் எண்.7411 த.வ.1-1/85-11. பிற தொடர்புடைய ஆணைகள்.

அவ்வாணைகளின்படி ஏறத்தாழ 25 ஆண்டுகளுக்கு முன்பே, தமிழ் ஆட்சிமொழி முழுமையாகச் செயல்படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்பது நன்கு உணரப்பட்டது.

அவ்வாறு முழுமையாகச் செயல்படாததற்குக் காரணம் அரசுச் செயலகத் துறைகளுக்குத் தலைமைப் பொறுப்புப் பெற்றுள்ளவர்கள் போதிய ஆர்வமும், அக்கறையும் காட்டாமையே என்பதைத் தலைவர் தம் கருத்தாக எடுத்துரைத்தார். அவர்கள் உரியவாறு கண்டிப்பாகச் செயல்பட அரசு முறைப்படி தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்றும் குறிப்பிட்டார்.

உறுப்பினர்கள் முறைப்படி விவாதித்த பின்னர், பின்வரும் தீர்மானங்கள் (பரிந்துரைகள்) ஒருமனதாக நிறைவேற்றப்பட்டன.

1.ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கம் தொடர்பில் வெளியிடப்பட்டுள்ள அரசாணைகள், குறிப்புரைகளுக்கிணங்க 2.12.71 ஆம் நாளிட்ட அரசு கல்வித்துறை நிலையாணை எண்.2070, 31.7.89 ஆம் நாளிட்ட அரசு தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைக் கடித எண்.7411/த.வ.1-1/85-11 ஆகியவற்றின் வாயிலாக அளிக்கப்பட்டுள்ள விதிவிலக்குகள் நீங்கலாக, ஏனைய அனைத்தும்

(கோப்புகள், சுற்றறிக்கைகள், அறிக்கைகள், ஆணைகள் முதலியன) 1996 ஜுலை 31-ஆம் நாளுக்குள் தமிழிலேயே எழுதப்பட அரசு உரிய ஆணை பிறப்பிக்க வேண்டுமென்று இக்குழு பரிந்துரைக்கிறது.

2. விரைவில் செயல்படுவதற்கு ஏதுவாக, அரசு அலுவலகங்களுக்குத் தட்டுப்பாடின்றித் தமிழ்த் தட்டச்சுகளை வழங்குவதற்கு, அரசு எழுதுபொருள் அச்சுத் துறை போதிய எண்ணிக்கையில் தமிழ்த் தட்டச்சுகளைப் பெறுவதற்கு, அரசு விரைவான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்றும் இக்குழு பரிந்துரைக்கிறது."

இதில், தமிழறிஞரான முத்துக் கண்ணப்பர் கூறிய கருத்துக்களைக் கவனிக்கவும்: (இந்த நூல் வெளிவருவதற்கு முன்பே, அண்மையில் இவர் காலமாகி விட்டார்.)

"அரசுச் செயலகத் துறைகளுக்குத் தலைமைப் பொறுப்புப் பெற்றுள்ளவர்கள் போதிய ஆர்வமும், அக்கறையும் காட்டாமையே தமிழ் ஆட்சிமொழித்திட்டம் முழுமையாகச் செயற்படாததற்குக் காரணம்" என்பதை நன்கு நினைவில் வைத்துக்கொள்ளவும்:

எனவே, நான்தான் ஏதோ ஒரு சில குற்றச் சாட்டுகளை அலுவலர்களின் மீது வாரி வீசுகிறேன் என்று யாரும் என்மீது பாயக் கூடாது. கடந்த ஆட்சியில் செயலாக்கக் குழுவின் தலைவரே இந்தக் கருத்தைத்தான் கூறுகிறார்.

அவர்கள் நிறை வேற்றிய தீர்மானங்கள் இரண்டுமே 13.5.96 க்குப் பின் செயற்படுத்தப்பட்டன என்பதை அனைவரும் அறிவர்.

இது தொடர்பாக 5.5.96 தினமணி இதழில் தி. முத்துக்கண்ணப்பர் எழுதிய கட்டுரையில் ஒரு சில தொடர்கள் கவனிக்கத் தகுந்தவை.

"தலைமைச் செயலகத்திலுள்ள பல துறைகளும் இன்றும் ஆங்கிலத்தில்தான் பெரும்பாலும் செயல்பட்டு வருகிறது"

"த.வ. இயக்கம் தன் பங்கை. . . பொறுப்பை முழுமையாகச் செயற்படுத்தும் உரிமை பெற்று இயங்குகிறதா என்பது ஐயப்பாடே"

இதில் மட்டும் ஐயப்பாடு எழவில்லை : "தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சகமே பலரையும் அடக்கி ஆண்டு தமிழ் ஆட்சிமொழியைச் செயற்படுத்தும் உரிமை பெற்று இயங்குகிறதா? இயங்கியதா? இயங்க விட்டார்களா? - இதுவும் நம் ஐயப்பாடுதான்.

எனக்கு முன்னால் என்ன நிலையிருந்தது என்பதனை நானே சொல்வதைவிட இதற்கு முன் தமிழ் வளர்ச்சி இயக்குநராக இருந்த மா. நன்னன் 3.2.1995 இல் 'தினமணி'யில் எழுதிய கட்டுரையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அவர் எழுதிய பிற செய்திகளுக்கு வேறு பகுதிகளில் விளக்கமோ, விடையோ தரப்படும்.

ஒரே ஒரு பகுதி மட்டும் இப்போது எடுத்துக் கொள்ளப்படுகிறது. அது சென்னை மாநகராட்சி பற்றியது. அவர் எழுதுகிறார்.

"தமிழ் நாட்டின் தலைநகரமாகிய சென்னையில் உள்ள மாநகராட்சிக்கு இன்னும் சுதந்திரம் வந்ததாகவே தெரியவில்லை. ஆங்கிலேயர் ஆட்சி நடப்பதாகவே அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ரிப்பன் கட்டடத்தின் மேல் தமிழ் வாழ்க என்று இரண்டு பெரிய பலகைகள் வைக்கப்பட்டிருக்கின்றன. அது தவிர கட்டடத்திற்குள்ளே தமிழுக்கு இடமிருப்பதாகத் தெரியவில்லை. அண்மையில் என் மகன் இறந்துவிட்டான். அதற்காக இறப்புச் சான்று பெறுவதற்காக நான் பெரும்பாடு பட நேர்ந்தது. சான்று பெறுவதற்கான விண்ணப்பப் படிவத்தை வாங்குவதற்கே இரண்டு, மூன்று முறை போக நேர்ந்தது. அது எப்படியோ போகட்டும். அந்தப் படிவம் ஆங்கிலத்தில் இருக்கிறது. படிவங்களெல்லாம் தமிழில்தான் அச்சிடப்படவேண்டும் என்று என் பணிக்காலத்தில் பிறப்பிக்கப்பட்டஅரசாணை இருக்கிறது. அதைக் குப்பையில் போட்டுவிட்டு சென்னை மாநகராட்சி ஆங்கிலப் படிவத்தை உருவாக்கி வைத்துக் கொண்டிருக்கிறது."

அதன் பின் மு.க.ஸ்டாலின் சென்னை மேயராக ஆறு ஆண்டுகள் பணியாற்றியுள்ளார். அவர் காலத்திலாவது படிவங்கள் எல்லாம் தமிழில் வந்து விட்டனவா, என்று பார்க்க வேண்டும்; சென்று பாருங்கள்; மாறியிருந்தால் அவருக்குப் பாராட்டுத் தெரிவியுங்கள்; மாறாமல் - பழையபடியே இருந்தால் . . . ?

தமிழக அரசில் தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சராகப் பொறுப்பேற்றபின் எனக்கு நினைவூட்டுதற்கு எத்தனை அறிஞர்கள் முன் வந்தார்கள்? எத்தனை இதழ்கள் ஆர்வத்துடன் போட்டி போட்டுக் கொண்டு செய்திகளை என் கவனத்துக்குக் கொண்டு வந்தன? என் கவனத்திற்கு வந்தால் ஏதாவது நடக்கும் என்ற நம்பிக்கை வெகுவாக வளர்ந்திருந்தது.

தீக்கதிர் (27.2.97) இதழில்

'அமைச்சர் தமிழ்க்குடிமகன் உடனடிப் பார்வைக்கு' எனும் தலைப்பில் ஒரு செய்தி.

தமிழ் ஆட்சிமொழித் துறைக்கு கடந்த ஆட்சியின் போது 35 இலட்ச ரூபாய்தான் ஒதுக்கப்பட்டது. தற்போதைய ஆட்சியில் 3.15 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது என்றும், நீதிமன்றத் தீர்ப்பைத் தமிழில் வழங்கிட அரசு ஆணை பிறப்பித்துள்ளது என்றும்,

தமிழ் மொழியினைத் தலைமைச் செயலகத்திலிருந்து ஊராட்சி வரையிலும் ஆட்சி மொழியாக நடைமுறைப்படுத்திட தமிழ் தட்டச்சுப் பொறிகள் அதிகமாக தேவை என்றும்,

தமிழக அரசின் கீழுள்ள எண்பத்தி நான்கு துறைகளுக்கும் பயன்படுகிற மாதிரி, புதிய ஆட்சிச் சொல் அகராதியை அரசு விரைவில் வெளியிடும் என்றும், அமைச்சர் தமிழ்க்குடிமகன் அவர்கள் அவ்வப்போது பொது மேடைகளில் பேசி வருகிறார்.

நல்லது, தமிழை ஆட்சி மொழியாக நடைமுறைப்படுத்திட அரசும், அமைச்சரும் எடுக்கும் நல்ல முயற்சிகளுக்கு எல்லாம் மேளம் அடித்து வரவேற்போம்.

சிறு தொழில் முனைவோர்கள் பிரிவு செய்ய வேண்டிய படிவம் ஒன்றை, தமிழக அரசின் கீழுள்ள வணிகம் மற்றும் தொழில்துறை வெளியிட்டுள்ளதைப் பாருங்கள்!

DEPARTMENT OF INDUSTRIES AND COMMERCE

GOVERNMENT OF TAMILNADU

Application Form for Permanent / Final Registration as Samll Scale Industry
(in Duplicate)

1. Name and address of the unit :

   Office :
   Factory :

2. Date of commencement of Production :

3. Products manufacture :

4. Whether the list of machinery installed with value is enclosed :

5. Employment :

   Men :
   Women :

6. Whether all the Accessary statutory clearances have been obtained : Yes No.

7. Whether the Affidavit in the prescribed form is annexed : Yes No.

8. Land & Building. Rented / Own :

9. Capacity per annum :

Place :

Date :

Signature of the Applicant

Note: Permanent / Final Registration is not a statutory requirement.

இது பேச்சுக்கும் நடைமுறைக்கும் பெருத்த இடைவெளி இருப்பதை, முரண்பாடு இருப்பதையன்றோ காட்டுகிறது? - இரா. தெ. முத்து.

இந்தச் செய்தி என் கவனத்துக்கு வந்ததும் உடனடியாகப் படிவங்களைத் தமிழில் அச்சிட்டு வழங்குமாறு அறிவுறுத்தப்பட்டது.

'தெருவிளக்கு' இதழாசிரியர் செல்வேந்திரன் 'தமிழ்க்குடிமகனார்க்கு'என்றே சில செய்திகளை எனக்குச் சொல்கிறார்.

மாண்புமிகு தமிழ்க்குடிமகனார்க்கு -

பஞ்சாப் - பஞ்சாபி மொழியில் கலந்துள்ள இந்திமொழிச் சொற்களை விலக்கப் பஞ்சாப் சில ஆணைகளைப் பிறப்பித்துள்ளது.

வங்காளி - சமஸ்கிருதச் சொற்களை நீக்கத் தாகூர் முயற்சி செய்தார்.

கொரியா - 1997 ஆம் ஆண்டு தென்கொரியா ஆட்சித் தலைவர் அரசு விளம்பரங்களில் அயல் மொழிச் சொற்களைக் கலக்கக்கூடாது என்று தடை ஆணை பிறப்பித்தார். பாட நூற்களில் பிற மொழிச் சொற்களைக் கலந்து எழுதக் கூடாதென்று கட்டளை இடப்பட்டது. தொலைக்காட்சி, வணிக ஒலிபரப்பிலும் மீறினால் குற்றம் ஆக்கப்பட்டது.

பிரஞ்சு - பிரான்சின் தலைமை அமைச்சர் சேச்சு சாபான் தென்மா பழைய கலப்பு பிரஞ்சு மொழியையோ, கடன் சொற்களையோ கையாளக் கூடாதென்று கட்டளையிட்டார்.

துருக்கி - அரபு, உதுமானிய மரபுப் பெயர்களை பயன்படுத்தக் கமால் அத்தாதுர்க் கட்டளையிட்டார்.

இத்தாலி - முசோலினி ஆட்சியில் இத்தாலி அல்லாத பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தினால் புதியவரி விதிக்கப்பட்டது.

தகவல் : தனித்தமிழ் இயக்கம் ஓர் திறனாய்வு (முனைவர் கு. திருமாறன்)

பிறமொழிக் கலப்பினால் ஒரு மொழி எப்படிக் கெடுகிறது என்பதை நாங்கள் உணர்த்தி வருகிறோம். இந்நிலையில், பிற நாடுகளில் தத்தம் தாய்மொழி காத்திட, அந்நாட்டுத் தலைவர்கள் பிறப்பித்த கட்டளைகளைத் தொகுத்து நண்பர் எனக்கு 'வாளெடுத்துக்' கொடுக்கிறார்.

இவற்றை மனமகிழ்வுடன் ஏற்று, ஊக்கத்துடன் செயற்பட எனக்கு வாய்ப்புக் கிடைத்தது.

அலுவலர்கள் சில நேரம் எங்களிடம் சொல்வது, மொழி பெயர்த்து வெளியிடப் போதுமான கலைச் சொற்கள் தெரியவில்லை என்பதுதான். அந்தக்குறை போக்க எடுத்துக்கொண்ட முயற்சி இது.

1957 இல் காங்கிரசு ஆட்சிக் காலத்தில் ஆட்சிச் சொல் அகராதியின் முதற் பதிப்பு வெளியானது. இத்துறையில் ஈடுபாடு படைத்த இ.மு. சுப்பிரமணிய பிள்ளையின் உழைப்பு இந்நூலுக்குப் பின்னணியாகும்.

அடுத்த பதிப்பு 1962 இல். இது கலைஞர் ஆட்சிக்காலம். நான்காம் பதிப்பு 1983 இல் பேரா. நன்னன் இயக்குநராக இருந்த காலத்தில் வெளிவந்தது. இது எம்.ஜி.ஆர். ஆட்சிக் காலம். ஆனால் இந்தப் பதிப்புக்கிடையில் 12 ஆண்டுகள் ஓடியிருக்கின்றன என்பது கவனிக்கத் தகுந்தது.

மூன்றாம் பதிப்பில் 6995 சொற்கள் இடம் பெற்றன. நான்காம் பதிப்பில் 8927 சொற்கள் உள்ளன. இது நல்ல வளர்ச்சியாகும்.

சில வியப்பான விளக்கங்களும் உண்டு.

(எ-டு) Bar - கம்பி எனலாம்.

தமிழில் கடப்பாரை உண்டு. பாரையைப் பார் என்பர். 'பாருக்கு நெக்குவிடாப் பாறை' என்பது இலக்கிய வழக்கு.

எனவே 'பார்' எனும் தமிழ்ச் சொல் அப்படியே 'Bar' ஆகியுள்ளது கண்டு வியக்கலாம்.

அகராதியில் பின்வருமாறு இணைத்துள்ளோம்.

வழக்குரைஞர் குழாம் (Bar Assn.) விசாரணைக் கூட்டு, கம்பி, பாளம், தடை (He is debarred) தேறல் (மதுக்) கூடம் - 1996 முதல் 2001க்குள் அடுத்த பதிப்பு வந்தது.

பொதுவான சிலதுறை அலுவலர்கள் தேவையற்ற முறையில் ஆங்கிலத்தில் வரையும் விளக்கங்களை இங்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

பாரதிதாசன் பல்கலைக் கழகப் பதிவாளர் முனைவர் சி. தங்கமுத்து என்னிடம் காட்டுமாறு என் நே.மு. உதவியாளருக்கு ஒரு மடல் அனுப்புகிறார்.

BHARATHIDASAN UNIVERSITY
PALKALAIPERUR, TIRUCHIRAPPALLI - 620 024

Dr. C. THANGAMUTHU M.A., M.Litt., Ph.D.,
REGISTRAR

Ref.No.14396 / A2 / 96 dated : 4.12.1996

To

The Senior P.A. to the Minister for Tamil Language & Culture
Govt. of Tamilnadu, For St. George, Chennai - 600 009

Sir,

I am enclosing an invitation for the Thirteenth Annual Convocation for our University to be held on thursday, the 12th December, 1996. I request you kindly to place the same to the Hon'ble Minister.

I am also enclosing an invitation for your good - self.

Yours faithfully

Encl : Two Invitations.

Registrar

ஓர் அழைப்பிதழைத் திருச்சியிலிருந்து - அதிலும் தமிழை உயிரென ஓம்பிய பாரதிதாசன் பெயரால் அமைந்த ஒரு பல்கலைக் கழகத்தின் பதிவாளரிடமிருந்து தமிழ் ஆட்சிமொழி அமைச்சருக்கு அனுப்பப்படும் மடல் ஆங்கிலத்தில் வருகிறது. இதைத் தமிழில் அனுப்ப வேண்டும் எனும் எண்ணம் எவருக்கும் இல்லை. கையொப்பமும் ஆங்கிலத்தில்.

சட்டம் இயற்றி 40 ஆண்டுகளாகியும் நிலை எப்படியிருக்கிறது என்று பாருங்கள்.

தஞ்சையில் மாவட்ட ஆட்சியராக இருந்த செயக் கொடி பெயரில் ஓர்அனுமதி வழங்கப்பட்டுள்ளது. 'நந்தன் கதை' எனப்படும் நாடகத்தை நடத்திடப் பெ. மணியரசன் ஓர் இசைவு கேட்கிறார். அதற்கான இசைவு ஆங்கிலத்தில் வழங்கப்படுகிறது.

இதனைத் தமிழில் தரவேண்டும் எனும் எண்ணம் இதனை உருவாக்கிய அலுவலர்கட்கு வரவில்லை. தமிழ் நாடகக் குழு கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளை ஆங்கிலத்தில் தருவதற்கு இவர்கள் எப்படிப்பட்டவர்களாக இருக்க வேண்டும்?

PROCEEDINGS OF THE DISTRICT MAGISTRATE AND DISTRICT COLLECTOR. THANJHAVUR :

PRESENT : THIRU. V.K. JEYAKODI, I.A.S.,

K.Dis.50603/96 (C.3) Dated:6.7.1996

SUB : DRAMATIC Performance Act. 1964 - Thanjavur Town - Drama entitled "NANDAN KATHAI" - Script Approved - Orders issued.

REF :
1. Application dated : 12.6.96 of thiru. P. Maniyarasan, Thanjavur.
2. Report of Superintendent of Police. Thanjavur in Ref. No.1269 / X/SP/TNJ/96 dt:4.7.96
3. Report of the R.D.O., Thanjhavur in Ref.No.L.Dis.7736/96 A.3 dt:3.7.96
4. And other connected records.

ORDER:

The script of the drama entitled "Nandan Kathai" is approved subject to the following conditions:-

1. That the actors should strictly adhere to the synopsis as approved deleting certain versions.

2. That the performance should not incite any section of the citizens of India to acts of vilonce against any other section of citizens of India.

3. That the performance should not be intended to outrage the religious feelings of any class of the citizens of India by insulting or blaspheming or offending the religious believes of the class.

4. That the performance should not be grossly indecent or scurrilus or obscene or intended for blackmail.

5. That the performance should not insult the Government and the elected representatives.

Sd./K.Chellaiyan

FOR DISTRICT MAGISTRATE - and -
DISTRICT COLLECTOR, THANJHAVUR.

To: Thiru. P. Maniyarasan.
53-A, Jamindhar Kudiyiruppu
GA, Canal Road, Thanjhavur - 613 001

இப்படித்தான் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம் இருந்து வருகிறது.

நாடகத்தில் நடிப்பவர்கள் பெரிய கல்வி அறிவு படைத்தவர்களாக இருக்க முடியாது. அரசு விதிக்கும் நிபந்தனைகள் என்ன என்பதாவது அவர்களுக்கு விளங்கவேண்டாமா?

"நீக்கப்பட்ட பகுதிகள் போக ஒப்புக்கொள்ளப்பட்ட நாடக உரையாடலை நடிகர்கள் கட்டாயம் கடைப்பிடிக்க வேண்டும்" என்று எளிமையாக உணர்த்த முடியாதா?

ஏற்கெனவே யாரோ எழுதிவைத்துவிட்டுச் சென்றதை நோவாமல் மறுதட்டச்சுச் செய்து அனுப்பிவிடுகிறார்கள். மொழிபெயர்க்க வேண்டுமென்று கூட இல்லை. அதை அப்படியே தமிழில் எண்ணி எழுதியிருந்தாலே போதும்.

ஒரு தமிழ் நாடகத்துக்கு ஆங்கிலம் 'ஆதிக்கத் தலைமை' தாங்குகிறது. அதற்கு நம் தமிழ் இ.ஆ.ப. அலுவலரும், பிற அலுவலர்களும் வெண்சாமரம் வீசிக்கொண்டு, வாயில் காத்து நிற்கிறார்கள்.

திரு. இராசாராமன் நந்தனம் அரசு கலைக்கல்லூரி முதல்வர். இவர் வரலாற்றுப் பேராசிரியரும் கூட. தமிழக வரலாற்றைத் தமிழில் எழுதித் தரும் ஒரு கட்டுரையாளர். ஆனாலும் கல்லூரியில் அவர் தமிழில் கையொப்பம் இடுவதில்லை. சுற்றறிக்கைகளைத் தமிழில் தருவதில்லை. எந்த நடவடிக்கையையும் தமிழில் அமைத்துச் கொள்வதில்லை என்று அவர்மீது சான்றுகளுடன் குற்றம் சாட்டப்பட்டது. இவர்களைப் போன்ற ஆதிக்க மனப்பாங்கு படைத்தவர்கள் தான் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கத்துக்கு எதிரிகள் என்பதைத் தவிர வேறென்ன சொல்லமுடியும்?

Government Arts College for Men, Nandanam, Chennai - 600 035

CIRCULAR 19-08-1996

In view of the College Union Elections, the members of staff are requested not to apply for any leave during the Election Week.

Since the entry of students will be permitted only through the Main Gate on 22-8-96 & 23-8-96, the Heads of Departments are requested to depute two staff members to assist the Principal in identifying their respective students at the gate on these days from 9.00 A.M. to 12.00 Noon.

The Heads of the Departments are further requested to instruct their students that they should bring the identity cards without fail on the above dates.

Principal

To

All the Heads of Departments for circulation to their staff members.

சில துறைகளில் சில அலுவலர்கள் தொடர்ந்து ஆங்கிலத்திலேயே நடவடிக்கைகளை மேற்கொண்டுவருகின்றனர். "1999 - 2000க்கான தரவிலை அட்டவணை" முகப்பில் மட்டும் தமிழைத் தாங்கி உள்ளே எல்லாக் குறிப்புகளும் ஆங்கிலத்திலேயே உள்ளன.

பெரியாறு - வைகைப் பாசன வட்டத்தில் இப்படியொரு 'ஆங்கில' நீரோட்டம்!

இரட்டை நிலை

மேலே சரியாக இருக்கிறது - கீழே முறைக்கிறது. 27.4.2000 அன்று நெடுஞ்சாலைத்துறைச் செயலாளர் அபுல்காசன், இ.ஆ.ப. ஓர் அரசாணை பிறப்பித்தார் (எண்.79).

மூன்று பக்க அரசாணையும், பிற்சேர்க்கையும் அருமையான தமிழில் அமைந்து எங்களை வியக்க வைத்துள்ளன. இவ்வாறு கவனம் செலுத்திய அரசுச் செயலர்க்கு எங்கள் பாராட்டுகள் குவிகின்றன.

இந்த அரசாணையை மேற்கோள் காட்டி; 'நபார்டு' தலைமைப் பொறியாளர் எழுதும் மடலும், மதுரை - 2 இல் உள்ள கண்காணிப்புப் பொறியாளர் (S.E.)பிற,கோட்டப் பொறியாளர்கட்கு எழுதும் மடலும் (D.E.), திண்டுக்கல் கோட்டப் பொறியாளர், பிற உதவிக் கோட்டப் பொறியாளர்கட்கு எழுதும் மடலும் ஆங்கிலத்தில் உள்ளன.

நான்கு பக்கங்களில் அரும் பாடுபட்டு நல்ல தமிழில் தரும் அரசாணையைப் பிறர்க்குச் சுட்டிக் காட்டி அரைப்பக்கம் எழுதும் த. பொறி, கண். பொறி, கோட்டப் பொறியாளர் அலுவலர்கள் அவற்றைத் தமிழில் தரவேண்டும் எனும் எண்ணம் வரவில்லை. அரசாணை தமிழில் இருந்தாலும் அவர்களுக்குத் 'தமிழில்'உணர்ச்சி வரவில்லை. அந்த அளவுக்கு மரத்துப்போன நிலை.

Superintending Engineers (H&RW) are requested to adhere to the instructions contained therein. Superintending Engineers (H&RW), while submitting Revised Administrative Sanction proposals, should also furnish the details required in the annexure prescribed by Government.

Enclosure : Copy of G.G.
Dated : 27.4.2000

for CHIEF ENGINEER (H)
NABARD: GUINDY : CHENNAI - 32

அரசாணை இது :

ஒப்புக்கொள்ளப்பட்ட காலத்துக்குள் பணி முடிக்க வேண்டும் என்பது உடன்படிக்கை விதிகளில் மிக முக்கியமானது (Time is the essence of contract). ஆனால் இது சிறிதளவேனும் கடைப்பிடிக்கப்படுவதில்லை. கால நீட்டிப்பு அளிப்பது ஒரு வழக்கமான முறையாக மாறிவிட்டது. காலம் கடந்து பணிகள் முடிக்கப்படுவதால் துறையால் வழங்கப்படும் பொருட்களின் விலை மாற்றமும் அதனால் ஏற்படும் அதிக நிதிச் செலவினமும் இந்தப் பணியால் பற்று வைக்கப்படவேண்டும் (There is time over run and cost over run) இந்த நடைமுறைப்படி உடனடியாக நிறுத்திட ஒரு குறிப்பிட்ட காலக்கெடுவிற்கு மேல் நீட்டிப்பு அளித்திடும் நிலை ஏற்பட்டால் அந்த ஒப்பந்தக்காலங்களின் ஒப்பந்தம் ரத்து செய்யப்பட்டு மறு ஒப்பந்தம் கோரப்பட வேண்டும். கோட்டப் பொறியாளர்களுக்கு இதில் ஒரு முக்கிய பங்கு உள்ளது. அது கடமையைச் செவ்வனே ஆற்றாத கோட்டப் பொறியாளர்கள் அக்குழப்பத்திற்கு உரியவர்கள். தற்போது சிமிண்ட், தார், மற்றும் இரும்புக்கம்பிகள் ஒப்பந்தக்காரர்களே . . . . " அரசாணை தமிழில் நன்றாக எடுத்துச்சொன்னதைப் பொறியாளர்கள் 'தமிழ்க்கொலை' புரிந்துவிட்டனர்.

அதுமட்டுமன்று; திருவல்லிக்கேணி வட்டாட்சியர் (இரகுபதி, பி.ஏ.) திருவட்டீசுவரர்கோயில் நிலங்கள் தொடர்பான நேர்முக மடலைச் சென்னை மாவட்ட ஆட்சித் தலைவர்க்கு ஆங்கிலத்தில் வரைந்து தள்ளுகிறார். நாங்கள் வாழும் 'பசுமைச் சாலை'யின் முடிவில் குடியிருக்கும் வட்டாட்சியர்க்கு எங்கள் பணிகள் உறைக்க வில்லையே! என் செய்வது?

அந்த மடல் இதுதான் :

M.R. Raghupathy, B.A.,
Tahsildar
Mylopore-Triplicane Taluk
Chennai-28 D.O.B4/3I 123/99 dated 15.10.99

Respected Madam,

Sub : Land - Chennai District - Mylapore - Triplicane Taluk - Triplicane Village Pudupakkam Tiruvatteswarar Temple Lands & survey No.1213/I etc change of ownership - ordered by settlement officer, Tanjore changes effected - information - reg.

Ref : Chengai District, Settlement Tahsildar Proceedings No.G.R.S.No.37/ MSE/Act 30/63 Dt. 25.5.71.

2. Executive Officer Arulmigu Thiruvateeswarar Thirukoil Lr.Dt.8.10.99.

While inviting Collector's kind attention to the above references, I wish to submit the following facts for favour of kind information.

The settlement Tasildar Chinglepet in his proceedings first cited had converted Pudupakkam temple lands bearing R.S.No.1213/1 etc numbering 140 holdings into Ryotwari and issued patta in the name of the occupiers.

The Thiruvatteswarar Temple Devasthanam has filed their R.P. before settlement Officer Tanjore, claiming title over the said lands and Settement IInd cited.

As against the orders of the settlement Officer, the occupants of the said lands formed an Association and filed an W.P. in the High court of Chennai.

இ.ஆ.ப. அலுவலர்கள் நிலை என்ன என்பதைக் கொஞ்சம் அலசலாம்.

கோவை மாவட்ட ஆட்சித் தலைவர் சி.பி. சிங், கடலூர் மாவட்ட ஆட்சித் தலைவர் சந்தீப் சாக்சேனா போன்ற இ.ஆ.ப. அலுவலர்கள் பஞ்சாபியையும், மராட்டியையும் தாய்மொழியாகக்

கொண்டவர்கள். ஆனால் அவர்கள் தமிழ் நாட்டில் பணியாற்றுகிறோம் என்பதை நினைவிற் கொண்டு, தமிழிலேயே எல்லாம் இருக்கவேண்டும் என்று தொடர்ந்து செயற்பட்டு வருகிறார்கள். இவர்களைப் போன்ற பல இ.ஆ.ப. அலுவலர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் என் பாராட்டைத் தெரிவித்துக் கொள்கிறேன். காலம் வாய்க்கும்போது அவர்களது பெயர்களையும் தக்க இடத்தில் சொல்லிப் பாராட்டுவேன்.

அதே நேரத்தில் சில இ.ஆ.ப. அலுவலர்கள் எப்படியிருக்கிறார்கள் என்று பார்க்கலாம்.

அலுவலர்கள் நிலை

1957 முதல் 1966 வரையில் வெளிவந்த அனைத்து அரசாணைகளும் ஆங்கிலத்தில் மட்டுமே வந்தன. அதிலும் அவை தமிழ் ஆட்சிமொழியைச் செயற்படுத்துவதற்கான ஆணைகள். காரணம் ஆட்சிமொழிக் குழுவின் தலைவராக இருந்த வெங்கடேசுவரன், ஐ.சி.எஸ். தமிழ் ஆர்வம் இல்லாதவராக இருந்தார் என்று கீ. இராமலிங்கனார் குறிப்பிட்டுள்ளார் (த. பெரியாண்டவன் நூல்) குறிப்பிட்டுள்ளார்.

சபாநாயகம், இ.ஆ.ப. தமிழகத்தின் தலைமைச் செயலராக இருந்து ஓய்வு பெற்றவர். ஓய்வு பெற்றவரைப் பற்றி நாம் கவலைப் படத்தேவையில்லை என்றாலும் இன்றும் அவர்கள் தமிழ் பற்றிய சிந்தனைக்கே வரவில்லையே என்பதுதான் என் வருத்தம்.

24.12.99 அன்று அவர் எனக்கொரு மடல் எழுதுகிறார். மடல் முழுவதும் ஆங்கிலத்தில். தமிழ் ஆட்சிமொழி அமைச்சர்க்கு எழுதுகிறோம் என்ற எண்ணமே இல்லை. இவ்வளவுக்கும் இவர் தூயதமிழர். அற நிலையத்துறை ஆணையர்க்கு எழுதிய மடலும் ஆங்கிலத்தில். 'Madras' 'Chennai' என்றாகி எவ்வளவோ காலமாகிவிட்டது. அவர் மடலில் 'Madras-28' அப்படியே வருகிறது.

சட்டம் இவர்களை என்ன செய்யும்? அரசாணைகள் இவர்களை என்ன செய்துவிடும்?

P. SABANAYAGAM, I.A.S., (Retd.)

September 24, 1999

Dear Sir,

I am enclosing a copy of my letter to the Special Commissioner, HR&CE, regarding chitrasabha in Cutralam, which deserves immediate renovation and security. Would you kindly look into the matter and do the needful.

With regards,
Your's sincerely
P. SABAYAYAGAM

Enc : as above

To

Dr. M. Thamizhkudimagan
Minister for Tamil OL&TC & HR & CE
Fort St. George, Chennai - 9

தற்போது (பிப்.2002) கடலூர் மாவட்ட ஆட்சித் தலைவராக இருக்கும் தங்கசாமி பொதுத் துறையில் துணைச் செயலாளராக இருந்தவர். மாவட்ட ஆட்சித் தலைவர்கள் மாநாடு ஒத்திவைக்கப்பட்டுள்ளது எனும் செய்தியைக் கூட 'ஆங்கிலத்தில்' தருகிறார். மிக மிக எளிய செய்தி. தமிழரான இவர்க்கு, இதைத் தமிழில் தரவேண்டும் எனும் எண்ணம் வரவில்லையே!

GOVERNMENT OF TAMIL NADU

U.O. No.10444/G1.I) Dept.

Secretariat, Chennai - 9

Dated : 20.3.99

Sub: Collectors Conference scheduled to be held on 3.4.99 and 4.4.99 Postponed to 17.4.99 and 18.4.99 Regarding.

The Collectors Conference scheduled to be held on 3.4.99 and 4.4.99 has been postponed to 17.4.99 and 18.4.99. The Senior Personal Assistants to Ministers may be requested to inform this to Hon'ble Ministers.

S. THANGASWAMI,

DEPUTY SECRETARY TO GOVERNMENT.

To All Senior Personal Assistants to Ministers, Chennai - 9

SECTION OFFICER

செ.சு. சானகிராமன் என்னிடத்தில் செயலாளராகப் பணியாற்றியவர். 13.5.96 அன்று பேராசிரியர் க. அன்பழகன் அவை முன்னவராக அமர்த்தப்பட்டார். அந்தச் செய்தியைத் தமிழில் தரவில்லை. ஆங்கிலத்தில் மட்டுமே தந்துள்ளார்.

ஆளுநர் போன்றவர்களுக்கு அனுப்ப வேண்டியிருந்தாலும் இருமொழியிலும் வெளியிட்டிருக்கலாமே!

என்னுடன் பணியாற்றியவர் என்னையும், என் தமிழையும் மறந்துவிட்டார். ஒருவேளை இன்றைய பேரவைத் தலைவர் பி.டி.ஆர். பழனிவேல் இராசனின் ஆங்கிலம் இவரைப் பிடித்துக் கொண்டதோ!

TAMIL NADU LEGISLATIVE ASSEMBLY

ABSTRACT

TAMIL NADU LEGISLATIVE ASSEMBLY - Leader of the House -

Prof. K. Anbazhagan - Appointment - Notified.

LEGISLATIVE ASSEMBLY SECRETARIAT

S.O. Ms. NO.113 Dated : 13.5.1996

Chitrai 31, Thadhu -Thiruvalluvar Aandu 2027

NOTIFICATION

Prof. K.ANBAZHAGAN, Minister for Education is appointed as the Leader of the Tamil Nadu Legislative Assembly.

C.S.JANAKIRAMAN
SECRETARY.

Copy to :

All Personal Assistants to Hon'ble Ministers.
All Officers and Sections in the Legeslative Assembly Secretariat.

நான் பொறுப்பேற்றவுடன் தமிழ்த் தட்டச்சுப் பொறிகளை விரைந்து வாங்கி வழங்குவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அரசு 1000 தட்டச்சுப் பொறிகளுக்காக 90 இலட்சம் உருபாய் வழங்கியது.

இதனை வாங்கித் தரவேண்டிய அலுவலர்கள் பரிமாறிக்கொண்ட கருத்துகள் எல்லாம் ஆங்கிலத்தில்.

தமிழ்த் தட்டச்சுப் பொறி

32 மின்னணுத் தட்டச்சு உட்பட 500 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வாங்க உருபா 50/- இலட்சம் ஒதுக்கப்பட்டது. (96-97 வரவு செலவுத் திட்டம்)

தமிழ்த்துறை 2.9.96 அன்று அரசாணை எண்.194 ஐ வெளியிட்டது.

இதனைச் செயற்படுத்தும் சீலா பாலகிருட்டிணன், இ.ஆ.ப. (எழுதுபொருள் அச்சுத்துறை இயக்குநர்) இது தொடர்பாக ஒப்பந்தப்புள்ளி கோரி எடுத்த நடவடிக்கை குறித்து 'ஆங்கிலத்தில்'

அறிக்கை தந்துள்ளார். கையொப்பமும் ஆங்கிலத்திலேயே இட்டுள்ளார். மடல் SY No. J1/11027/96 நாள்:8.11.96; 12.11.96 இல் குழு அமைக்கப்படுவது குறித்து எழுதப்பட்ட அறிக்கையும் ஆங்கிலத்தில்தான் உள்ளது.

தொடர்ந்து பொறுப்பேற்ற ந.முருகன், இ.ஆ.ப. ஒரு மடலை ஆங்கிலத்திலேயே எழுதியுள்ளார். நாள்:17.12.96 கையொப்பமும் ஆங்கிலத்தில் இட்டுள்ளார். மூன்று மாதமாகியும் பணி முடியவில்லை என்பதற்காக நானே தொடர்ந்து தொலைபேசியில் முடுக்கி வந்தேன். அது குறித்து அவரே எழுதியுள்ளார்.

(Since the process was taking much time and the Hon'ble Minister fot Tamil Development was repeatedly asking for the purchase...)

பிறகு 22.12.96 இல் நிதித்துறை எழுதிய குறிப்பும், செய்தி, சுற்றுலாத் துறைச் செயலர் எழுதிய குறிப்பும் ஆங்கிலத்தில் உள்ளன.

'The Hon'ble Minister (Tamil Development) spoke to me, regarding this and pointed out the delay in the procurement of these equipments'

என்று துரை. சுந்தரேசன் கைப்படக் குறிப்பெழுதி, கையொப்பத்தையும் ஆங்கிலத்திலேயே போட்டுள்ளார்.

தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தையோ, ஆட்சிமொழித் தொடர்பான ஆணைகளையோ செயற்படுத்த வேண்டும் எனும் எண்ணம் இவர்களுக்கு அறவே இல்லை.

ஆங்கில வல்லாண்மை மனப்பாங்கும், ஆங்கிலக் கல்வியால் ஏற்பட்ட மேட்டிமையும் இவர்களிடத்தில் நீக்கமற நிறைந்துள்ளன.

இவ்வளவுக்கும் துரை. சுந்தரேசன் தமிழ் ஆட்சிமொழி தொடர்பாக வெளியான அனைத்து அரசாணைகளையும் தொகுத்து, சில நூல்களாக வெளியிட்டுள்ளார். அவ்வளவு அக்கறை எடுத்து அந்தச் செய்திகளை ஊருக்கெல்லாம் சொன்ன அவர், த.வ. துறைத் தொடர்பான செய்தி வரும்போது ஆங்கிலத்தில் எழுதுகிறார் என்றால், இதைவிட வேறென்ன கொடுமை இருக்க முடியும்? ஒன்றைப் புரிந்து கொள்ள முடிந்தது. 'ஆட்சிமொழி'பற்றி அவர் எழுதிய நூல்கள் இரண்டும் அவரால் எழுதப்பட்டவை அல்ல. யாரோ தொகுத்து இவர் பெயரைப் போட்டிருக்கிறார்கள். ஆனால் இவரது உள்ளம் இன்னும் ஆங்கிலத்தை விட்டு மீளவில்லை.

'தினமணி கதிர்' இதழில் வெளிவந்த செய்தியை அப்படியே தருகிறேன். பள்ளி மாணவர்கட்குத் தரப்படும் பதிவேட்டை - அதிலும் மாவட்ட அளவில் பேணப்பட வேண்டிய பதிவேட்டை - இ.ஆ.ப. மேலிடம் ஆங்கிலத்திலேயே வழங்கி மகிழ்கிறது.

“ ‘எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்’ என்கிறது தமிழக அரசு. தமிழிலேயே அனைத்துத் துறைகளின் நடவடிக்கைகளும் இருக்க வேண்டும் என்று தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் வலியுறுத்தி வருகிறார்.

பல துறைகளின் கோப்புகள் தமிழில் உள்ளன. சில துறைகள் அரசாணையையே தமிழில் வெளியிடுகின்றன. ஆனால், மாநில சுகாதாரத் துறை மட்டும் இதற்கு விதிவிலக்கு போலும்!

முதல்வரின் சிறப்புத் திட்டங்களில், பள்ளி மாணவர்களுக்கான வாழ்வொளித் திட்டமும் ஒன்று. இதற்காக மாவட்ட சுகாதாரத் துறைக்கு தமிழக அரசு அனுப்பியுள்ள பதிவேடு முழுவதும் ஆங்கில மணம் கமழ்கிறது.

பதிவேட்டின் முன் அட்டையில் உள்ள தமிழக அரசு முத்திரையில் தமிழக அரசு, வாய்மையே வெல்லும் என்பது தொடங்கி, அதில் உள்ள அனைத்தும் ஆங்கிலத்தில் உள்ளன. பதிவேட்டில் மருந்துக்குக்கூட தமிழ் வார்த்தை இல்லை.”

தலைமைச் செயலகத்தில் பணியாற்றும் ஒருசில துறைச் செயலாளர்கள் (இ.ஆ.ப. அலுவலர்கள்) அலட்சியம் காட்டுவதால்தான், தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தை முழுமையாகச் செயற்படுத்த முடியவில்லை. தலைமைச் செயலாளர், நிதித்துறைச் செயலாளர் ஆகியோர் முன்னிலையில் கலந்து பேசி, மாண்புமிகு முதல்வர் அவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டுச் சட்டமன்றத்தில் மாணியக்கோரிக்கையின்போது அறிவிக்கப்படும் திட்டங்கள் கூட நிதித்துறையால் இழுத்தடிக்கப்படுகின்றன.

இந்நிலையில் துறை ஆழ்ந்து சிந்தித்து தமிழ் வளர்ச்சி குறித்து முடிவெடுத்தாலும் அதை முறியடிப்பதிலேயே சிலர் கவனமாக இருக்கின்றனர். இப்படி ஒரு நிலையைச் சுட்டிக் காட்டுவதற்காகவே 17.11.97 அன்று தலைமைச் செயலாளர் பார்வைக்கு ஒரு மடல் எழுதினேன். அது இதுதான்.

தமிழில் அரசாணைகள்

தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தை நிறைவேற்றிவிட்டு அரசாணைகளைத் தமிழில் வெளியிடுவதில்லை என்பது கேலிக்குரியது மட்டுமன்று, கடும் கண்டனத்துக்கும் நடவடிக்கைக்கும் உரியது.

ஆட்சிமொழிச் சட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்கு ஒரு குழு அமைக்கப்பட்டது. 1957 இல் இதற்கான அரசாணை பிறப்பிக்கப்பட்டது. மிக எளிய செய்தி. இவர்கள் குழு உறுப்பினர்களாக இயங்குவார்கள் என்று குறிப்பிடும் செய்தி.

இதற்கான அரசாணை கூடத் தமிழில் எழுதப்படவில்லை. வியப்பாக உள்ளது.

தமிழை ஆட்சிமொழியாக்குவது குறித்து இந்தச் செய்தியை ஆங்கிலத்தில் வெளியிட்டது ஏன்? இதைத் தமிழில் வெளியிட முடியாது என்றால் இதை வெளியிடும் திறமை தமிழுக்கு இல்லை என்று பொருளா? அல்லது அதைத் தமிழில் வெளியிடும் திறமை இதை எழுதி வெளியிட்ட அலுவலர்க்கு இல்லை என்று பொருளா? அல்லது இதைத் தமிழில் வெளியிட வேண்டும் எனும் எண்ணமே அந்த அலுவலர்க்கு இல்லை என்று பொருளா?

இதை முடிவு கட்டினால் மீதி விளங்கிவிடும். இதில் மூன்றாவது குறிப்பே உண்மையானது என்று தெரிந்துவிடும்! ஆம்! அலுவலர்கள் பலர் தமிழில் எழுதவேண்டும் எனும் அக்கறை அற்றவர்களாக இருக்கிறார்கள்.

அரசாணைகள் தமிழில் வெளியிடப்பட வேண்டும் என்று பல அரசாணைகள் வந்துள்ளன. 1968, 1970, 1971, 1986, 1989 ஆகிய ஆண்டுகளில் வெளிவந்த அரசாணைகளின் கருத்தைக் கொஞ்சம் கவனிக்கவும்.

அரசாணை எண்: 182 நாள் : 27.6.1989

இந்த அரசாணை பல துறைகளில் பின்பற்றப்படவில்லை. தமிழிலும் ஆங்கிலத்திலும் அரசாணைகள் தரப்படவேண்டும் எனும் கருத்தும் பல துறைகளில் புறக்கணிக்கப்பட்டுள்ளது.

அந்தந்த அரசுத் துறைச் செயலாளர்கள் இதனைக் கண்காணித்து நடவடிக்கை எடுக்கவும் இல்லை என்பதே இப்போது கண்டறியப்பட்ட உண்மை.

தமிழ் ஆட்சிமொழிச் சட்டச் செயலாக்கத்திற்கென்று தனி அமைச்சகம் ஏற்பட்டு இரண்டு ஆண்டுகளாகியும் நிலைமை மாறவில்லை. எனவே, கீழ்க்கண்ட அறிக்கை அளிக்கப்பட்டுள்ளது. தலைமைச் செயலாளர் அவர்கள் இதன் மீது தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுகிறேன்."

இப்படி எழுதித்தான் என் பணியைச் செய்யவேண்டியுள்ளது. அதே நேரத்தில் தமிழ் ஆர்வமுடைய எத்தனையோ இ.ஆ.ப. அலுவலர்கள் உள்ளனர். இவர்கள் குறித்து 'ஆட்சிமொழிக் கருத்தரங்குகள்' எனும் பகுதியில் குறிப்பிட்டுள்ளேன். இன்னும் சில எடுத்துக்காட்டுகளும் உள்ளன.

கி. தனவேல் தற்போது தேர்தல் ஆணையத்தின் செயலாளராக உள்ளார். அவரது முகவரியும், என் முகவரியும் தமிழிலேயே அமைந்துள்ள உறையை உங்கள் பார்வைக்கு வைக்கிறேன். பார்த்து மகிழுங்கள்.



மாவட்ட ஆட்சித் தலைவர்கள் ஆர்வம் எடுத்துக்கொண்டால் அனைத்தும் தமிழில் வந்துவிடும். விருதுநகர் மாவட்ட (18.12.98) ஆட்சித் தலைவர் கிருட்டிணன்

"தமிழால் முடியும் என்பதை விடத் தமிழால்தான் முடியும் என்று கூறுகிறேன்" என்கிறார். எவ்வளவு அழுத்தந் திருத்தமான கருத்து. காமராசர் காலத்தில் வெளிவந்த ஆட்சிமொழிச் சட்டத்துக்குக் காமராசர் (விருதுநகர்) மாவட்டத்திலேயே ஓர் அழுத்தமான குரல்!

மேலும் கூறுகிறார். (மாலை மலர் 18.12.98)

அரசின் கொள்கைகள், திட்டங்கள் மக்களால் பேசப்படுகின்ற தாய்மொழியாம் தமிழில் தெரிவிப்பதையே அரசு தலையாய கொள்கையாகக் கொண்டு செயல்பட்டு வருகிறது. ஏதோ ஒரு மொழியில் எழுதி வைத்து யாருக்கும் புரியாமல் இருப்பதில் எந்தப் பயனும் இல்லை. எனவேதான், ஆட்சி மொழியாம் தமிழுக்கு அரசு ஆர்வமும், அக்கறையும் காட்டி வருகிறது. ஆட்சிமொழியான தமிழ் சிறப்பான முறையில் செயல்படுத்தப்படுகிறதா? என்பது குறித்து அலுவலகங்களில் ஆய்வுகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. மக்கள் கோரிக்கை வைத்தால் மக்களுக்குத் தெரிந்த தமிழ் மொழியில்தான் அவர்களுக்கு புரிகின்ற வகையில்தான் பதில் சொல்லவேண்டும்.

தமிழால்தான் முடியும்

திங்கட்கிழமை தோறும் மக்கள் குறைதீர்க்கும் நாள் மாவட்ட கலெக்டர் அலுவலகத்தில் நடைபெற்று வருகிறது. இந்த மனுக்களுக்கு ஒப்புதல் சான்று கணினி மூலம் மக்களுக்குப் புரிகின்ற வகையில் நம் மாவட்டத்தில் தமிழில் வழங்கப்படுகிறது. தமிழால் முடியும் என்பதைவிட தமிழால்தான் முடியும் என்று கூறுகிறேன்.

* * *

நான் அமைச்சர் பொறுப்பில் இருக்கும் போதே, என் மாவட்டத்தின் ஆட்சியரே சாதாரணமான அறிவிப்பைக் கூட ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளார்.

Proceedings of the District Collector / Chairman District Rural Development Agency. Sivaganga

Present : Thiru S. Goplakrishnan, I.A.S.,

ORDER:

The Government have ordered in the G.O. cited that a District level Committee is to be formed under A.M.T. 1999-2000 for the purpose of scrutinising the plan, monitoring and reviewing the progress in the District. Accordingly, a district Level Committee comprising the following members is ordered to be constituted for Sivaganga District:-

1. District Collector - Chairman
2. Project Officer,
   D.R.D.A., Sivaganga - Member Secretary

MEMBERS

3. Pasumpon Thiru Tha. Krittinan
   M.L.A., Sivaganga Constituency,
   and Hon'ble Minister for Highways
   and Ports, Govt. of Tamil Nadu

4. Munaivar Thiru Tamizhkudimahan
   M.L.A., Ilayangudi Constituency and
   Hon'ble Minister for Tamil Development &
   Hindu Religious and Charitable Endowments Dept.

இதைத் தமிழில் தருவதில் என்ன இடர் உள்ளது? இதை ஏன் ஆங்கிலத்தில் தர வேண்டும்? இவர் ஏன் ஆட்சிமொழித் திட்டம் பற்றியோ சட்டம் பற்றியோ கவலைப்படவில்லை?

பெரும்பாலான இ.ஆ.ப. அலுவலர்கள் இப்படித்தான் இருக்கிறார்கள் என்பதா அல்லது அவர்களுக்குக் கீழே பணியாற்றுபவர்கள் எந்த உணர்ச்சியுமின்றி இப்படி அனுப்பிவிட்டு, மாவட்ட ஆட்சியருக்காக என்று கையொப்பம் இட்டு விடுகின்றனர் என்று பொருளா! இதில் என் பெயரும் உள்ளது. இந்த அறிவிப்பு எனக்கும் அனுப்பப்பட வேண்டும் என்று தெரிந்திருந்தும் அந்த அலுவலர்க்குத் தமிழில் அனுப்பவேண்டும் எனும் எண்ணம் வரவில்லையே ஏன்! இவ்வளவுக்கும்

அண்ணா மறுமலர்ச்சி திட்டத்தைச் செயற்படுத்துவதற்கு மாவட்ட அளவிலான குழு அமைப்பது பற்றிய மடல் இது. இதில் எல்லாமே முகவரிகள்தான். ஆனால் ஆங்கிலத்தில்

மற்றவர் கிடக்கட்டும்; என் துறை சார்ந்தவர்களாவது முற்றிலும் செம்மையாகி விட்டார்களா? இன்றளவும் அந்த உணர்வோடு செயற்படுகிறார்களா? இதுதான் முக்கியமான கேள்வி.

ஏதோ, தமிழ்க்குடிமகன் சொல்கிறாரே என்பதற்காக அவரின் கீழ் பணியாற்றுகிறோமே என்பதற்காகத் தமிழில் எழுதிவிட்டு - அல்லது பாசாங்கு செய்துவிட்டு - இனித் தமிழ்க்குடிமகன் பற்றிக் கருதவேண்டியதில்லை என்று பழைய குருடியைத் தேடிப் போகிறார்களா? அல்லது எந்த நிலையிலும் ஒரு முறையாக ஏற்படுத்திக் கொண்ட தமிழாட்சிப் பழக்கத்தை - தமிழ்ச் சொற்களின் பழக்கத்தை இன்றளவும் கடைப்பிடிக்கிறார்களா?

இவையெல்லாம் இன்று (எந்தப் பதவியிலும் இல்லாத இன்று) என் முன் எழும் கேள்விகள்!

1. ஒருவர் விடுமுறையில் செல்லும்போது அதே தகுதியுடைய ஒருவர் கூடுதல் பொறுப்பேற்பார். இதற்கான படிவத்தில் இருவரும் கையொப்பமிடுவர். இப்படிவம் தமிழிலேயே உள்ளது. எங்கள் செயலாளர் சு. இராமகிருட்டிணன் மிகச் சிறந்தவர்; எனக்கு மிகவும் பிடித்தவர்.

அவர் 10 நாள் ஈட்டிய விடுப்பில் செல்கிறார். ஆனால் அவருக்காகப் பயன்படுத்திய படிவம் ஆங்கிலத்தில்; தட்டச்சுச் செய்யப்பட்ட விவரங்களும் ஆங்கிலத்தில். எவனோ ஒரு புண்ணியவான் (என் துறையில்தான்) இந்தக் காரியங்களைச் 'செவ்வனே' செய்திருக்கிறார். ஆனால் எங்கள் செயலாளர் மட்டும் தமிழில் கையொப்பமிட்டுள்ளார்.

சுந்தரராசன் என்பவர் அறநிலையத்துறையின் இணைச் செயலாளர். அப்போதும், இப்போதும். தன் மகளின் திருமண அழைப்பிதழை ஆங்கிலத்திலேயே அச்சிட்டுள்ளார். அந்த அழைப்பிதழைத்தான் எனக்கும் அனுப்பியுள்ளார் (2.11.2001). ஆக, என் துறையில் பணியாற்றினாலும், கோப்புகளை, குறிப்புகளைத் தமிழில் அனுப்பினாலும் அவரது குடும்பத்தில் 'தமிழ்' இல்லை; திருமணச் சடங்குகளில்கூட இந்த நிலை.

Tmt. M. Bhanumathi, B.Sc., and Thiru. S.K. Sundararajan, M.A., B.L.,
We warmly welcome you with family and friends on the occasion of the wedding Reception of our daughter.

ப. சிவக்குமார் அறநிலையத்துறையின் இணை ஆணையர். தற்போது (14.1.2004) திருச்சியில் பணியாற்றுபவர். என்மீது என்றும் அன்புடையவர். அவரது பொங்கல் வாழ்த்து தமிழில் வருகிறது. கையொப்பமும் தமிழில். ஆனால் அவர் அனுப்பிய அந்த உறையில் எல்லாம் ஆங்கிலத்தில் - 'Book Post' தொடங்கி, என் முழு முகவரிவரை -

To

Shri. Tamilkudimagan, AVL
Former Minister for Endowments, Madurai - 625 002.

அவர் எழுதியிருக்கமாட்டார், யாரோ ஓர் உதவியாளரிடம் கொடுத்து எழுதச் சொல்லியிருப்பார். ஆனால் அவர்க்கோ த.வ. துறையின் முன்னாள் அமைச்சர்க்கு அனுப்புகிறோம் என்ற எண்ணம் இல்லாமல் - எண்ணம் வந்து அவரை இடித்து விடாமல் - வழக்கம் போல் ஆங்கிலத்தில் வரைந்து தள்ளிவிட்டார்.

நான் முன்பு பணியாற்றிய யாதவர் கல்லூரியின் தற்போதைய முதல்வர் (2004) க. திருவாசகம் எனக்குப் பொங்கல் வாழ்த்து அனுப்பியுள்ளார். நல்ல தமிழில் - நயமான சொற்களுடன். ஆனால் என் முகவரி ஆங்கிலத்தில் வந்துள்ளது. நான் இருந்த இடம்; இந்த இடத்திலிருந்து எனக்கு ஆங்கிலத்தில்.

Dr. M. Tamilkudimagan
3/407, Kuppam Salai, Kottivakkam, Chennai - 600 041

எத்தனையோ பேர் த.வ. உதவி இயக்குநர்களாகப் பதவி ஏற்றுப் பணியாற்றுகின்றனர். அவர்களில் சேலத்தில் பணியாற்றும் மு. இராசேந்திரன் ஒருவர். கோவை, சேலம், ஈரோடு ஆட்சிமொழிக் கருத்தரங்குகளை முன் நின்று நடத்தியவர்; என் முழக்கங்களைப் பன்முறை காது கொடுத்துக் கேட்டவர். கருத்தரங்குகள் நடக்கும்போது த.வ. துறை சார்பில் வெளியிடப்பட்ட நூல்களை விற்பனை செய்தவர். அவற்றில் ஒன்று 'வணிகச் சொற்பட்டியல்'. வணிக விளம்பரப் பலகையில் நல்ல தமிழில் எழுதப்பட வேண்டும் என்று வலியுறுத்துவதற்காக நாங்கள் வெளியிட்ட 'ஆங்கிலத் - தமிழ்' அகர முதலி அது.

எல்லாம் தெரிந்திருந்தும், மு. இராசேந்திரன் தன்னளவில் அந்த எண்ணத்தைக் கைவிட்டு விட்டார் என்றே தெரிகிறது. தருமபுரி மாவட்டத்தைச் சேர்ந்த அவர்க்கு - அந்த மாவட்டத்தில் அதிகமாகக் கிடைக்கும் சலவைக் கற்களைக் கொண்டு ஒரு வணிக நிறுவனம் நடத்திட ஆசை. நடத்தட்டும்; ஆனால் அவர் கடைக்குப் பெயர் என்ன தெரியுமா?

"ரெயின்போ மார்பிள்ஸ்"

வேலி பயிரை மேய்கிறது; பிறகு இவர் சொல்லி எவனைத் திருத்திட முடியும்?

2.3.97 தினகரன் இதழில் ஒரு செய்தி.

### தமிழில் எழுதியதால் அபராதம் கட்டிய அதிகாரி

தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் உத்தரவுப்படி தமிழில் அலுவலக விவரங்களை எழுதியதால் ஒரு அதிகாரி அபராதம் கட்ட நேர்ந்துள்ளது. இது பற்றிய விவரம் வருமாறு:

“இராமநாதபுரத்தில் நடந்த ஒரு வணிக வளாக கட்டிட திறப்புவிழாவில் கலந்து கொண்டு தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசியபோது “ராம்நாட்” என்று அழைக்கக் கூடாது. இராமநாதபுரம் என்றே அழைக்கவேண்டும். வாகனங்களில் உள்ள எழுத்துகள் தமிழ் மொழியிலேயே எழுத வேண்டும். இதற்கான ஆணை பிறப்பிக்கப்படும்.”

ஆனால் அமைச்சரின் இந்த வேண்டுகோள் மக்களுக்குத்தான் நமக்கு இல்லை என்று அதிகாரிகள் நினைத்துச் செயல்பட்டு வருகிறார்கள். இதற்கு உதாரணம் மதுரை வடக்கு வட்டாரப் போக்குவரத்து அலுவலகம். ஆட்டோ டிரைவர் ராஜேந்திரன் என்பவர் தனது ஆட்டோவின் பக்கவாட்டில் ‘டி.என்’ என்ற ஆங்கில எழுத்திற்கு பதில் ‘த.நா’ என்று தமிழில் எழுதி இருந்தார். இதனால் அந்த ஆட்டோவிற்கு மதுரை வடக்கு வட்டார போக்குவரத்து அலுவலர் தகுதிச் சான்றிதழ் வழங்க மறுத்துவிட்டார். இது தொடர்பாக ஆட்டோ தொழிலாளர்கள் வட்டாரப் போக்குவரத்து அலுவலரை கண்டித்து ஆர்ப்பாட்டம் நடத்த முடிவு செய்து போலீஸ் கமிஷனரிடம் அனுமதி கேட்டனர். ஆனால் கமிஷனர் அனுமதி மறுத்துவிட்டார்.

இதை எதிர்த்து ஆட்டோ தொழிலாளர்கள் மனித உரிமை நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்தனர். இந்த வழக்கு தொடர்பாக போலீஸ் கமிஷனர் வருகிற 10-ஆம் தேதி கோர்ட்டில் ஆஜராக வேண்டும் என்று நீதிபதி பேச்சிமுத்து உத்தரவிட்டுள்ளார்.

தமிழில் ஆட்டோவில் எழுத்து எழுதியதால் தகுதிச் சான்றிதழ் தர மறுத்ததுபோல் ஒரு அரசு அலுவலக அதிகாரி தமிழில் பட்டியல் தயாரித்து பணம் பெறுவதற்காக சம்பளக் கணக்கு அலுவலகத்திற்கு அனுப்பினார். ஆனால் அந்தப் பட்டியல் தமிழில் இருந்ததால் திருப்பி அனுப்பப்பட்டு விட்டது. இந்த நிகழ்ச்சி பொதுப்பணித்துறையில்தான் நடந்துள்ளது. அங்குள்ள நில நீர் வட்ட அலுவலகத்தில் ஆட்சி அலுவலராகப் பணியாற்றுபவர் சு. முத்துசாமி பாண்டியன். இவர் டிசம்பர் மாத அலுவலக சம்பள பட்டியலை தமிழில் தயாரித்து பணம் பெற தமிழ்நாடு அரசுத் துறையான சம்பளக் கணக்கு அலுவலகத்திற்கு ஒப்புதலுக்காக அனுப்பி வைத்தார். இரண்டொரு நாட்கள் கழித்து அந்த பட்டியல் ‘‘எந்த அடிப்படையில் தமிழில் பட்டியல் தயாரித்தீர்கள்’’ என்ற கேள்வியோடு சம்பளக்கணக்கு அலுவலகத்தால் மீண்டும் பொதுப்பணித்துறை அலுவலகத்திற்கே திருப்பி அனுப்பப்பட்டது. அதற்கு பிறகு உரிய பதில் தமிழில் எழுதி பட்டியல் தயாரித்து மீண்டும் சம்பளக் கணக்கு அலுவலகத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டது.

இம்முறையும் அந்தப் பட்டியல் “தமிழில் எழுத அதிகார வரம்பு” கேட்டு சம்பளக் கணக்கு அலுவலகத்தில் இருந்து மீண்டும் திருப்பி அனுப்பப்பட்டது. அந்த பட்டியல் மீண்டும், மீண்டும் விளக்கம் கேட்டு திரும்ப, திரும்ப அனுப்பப்படுவதால் ஏற்படும் காலதாமதத்தை சுட்டிக் காட்டியும் அந்த பட்டியலில் தொலைபேசித் துறைக்கு செலுத்த வேண்டிய கட்டண பில்லும் உள்ளது என்றும் குறிப்பிட்ட தினத்திற்குள் டெலிபோன் கட்டணம் செலுத்தப்படவேண்டும் என்பதைக் குறிப்பிட்டும்

சம்பளக் கணக்கு அலுவலகத்திற்கு பொதுப்பணித்துறையில் இருந்து அந்த பட்டியல் 3-வது முறையாக \அனுப்பப்பட்டது. அத்துடன் அந்த தமிழ் பட்டியலுடன் ஆங்கில வழி இணைப்புகளையும் சேர்த்து அனுப்பப்பட்டது.

இந்த முறையும் பட்டியல் திரும்பி வந்தால் அலுவலக பிரச்சினைகள் ஏற்படும் என்பதை சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

இது பற்றி தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகனுக்கும் கடிதம் எழுதப்பட்டுள்ளது. அமைச்சர் சமீபத்தில் மதுரை வந்தபோது இது பற்றி அவரிடம் நேரிடையாக எடுத்துச் சொல்லப்பட்டது. அவரும் உடனே தொலைபேசியில் சம்பளக் கணக்கு அலுவலக அதிகாரிக்கு அறிவுரை வழங்கினார். இதற்கிடையில் அந்தப் பட்டியல் தாமதமாக அனுமதி செய்யப்பட்டுப் பொதுப்பணித்துறைக்கு வந்து சேர்ந்தது. இதற்குள் பொதுப்பணித்துறை தொலைபேசிக் கட்டணம் செலுத்தவேண்டிய நாள் கடந்து விட்டதால் ரூ.120 அபராதத் தொகை செலுத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இந்த அபராதத் தொகையை பொதுப்பணித்துறை நில நீர்வட்ட ஆட்சி அலுவலர் தனது சொந்தப் பணத்தில் இருந்து செலுத்தியுள்ளார். தமிழில் தொடர்ந்து எழுதியதற்காக ரூ.120 அபராதம் கட்டவேண்டிய நிலை அதிகாரி முத்துச்சாமி பாண்டியனுக்கு ஏற்பட்டுள்ளது.

இந்த அதிகாரி தமிழில் சிறந்த வரைவுகள் எழுதியதற்காக சான்றிதழ் பெற்றவர் என்பதும் அலுவலக நடைமுறையில் இந்த தமிழை அனைவரும் பயன்படுத்தத் தொடர்ந்து அறிவுரை கூறுவதோடு அதைச் செயல்படுத்தி அலுவலகத்தை நடத்தியவர் என்பதும் குறிப்பிடத்தக்கது."

அந்தச் செய்தியை முழுவதும் படியுங்கள்.

இதிலிருந்து என்ன தெரிகிறது? தமிழை அலட்சியப்படுத்தும் அதிகாரிகள் மட்டுமல்ல; தமிழுக்கு எதிரான அதிகாரிகளும் இந்த மண்ணில் இருக்கிறார்கள்.

மண்டலப் போக்குவரத்து அலுவலகத்தில் (R.T.O) உள்ளவர்களுக்கு, போக்குவரத்து வாகனச் சட்டத்தின் பிரிவுகள் தெரியும்.

அதில் ஒரு பகுதி :

எந்த ஒரு வாகனமும் ஆங்கிலத்தில் எழுத்தையும், எண்ணையும் கொண்ட எண்தகடு (Number Plate) பொருத்திக் கொள்ளலாம். அதே நேரத்தில் வண்டி உரிமையாளர் விரும்பினால் அந்தந்த மாநில / வட்டார மொழிகளின் எழுத்தையும் எண்ணையும் பயன்படுத்தி மற்றோர் எண்தகடு பொருத்திக் கொள்ளலாம்.

ஒரு தானி (Auto) ஓட்டுபவர் ஆர்வத்தில் TN என்பதை த.நா. என்று எழுதிவைத்திருந்தால் அதைப் பாராட்டியிருக்க வேண்டும். பாராட்டா விட்டாலும் பரவாயில்லை, கடித்துக் குதறாமலாவது இருந்திருக்கலாம்.

தமிழ் நாட்டில் தமிழில் எழுதுகிறார் ஒருவர்; இருந்து விட்டுப் போகட்டுமே என்று விட்டுவிடாமல் மதுரையில் ஓர் அலுவலர் சான்றிதழ் வழங்க மறுக்கிறார் என்றால் இவர்களுக்காகத்தான் "இந்தியன் தாத்தா" தேவைப்படுகிறார் போலும்!

வாகனங்களில் தமிழில் எழுதிவைத்தவன் நான் : 1972 ஆம் ஆண்டிலேயே; எந்த அதிகாரியும் என்னை ஏன் என்று கேட்டதில்லை. ஆனால் ஒரு தானி ஓட்டுநர் எழுதினால் அவருக்கு மட்டும் இழுத்தடிப்பு.

இதுபோன்ற நிலைகளை மனத்திற்கொண்டு தமிழில் எழுதிட அனுமதி வழங்கி ஆணை பிறப்பிக்கப்பட்டது. தமிழக அரசின் பேருந்துகள் அனைத்திலும் இன்று தமிழில் எண் தகட்டைக் காணலாம். ஆர்வமுடைய தோழர்கள் பலரும் தங்கள் ஊர்திகளில் தமிழ் எண் தகடுகளைப் பொறித்துக்கொண்டனர்.

அடுத்தது முத்துசாமி பாண்டியன் விவகாரம். என் கவனத்துக்கு வந்தபின் கருவூல விதி முறைகளைச் சுட்டிக்காட்டி அனைவர்கட்கும் சுற்றறிக்கை அனுப்பப்பட்டது. அது முன்னர்த் தரப்பட்டுள்ளது. அதன்பின் சிக்கலுக்கு ஒரு தீர்வு வந்தது. எனினும் ஆர்வத்துடன் தமிழில் பட்டியல் தயாரித்த முத்துசாமி பாண்டியன் பாராட்டுக்குரியவரே! அதே நேரத்தில் இந்தப் பட்டியலைத் தேவையின்றி இழுத்தடித்த கருவூல அலுவலர் கடும் கண்டனத்துக்குரியவர். இந்த அலுவலர் தமிழில் கையொப்பமிட வேண்டும். தமிழில் வரைவுகளை எழுதவேண்டும் என்று அரசாணைகள் உள்ளன. அவற்றைச் செய்கிறாரா என்று பார்க்கவேண்டும்; தவறினால் தண்டிக்க வேண்டும்:

அதிகாரிகள் சிலர்தான் இப்படி நடக்கிறார்கள் என்றில்லை. அமைச்சர்கள் சிலரும், தமிழ்நாட்டு அமைச்சர் - தமிழ்க் கொள்கையுடைய அரசு அமைச்சர் எனும் எண்ணம் இல்லாமல் தங்கள் திறமைகளை வெளிப்படுத்தும் நோக்கில் தமிழைக் காலி செய்துவிடுகின்றனர்.

13.12.99 அன்று 'மக்கள் குரல்' இதழில் வந்த செய்தியை அப்படியே தருகிறேன்.

**தாராபுரத்தில் நடந்த நீதிமன்றக் கட்டிட திறப்பு விழாவில் கலெக்டர், நீதிபதி பேசினார்கள்: மந்திரி ஆலடி அருணா ஆங்கிலத்தில் பேச்சு**

ஈரோடு, டிச.13:

"ஈரோடு மாவட்டம் தாராபுரத்தில் நடந்த சார்பு நீதிமன்றக் கட்டிட திறப்பு விழாவில் பேசிய கலெக்டர், நீதிபதி எல்லோரும் தமிழில் பேசினார்கள். எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என கூறி வரும் தி.மு.க. ஆட்சியின் அமைச்சர் ஆலடி அருணா மட்டும் ஆங்கிலத்தில் பேசினார்.

'எல்லோரும் தமிழில் பேசுறாங்கா; இவர் மட்டும் ஆங்கிலத்தில் பேசுறாரே'என்று விழா முடிந்து சென்றபோது மக்கள் முணுமுணுத்துச் சென்றனர்."

தமிழ் வளர்ச்சி என்பது அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு. இதை உணராமல் ஆலடி அருணா பேசியிருக்கின்றார். ஆமாம்! யாருக்காகப் பேசினாராம் இவர்! இங்கிலாந்து தேசமக்கள் ஐம்பது, அறுபது பேர் வந்து உட்கார்ந்து விட்டார்களா? ஏன் இந்த நிலை?

வருவாய்த்துறை வழங்கும் சான்றிதழ்களில் பலவற்றில் தமிழே இல்லை என்று குற்றச் சாட்டுகள் எழுந்தன. இதுபோன்ற குற்றச் சாட்டுகள் வரும்போது நானும் வருவாய்த்துறை அமைச்சர்க்கு உடனடியாக அவற்றைச் சுட்டிக்காட்டி ஆவன செய்யச் சொல்வேன்.

அப்படி வந்தனவற்றில் எடுத்துக் காட்டுக்கு இரண்டு, மூன்றை மட்டும் தருகிறேன்.

1. சென்னை ஓட்டேரியைச் சேர்ந்த ம. சரவணன் மடல் இது:

விடுநர்

ம. சரவணன்
எண்.52 வள்ளுவன் தெரு
ஓட்டேரி, சென்னை - 12

பெறுநர்

திரு. தமிழ்க்குடிமகன்
அறநிலையத்துறை மற்றும் தமிழ்ப் பண்பாடு, வளர்ச்சித்துறை அமைச்சர்

பொருள் : பிறப்புச் சான்றிதழ் வழங்கும் நகலை தமிழாக்கம் செய்யவும்.

ஐயா,

நான் மேற்கண்ட விலாசத்தில் வசித்து வருகிறேன். பிறப்புச் சான்றிதழ் வழங்குவதில் ஆங்கில எழுத்துகளால் எழுதப்பட்டு உள்ளது. இதனால் பொது மக்கள் மிகவும் சிரமப்படுகிறார்கள். இதனால் சென்னை மாநகராட்சி, மண்டலம் நுங்கம்பாக்கத்தில் உள்ள அலுவலகத்தில் தரகர்கள் நான் எழுதித் தருகிறேன் எனக்கு ஐந்து ரூபாய் தாருங்கள் என்று சொல்லுகிறார்கள். இதனால் இங்கு வரும் மக்கள் இந்த ஆட்சியைக் குறை சொல்லிக் கொண்டு போகிறார்கள். தி.மு.க. ஆட்சியில் பல சாதனை செய்து உள்ளீர்கள். அதுபோல் இந்தப் பிறப்பு சான்றிதழ் வழங்கும் நகலையும் தமிழாக்கம் செய்து பொதுமக்கள் குறைகளையும் தீர்க்குமாறு மிகத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்."

மாநகராட்சி வழங்கும் பிறப்புச் சான்றிதழ் ஆங்கிலத்தில் உள்ளமையால் ஆங்கிலம் தெரியாத பாமர மக்களுக்கு ஏற்படும் இடர்கள் குறித்து விளக்குகிறார் அவர்.

2. அடுத்து, வருவாய்த்துறை வழங்கும் சாதிச் சான்றிதழ் பற்றியது.

'சாதிச் சான்றிதழ்' முற்றிலும் ஆங்கிலத்திலேயே உள்ளது. அதுகுறித்து, 6.7.99 ஆம் நாளைய "இராணி" இதழில் செய்தி வெளியிடப்பட்டது.

எங்கே தமிழ்?

C.No.401/97/B.2 Dt.6-97
CERTIFICATE No. DISTRICT CODE 02
678486 TALUK CODE 10
VILLAGE CODE 098
COMMUNITY CERTIFICATE

This is to certify that Jeyaprakash son/daughter to Thiru Ganesan of Keel Nallathur village/town Thiruvallur Taluk MGR District of the State of Tamil Nadu belongs to Hindu Vanniar Community, which is recognised as Most Backward Class/ Scheduled Caste/Seheduled Tribe as per G.O.Ms.No.28 Dated 19.7.94/ The S.C. and S.T. Orders (Amendment) Act, 1976, vide SL.No.26.

2. It is certified that Jeyaprakash and his/her family ordinarily reside(s) at Keel Nallathur village/town Tiruvallur Taluk MGR district of the Tamil Nadu. ZONAL DEPUTY THASILDAR

VENGATHUR ZONE,
TIRUVALLUR TALUK.

தமிழ்நாடு அரசு வழங்கும் சாதிச் சான்றிதழ், இது. இதில் மருந்துக்குக் கூடத் தமிழ் இல்லை! துணை வட்டாட்சியர் கூட ஆங்கிலத்தில்தான் கையெழுத்திட்டு இருக்கிறார்! - இரா. ஏ. கணேசன், கீழ்நல்லாத்தூர்.

அதில் உள்ள அடிக்குறிப்பு உண்மையைத் தெளிவு படுத்துகிறது. இதனையே சுட்டிக்காட்டி வருவாய்த்துறை அமைச்சர்க்கு எழுதி அனுப்பினேன். தொலைபேசியிலும் கூறினேன்.

3.அடுத்து வரும் எடுத்துக்காட்டு இதிலிருந்து மாறுபட்டது. சாதிச் சான்றிதழ் தமிழில் இல்லை என்ற குற்றச்சாட்டு முந்தையது. இதில் 14.12.98 விவரப்படி சாதிச் சான்றிதழ் தமிழில் உள்ளதைக் காண்கிறோம்.

ஆனால் தமிழில் இருந்தும் தமிழில் நிரப்பாமல் ஆங்கிலப் பகுதியைப் பார்த்து, ஆங்கிலத்திலேயே நிரப்பியுள்ளனர்.

CNo: 2607/98 GCP-26-4-6,00,000 Cps. -22-4-95 R.Dis. . . . . . . . . /9 dt.

BC மாவட்டக் குறியீடு எண் : 18
District Code

சான்றிதழ் எண்: வட்டக் குறியீடு எண் : 01
Certificate No: Taluk Code:

கிராமக் குறியீடு எண்: 061

2267712

சாதிச் சான்றிதழ்

COMMUNITY CERTIFICATE

. . . . . . . . . . . . . .மாவட்டம் . . . . . . . . . . . வட்டம். . . . . . . . . . . . கிராமம்/நகரம், திரு/திருமதி./செல்வி/ செல்வன். . . . . . . . . . . . . . . தகப்பனார்/கணவர் பெயர். . . . . . . . . . . . . . . . . . வகுப்பைச் சார்ந்தவர். அரசு ஆணை எண்.1564, சமூக நலத்துறை நாள் :

30.7.1985 வரிசை எண். . . . . . . . படி, பிற்பட்ட பிரிவினைச் சார்ந்தவர் எனச் சான்றளிக்கப்படுகிறது.

This is to certify that VIJI son/Daughter of Thiru MUTHIAH of KANDIAEPRI . . . . . Village/Town, TIRNELVELI Taluk. . . . . . . TIRUNELVELI District of the State of Tamil Nadu belongs to HINDU YADAVAR Community, which is recognised as a Backward Class per Government Order (Manuscript Series) No.1564, Social Welfare Department, dated 30th July 1985 vide Serial No.198.

கீழே உள்ள அலுவலர், தமிழில் கையொப்பமிட துணை வட்டாட்சியர் சான்றிதழைத் தமிழிலேயே நிரப்பச் சொல்லித் தெளிவு படுத்தியிருக்கலாமே!

அலுவலர்கள் மெத்தனப் போக்கு இதில் பளிச்செனத் தெரிகிறது. இது குறித்து ச.ஆ. சங்கரன் என்பவர் எழுதிய மடலைப் பாருங்கள்.

"ஆனால் தமிழ்நாடு அரசு அலுவலகங்களில் அடித்தட்டு மக்கள் அதிகமான அளவிற்குத் தொடர்பு கொள்ளக்கூடிய வட்டாட்சியரால் வழங்கப்படும் சாதிச் சான்றிதழின் வாசகம் தமிழில் அச்சிடப்பட்டும் அவர்கள் ஆங்கிலத்தில் கொடுத்திருக்கிறார்கள். இந்த நிலை நீடித்தால் தமிழ் எவ்வாறு வளர்ச்சியுறும்? இதை மாற்றுவதற்கு ஆவன செய்யுமாறு அன்புடன் வேண்டுகிறேன். இத்துடன் சாதிச் சான்றிதழின் நகல் இணைக்கப்பட்டுள்ளது."

பொதுமக்கள் எவ்வளவு விழிப்புணர்ச்சியோடு இருக்கிறார்கள், அலுவலர்கள் எப்படி அவர்களது உணர்ச்சிகளைப் பொசுக்குகின்றனர் என்பதை இதன் மூலம் அறியலாம்.

வணிகவரித் துறையில் மக்கள் நல்வாழ்வுத் துறையில், பொதுப்பணி, நெடுஞ்சாலைத் துறைகளில், மின்துறை போன்ற பல துறைகளில் பல படிவங்கள் ஆங்கிலத்திலேயே இருந்து வந்துள்ளன. ஒவ்வொருவர்க்கும் சொல்லிச் சொல்லித்தான் கொஞ்சம் கொஞ்சமாக மாற்றம் செய்ய வேண்டியிருந்தது.

பூரணலிங்கம், இ.ஆ.ப. மக்கள் நல்வாழ்வுத்துறைச் செயலராக இருந்தபோது 'மருத்துவர்கள் நோயாளியிடம் தரும் மருந்துச் சீட்டுகளை'த் தமிழில் எழுதவேண்டும் என்று ஓர் ஆணை பிறப்பித்தார். அதிலும் சிலர் ஒரு குழப்பம் விளைவித்தனர். 'சாரிடான்' என்றால் அதை மொழிபெயர்த்து எழுத வேண்டுமே! அது எப்படி முடியும்? என்றெல்லாம் பொருத்தமற்ற போக்கிரித் தனமான வினாக்கள்.

எதையும் மொழிபெயர்க்க வேண்டியதில்லை. 'அனாசின்' என்பதைத் தமிழில் அப்படியே எழுதுங்கள் என்பதுதான் அரசின் ஆணை. எனவே இது குறித்து அரசு, தெளிவான ஓர் அறிவிப்பைத் தந்துள்ளது. அதை அப்படியே தந்துள்ளேன்.

அரசு மருத்துவமனைகளில் மருந்துச் சீட்டுகளை தமிழில் எழுத வேண்டும்: அரசு உத்தரவு

சென்னை, ஜன. 4-

"அரசு மருத்துவமனைகளில் மருந்துச் சீட்டுகளைத் தமிழில் எழுத வேண்டும்" என்று, தமிழக அரசு உத்தரவிட்டு உள்ளது.

மருந்துச் சீட்டு

தமிழ்நாட்டில் உள்ள அரசு மருத்துவமனைகளில் நோயாளிகளுக்கு கொடுக்கப்படும் மருந்து மாத்திரைகள் 'பிளிஸ்டர்' மற்றும் 'ஸ்டிரிப்' பேக்குகளில் அந்த மருந்தின் பெயர் தமிழில் அச்சிடப்பட்டு வழங்கப்படுகின்றன. இதன் மூலம், அது என்ன மாத்திரை என்பது நோயாளிகள் தெரிந்து கொள்ள முடிகிறது.

மேலும் மருத்துவமனைகளில், நோயாளிகளுக்கு கொடுக்கும் மருந்துச் சீட்டில் மருத்துவர்கள் தமிழில் மருந்துகளின் பெயர்களை எழுதினால் அது நோயாளிகளுக்குப் பயனுள்ளதாக அமையும். எந்த வேளையில் என்ன மருந்து சாப்பிட வேண்டும் என்ற விவரத்தை நோயாளிகள் புரிந்து கொள்ள முடியும் என அரசு கருதுகிறது.

தமிழில்

எனவே, அரசு மருத்துவமனைக்குச் சிகிச்சைக்கு வரும் புற நோயாளிகள் அனைவருக்கும் தமிழில் மருந்துச் சீட்டு வழங்க அரசு முடிவு செய்துள்ளது.

அதன்படி எல்லா அரசு மருத்துவமனைகள் மற்றும் ஆரம்ப சுகாதார நிலையங்கள் ஆகியவற்றில் பணிபுரியும் மருத்துவர்கள், புற நோயாளிகளுக்குக் கொடுக்கும் மருந்துச் சீட்டுகளில் மருந்துகளின் பெயரை தமிழிலேயே எழுதி வழங்க வேண்டும் என அரசு உத்தரவிடுகிறது.

இந்த உத்தரவை மருத்துவர்கள் தவறாமல் கடைப்பிடிக்க வேண்டும் என்று அறிவுரை வழங்குமாறு மருத்துவக் கல்வி இயக்குநர், மருத்துவம் மற்றும் ஊரக நலப்பணிகள் இயக்குநர், பொது சுகாதாரம் மற்றும் நோய் தடுப்பு இயக்குநர் ஆகியோர் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

இவ்வாறு அரசு அறிவிப்பில் கூறப்பட்டு உள்ளது.

இதை ஏற்று இன்று அரசு மருத்துவமனைகளில் - ஆரம்ப சுகாதார நிலையங்களில் எத்தனை மருத்துவர்கள் தமிழில் மருந்துச் சீட்டை எழுதித் தருகின்றனர்? பொதுமக்கள்தான் சொல்ல வேண்டும். ஆனால் அதற்காக அத்துறை எல்லாப் படிவங்களையும் தமிழில் கொண்டு வந்துவிட்டதாகச் சொல்லமுடியாது.

எடுத்துக்காட்டு.

X-ray Diagnosis Management request Urgent/Bet X-ray / Routine / Fixed on Hospital No. Service Date X-ray Dept. No. . . . . . . . . Ward No. . . . . . MRD No. . . . . . Name & Address. . . . . . Age . . . . M/F. . . . . Occupation . . . . . . . . . Income . . . . . . Case Summary . . . . . . . . Radiological Name

Signature

இந்நிலையில்தான் பல துறைகளில் தொடர்கின்றது.

இந்த இயலில் என் வருத்தத்தையும், எரிச்சலையும், சினத்தையும், ஆதங்கத்தையும் கொட்ட வேண்டியுள்ளது. அதிகாரிகளுக்குக் கோரிக்கை வைத்துள்ளேன்; எச்சரித்துள்ளேன். மெத்தனத்தைச் சுட்டிக் காட்டியுள்ளேன், என்னால் முடிந்த எல்லாவற்றையும் செய்து பார்த்துவிட்டேன்.

செய்தித்தாள்களில் வந்த தலைப்புகளையும், நான் பேசிய பேச்சுகளின் சுருக்கத்தையும் பார்த்தாலே உண்மை தெரியும். அதிகாரிகள் யார்? என்பதை இப்பகுதி மக்களுக்கு அடையாளம் காட்டும்.

### அதிகாரிகள் மெத்தனப் போக்கால் தமிழ் ஆட்சி மொழியாகவில்லை அமைச்சர் தமிழ்க்குடிமகன் வேதனை

தமிழகத்தில் அரசுத் துறைகளுக்கிடையேயான கடிதப் போக்குவரத்து தமிழில் இருக்கவேண்டும் என்பது போன்ற விஷயங்களில் அதிகாரிகள் போதிய ஆர்வம் காட்டுவதில்லை.

ஆனால் அவர்களுக்கு சாதகமான ஆணைகளுக்கு மதிப்புத் தருகின்றனர். தமிழகத்தில் தி.மு.க. ஆட்சியேற்ற பிறகு நிலைமை சீரடைந்து வருகிறது (மாலைக் கதிர் 5.11.96).

புதுவை மொழியியல் மற்றும் பண்பாட்டு நிறுவனம் ஏற்பாடு செய்திருந்த தமிழ் ஆட்சி மொழியாக்குவதில் உள்ள 'பிரச்சனைகளும், தீர்வுகளும்' என்ற தலைப்பிலான 3 நாள் கருத்தரங்கைத் தொடங்கி வைத்து அவர் பேசியதாவது:

தமிழை ஆட்சி மொழியாக மாற்றுவதில் சிரமம் ஏற்பட உரிய சட்டம் இல்லாதது காரணம் அல்ல. ஆட்சி நிர்வாகத்தில் உள்ள அதிகாரிகள் போதிய மன உறுதியைக் காட்டாததே ஆகும்.

தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் தமிழகத்தில் 1956 ஆம் ஆண்டு கொண்டு வரப்பட்டது. அதற்கு அடுத்து ஆட்சியில் அமர்ந்த அரசுகள் இச்சட்டத்தின் கீழ் சுமார் 300 அரசு ஆணைகளைப் பிறப்பித்துள்ளன. ஆனால் இவ்விஷயத்தில் தற்போதுவரை நிலமை மாறவில்லை.

அரசுத் துறைகளின் கடிதப் போக்குவரத்து தமிழ் மொழியில் இருக்க வேண்டும் என்பதைக் கண்காணிக்க ஒரு குழு 1957-ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டது. இதற்கான உத்தரவு ஆங்கிலத்தில் பிறப்பிக்கப்பட்டது என்பது வேடிக்கையானதாகும்.

அதிகாரிகள் தமிழில் கையெழுத்திட வலியுறுத்துவதற்கென தனியாக ஓர் உத்தரவு பிறப்பிக்க வேண்டியிருந்தது.'

இதில் அலுவலர்களின் மெத்தனப் போக்கைத் தெளிவாகச் சுட்டிக் காட்டியிருக்கின்றேன்.

2. 'தமிழில் அரசு ஆணை: மீறும் அதிகாரிகளின் மீது நடவடிக்கை'

அரசு ஆணைகளை மீறும் அலுவலர்களின் மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்று கடுமையாகவே சொல்லியுள்ளேன்.

திருச்சி மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் வியாழக்கிழமை நடந்த ஆட்சிமொழிக் கருத்தரங்கில் உரையாற்றிய தமிழ்க்குடிமகன் கூறியதாவது:

அரசு அலுவலகங்களில் தமிழ்த் தட்டச்சுகள் இல்லாததால் தான் அரசு ஆணைகள் தமிழில் அனுப்ப இயலவில்லை என்று கூறப்பட்டது. எனவே அனைத்து அரசு அலுவலகங்களுக்கும் தமிழ்த் தட்டச்சுகள் வழங்கும் பணி நடந்து வருகிறது.

தற்போது முதன்முதலாக தலைமைச் செயலகத்திற்கு 500 தமிழ்த் தட்டச்சுகள் உரு.50 இலட்சத்துக்கு வாங்கப்பட்டுள்ளன. இது தவிர மாவட்ட ஆட்சியர் அலுவலகம் உள்ளிட்ட அனைத்து மாவட்ட அலுவலகங்களுக்கும் தமிழ்த் தட்டச்சுகள் விரைவில் வழங்கப்படும்.

அரசு கோப்புகளில் தமிழிலேயே கையெழுத்திட வேண்டும். அதிகாரிகள் அனுப்பும் சுற்றறிக்கைகளைத் தமிழிலேயே அனுப்பவேண்டும் உள்ளிட்ட நிறைய விதிமுறைகள் 1956-லேயே தமிழகத்தில் சட்டமாக்கப்பட்டுவிட்டன.

ஆனால், 40 ஆண்டு கடந்த பின்னரும், இது நடை முறைப்படுத்தப்படவில்லை. ஆனால் இப்போது தமிழ் ஆட்சி மொழிக்கென்று தனி அமைச்சகம் உள்ளது. எனவே இதை நடைமுறைப்படுத்த அதிகாரிகள் தீவிர முயற்சி எடுக்க வேண்டும். அரசு அனுப்பிய சுற்றறிக்கையைச் சில அதிகாரிகள் கடைப்பிடிப்பதில்லை. விதிமீறல்கள் செய்யும் அதிகாரிகள் மீது கண்டிப்பாக நடவடிக்கை எடுக்கப்படும். ஏற்கெனவே சிவகெங்கையில் கருவூல அதிகாரி மீது நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. தஞ்சாவூரில் ஒரு அதிகாரி இடமாற்றம் செய்யப்பட்டுள்ளார்.

தமிழில் மிகச் சிறந்த சொற்கள் இருக்கும்போது நாம் ஏன் ஆங்கிலத்தைப் பயன்படுத்தவேண்டும்? இதற்காக ஆங்கிலத்தைப் புறக்கணிக்க வேண்டும் என்று பொருளல்ல அப்படி நான் ஒரு போதும் கூறியது கிடையாது. தமிழுக்கு முதல் முக்கியத்துவம் கொடுக்கப்படவேண்டும். இதுவே இந்த அரசின் நோக்கமும் ஆகும்.

ஆங்காங்கே நான் இப்படிப் பேசிக் கொண்டே இருப்பதால், தமிழைப் பயன்படுத்த வேண்டும் என்று அதிகாரிகள் நினைக்கிறார்கள். காரணம் தமிழின் மேல் உள்ள பற்றும் அல்ல. இரக்கமும் அல்ல.

என் மேல் உள்ள இரக்கம் தான் இதற்குக் காரணம் என்று நினைக்கிறேன்.

என்ன நடவடிக்கை எடுப்போம் என்பதையும் சுட்டிக்காட்டியுள்ளேன். சிவகங்கை, தஞ்சாவூரில் இருவர் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகளையும் சுட்டிக் காட்டியுள்ளேன்.

மாவட்ட ஆட்சித் தலைவர் இராசீவ் இரஞ்சன், இ.ஆ.ப.வும் அலுவலர்கட்கு அறிவுரை கூறியுள்ளார். 'தமிழை ஆட்சி மொழியாக்க அரசு அலுவலர்கள் அனைவரும் பாடுபட வேண்டும்' என்றார் அவர்.

தினகரன் இதழ் இதே செய்திக்காக எப்படித் தலைப்புத் தந்துள்ளது என்று பாருங்கள்: (1.12.96)

அரசாணையை மீறிய குற்றத்துக்கு ஆளாகாதீர் : தமிழில் ஆணை பிறப்பிக்காவிடில் அதிகாரிகள் மீது நடவடிக்கை! அமைச்சர் தமிழ்க்குடிமகன் கடும் எச்சரிக்கை!!

அண்ணா இயற்றியது

தமிழ் ஆட்சி மொழிப் பணியை நாங்கள் தலைமைச் செயலகத்தில் இருந்து தொடங்கி இருக்கிறோம். தலைமைச் செயலகத்தில் முன்பு 374 தமிழ் தட்டச்சு எந்திரங்களும் 804 ஆங்கில

தட்டச்சு எந்திரங்களும் இருந்தன. அதில் இப்போது 500 ஆங்கில எந்திரங்கள் வெளியே வந்துவிட்டன. அதற்கு பதிலாக 500 புதிய தமிழ்த் தட்டச்சு எந்திரங்களை வாங்கி உள்ளே அனுப்பிவிட்டோம். வெளியே கொண்டுவரப்பட்ட 500 எந்திரங்களின் விசைப் பலகையும் தமிழில் மாற்றப்பட்டு அவை கன்னியாகுமரி மாவட்டம் வரை அனுப்பப்படும்.

கொடுமையான குற்றம்

தமிழில்தான் எல்லா ஆணைகளும் பிறப்பிக்கப்பட வேண்டும் என்று சட்டம் இயற்றி இருக்கிறோம். ஆனாலும் இன்னும்சில துறைகளில் அதிகாரிகள் இதை அமுல்படுத்துவது இல்லை. அவர்கள் இப்படிச் செய்வது அரசாங்கத்தை மீறிய குற்றம் அல்லவா? மொழி பற்றிய அரசாணையைச் செயல்படுத்தத் தவறுவது கொடுமையான குற்றம் அல்லவா?

அதிகாரிகள் முயற்சி

இப்படிச் சொல்வதால் தமிழைத் திணிப்பதாக அர்த்தம் ஆகாது. நான் தமிழைத் திணிப்பது போலவும் கொடுமைப்படுத்துவது போலவும் சில அதிகாரிகள் நினைக்கிறார்கள். அது தவறு. சிங்கப்பூர் நாட்டில் 76 மாடி கட்டிடத்தில் அழகான தூய தமிழில் 76 ஆம் அடுக்கு என எழுதப்பட்டு இருப்பதை நான் பார்த்து இருக்கிறேன். அந்த நாட்டில் உள்ள கட்டிடங்களில் முதலில் மலாய் மொழியிலும் இரண்டாவது சீன மொழியிலும் 3-வது தமிழ் மொழியிலும் பெயர்களை எழுதுகிறார்கள். ஆங்கிலம் நான்காவதாகத்தான் இடம் பெறுகிறது. ஆனால் நமது நாட்டின் நிலை என்ன? எல்லாரும் ஆங்கிலத்தில்தான் விளம்பர பலகையில் இருந்து அனைத்தையும் எழுதுகிறார்கள். நான் ஆங்கிலத்தில் எழுதவேண்டாம் என கூறவில்லை. ஆங்கிலத்திலும் எழுதுங்கள். ஆனால் தமிழுக்கு முதலிடம் கொடுங்கள் என்றுதான் கேட்கிறேன். எனவே ஆட்சிமொழி உத்தரவை அதிகாரிகள் முயற்சி எடுத்துச் செயல்படுத்த வேண்டும்.

தமிழில் 300 ஆணைகள்

இதுவரை 300-க்கும் மேற்பட்ட அரசாணைகள் தமிழில் வெளியிடப்பட்டுவிட்டன. 1956-ம் ஆண்டே சி. சுப்பிரமணியம் அமைச்சராக இருந்தபோது தமிழில்தான் அரசாணைகள் வெளியிட வேண்டும் என சட்டம் கொண்டுவந்து இருக்கிறார். ஆனால் 40 ஆண்டுகாலம் அது சரியாக செயல்படுத்தப்படவில்லை. அதைத்தான் நாம் இப்போது செயல்படுத்திக் கொண்டு இருக்கிறோம்.

தமிழில் அரசாணை பிறப்பிக்க தவறும் அதிகாரிகள் மீது அரசாணை மீறிய குற்றத்துக்காக நடவடிக்கை எடுக்கலாம். ஆனால் நாங்கள் கடும் நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை. அப்படிப் பட்ட அதிகாரிகள் தங்களது மெத்தனப் போக்கைக் கைவிட்டு மனம் மாறிவிடுவார்கள் என நினைக்கிறோம்.

தினகரன் இதழ் என் நேர்காணலையும் வெளியிட்டுள்ளது.

நடவடிக்கை எடுக்கப்படும் முன் அரசு அலுவலர்கள் தாங்களாகவே மனம் மாறிவிடுவார்கள் என்ற நம்பிக்கையைத் தான் புலப்படுத்தியுள்ளேன்.

1.12.96 இல் 'தினத் தந்தி' யில் வந்த தலைப்பு:

அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுத்தால் ''அரசு அலுவலகங்களில் தமிழ் ஆட்சி மொழி ஆகிவிடும்'' தமிழ்க்குடிமகன் பேட்டி

என்ன பேசியுள்ளேன் என்பதனைச் சுருக்கமாகத் தந்துள்ளேன்.

''அரசு அதிகாரிகள் தங்களைத் திருத்திக் கொள்வார்கள் என்பதால் இன்னும் கடுமையான நடவடிக்கை மேற்கொள்ளவில்லை. போகப் போக சரியாகி விடுவார்கள் என்று நம்புகிறோம். அதிகாரிகள் காட்டிவரும் மெத்தனத்தால் தான் நாம் வெற்றி பெற முடியவில்லை.

யார் மீதும் நடவடிக்கை எடுக்க விரும்பவில்லை. அதிகாரிகளுக்கு வாய்ப்புக் கொடுத்து இருக்கிறோம்.''

ஆட்சிப்பொறுப்பேற்று 6 மாதம் ஆகிவிட்ட நிலையில் அலுவலர்கள் சரியாகிவிடுவார்கள், தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் அலுவலகங்கட்கு வந்துவிட்டால் எல்லாம் சரியாகி விடும் எனும் நம்பிக்கையில் பேசியுள்ளேன்.

இந்நிலையில் ச.ம.உ. ஞானசேகரன் சட்டமன்றத்தில் ஒரு வினாவைத் தொடுத்தார். இது எங்கள் பணியை எடுத்துச் சொல்ல வாய்ப்பாக இருந்தது. 31.1.97 'தினகரன்' இதழில் வந்த செய்தி அப்படியே தரப்படுகிறது.

தமிழ் ஆட்சி மொழித்துறை செய்தது என்ன? ஞானசேகரன் பேசும்போது கடந்த ஆண்டு தமிழ் ஆட்சி மொழித்துறை என்ன செய்தது என்று கேட்டார்.

500 புதிய தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் வாங்கப்பட்டு, தலைமைச் செயலகத்தின் துறைகளுக்கு வழங்கப்பட்டுள்ளது. தற்போது 874 ஆங்கில தட்டச்சுப்பொறிகள் 374 ஆக குறைக்கப்பட்டு, 304 தமிழ் தட்டச்சுப் பொறிகள் 804 ஆக கூடியுள்ளது. எடுக்கப்பட்ட 500 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளின் விசைப் பலகை (கீ போர்ட்)களும் தமிழில் மாற்றப்பட உள்ளன.

அரசாணைகள் அனைத்தும் தமிழில் வெளியிடப்பட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இணையாக ஆங்கிலத்திலும் ஆணைகள் வெளியிடலாம் எனத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. பொதுமக்கள் தமிழில் எழுதும் மடல்கள் மற்றும் வேண்டுகோள்களுக்கு அரசு அலுவலர்கள் தமிழில் மட்டுமே விடைதர வேண்டுமென்றும், அப்படி எழுதாத அலுவலர்கள் குறித்துச் செய்தி வருமாயின் தக்க நடவடிக்கை குறிப்பும் அனுப்பப்படுகிறது.

கன்னியாகுமரி, நெல்லை, விருதுநகர், சிவகங்கை, மதுரை, கோவை, தருமபுரி, திருச்சிராப்பள்ளி ஆகிய மாவட்டத் தலைநகர்களில் ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் நடத்தப்பட்டுத் தெளிவான கருத்துரைகள் வழங்கப்பட்டுள்ளன.

பொதுவாகவும், துறைவாரியாகவும், தனித்தனியாகவும் உள்ள 84 அகராதிகளை மறு ஆய்வு செய்து, அத்துடன் புதுக் கலைச்சொற்களையும் சேர்த்து புதிய அகராதி விரைவில் வெளியிடப்படும்.

வணிகர்கள் தங்கள் வணிக நிறுவனத்தின் பெயர்ப் பலகைகளைத் தமிழில் எழுத வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டு உள்ளது. வணிகர்கள் தம்பெயர்ப் பலகைகளில் பயன்படுத்திட 515 சொற்களைக் கொண்ட வணிகச் சொற்பட்டியல் வெளியிடப்பட்டு இன்று நாடெங்கும் பரப்பப்பட்டுள்ளது."

தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கம் குறித்து வேறு கட்சிகளும் அக்கறையோடு கருத்துத் தெரிவித்தன. மார்க்சியப் பொதுவுடைமைக் கட்சி ஏப்ரல் 97இல் ஆட்சிமொழிக் கருத்தரங்கினை நடத்தியது. அவர்கள் தெரிவித்த கருத்துகள்:

தமிழ் ஆட்சி மொழி ஆணைகளை அமல்படுத்தக் கோரிக்கை

மாநில மொழிகள் வளர வேண்டும். மொழிகளில் சமத்துவம் இருந்தால்தான் ஒற்றுமை ஏற்படும். மத்திய அரசுகள் அந்தந்த மாநில மொழிகளில் செயலாற்ற வேண்டும். மருத்துவம், பொறியியல், சட்டக் கல்விகளைத் தமிழ் மொழியில் போதிக்க வேண்டும்.

யாழ்ப்பாணப் பல்கலையில் தமிழில் மருத்துவம், பொறியியல் நூல்கள் உள்ளன. மருத்துவ, பொறியியல் நூல்களைத் தமிழ்ப்படுத்துவதில் சிரமம் ஏற்பட்டால் தமிழக அரசு இந்தப் பல்கலைக்கழக நூல்களைப் பயன்படுத்தலாம் என்றார் சங்கரய்யா. தமிழகத்தில் தமிழுக்காக கம்யூனிஸ்ட் இயக்கம் போராடியுள்ளது. இடையில் தொய்வு இருக்கிறது. அதைப் போக்க தற்போது சித்திரை இரண்டாவது வாரத்தில் தமிழ் வளர்ச்சிக் கருத்தரங்கம் நடத்துகிறது.

தமிழ் வளர்ச்சிக்காக கம்யூனிஸ்ட் இயக்கத் தலைவர்கள் ராமமூர்த்தி, ஜீவானந்தம், கல்யாணசுந்தரம் ஆகியோர் பேரவையில் குரல் கொடுத்துள்ளனர். ஆட்சிமொழி பற்றி இதுவரை 219 ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. அவைகளை அமல்படுத்தினாலே தமிழ் வளரும். தமிழிலும் கையெழுத்து போடலாம் என ஆணை உள்ளது என்றார் கதிரேசன்.

தமிழ் படித்தவர்களுக்கு முன்னுரிமை தரவேண்டும், ஆரம்ப, உயர் கல்வியில் ஒரே நேரத்தில் மாற்றம் கொண்டுவர வேண்டும், தமிழ்வழிக் கல்வி என சட்டம் போட்டால் போதும். ஓராண்டில் அத்தனை அறிவியல் நூல்களும் தமிழில் வந்துவிடும். மக்கள் தமிழை ஆட்சிமொழியாக்க வேண்டும் என்றார் ஞாநி."

இவர்களது மையக் கருத்தே 'தமிழ் ஆட்சிமொழி ஆணைகள் யாவும் நடைமுறைப்படுத்தப்பட வேண்டும்' என்பதுதான். எனவே இந்தக் கட்சியின் மீது பற்றுக் கொண்ட அரசு ஊழியர்கள் கட்டாயம் இதனைக் கருத்தில் கொள்வார்கள் என்று நம்பலாம்.

7) ஆங்கிலத்தில் குறிப்பு எழுதும் அதிகாரிகள் : தமிழ்க்குடிமகன் கோபம் (தினமலர் 27.4.97)

"கோப்புகளில் ஆங்கிலத்தில் குறிப்புகளை எழுதும் ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் அறைகளில் உள்ள ஆங்கிலத் தட்டச்சு இயந்திரங்களை அப்புறப்படுத்துவேன் என்று தமிழ் ஆட்சி மொழி பண்பாட்டுத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் ஆவேசமாகக் கூறினார்.

தமிழ்ச் சான்றோர் பேரவையின் ஆதரவில் சென்னை தேவ நேயப்பாவாணர் மாவட்ட மைய நூலகத்தில் இரண்டு நாள் தமிழ் வளர்ச்சி மாநாடு நேற்று துவங்கியது.

தமிழ் வளர்ச்சி மாநாட்டினைத் துவக்கி வைத்து தமிழ் ஆட்சி மொழி, பண்பாட்டுத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்.

தமிழறிஞர்கள் களத்தில் இறங்கிப் போராட வேண்டும். அப்போதுதான் மழலையர் பள்ளி உட்பட அனைத்துத் துறைகளிலும் தமிழை முழுமையாகக் கொண்டு வரமுடியும். விளம்பரப் பலகைகளை தமிழில் எழுதுவது பற்றி நாம் மக்களுக்கு எடுத்து கூறாததும் ஒரு குறையாகும். மதுரையில் இதுபற்றி எடுத்துச் சொன்னபோது அங்கு பெயர்ப் பலகைளை தமிழில் எழுதப் பலர் ஆர்வமுடன் முன் வந்தனர்.

எல்லாத் துறைகளிலும் தமிழுக்கு எதிரிகள் உள்ளனர். அரசின் மேல் மட்டத்தில் உள்ள ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் பலர் தமிழ் ஆட்சி மொழியாக வருவதற்குத் தடையாக உள்ளனர். என் துறையைச் சேர்ந்த ஐ.ஏ.எஸ். அதிகாரி ஒருவர் எனக்கு வரும் கோப்புகளில் ஆங்கிலத்தில் குறிப்பு எழுதி அனுப்புகிறார். அவருக்கு என்ன தெம்பு உள்ளது? இதை எளிதாக விடமாட்டேன். என் அளவோடு நிற்கும் கோப்புகளில் ஆங்கிலக் குறிப்பு ஏன் எழுதப்படவேண்டும்? இதுபோன்ற அதிகாரிகளை நான் எல்லை மீறியும் கடிந்து கொண்டுள்ளேன்.

ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் இதுபோன்று தொடர்ந்து செயல்பட்டு வந்தால் அவர்களது அறையில் உள்ள தட்டச்சு இயந்திரங்களை அப்புறப்படுத்துவேன்.

மழலையர் பள்ளி நிர்வாகிகளோடு கல்வியமைச்சர் அன்பழகன் தாய் மொழிக் கல்வி பற்றிப் பேசி உள்ளார். அவர்கள் என்னோடும் பேசி உள்ளார்கள். மழலையர் பள்ளியில் ஏழாம் வகுப்பு வரை அங்கீகாரம் இல்லாமல் பள்ளி நடத்தலாம் என்று அரசாணை உள்ளது. மழலையர் பள்ளிகளில் தமிழ் மூலம் கல்வி இல்லாவிட்டால் இந்தச் சலுகை உள்ள ஆணையை பறித்துவிடுவோம்."

ஆங்கிலத்தில் குறிப்பெழுதும் அதிகாரிகளை எல்லை மீறியும் கடிந்து கொண்டுள்ளேன். இங்கு என் சினம் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளை அப்புறப்படுத்துவேன் என்ற அளவுக்குக் கடுமையாகவே பேசியுள்ளேன். அந்த நிகழ்ச்சியில் பேசப்பட்ட செய்திகளை வேறொரு கோணத்தில் 'கதிரவன்'(28.4.97) இதழ் வெளியிட்டுள்ளது.

அதிகாரிகள் தமிழைப் பயன்படுத்தாவிட்டால் தலைமைச் செயலகத்தில் உள்ள ஆங்கில தட்டச்சு எந்திரங்களை அள்ளிச் செல்வேன்
அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை

"விளம்பரப் பலகை தமிழில் வைப்பது, மருத்துவச் சீட்டு தமிழில் எழுதுவது எல்லாம் தமிழ்த் துறையைச் சார்ந்தது அல்ல. இருப்பினும் பிற துறையைச் சார்ந்த அமைச்சர்களும் தமிழ்ப் பணிக்கு ஒத்துழைப்பு தருகிறார்கள். அனைத்து கட்சிகளும் ஆதரவு தருகின்றன.

எங்களுடைய தமிழ்ப் பணியைப் பின்பற்றி அடங்கிப் போகாவிடில், 7-வது வகுப்புவரை யார் வேண்டுமானலும் பள்ளிக்கூடம் நடத்தலாம் என்றிருக்கும் உத்தரவை ரத்து செய்துவிடுவோம். அப்படிச் செய்தால் ஒரே நாள் இரவில் பல பள்ளிகள் காணாமல் போய்விடும்.

எனக்குள்ள அதிகார எல்லைக்கு உட்பட்டு நான் தமிழ்ப்பணி செய்து வருகிறேன். நீங்களும் களத்தில் இறங்கி தமிழ்ப்பணி செய்ய முன்வரவேண்டும்.

ஏன் ஒரு கூட்டம் தெருவில் இறங்கித் தமிழில் விளம்பரப் பலகை வைக்க வற்புறுத்தக் கூடாது? ஏன் இன்னொரு கூட்டம் கோவில்களில் பிற மொழியில் அர்ச்சனை செய்வதைத் தடுத்து நிறுத்தக்கூடாது?

மிகவும் மேல் மட்டத்தில் உள்ள அதிகாரிகள் தான் தமிழ்ப்பணி முயற்சிக்கு எதிர்ப்பு தெரிவிக்கிறார்கள். கோவை மாவட்ட ஆட்சித் தலைவர் சி.பி.சிங், மருது பாண்டியர் போக்குவரத்துக் கழக அதிகாரி சாக்சேனா ஆகியோருக்கு இருக்கும் தமிழ்ப்பற்று கூடத் தலைமை செயலகத்தில் உள்ளவர்களிடம் இல்லை.

இனிமேலும் தலைமைச் செயலகத்தில் தமிழ் மொழியைப் பயன்படுத்தாவிட்டால், பத்திரிக்கையாளர்கள் முன்னிலையில் ஆங்கிலத் தட்டச்சுகளை அள்ளிக்கெண்டு போய்விடுவேன். அவர்களால் தமிழைப் பயன்படுத்த முடியும். ஆனால் அவர்களுக்கு இன்னமும் தெளிவு பிறக்கவில்லை. எனவே நீங்கள் என்ன செய்யவேண்டும் என்பதை முடிவு செய்யுங்கள். நாங்கள் செய்யவேண்டிய கடமைகளைச் செய்வோம்."

'மிகவும் மேல் மட்டத்தில் உள்ள அதிகாரிகள் தான் தமிழ்ப்பணி முயற்சிக்கு எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள்' என்றும்

'அவர்களால் தமிழைப் பயன்படுத்த முடியும்; ஆனால் அவர்களுக்கு இன்னும் தெளிவு பிறக்கவில்லை' என்றும் பேசியிருப்பதைப் பார்க்கவும். மேல்மட்ட அதிகாரிகளின் மெத்தனப் போக்கை இங்கும் மறவாமல் சுட்டிக் காட்டியிருக்கிறேன்.

8) அதே மாநாட்டில் பேசிய மருத்துவர் இராமதாசு (பா.ம.க. தலைவர்) கடுமையாகவே பேசியுள்ளார். (கதிரவன் 28.4.97)

தமிழை வளர்க்க மறுக்கும் அதிகாரிகளை நாடு கடத்த வேண்டும்
டாக்டர் ராமதாஸ் எச்சரிக்கை

"இங்கு தமிழை வளரவிடாமல் தடுப்பவர் தமிழின விரோதிகள்தான்.

இங்கு நிறைவேற்றப்பட்டுள்ள தீர்மானங்கள் அனைத்தையும் நிறைவேற்ற வேண்டியது அரசின் பொறுப்பாகும்.

அதைச் செய்யாத அலுவலர்களை நாடு கடத்த வேண்டியது எங்க பொறுப்பு. இந்த தீர்மானங்கள் நிறைவேற்ற அரசுக்கு எந்தவிதமான பணச் செலவும் ஏற்படப்போவதில்லை.

தமிழை வளர்ப்பதற்காக நீங்கள் செய்யும் செயல்களை எந்தக் கட்சி எதிர்க்க முடியும்? அப்படி எதிர்ப்பானேயானால் அவன் தமிழனுக்குப் பிறக்கவில்லை என்றுதான் அர்த்தம்.

தமிழில் இல்லாத விளம்பரப் பலகையை தார்பூசி அழிப்போம் என கூறினேன். அதற்கு கலைஞர் ஆளை அனுப்பவேண்டாம். ஆணை அனுப்புகிறேன் என்றார். உங்க ஆணைகளெல்லாம் எம்.ஜி.ஆர். காலத்தில் இருந்தே காகித அளவில்தான் உள்ளது."

இந்த அளவிற்கு வெளியிலிருந்தும் பலர் ஆதரவுக் குரல் கொடுக்கிறார்கள். எனவே, தமிழை ஆட்சிமொழியாக்குவதில் யாரும் தயக்கம் காட்ட முடியாது.

9) ஆங்கிலத்தில் குறிப்பு எழுதும் அதிகாரிகள் மீது நடவடிக்கை
அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை

(தினத் தந்தி 30.10.98) செய்தியைப் படியுங்கள்.

திண்டுக்கல் மாவட்ட தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் தமிழ் ஆட்சிமொழிக் கருத்தரங்கு திண்டுக்கல்லில் நடந்தது. தமிழ்க்குடிமகன் கருத்தரங்கில் கலந்து கொண்டு பேசினார். அப்போது அவர் கூறியதாவது:-

"நாட்டில் கல்வி வளர்ந்தால் தான் பண்பாடு வளரும். மேட்டுக்குடி மக்கள் போன்று இருக்க வேண்டும் என்ற போலித் தன்மையால் நாம் தமிழை வீழ்த்துகிறோம்.

நமது அடிப்படை மரபுகள் எழுதப்படாத சட்டங்கள் ஆகும். நமது மொழி, ஆட்சி மொழி என்ற உணர்வு வரவேண்டும். சட்டப் பாதுகாப்பு இருக்கும்போது பலர் தமிழில் எழுத ஏன் தயங்குகிறார்கள் என்பது புரியவில்லை.

அலுவலக நடைமுறைகளைத் தமிழில் எழுத வேண்டும் என்று அரசு அதிகாரிகளுக்கு உத்தரவிடப்பட்டு உள்ளது. அரசுத் துறைகளில் ஆங்கிலத்தில் குறிப்புகள் மற்றும் கடிதங்கள் எழுதும் அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கப்படும். ஆங்கிலத்தில் எழுதப்பட்ட கடிதங்களின் நகல்களை என்னிடம் கொடுத்தால், சம்பந்தப்பட்ட அரசு அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கத் தயங்கமாட்டேன்."

நடவடிக்கை எடுக்கப்படும் என்று வெறுமனே கூறவில்லை; எச்சரிக்கை செய்துள்ளேன். 'நடவடிக்கை எடுக்கத் தயங்கமாட்டேன்' என்றும் கூறியுள்ளேன். இவற்றை யெல்லாம் படிக்கும் அலுவலர்கள், படித்துவிட்டு எல்லா அதிகாரிகளிடமும் எடுத்துச் சொல்லத் தான் செய்வார்கள். 'அமைச்சர் எச்சரித்திருக்கிறார்; கவனித்தீர்களா!' என்பர்.

இந்நிலை ஓரளவாவது முன்னேற்றத்தைக் கொண்டு வந்திருக்கலாம் அல்லவா?

10) தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை தமிழுக்கு முக்கியத்துவம் தராத துறைகள் மீது நடவடிக்கை

(தினமலர் 8.6.99) நிகழ்ச்சியில் பேசப்பட்டவற்றைப் படியுங்கள்.

ஊட்டி தமிழக கருத்தரங்க கூடத்தில் தமிழ் வளர்ச்சித் துறையின் நீலகிரி மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கம் நேற்று நடந்தது,

கருத்தரங்கிற்குத் தலைமை தாங்கி அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசியதாவது:-

இந்த ஆண்டில் ஆட்சி மொழிக் கருத்தரங்கம் தமிழகத்தில் முதன்முறையாக உதகையில் உளள 'தமிழகத்தில்' துவங்குகிறது.

தமிழகத்தில் ரூ.4 ஆயிரத்து 446 கோடி கல்விக்காக ஒதுக்கி ரூ.9 கோடி மட்டும் தமிழ் மொழி வளர்ச்சிக்காக ஒதுக்கியதால் தான் தமிழும் 'கோடியில்' ஒதுக்கப்பட்டிருந்தது. தற்போது தமிழுக்கு முக்கியத்துவம் தந்து இதற்கென ஒரு துறையை அமைத்து தமிழ் வளர்ச்சியில் நமது அரசு முக்கியத்துவம் கொடுத்து வருகிறது.

தமிழ் ஆட்சிமொழி ஆக்கப்பட்டு 42 ஆண்டு காலத்தில் தமிழ் மொழி எதிர்பார்த்த வளர்ச்சி அடையவில்லை. ஏனெனில், தமிழ்மொழி ஆட்சிமொழியாக்கப்பட்டது என்ற ஆணை பிறப்பித்த போது அதை வெளியிட்டது ஆங்கிலத்தில் தான். அதுதான் முதல் தவறு.

தமிழ் மொழி பின்தங்கியதற்குக் காரணம் தமிழ் மக்கள் தான். சில இடங்களில் தமிழுக்குச் சிறப்பிடம் இருப்பினும் அதனை முன்னிருத்தாமல் நம்மை முன்னிருத்தி தமிழைப் பின்னுக்குத் தள்ள நினைக்கிறோம். ஏனெனில், தமிழில் பேசுவதே கேவலம் என்று நினைக்கும் ஒரு தேவையில்லாத தாழ்வு மனப்பான்மைதான்.

பல இடங்களில் தமிழ் மீது பற்றுள்ளவர்கள் நடத்தும் கடைக்கு போவதை நாம் கவுரவ குறைச்சலாக நினைக்கிறோம். உதாரணமாக 'தையலகம்' என எழுதிய கடைக்கு நாம் செல்வதில்லை. 'கோல்டன் டைலர்ஸ்' என எழுதியுள்ள கடைக்குத் தான் நாம் செல்வோம். காரணம் ஆங்கில தாக்கம் நம்மை சூழ்ந்துள்ளது.

பிற மொழிகளை நாம் அறிந்து கொள்வதில் தவறில்லை. குறிப்பாக தமிழகத்தை விட்டுப் பிற இடங்களுக்கு சென்றால் ஆங்கிலம் அவசியம் தான். அவற்றை நாம் கருவியாக பயன்படுத்தலாமே தவிர தமிழ் உணர்வு நம்மில் இருந்து மாறக்கூடாது. 'ஆங்கிலத்தை கண் கண்ணாடியாக பயன்படுத்தலாம். ஆனால் தமிழ் மொழி நம் கண்களாக இருக்கவேண்டும்.'

இன்று 'இன்டர்நெட்' என கூறப்படும் இணையத்தில் கூட தமிழ் புகுத்தப்பட்டுவிட்டது, பலர் நம் மாநிலத்தில் தமிழை முதல் மொழியாகக் கொண்டு ஐ.ஏ.எஸ். பட்டம் கூடப் பெற்றுள்ளனர்.

பாரீஸ், ஜெர்மன் உட்பட சில வெளிநாடுகளில் அவர்களின் தாய் மொழிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு, விளம்பரப் பலகைகள் போன்றவைகள் எல்லாம் ஆங்கிலத்தில் கூட எழுதப்படாமல் தாய் மொழியில்தான் எழுதப்பட்டுள்ளன. ஆனால், தமிழகத்தில் விளம்பர பலகையில் தமிழில் எழுதி மற்ற எந்த மொழியில் வேண்டுமானாலும் எழுதிக் கொள்ளலாம் என்ற சுதந்திரம் உள்ளது.

குறிப்பாக, தமிழகத்தில் உள்ள அலுவலகங்கள், விளம்பர பலகைகள், உள்ளாட்சித் துறை ஆகியவற்றில் தமிழுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படவேண்டும். தற்போது தலைமைச் செயலகத்தில் 31 துறைகளிலும் ஆய்வு செய்து அரசாணையை தமிழில் வெளியிடாத துறைகள் மீது நடவடிக்கை எடுக்கப்படும். தமிழை வளர்க்க வேண்டுமெனில் முதலில் தமிழக அரசு ஆணை கோப்புகள் பிற மொழிகளில் வெளியிடுவதை நிறுத்தவேண்டும்.

மற்ற மாநிலங்களுக்கும், தமிழ் தெரியாத அலுவலகங்களுக்கும் மட்டுமே பிற மொழிக் கோப்புகள் உருவாக்க வேண்டும்.

தமிழகத்தில் முக்கிய திட்டங்கள் எல்லாம் முதலில் நீலகிரி மாவட்டத்தில் தான் துவங்குகின்றன. மின் திட்டத்தை முழுமையாக்க முதலில் தேர்வு செய்யப்பட்ட இடம் நீலகிரிதான். அதே போல் போக்குவரத்துத் துறையை முழுமையாக அரசால் நிர்வகிக்க தேர்வு செய்யப்பட்டதும் இங்குதான். தற்போது தமிழ் வளர்ச்சித் துறையும் தமிழ் வளர்ச்சிக் கருத்தரங்கை இங்கு தொடங்கியுள்ளது நீலகிரி மக்களுக்கு பெருமை சேர்ப்பதாகும்.

ஊட்டி மரகதமுடி மகளிர் கல்லூரி பேராசிரியர் ஆத்மஜோதி பேசுகையில், பிற மொழிகளைக் கற்பது தவறில்லை. ஆனால், சொந்த மொழி மறந்து, வந்த மொழிக்கு முழுமையாக செல்வது தான் தவறு. நமது அரசும், பொதுமக்களும் முழுமையான ஒத்துழைப்புத் தந்தால்தான் தமிழ் மொழிக்கு முக்கியத்துவம் தந்து வளர்க்க முடியும் என்றார்.

இதில் பொதுமக்களின் தாழ்வு மனப்பான்மையும் சுட்டிக்காட்டப் பட்டுள்ளது. அதிகாரிகள் மீது - தமிழைக் கையாளாத துறைகள் மீதும் நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் பேசியுள்ளேன். உள்ளபடியே அந்த மாவட்ட ஆட்சியர் சிவசங்கரன் மிக்க ஆர்வமுடையவர். அரசு வாகனங்களில் எல்லாம் தமிழில் எழுதிச் சாதனை படைத்தவர். இப்படிப்பட்ட அதிகாரிகள் இருந்ததால்தான் துணிந்து சிலவற்றைச் செயற்படுத்த முடிகின்றது.

11) 'ஊதிய உயர்வில் காட்டும் ஆர்வம் தமிழ் ஆட்சிமொழி ஆணையில் இல்லையே'அரசு அலுவலர்கள் மீது தமிழ்க்குடிமகன் வருத்தம் (தினகரன் 27.9.98)

கரூர் மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கம் தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் கரூர் நாரதகான சபாவில் நடந்தது. அமைச்சர் தமிழ்க்குடிமகன் தலைமை தாங்கிப் பேசினார்.

அவர் பேசியதாவது :-

தொடர்புக்கு ஆங்கிலம் . . . .

ஆங்கிலேயர்கள் அவர்களுக்கு வசதியாக இந்தியா முழுவதும் ஆங்கிலத்தை ஆட்சி மொழியாக வைத்துக்கொண்டனர். சுதந்திரத்துக்குப் பிறகு மொழிவாரி மாநிலங்கள் பிரிக்கப்பட்டுள்ளன. இப்போது அந்தந்த மாநிலங்களில் அந்தந்த மொழிகளைக் கொண்டு ஆட்சி நடத்துவதுதான் சிறப்பாக இருக்கும். இருமொழிக் கொள்கை என்பதைச் சிலர் குழப்பிக் கொண்டிருக்கிறார்கள். அனைத்து நடவடிக்கைகளும் தமிழில்தான் அமைய வேண்டும். தொடர்பு கொள்வதற்கு மாத்திரம் ஆங்கிலத்தை பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

தமிழை தமிழர்களே கேலி

தமிழைத் தமிழர்களே கேலி செய்வது கொடுமையான ஒன்று. அறைகுறை அறிவை வைத்துக்கொண்டு தமிழைக் குறை கூறுபவர்களை அனுமதிக்கக் கூடாது. அப்படிப்பட்டவர்கள் அகற்றப்பட வேண்டியவர்கள்.

முதல்வர் உத்தரவு

அரசாணைகள் தமிழில் வரவில்லை என்று குறிப்பிட்டனர். தமிழக முதல்வர் அனைத்துத் துறையினருக்கும் அரசாணையை தமிழில்தான் வெளியிட வேண்டும் என்று உத்தரவிட்டுள்ளார். எனவே யாராவது தமிழில் அராசணை எழுதி வெளியிடாவிட்டால் எனக்குத் தகவல் கொடுங்கள்,

அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படும். அந்த ஆணையை அரசு ஊழியர்கள் சரியாகக் கடைப்பிடிக்காததனால்தான் இந்த நிலை. கடைப்பிடித்து இருந்தால் இந்த கடைநிலை வந்து இருக்காது.

ஆர்வம் காட்டவில்லை

ஊதியம் சம்பந்தமான அரசு ஆணையில் ஆர்வம் காட்டுகின்ற அளவுக்குத் தமிழ் ஆட்சிமொழி ஆணையில் அரசு அலுவலர்கள் ஆர்வம் காட்டுவது இல்லை. ஆட்டோ டிரைவருக்கு ஆங்கிலத்தில் சுற்றறிக்கை கொடுத்தால் என்ன புரியும்?

தமிழில் இன்னும் ஒரு லட்சம் கடைக்காரர்கள் பெயர்ப்பலகை எழுதாமல் உள்ளனர். அவர்களுக்கு தலா ரூ.500 அபராதம் விதிக்கப்படும். தமிழை நடைமுறைப்படுத்தாத அரசு அலுவலர்களுக்கு 4 வகை தண்டனை வழங்கப்படும்."

"எதற்கும் ஒரு வரம்பு உண்டு; இப்படியே நீண்ட நாட்களுக்குச் சொல்லி கொண்டிருக்கமாட்டோம்; வெறுமனே ஆணைபோட்டுக் கொண்டிருக்கமுடியாது."

இதைவிட வேறு என்ன சொல்லவேண்டும்? எவ்வளவோ சொல்லியாகிவிட்டது. இதில் என் 'வருத்தம்' புலப்படுத்தப்பட்டுள்ளது.

12) கடலூரில் நான் பேசிய செய்தியின் சாரத்தை தினமலர் (10.7.99) வெளியிட்டுள்ளது.

'தட்டு - குட்டு' தமிழ்க்குடிமகன் மிரட்டல்!

"தமிழ்மொழியைக் காக்க இனி நாங்கள் தட்டுவோம், குட்டுவோம்" என அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை செய்துள்ளார்.

"தமிழகத்தில் தமிழ்மொழி ஆட்சிமொழி, இதனை நடைமுறைப்படுத்திடத் தமிழ்க்குடிமகன் 'பகீரதபிரயத்தனம்' செய்கிறார். நடவடிக்கை எடுக்கிறார். என்று என் முயற்சிகளைப் புரிந்துகொண்டு 'தினமலர்' சரியாகவே எழுதியுள்ளது.

தமிழ்க்குடிமகன் ஆவேசமாகப் பேசினார்!

சரியான தமிழைப் பயன்படுத்தாவிடில் எந்த நேரத்திலும் 'தட்டு', 'குட்டு'கிடைக்கும் என அதிகாரிகள் வட்டாரத்தில் பேசுகின்றனர்." அரசு அலுவலர்களிடையே தமிழகம் முழுவதும் ஒரு வகையான கலகலப்பை உண்டாக்கினேன் என்பதையே இந்தச் செய்தி புலப்படுத்துகிறது.

13) மார்ச் மாதத்திற்குள் அனைத்து துறைகளிலும் தமிழில் இயங்காவிட்டால் கடும் நடவடிக்கை - அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேச்சு (மாலை மலர் 27.10.99)

தமிழ் வளர்ச்சித் துறை சார்பாக நெல்லை மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கம் பாளை சேவியர் கல்லூரியில் நடைபெற்றது.

தமிழக அறநிலையத்துறை மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசியதாவது :-

தமிழ்

எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்பதற்கேற்ப இந்த அரசு நடந்துகொண்டிருக்கிறது. தமிழில் எழுதவேண்டும் என்று ஆணை பிறப்பித்த பிறகும் நிறைய அதிகாரிகள் அவ்வாறு செய்வதில்லை. சொன்னதைச் செய்யத்தவறினால் நிச்சயம் தண்டனை உண்டு.

சென்னையில் உள்ள தலைமைச் செயலகமே முழுவதும் தமிழில் இயங்க ஆணையிடப் பட்டுள்ளது. கலைஞர் ஆட்சியில் தமிழ் ஆட்சி மொழியாக இருக்க உறுதியாக முயற்சி எடுக்கப்பட்டு செயல்படுத்தப்பட்டு விடும். அதற்காக இந்தத் துறை தனி முயற்சி எடுத்து வருகிறது.

சென்னையில் உள்ள தலைமைச் செயலகத்தில் இதுவரை ஆங்கிலத்தில்தான் கருத்து பரிமாற்றப்பட்டது. கலைஞர் ஆட்சியில்தான் அங்கு தமிழ் பயன்படுத்தப்பட்டுள்ளது. வரும் மார்ச் மாதத்திற்குள் அனைத்துத் துறைகளும் தமிழில் இயங்க வேண்டும். அப்படி இல்லையென்றால் கடும் நடவடிக்கை எடுக்கப்படும்'' என எச்சரிக்கை விடப்பட்டுள்ளது. இந்த அளவுக்கு எச்சரித்தபின்னும் விழிப்புணர்ச்சி வரவில்லை யென்றால். . . . ?

சம்பள உயர்வு உத்தரவில் காட்டும் அக்கறையை தமிழ் மொழி ஆட்சிச் சட்டத்தில் காட்டுவதில்லை - அமைச்சர் தமிழ்க்குடிமகன் வேதனை

(தினமலர், மதுரை, 28.10.99)

அரசு ஊழியர்களுக்குரிய சம்பள உயர்வு உத்தரவை அவசர அவசரமாகச் செயல்படுத்தும் அலுவலர்கள் தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை மட்டும் செயல்படுத்திட அக்கறை காட்டுவதில்லை என அமைச்சர் தமிழ்க்குடிமகன் கூறினார்.

விருதுநகர் மாவட்டத் தமிழ் வளர்ச்சித்துறை, விருதுநகர் வே.வ.வன்னியப்பெருமாள் பெண்கள் கல்லூரி சார்பில் தமிழ் வளர்ச்சித் திட்டக்கருத்தரங்கு விருதுநகரில் நடந்தது. கலெக்டர் கிருஷ்ணன் தலைமை வகித்தார். விருதுநகர் கல்லூரிச் செயலாளர் பி.ஏ.பி. ராஜமோகன் வரவேற்றார். கலெக்டர் கிருஷ்ணன் பேசுகையில், விருதுநகர் மாவட்டத்தில் நடக்கும் மக்கள் குறை தீர்க்கும் நாளன்று பெறப்படும் மனுக்களைப் பதிவு செய்து கொண்டு அவர்களுக்கு அளிக்கும் ரசீதுகள் ஆங்கிலத்தில் கொடுக்கப்பட்டது. அது புரியவில்லை என மக்கள் கூறியதால் இப்போது தமிழில் ரசீதுகள் வழங்கப்படுகிறது. அதுபோல மாவட்டத்திலுள்ள அரசு அலுவலகங்கள் முழுவதிலும் இருந்து வெளியிடப்படும் ஆணைகள் தமிழில் இருக்கப்

பெரும் முயற்சி எடுக்கப்பட்டு வருகிறது. தற்போது தேசிய அளவில் நடக்கும் தேர்வுகளில்கூடப் பலர் தமிழில் எழுதி தேர்ச்சி பெறுகின்றனர். எனவே தமிழ் படிப்பதால் வேலைவாய்ப்பு பாதிக்கப்படுமே என்ற அச்சம் தேவையில்லை என்றார்.

கருத்தரங்கை துவக்கி வைத்து தமிழ் ஆட்சி மொழி மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசியதாவது :-

நடைப்பிணம் : கடந்த 40 ஆண்டு காலமாக தமிழகத்தில் தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் இருந்தும் இன்று நடைப்பிணமாக உள்ளது. இச்சட்டத்திருத்தம் 1968-ல் சட்டசபையில் கொண்டு வரப்பட்ட போது தமிழ் மொழியை அனைத்து அரசுத்துறைகளிலும் 5 ஆண்டுகளுக்குள் செயல்படுத்த வேண்டும் என்று இருந்தது. இப்போது 1999 நடக்கிறது. இப்போதுதான் நூற்றுக்கு நூறு நிறைவேறும் என்ற நம்பிக்கை உள்ளது.

பலகணியும் பால்கனியும் : தமிழ் படிப்பதால் வேலை கிடைக்கவில்லை. வெளிநாடுகளுக்குப் போகமுடியாது என்ற நிலை உள்ளதாகக் கூறப்படுகிறது. ரஷ்யாவுக்குச் செல்பவர்கள் அங்கு 6 மாதம் ரஷ்ய மொழியைப் படிக்க வேண்டும் என்பது அந்த நாட்டின் கட்டுப்பாடு. பாரிசிலுள்ள கடைகளின் விளம்பரப் பலகைகளில் நூற்றில் இரண்டு பலகைகளில்தான் ஆங்கிலத்தில் எழுதியிருப்பார்கள். மற்ற பலகைகளில் பிரஞ்சு மொழியில் தான் எழுதியிருப்பார்கள். தெரு, வீதி, சாலை என நமக்குத் தெரிந்தாலும், நாம் ரோடு என்று தான் சொல்கிறோம். பிறமொழிகள் எனக் கூறப்படும் எல்லாமே இடுகுறிப் பெயர்கள்தான். ஜன்னல் என்ற சொல் போர்த்துக்கீசியச் சொல். பலகணியைத்தான் நாம் பால்கனி என்கிறோம்.

ஆங்கிலத்தை உலக மொழி என இங்கிலாந்து கூடக் கூறவில்லை. தமிழ் நாட்டுக்காரர்கள்தான் ஆங்கிலத்தை உலக மொழி என்கின்றனர். நகைக் கடை என்றாலே நமக்குத் தெரியும். ஆனால் ஜுவல்லர்ஸ் என எழுதுகின்றனர். தையலகம் என எழுதினால் கிழிந்த துணி தைக்கும் இடம் என நினைத்து விடுவார்களோ என நினைத்து டெய்லர்ஸ் என எழுதுகின்றனர்.

அக்கறையில்லை : அரசு அலுவலர்களுக்கும் ஊழியர்களுக்கும் சம்பள உயர்வு உத்தரவை அரசு பிறப்பித்ததுமே அரசு ஊழியர்கள் சென்னை வந்து அந்த உத்தரவைப் பெற்று உடனடியாக அலுவலர்களிடம் கொடுத்து அமல்படுத்தச் சொல்கின்றனர். ஆனால் தமிழில் கையெழுத்துப்போட வேண்டும் என 1978-ல் போட்ட ஆணையை அலுவலர்கள் இன்னும் பின்பற்ற வில்லை. ஊதிய உயர்வை அவசரம் அவசரமாகச் செயல்படுத்தும் அலுவலர்களுக்கு இந்த உத்தரவை செயல்படுத்திடும் அக்கறை இல்லை. இதைத்தடுக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

எத்தனையோ அரசு உத்தரவுகள் உள்ளன. இந்த உத்தரவுகள் பெரும்பாலானவைகளைக் காலி செய்தவர்கள் ஐ.ஏ.எஸ்., அலுவலர்கள்தான். அமைச்சர்கள் தமிழில் வரட்டும் என

நினைக்கின்றனர். ஆனால் ஐ.ஏ.எஸ்., அலுவலர்களோ ஆங்கிலத்தில் கொடுக்கின்றனர். இது கொடுமை. தமிழ் ஆட்சி மொழி ஆணையை ஆங்கிலத்தில் பிறப்பித்தால் எப்படித் தமிழ் வளரும். தலைமைச் செயலகத்திலிருந்து வரும் அரசு உத்தரவுகள் ஆங்கிலத்தில் வருகிறது. அதை முதலில் நிறுத்துங்கள் எனக் கூறுகின்றனர். இதெல்லாம் கவனிக்கப்படும்."

இதுதான் உண்மை; அரசு ஊழியர்கள் பெறும் சலுகைகள், வாழ்க்கை மேம்பாடு, பணப்பயன் எல்லாமே அரசு ஆணைகளின் மூலம்தான் உறுதி செய்யப்படுகின்றன. இது தொடர்பான அரசாணைகள் தலைமைச் செயலகத்திலிருந்து உரிய அலுவலகத்திற்கு அஞ்சலில் வந்து சேரும்வரை யாரும் காத்திருப்பதில்லை.

ஆனால் இந்த வேகமும், அக்கறையும் தமிழ் ஆட்சிமொழித் தொடர்பான அரசாணைகளைச் செயற்படுத்துவதில் இல்லையே! இதுதான் என் கேள்வி. இரண்டுமே அரசாணைதானே (G.O.) இந்த அரசாணைகளில் கூட ஏழை, பணக்காரன் வேறுபாடு உண்டா? வலுத்தவன்; இளைத்தவன் எனும் பாகுபாடு உண்டா?

## 14. தமிழில் எழுதாத அதிகாரிகள் மீது நடவடிக்கை அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை

அரசு ஊழியர்களுக்குரிய சம்பள உயர்வு உத்தரவை அவசர அவசரமாக செயல்படுத்தும் அலுவலர்கள் தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை மட்டும் செயல்படுத்திட அமைச்சர் தமிழ்க்குடிமகன் கூறினார்.

அதன்பின் என் பேச்சு :

தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் வேலூர் மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கு நேற்று (செவ்வாய்க்கிழமை) காலை மாவட்ட கலெக்டர் அலுவலகத்தில் உள்ள கூட்ட அரங்கில் நடந்தது. கருத்தரங்கிற்கு அமைச்சர் தமிழ்க்குடிமகன் தலைமை தாங்கினார். மாவட்ட கலெக்டர் டேவிதார் முன்னிலை வகித்தார்.

கருத்தரங்கில் தமிழக பொதுப்பணித்துறை அமைச்சர் துரைமுருகன் தொடங்கிவைத்துப் பேசியதாவது:-

### தூய தமிழில்

கல்லூரியில் படிக்கிற காலத்திலேயே தூய தமிழில் உரையாடுபவர் நமது அமைச்சர் தமிழ்க்குடிமகன். கல்லூரியில் பேராசிரியராக முதல்வராக இருந்த காலத்திலும் தூய தமிழ் மொழியை வளர்த்தார்.

சிங்கப்பூரில் வாழும் தமிழர்கள் கடைகளில் தூய தமிழ் பேசுகிறார்கள். கடைப்பெயர்களை தூய தமிழில் எழுதிவைத்துள்ளார்கள். ஏன்? பிரான்சு நாட்டில் பாரிஸ் நகரில்

வாழும் தமிழர்கள் கூடக் கடைகளில் தமிழிலேயே பேசுவதை நேரில் பார்த்தேன். மகிழ்ந்தேன். ஆனால் இங்கே தாய்த்தமிழ்நாட்டில் வாழும் நாம் ஆங்கிலத்தில் பேசுவதையே பெருமையாக உயர்வாக கருதுகிறோம். இந்த எண்ணம் மாற வேண்டும். தமிழ் உணர்வோடு வாழ வேண்டும். தமிழை வளர்க்க வேண்டும். அப்போதுதான் ஆட்சி மொழியாக சிறக்கும்.

- இவ்வாறு அவர் பேசினார். அமைச்சர் துரைமுருகன் 'தமிழ் உணர்வோடு வாழவேண்டும்' என்பதை அழுத்தம் திருத்தமாகச் சொல்லியிருக்கிறார்.

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசியதாவது:-

தமிழில் கடிதம்

அறிஞர் அண்ணாவின் இருமொழிக் கொள்கையைத் தான் நாம் இன்னமும் கடைப்பிடித்து வருகிறோம். தமிழ் ஆட்சி மொழியாகி 40 ஆண்டுகளாகி விட்டன. பொதுமக்களுக்கு பதில் அனைத்துமே தமிழில்தான் எழுத வேண்டும் என்று அரசு ஆணையிட்டு உள்ளது. ஆனால் அதிகாரிகள் முழுவீச்சில் செயல்படுத்துவது இல்லை.

உள்ளாட்சித் துறையில் ஒரு பிரிவில் சமீபத்தில் பொது மக்களுக்கு எழுதப்பட்ட 33 ஆயிரம் கடிதங்களில் 22 ஆயிரம் கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன. இது நியாயமா? அரசு ஆணையை மீறுவது குற்றம் ஆகாதா? இதன் மீது நடவடிக்கை எடுக்க முடியும்.

நடவடிக்கை

சம்பள உயர்வு தொடர்பாக எந்த ஆணை வந்தாலும் உடனே அமுல்படுத்துகிற அதிகாரி உயிரினும் மேலான தமிழை பயன்படுத்த ஆணை பிறப்பிக்கப்பட்டால், அதை அலட்சியப்படுத்துவதா? இந்த அளவு அலட்சியம் நீடித்தால் நடவடிக்கை எடுப்போம்."

எனவே, தக்க எடுத்துக்காட்டுகளை, இதுவரை வெளிப்படுத்தப்படாத உண்மைகளை எடுத்துச் சொல்லித்தான் எச்சரிக்கை விடவேண்டியுள்ளது.

15) மன்னிப்பு கேட்டால் விட்டு விடுவார்கள் என்ற மதமதப்பு : தமிழில் எழுதாத அதிகாரிக்கு இனிக் கடும் தண்டனை - அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை

(தினகரன் 28.10.99)

"அனைத்துத் துறைகளிலும் தமிழ் பின்பற்றப்படவேண்டும். தமிழைப் புறக்கணிக்கிற அதிகாரிகளுக்கு அரசு கடும் தண்டனை வழங்கும் என்று தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேசினார்."

இதில் விரிவாகவும் தெளிவாகவும் அரசு அலுவலர்கட்கு உண்மைகள் தெளிவாக்கப்பட்டுள்ளன. மாவட்ட ஆட்சித்தலைவரும் இதில் ஆர்வமுடையவர் என்பதால், பிற அலுவலர்களை அவரே கண்காணித்துக்கொள்வார் எனும் நம்பிக்கையும் உள்ளது.

16) தமிழ் ஆட்சிமொழி பற்றிய உத்தரவுகளைக் கடைப்பிடிக்காத அதிகாரிகள் மீது நடவடிக்கை - அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை

(தினத் தந்தி 28.10.99) விருதுநகரில் பேசிய பேச்சு இது :

"தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் 1956-ஆம் ஆண்டு கொண்டு வரப்பட்டது. அதற்கான ஒரு குழு அமைப்பது தொடர்பான உத்தரவு 1957-ஆம் ஆண்டு ஆங்கிலத்தில்தான் வெளியானது. 1978-ஆம் ஆண்டே, அரசு அதிகாரிகள் தமிழில்தான் கையெழுத்திட வேண்டும் என்று எம்.ஜி.ஆர். ஒரு உத்தரவை பிறப்பித்தார்.

22 ஆண்டுகளாகியும், அந்த உத்தரவை அதிகாரிகள் யாரும் கண்டுகொள்ளவில்லை.

கடும் நடவடிக்கை

அரசின் பிற உத்தரவுகளைப் போல், தமிழ் ஆட்சிமொழித் தொடர்பான உத்தரவுகளைக் கடைப்பிடிக்காத அதிகாரிகள் மீதும் பதவி நீக்கம் போன்ற கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

விருதுநகர் மாவட்ட நிர்வாகத்திலும் நூற்றுக்கு நூறு தமிழை ஆட்சிமொழியாக்க மாவட்ட ஆட்சியர் கிருஷ்ணன் நடவடிக்கை மேற்கொள்வார் என நம்புகிறேன்."

1978-இல் அரசு அலுவலர்கள் தமிழில் மட்டும் தான் (Only in Tamil) கையொப்பமிடவேண்டும். எனும் ஆணை பிறப்பித்தாகிவிட்டது. 24 ஆண்டுகளுக்குப் பின் இப்போது என்ன நிலை என்று பாருங்கள். அரசு அலுவலர்களில் சிலராவது இதனைக் கடைப்பிடிக்காமல் இருப்பதைக் கண்டுபிடித்து விடலாம்.

17) தினமலரில் (3.11.99) வந்தஒரு தலைப்புச் செய்தி.

தமிழனுக்கு சுரணை வரணும்!

மற்ற மொழியினருக்கு இருக்கிற சுரணை தமிழனுக்கு வரனும். இயல்பாகத் தமிழில் பேசுவது போய் 'அம்மா' என்கிற அழகான தமிழ்ச் சொல்லைப் பயன்படுத்தாமல் 'மம்மி' என்று சொன்னால்தான் மகிழ்ச்சி என்பவர்களை எப்படித் திருத்துவது? இது தனிமனிதனோட தவறு. பிற மாநிலத்திலிருந்து இங்கே வந்து பணியாற்றும் சில ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் தமிழ் ஆட்சிமொழியில் சிறப்பாகப் பணியாற்றுகிறார்கள்.

கோவை மாவட்டத்தில் சி.பி.சிங் என்கிற மாவட்ட ஆட்சித்தலைவர் அழகாகத் தமிழில் பேசுவார்; நம் தமிழ் நாட்டைச் சேர்ந்த ஐ.ஏ.எஸ்., அதிகாரிகள் ஆங்கிலத்தில்தான் பேசுவார்கள். இன்னும் ஒன்றரை ஆண்டுகளில் இது சரியாக வந்துவிடும். அரசாணையை மீற முடியாது. - அறநிலையத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன்.

தமிழனுக்குச் 'சொரணை' வரவேண்டும்; வந்து விட்டால் எல்லாம் சரியாகி விடும்.

## தமிழ் வளர்ச்சித் துறை ஆணைக்கேற்ப அரசு அலுவலர்கள் செயல்பட வேண்டும் - அமைச்சர் தமிழ்க்குடிமகன் பேச்சு

(முரசொலி 6.11.99)

தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் நாமக்கல் மாவட்ட ஆட்சிமொழிக் கருத்தரங்கம் நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை அரசினர் பெண்கள் கலைக் கல்லூரியில் உள்ள கலை அரங்கில் நடந்தது.

கருத்தரங்கிற்குத் தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகன் தலைமை தாங்கிப் பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது :-

தமிழ் ஆட்சிமொழியாக்கும் சட்டம் கடந்த 1956-ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்டது என்றாலும் சட்டம் நிறைவேற்றப்பட்டு 43 ஆண்டுகள் ஆகியும் இதுவரை எதிர்பார்த்த முன்னேற்றம் ஏற்டவில்லை.

துறை ஒதுக்கப்பட்டபின் கடந்த 31/2 ஆண்டுகளில் பெருமளவு முன்னேற்றம் ஏற்பட்டு உள்ளது. வானொலி, செய்தித்தாள், தொலைக்காட்சி, அரசு அலுவலகங்கள் போன்றவற்றில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டு உள்ளது என்றாலும் இன்னும் முழுமையான எதிர்பார்த்த வளர்ச்சியை அடைந்துவிடவில்லை.

### சட்டத்தின் மூலம் நடவடிக்கை

இங்கே அறிஞர் பெருமக்கள், உள்ளாட்சி அமைப்பில் பலர் பேசினார்கள். பல கருத்துகளைத் தெரிவித்தார்கள். அவர்களில் பலர் சட்டத்தின் மூலம் இதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்கிறார்கள்.

சிங்கப்பூரை எடுத்துக்கொண்டால் அங்கு முழுக்க முழுக்க சட்டத்தின் ஆட்சி நடக்கிறது. யாராக இருந்தாலும் மொழி, இனம் ஏதும் பாராது 100க்கு 100 சதவீதம் சட்டம் தண்டிக்கிறது.

தமிழ் நாட்டைத் தவிர்த்து உலகம் முழுவதும் உள்ள தமிழர்கள் ஏறத்தாழ 1 கோடி பேர், தமிழ்நாட்டில் மட்டும் 6 கோடி பேர். இதுதான் உண்மையான புள்ளிவிவரம். உள்நாட்டு தமிழர்களைவிட வெளிநாட்டு தமிழர்களுக்கு தமிழ்ப் பற்று, தமிழ் உணர்வு அதிகம் உண்டு.

தமிழ்நாட்டில் வணிகர்கள் கூட விளம்பரப் பலகையை தமிழில் வைப்பதை தாழ்வு மனப்பான்மையாகக் கருதுகிறார்கள். தமிழ் இனம் நினைத்தால் தமிழ் மொழியை வாழவைக்க முடியும்.

கல்லூரிகளில் ஆங்கில வழியில் படிக்கும் மாணவர்கள் தேர்வின் போது தமிழில் எழுதுகிறார்கள். வெளியேகேட்டால் ஆங்கில வழிபடிப்பதாகப் பெருமையாகச் சொல்கிறார்கள். இந்தப் போலி நாகரிகம் தேவையா?

ஆங்கிலம், இந்தி படித்தால் உடனே வேலைக்குச் சென்றுவிடலாம் என நினைக்கிறார்கள். உத்தர பிரதேசத்தில் 45 லட்சம் பேர் வேலைக்காகக் காத்திருக்கிறார்கள். பீகார் மாநிலத்தில் 38 லட்சம்பேர் காத்திருக்கிறார்கள். அவர்கள் எப்படித் தமிழ்நாட்டில் படித்தவருக்கு வேலை கொடுத்து விடுவார்கள்?

கருவூலச் சீட்டுகளில் சம்பளப் பட்டியலில் தமிழில் எழுதுங்கள். அதை ஏற்றுக் கொள்ளாவிடில் 16(ஆ) விதியின்படி சட்டப்படி அந்த அலுவலர் மீது நடவடிக்கை எடுக்க முடியும்.

தலைமைச் செயலகத்தில் தமிழ் ஆய்வு

42 ஆண்டுகளுக்குப் பின் அரசின் தலைமைச் செயலகத்தில் தமிழ் ஆய்வு நடத்தப்பட்டு உள்ளது. நிதித் துறையில் இருந்து முதன் முதலாக அரசாணை தமிழில் வந்துள்ளது. இது பெருமைப்படத்தக்கது.

இனிமேல் தமிழ் வளர்ச்சித் துறையின் அரசாணைகளை மதிக்காமல் அலுவலர்கள் மீறினால் அதற்குத் தண்டனை உண்டு. முதலில் கண்டனம் தெரிவிக்கப்படும். இதை உடனடியாகச் செயல்படுத்துவோம். 2 பேர் மீதாவது நடவடிக்கை எடுத்தால்தான் மற்றவர்களுக்கு அது பாடமாக அமையும்."

இதில் சில உண்மைகள் தெளிவாக்கப்பட்டுள்ளன. 'வசை' எனும் தண்டனைதான் முதலில் அரசு அலுவலர்களுக்கு வழங்கப்படும். இதுவே பலரை வாட்டி எடுத்துவிடும். இதையெல்லாம் அவர்கள் உணர்வார்கள் எனும் நம்பிக்கையில்தான் எச்சரிக்கை செய்யப்படுகிறது.

19) இன்னும் 3 மாத கெடு : தமிழில் அரசானை வெளியிடாத அதிகாரிகள் மீது நடவடிக்கை தமிழ்க்குடிமகன் அறிவிப்பு

(தினகரன் 26.11.99)

தமிழில் அரசாணை வெளியிடாத அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்று தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் அறிவித்தார்.

இது குறித்து அவர் கூறியதாவது :-

3 மாதம் கெடு

தலைமைச் செயலகத்தில் உள்ள எல்லாத் துறைகளிலும் அரசாணையைத் தமிழில் வெளியிட வேண்டும் என்கிற உத்தரவு இன்னும் 3 மாதத்தில் முழுமையாக செயல்படுத்தப்படும். இதை மீறுபவர்கள் மீது தகுந்த நடவடிக்கை எடுக்கப்படும்.

எல்லாத்துறை அமைச்சர்களுக்கும், செயலாளர்களுக்கும் நான் கடிதம் எழுதிஇருக்கிறேன். கோப்புகளில் அதிகாரிகள் தமிழில்தான் கையெழுத்திட வேண்டும். அமைச்சர்கள் ஏற்கெனவே தமிழில் கையெழுத்திட்டு வருகிறார்கள்.

கர்நாடகத்தில் கன்னட மொழியில் தொலைபேசிக் குறிப்பேடு வெளியிடப்பட்டு உள்ளது. அதுபோல தமிழ் நாட்டிலும் தமிழில் வெளியிட ஆவன செய்யப்படும்.

தமிழில் தீர்ப்பு

தற்போது கீழ் நீதிமன்றங்களில் தீர்ப்பு தமிழில் வெளிவருகிறது. உயர்நீதிமன்றத்திலும் தமிழில் தீர்ப்பு வெளியிட முயற்சிகள் மேற்கொள்ளப்படும்.

பிறமொழி ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் குறிப்பாக சி.பி.சிங், சாக்சேனா, சாரங்கி போன்றவர்கள் தமிழில் அராசணைகள் வெளியிடுவதில் மிகவும் ஆர்வமாக இருக்கின்றனர்.

மிகுந்த நம்பிக்கையோடு இந்த அறிக்கையைச் செய்திருக்கிறேன். 1962 இல் மதுரையில் தமிழில் தொலைபேசிக் குறிப்பேடு வெளியிடப்பட்டது என்பதையும் மறவாமல் குறிப்பிட வேண்டும். இந்த நூற்படிகள் என் கையில் இருந்தமையால் அந்த முயற்சியை மேற்கொண்டேன்.

20) அதிகாரிகளின் தமிழ் விரோதப் போக்கு : தூத்துக்குடியில் ஆர்ப்பாட்டத் திட்டம்

(தினமணி 30.11.99)

"தூத்துக்குடி மாவட்ட அதிகாரிகளின் தமிழ் விரோத போக்கைக் கண்டித்து, டிசம்பர் 13-ம் தேதி கறுப்புக்கொடி பேரணி, ஆர்ப்பாட்டம் நடத்த தமிழர் தேசீய இயக்கம் முடிவு செய்துள்ளது.

மாவட்ட ஆட்சியர் தலைமையில் போக்குவரத்துச் சீரமைப்பு, சாலைப் போக்குவரத்து குறித்த ஆலோசனைக் கூட்டம் அண்மையில் நடைபெற்றது.

கூட்டத்தில் மாவட்ட ஆட்சியர் தவிர, பிற அதிகாரிகள் அனைவரும் ஆங்கிலத்திலேயே பேசியுள்ளதாகச் செய்திகள் வெளியாகியுள்ளன. இது தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தை அவமதிப்பதாகும். இது குறித்து தமிழ்ச் சான்றோர் பேரவை சார்பில் தமிழக முதல்வரிடமும், தமிழ் ஆட்சி மொழித்துறை அமைச்சரிடமும் முறையீடு செய்யப்படும்.

மக்களின் வரிப் பணத்தில் ஊதியம் பெறும் இத்தகைய அதிகாரிகளின் தமிழ் விரோதப் போக்கைக் கண்டித்து, தூத்துக்குடியில் டிசம்பர் மாதம் 13-ஆம் தேதி கறுப்புக்கொடி பேரணி நடத்தப்படும். மாவட்ட ஆட்சியர் அலுவலகம் முன் ஆர்ப்பாட்டம் நடத்தப்படும்.

தமிழகத்தில் முதல் வகுப்பு முதல் ஐந்தாம் வகுப்பு வரை தமிழைப் பயிற்று மொழியாக அறிவித்து அரசாணை வெயிடப்பட்டுள்ளது. இதற்காக தமிழக முதல்வர் கருணாநிதியையும், தமிழ் ஆட்சி மொழி, பண்பாட்டுத் துறை அமைச்சர் மு. தமிழ்க்குடிமகனையும் தமிழர் தேசீய இயக்கம், தமிழ்ச் சான்றோர் பேரவை சார்பில் பாராட்டுகிறோம் எனத் தெரிவித்துள்ளனர்."

எங்கள் முயற்சிகள் பொதுமக்களாலும் ஆர்வமுள்ள தோழர்களாலும் எப்படி வரவேற்கப் படுகின்றன என்பதையும், எங்கள் முயற்சிகளை அதிகாரிகள் எப்படி முறியடிக்கிறார்கள் என்பதையும் பிறர்வாயிலாக நாம் அறிய முடிகின்றது.

கலந்துரையாடல் கூட்டங்களில்கூட அலுவலர்கள் தமிழில் பேசுவதில்லை என்பது எவ்வளவு வெட்கக்கேடு? நெஞ்சில் அச்சமிருந்தால் இவர்கள் இப்படிப் பேசுவார்களா? 'தமிழர் தேசிய இயக்கமும்' சரியான நேரத்தில் கண்டன ஆர்ப்பாட்டம் நடத்துவது பாராட்டுக்குரியது.

21) அவ்வளவு உத்தரவும் இனித் தமிழில் தான்! அரசு அதிகாரிகளுக்கு 6 மாத 'கெடு!' சட்டசபையில் தமிழ்க்குடிமகன் அதிரடி அறிவிப்பு

(தினமலர் 26.4.2000)

"இன்னும் ஆறு மாதங்களில் தமிழகத்தில் தமிழ்மொழி ஆட்சிமொழியாக ஆகிவிடும்," என்று சட்டசபையில் தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் நேற்றுக் கூறினார். இந்த ஆறு மாதத்துக்குள் உத்தரவுகள் அனைத்தையும் தமிழில் தயார்செய்ய ஏற்பாடுகள் செய்யவும் வற்புறுத்தி உள்ளார் அமைச்சர்.

சட்டசபையில் அறநிலையத்துறை மற்றும் தமிழ் வளர்ச்சித் துறை மானியக்கோரிக்கை மீதான விவாதங்களுக்குப் பதிலளித்து அமைச்சர் தமிழ்க்குடிமகன் கூறியதாவது:-

தமிழகத்தில் தமிழ் வளர்ச்சிக்கெனத் தனியாக அமைச்சர் பதவியை ஏற்படுத்திட முதல்வர் அக்கறை காட்டினார். இத்துறை ஏற்பட்டதற்குப் பின், தமிழை முழுமையாக ஆட்சிமொழியாக்க தீவிர நடவடிக்கைகள் எடுத்து வருகிறோம். தலைமைச் செயலகத்தில் இருந்து அரசு உத்தரவுகள் பிறப்பிக்கப்படுகின்றன. அதனால், இங்கே அனைத்துத் துறையிலும் அனைத்து உத்தரவுகளையும் தமிழில் பிறப்பிக்க நடவடிக்கைகள் எடுத்து வருகிறோம். அமைச்சர்களுக்கும், அதிகாரிகளுக்கும் அந்தந்தத் துறைகளில் தமிழ் மொழியிலேயே அனைத்துக் கோப்புகளும் இருக்க வேண்டும் என்று வலியுறுத்தி வருகிறோம். இன்னும் ஆறு மாதங்களில் அரசு உத்தரவுகள் அனைத்தும் தமிழ் மொழியில் பிறப்பிக்கப்படும் நிலை ஏற்படும். தேவைப்பட்ட சமயங்களில் மட்டும் ஆங்கிலத்தில் வரலாம். எனவே, விரைவில் தமிழகத்தில் நூற்றுக்கு நூறு சதவீதம் தமிழ் ஆட்சி மொழியாக்கப்பட்டு விடும்."

அமைச்சர் அறிவிப்பைத் தொடர்ந்து விரைவில் இதற்கான பணிகள் தொடங்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இன்னும் ஆறு மாதத்தில் எல்லா உத்தரவுகளும் தமிழில் வெளிவரும் என்று எதிர்பார்க்கலாம். இப்படித் தமிழில் வருமானால், அதனால், பலருக்கும் பலன் ஏற்படும் என்பதில் சந்தேகமில்லை.

இதில் 'தினமலர்'தன் கருத்தையும் சொல்லியிருப்பது கவனிக்கத் தகுந்தது. தமிழ் ஆட்சிமொழியாக வேண்டும் என்பதை ஏற்றுக்கொண்டு அந்த இதழ் எழுதுகிறது.

"விரைவில் இதற்கான பணி தொடங்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது." 'இன்னும் ஆறு மாதத்தில் எல்லா ஆணைகளும் தமிழில் வெளிவரும் என்று எதிர்பார்க்கலாம்' என்று இதழ் எழுதுகிறது. கடைசியாக இப்படி எழுதுகிறது.

"இப்படித் தமிழில் வருமானால் அதனால் பலருக்கும் பலன் ஏற்படும் என்பதில் சந்தேகம் இல்லை."

இதற்குமேல் தமிழ்க்குடிமகன் என்ன சொல்லமுடியும்!

22) அரசு அலுவலகங்களில் ஆங்கிலத்தில் குறிப்பு வந்தால் கடும் நடவடிக்கை அமைச்சர் தமிழ்க்குடிமகன் தகவல்

(தினகரன் 22.6.2000)

தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் ஆட்சி மொழிக் கருத்தரங்கு மதுரையில் நடந்தது. காமராசர் சாலையில் உள்ள தமிழ்நாடு தொழில் வர்த்தக சங்க கட்டிட பவளவிழா பேரவை அரங்கில் நடைபெற்ற இந்த கருத்தரங்குக்கு தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் இந்து அறநிலையத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் தலைமை வகித்தார். அவர் பேசியதாவது:-

தமிழ் மொழியை ஆட்சிமொழி ஆக்கும் முயற்சி பல ஆண்டுகளாக நடைபெற்று வந்துள்ளது. 7.10.1956-ம் ஆண்டில் குளித்தலையில் ஆட்சிமொழிக் கருத்தரங்கம் நடந்தது. இதில் பெரும்பங்கு வகித்தவர் கஜபதி நாயக்கர் ஆவார். அந்தக் கருத்தரங்கில் பேசிய கஜபதி நாயக்கர் தமிழை ஆட்சி மொழியாக்கச் சட்டம் கொண்டு வர வேண்டும் என்று முதல் குரல் கொடுத்தார்.

### தமிழ் ஆட்சிமொழி

1.11.56இல் தமிழ் மாநிலம் தனி மாநிலமாகியது. அப்போதைய முதல் அமைச்சர் காமராஜர் தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை கொண்டுவந்தார். இதன் பேரில் அன்றைய அமைச்சராக இருந்த சி. சுப்பிரமணியம் தமிழ் ஆட்சி மொழிச் சட்டத் தீர்மானத்தை சட்டசபையில் கொண்டு வந்து நிறைவேற்றினார்.

இதன் பிறகு 1968-ல் அறிஞர் அண்ணா இருமொழிக் கொள்கையை கொண்டு வந்து 5 ஆண்டுகளில் அனைத்துத் துறைகளிலும் தமிழை வளர்ப்போம் என்று சூளுரைத்தார்.

தூய தமிழில்

தற்போது அதனை நடைமுறைப்படுத்திட 96-ஆம் ஆண்டில் தமிழ் வளர்ச்சித் துறையை தனியாகப் பிரித்துத் தமிழக்குத் தொண்டாற்றி வருபவர் தமிழக முதல்வர் கலைஞர் ஆவார்.

தமிழ்நாட்டில் உள்ள தமிழர்களை விடச் சிங்கப்பூரில் உள்ள தமிழர்கள் தமிழ்ப்பற்று அதிகம் உள்ளவர்கள், நாம் சட்டம் இயற்றுவதற்கு 10 மாதங்களுக்கு முன்பே அவர்கள் ஆட்சி மொழிச் சட்டத்தை இயற்றினார்கள். அங்குள்ள கடைகளில் தூய தமிழில் பெயர்ப்பலகைகள் எழுதப்பட்டு உள்ளன.

ஆனால் இங்குள்ள வணிகர்கள் பெயர்ப் பலகைகளில் விருப்பம் இன்றி எழுதுகிறார்கள். பிற மாநிலங்களில் இருந்து தமிழ் நாட்டுக்கு பணியாற்ற வரும் இந்திய ஆட்சிப்பணியாளர்கள் தமிழ் வளர்ச்சிக்கு காட்டும் ஆர்வத்தைக் கூட தமிழ்நாட்டு இந்திய ஆட்சிப் பணியாளர்கள் காட்டுவது இல்லை.

தலைமைச் செயலகத்தில் தற்போது அனைத்துத் துறைகளிலும் தமிழ்மொழி வாயிலாக அலுவல்கள் நடைபெறுகிறது. எந்த அரசு துறையிலாவது ஆங்கிலத்தில் குறிப்பு வந்தால் அது குறித்து எங்களுக்குத் தகவல் தெரிவித்தால் நடவடிக்கை எடுப்போம். இந்தியாவில் கணினித் துறையில் ஆங்கிலத்துக்கு அடுத்ததாகத் தமிழ்மொழிதான் வளர்ச்சி அடைந்து உள்ளது. தமிழ் மொழியை எந்தக் காலத்திலும் யாராலும் நசுக்கிவிட முடியாது."

இவ்வாறு அவர் பேசினார்.

மதுரையில் நடைபெற்ற கருத்தரங்கில் விரிவாகப் பேசியுள்ளேன். அதுமட்டுமன்றி வணிகர் சங்கத் தலைவர் இரத்தினவேல் தமிழ்ச் சொற்கள் சிலவற்றைக் கிண்டல் செய்து பேசினார். அதற்கும் பதிலடி கொடுத்தேன்; கொஞ்சம் கடுமையாகவே கொடுத்தேன். "செருப்போடு நில்" என்று ஒரு கதை உண்டு. அதையும் இந்த நேரத்தில் நினைவூட்ட வேண்டியுள்ளது.

நாங்கள் ஆக்கிக்கொடுத்த நல்ல சொற்களை - எளிய சொற்களைக் கூடப் பயன்படுத்த முன் வாராத இவர்கள், மொழியாராய்ச்சியில் இறங்குவது எவ்வளவு தவறு என்பதைச் சுட்டிக்காட்ட வேண்டியதாயிற்று.

நாட்டில் எத்தனையோ நல்ல சொற்கள் நடைமுறையில் புழக்கத்தில் உள்ளன. "தெளிதமிழ்" இதழில் வந்த பெட்டிச் செய்தியைப் பாருங்கள். (16.11.97)

**பைந்தமிழ் பேசும் பாவை**

எங்கள் ஊர் அருகிலுள்ள புத்தன்தரவை எனும் சிற்றூருக்குச் சென்றிருந்தேன், நீர் வேட்கையால் குடிக்க ஏதேனும் கிடைக்குமா என அங்குள்ள சிறுகடை ஒன்றினில் வினவினேன்

'இரசனா' இருப்பதாக அங்கிருந்த நங்கையிடமிருந்து விடை வந்தது. கொடுக்கும் போது 'Straw வேண்டும்' என்றேன் உறிஞ்சி இல்லையே என அந்தப் பெண் கூறியதும் எனக்கேற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. உறிஞ்சி எனும் பொருத்தமான சொல்லைப் பயன்படுத்திவரும் அப்பாவைக்குத் தமிழகம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. - சா. என்றி தேவதாசன், இடையன்குடி.

ஒரு சிற்றூரில் இருக்கும் கல்வியறிவு குறைவான பெண்ணுக்குத் தெரியும் தமிழ்கூட, இந்த மெத்தப் படித்த மேதாவிகளிடம் இல்லை. படித்துவிட்டோம் எனும் ஆணவம்; அதுவும் ஆங்கிலம் படித்துவிட்டோம் எனும் திமிர் நிறைய இருக்கிறது. அரசு அலுவலர்கள் சிலரிடத்திலாவது இந்தக் குணம் இருக்கிறது என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள்

இப்போது சொல்கிறேன்.

நான் எழுதிய இந்த இயலில்தான் 'உயிர்நாடி'யே இருக்கிறது. 12 இலட்சம் அரசு ஊழியர்கள் மட்டும் கண்டிப்பாக இருந்தால் ஆறுமாதத்திற்குள் அனைத்தும் மாறிவிடும்.

இதை உணர்ந்து கோரிக்கை வைத்துப் பேசினேன்; அறிவுரை கூறினேன்; நடவடிக்கை எடுக்கப்படும் என எச்சரித்தேன்; தண்டனை உண்டு என்று தெளிவுபடுத்தினேன். சினம் கொப்பளிக்கப் பேசினேன்; அச்சுறுத்தினேன்; மிரட்டினேன். ஒருநாள் ஆட்சிமொழிக் கருத்தரங்கு ஒன்றில் பேசிவிட்டுச் சென்னை திரும்பினேன்; முதல்வர் வீட்டிலிருந்து தொலைபேசி; முதல்வர் இன்று தனி வானூர்தியில் சேலம் செல்வதாகவும் 9 மணிக்குக் கிளம்பி நானும் அவருடன் செல்லவேண்டும் என்றும் தெரிவிக்கப்பட்டது.

அதன்படி விரைந்து கிளம்பினேன்.

வானூர்தி பறக்கிறது. அதில் முதல்வர், ஆர்க்காடு வீராசாமி, துரைமுருகன், நான் மற்றும் வழக்கம் போல் வருபவர்கள்.

சற்றுத் தொலைவு சென்றதும் முதல்வர் அடுக்கி வைக்கப்பட்டிருந்த செய்தித்தாள்களை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு என்னிடம் கேட்டார்.

'என்னபுலவர்! அரசு அலுவலர்களை இவ்வளவு மிரட்டியிருக்கிறீர்கள்!'என்றார்.

முதல் நாள் நான் ஆட்சி மொழிக் கருத்தரங்கத்தில் பேசிய பேச்சு நான் சென்னை வருவதற்குள் அச்சாகி அனைத்து இதழ்களிலும் வந்துவிட்டது.

நான் இந்த இயலில் காட்டியபடி எச்சரிக்கை, நடவடிக்கை, தண்டனை, மிரட்டல் எனும் தலைப்புகளுடன் செய்தி வெளிவந்துவிட்டது. அதனால்தான் முதல்வர் இப்படிக்கேட்டார்.

நானும் விளக்கம் சொல்லிவிட்டுச் சொன்னேன். நான் எவ்வளவோ கடும் முயற்சியெடுத்தும், அரசாணைகளைச் சுட்டிக்காட்டியும், சில அரசு அலுவலர்கள் இன்னும் ஆங்கிலத்தை விட்டு மாறவேயில்லை. அப்படிப்பட்டவர்களை மிரட்டாமல் என்ன செய்வது? அவர்களை எப்படித் திருத்துவது? என்று கேட்டேன்.

முதல்வர் தெளிவாகச் சொன்னது இதுதான்:

'எல்லாம் காலப்போக்கில் சரியாகிவிடும்; ஆனால் அரசு ஊழியர்களை இப்படியெல்லாம் மிரட்டக் கூடாது; அவர்களில் பலர் வருத்தப்பட வேண்டிவரும்; அது நம் ஆட்சிக்கு நல்லதா?' என்று கேட்டார்.

அவருக்கு உள்ளூர அரசு ஊழியர்களை அரவணைத்தே கொண்டு செல்ல வேண்டும் எனும் எண்ணம் இருந்தது. எனக்குள்ளே சில நேரமாவது 'அரவு' போல் பட மெடுத்துக் காட்ட வேண்டும் என்று தோன்றியது.

'எல்லாம் காலப்போக்கில் சரியாகிவிடும்' என்றார் அவர். ஆனால் சரியாகி விட்டதா?

அரசு அலுவலர்களிடையே ஓரளவிற்காவது மாற்றம் உள்ளதா? அல்லது பழையபடி வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிவிட்டதா!

ஆர்வமுள்ள தமிழன்பர்களின் தொடர் நடவடிக்கைக்காக இதனை முன்வைக்கிறேன்.

---

## தமிழ்க்குடிமகன் நடத்திய பறம்புக்குடி மாநாடு
### பாவாணர் பா(ரா)ட்டு

உலகத் தமிழ்க் கழகக்கிளை உற்ற பல மாவட்டங்கள்
முலமுலெனக் கிளைகள்மொய்த்த முதன்மையது முகவையாகும்
பலகிளையும் பாங்காமேனும் படைப்புமுறைத் தலைமை சொல்லின்
தலைவன் தமிழ்க்குடிமகனே தங்கியதாம் பறம்புக்குடி.

கழகமுத லாட்டைச்சீர்நாள் காணரிய வள்ளுவர்தம்
பொழுதுகழிந் தீராயிரம் புகலுமிந்த ஆண்டயர்வும்
பழகுபரி மேலழகர் பளகறுக்கும் உரைவிழாவும்
விழுமியவாய் நடக்குமாற்றால் விஞ்சியதாம் பறம்புக்குடி.

(தி.பி.2000 - 1969 திசம்பர்)

## இயல் - முப்பத்து நான்கு

# ஊரைத் திருத்தும்முன் உன்னைத் திருத்து

1. மக்கள் செங்கோல் (1.3.96) இதழில் உள்ள செய்தி. தலைநகர்த் தமிழ்ச் சங்கம் 12.12.88 இல் தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை நிறைவேற்றக்கோரி சென்னையில் கா. அப்பாத்துரையார் தலைமையில் பட்டினிப் போராட்டம் நடத்தியது. எதிர்பாராத வகையில் நானும் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினேன். 17.5.93 இல் தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை நிறைவேற்றக் கோரி கி.ஆ.பெ.வி. தலைமையில் கோட்டை முன் மறியல் நடைபெற்றது.

1.1.95 இல் பெருஞ்சித்திரனார் தலைமையில் உலகத் தமிழ் மாநாட்டுக்கு முன் உண்ணா நோன்பு - சிறை பிடிப்பு - சிறையில் இருந்தவர்களைத் திருச்சி சென்று நான் சந்தித்துப் பேசி வந்தேன்.

இவ்வளவு போராட்டங்கள் நடத்திய தலைநகர்த் தமிழ்ச் சங்கம் இப்படி எழுதுகிறது.

"தமிழக ஆட்சியாளர்கள் எத்தனை ஆண்டுகள் காலம் கடத்தினாலும் எத்தனை கபட நாடகங்களை அரங்கேற்றினாலும் தமிழ் ஆட்சிமொழி ஆவதை அவர்களால் தடுத்திட முடியாது" என்கிறது இதழ்.

இப்போது தமிழ் ஆட்சி மொழியாகி விட்டதா? தமிழக அரசே தனி அமைச்சர் தலைமையில் இதனைச் செயற்படுத்திட எடுத்திட்ட முயற்சிகளை அனைவரும் அறிவர். இப்போதாவது, இந்த இதழ் தன் தெளிவான நிலையைப் புலப்படுத்த வேண்டும்.

அதே இதழில் சாலை இளந்திரையன் எழுதுகிறார்.

"மொழிவாரி மாநிலம் பிரிக்கப்பட்டபோது அயல் மாநிலங்களைச் சேர்ந்த பெரிய அதிகாரிகளை இங்கேயே பதவிகளில் நீடிக்க விட்டார்கள். இதுவே தமிழ் ஆட்சிமொழியாவதற்குப் பெரிய தடைச் சுவராக எழுந்துவிட்டது" என்கிறார். என் முன் கட்டுரையைப் படித்தவர்கள் தெளிவாகக் கூறுங்கள். அயன் மொழிக்காரர்களால்தான் தமிழ் ஆட்சிமொழித்திட்டம் முழுமையடையவில்லையா! அல்லது தமிழைத் தாய்மொழியாகக் கொண்டு தமிழகத்திலேயே பிறந்து வளர்ந்த தமிழ் அதிகாரிகளால் தமிழ் ஆட்சிமொழியாவதில் பின்னடைவு உள்ளதா? ஓர் அலுவலகத்தில் 125 பேர் பணியாற்றுகின்றனர். இவர்களில் 25 பேர் தமிழில் ஒப்பமிடுகின்றனர். 100பேர் ஆங்கிலத்தில் ஒப்பமிடுகின்றனர். (1978 அரசாணையை மீறி) இந்த நூறு பேரில் 30 பேர் கூடப் பிற மொழியாளர்கள் இருக்கமாட்டார்கள். எஞ்சிய 70 தமிழ் அதிகாரிகள் ஏன் ஆங்கிலத்தில் போடுகிறார்கள்? யாராவது ஆராய்ந்து கருத்துச்

சொல்லவேண்டும். சூன் 96 இல் வெளி வந்த 'வெல்லும் தூய தமிழ்' இதழில் க. தமிழமல்லன் எழுதுகிறார்.

"அழிவுகள் தீரும்! அறிகுறியாகவே

இழிவைத் துடைக்கும் ஈடிலா அமைச்சராய்த்

தமிழ்க்குடிமகனார் தமிழ்அமைச் சானார்

தமிழ்க்குடி மகனால் தமிழ்நலம் பெறுமே!"

இவரது நம்பிக்கை நிறைவேறியதா?

"தமிழ்க்குடிமகன் அறிவிப்பு! தமிழுக்கு வெற்றி"

இனி, தலைமைச் செயலகத்திலும் தமிழ் ஆய்வுப் பணிகள் நடைபெறும்.

தமிழில் பெயர் வைக்க உதவியாக 500 ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் வெளியிடப்படும்.

தொடர்வண்டிகளில் எக்சுபிரசு ரெயில் 'விரைவு வண்டி' என எழுதி வைக்குமாறு கேட்டுக் கொள்ளப்பெறும்.

வண்டிகளின் பதிவு எண்களைத் தமிழாக்குவது பற்றிச் சிந்திப்போம்.'

என்று 16.5.96 இல் தினகரனில் வெளிவந்த செய்தியை இவர் மேற்கோள் காட்டுகிறார்.

எனக்குத் தெரிந்து நிறைவேறியவை பல. நிறைவேறாதவையும் உள.

3. தமிழகத் தமிழாசிரியர் கழகம் 'நமது தமிழாசிரியர்'எனும் இதழில் பின்வரும் செய்திகளை வெளியிட்டுள்ளது.

மாண்புமிகு தமிழக முதல்வர் கலைஞர் அவர்கள் அளித்துள்ள 1997-98 ஆம் ஆண்டிற்கான நிதிநிலை அறிக்கை தமிழ் நெஞ்சங்களில் தேன் போல் பாய்ச்சும், நல்ல அறிவிப்புகளைத் தமிழகத் தமிழாசிரியர் கழகம் பாராட்டி, வரவேற்று நன்றி கூறுகிறது.

மகிழத் தக்க அறிவிப்புகள்

1. கடந்த பல ஆண்டுகளாகத் தமிழாசிரியர் கழகமும், தமிழ்ச் சான்றோர்களும் வேண்டுகோளாக விடுத்த கோரிக்கைகளுக்கேற்ப, தமிழகத்தில் இனியாரும் தமிழ் படிக்காமல் பட்டம் பெற முடியாத வகையில் 5 ஆம் வகுப்பு வரை முதல் மொழியாகத் தமிழ் கற்க வேண்டும் என்று வரலாற்றுச் சிறப்பு மிக்க முடிவினைத் தமிழாசிரியர் கழகம் வரவேற்றுப் பாராட்டுகிறது.

2. சேலத்தில், பகுத்தறிவுப் பகலவன் வெண்தாடி வேந்தன் தந்தைபெரியார் பெயரில் புதிய பல்கலைக் கழகம் ஏற்படுத்தப்படும் என்ற முடிவினைத் தமிழாசிரியர் கழகம் போற்றி வரவேற்கிறது.

3. தனித் தமிழ் இயக்கம் கண்ட மறைமலையடிகளாரின் நூல்களை அரசுடைமை ஆக்கியதோடு, அவர்தம் குடும்பத்திற்குப் பாதுகாப்பு நிதியாக உருபா இருபது இலட்சம் அளிக்கப்படும் என்ற அறிவிப்பை நன்றியுடன் வரவேற்கிறது.

4. தமிழ் மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் துணை புரியும் அகரமுதலி நூல் வெளியிடப்படும் என்ற முடிவினை வரவேற்கிறது.

5. பழந்தமிழ் இசைக்கலைகள் மறைந்து போகாமல் காக்கும் வகையில் இசைப்பயிற்சிப் பள்ளிகள் துவக்கும் முடிவினையும், ஆலயங்களில் திருக்குறள், திருவாசகம், தேவாரம், திருப்பாவை, திருவெம்பாவை, நாலடியார் நூல்களின் பாடல்களை இசையுடன் ஓதிட வழிவகை செய்த முடிவினையும் பாராட்டி வரவேற்கிறது.

இவை அனைத்துமே செயற்படுத்தப்பட்டன என்பதை அனைவரும் அறிவீர்கள். எனவே, தமிழாசிரியர்கள் மனம் மகிழ எந்தன் பணிகள் அமைந்துள்ளன என்று நம்பிக்கையோடு கூறலாம்.

4. 'துக்ளக்' இதழில் ஒரு கேலிப்படம்

"பொறியியல் மற்றும் தொழிற் கல்விப் பாடங்களைத் தமிழில் கற்றுக் கொடுக்க தமிழக அரசு நடவடிக்கை எடுக்கிறதாகப் பேப்பர்லே படிச்சேன். அதே மாதிரி, இங்கிலீஷைக் கூட தமிழிலேதான் எழுதிப் படிக்கணும்னு சட்டம் கொண்டு வந்தா தமிழ் சீக்கிரம் வளரும்னு நினைக்கிறேன். நீங்க என்ன நினைக்கிறீங்க?"

பொறியியல் பாடங்களைத் தமிழில் படித்தால் ஏதோ பாவம் என்பது போலவும் தொழிற்கல்வியைத் தமிழில் படித்தால் தமிழ்மக்களுக்குச் செய்யும் பெரிய இரண்டகம் போலவும் 'துக்ளக்' கிண்டல் செய்து எழுதுகிறது.

இது எவ்வளவு பெரிய முட்டாள்தனம் என்பதை அனைவரும் அறிவர். சீனாவிலும், சப்பானிலும், செருமனியிலும், பிரான்சிலும் அவரவர் மொழியில் தான் பொறியியல், மருத்துவம் ஆகியவை கற்பிக்கப்படுகின்றன. சோவுக்குத் தெரியாததா? நல்ல வேளையாக, 'துக்ளக்'ஆசிரியர் 'சோவோ'தன் சறுக்கலை உணர்ந்து 'நான் அவசரப்பட்டு விட்டேன்' என்று எழுதித் தெளிவு படுத்திவிட்டார்.

இந்தப் போக்கினை வரவேற்கலாம். ஒரு திறனாய்வு தவறு என்று தெரிந்ததும் திருத்திக் கொள்வது பாராட்டுக்குரிய சிறந்த குணம் என்று நானும் கூறித்தான் தீர வேண்டும்.

5. தமிழ் வாணன் தன் பெயருக்கேற்ற முறையில் எளியமுறையில் தமிழ் உரைநடையை எழுதி நாட்டு மக்களிடம் நன்கு அறிமுகமானவர். அதிலும் அவர் படைத்த 'சங்கர்லால்' தமிழ்வாணனைப் போலவே பெயர் பெற்ற கதை மாந்தர்.

ஆனால் தற்போது 'கல்கண்டு' இதழை நடத்தும் 'லேனா' தமிழ்வாணன் தந்தை வழியில் நடைபோடுகிறாரா?

14.12.2000 கல்கண்டு இதழில் உள்ள தலைப்புகளைப் பாருங்கள்.

நெட் பிட்ஸ், ஜூனியர் பதில்கள், நோ (பட்டுக் கோட்டை பிரபாகர் கதைத் தலைப்பு) இன்று முதல் சக்சஸ் (லேனா தமிழ்வாணன் கட்டுரை), அம்மா சொன்ன அட்வைஸ் (அம்மா சொன்ன அறிவுரை என்று எழுதியிருந்தால் யாரும் கல்கண்டு இதழைத் தூக்கி வீசிவிட்டுப் போயிருக்கமாட்டார்கள்) ஹெல்த்,

இவர்களைப் போன்றவர்கள் - தமிழ்ப் பின்னணியுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் - எந்த அளவுக்குத் தமிழுக்கு வளம் சேர்க்கிறார்கள் என்று பார்க்க வேண்டும்.

6. அனுப்பன் குளம் ஊராட்சி உறுப்பினர் மிகுந்த அக்கறையெடுத்து எனக்கொரு மடல் எழுதியுள்ளார். அதனை அப்படியே தருகிறேன்.

D. ஜவஹர்
அனுப்பன் குளம் ஊராட்சி உறுப்பினர்
பேராபட்டி, அனுப்பன் குளம் (Po)
சிவகாசி - 626 189
சிவகாசி வட்டார தமிழ் மாநில காங்கிரஸ் செயற்குழு உறுப்பினர்
அனுப்பன்குளம் ஊராட்சி தமிழ் மாநில காங்கிரஸ், தலைவர்

நான் கடந்த 20.1.97 அன்று காமராஜர் மாவட்ட ஆட்சி தலைவருக்கு, ஏழை விதவை ஒருவருக்கு பேராபட்டி தேசிய குழந்தை தொழிலாளர் சிறப்பு பள்ளியில் ஆயா வேலையளிக்குமாறு வேண்டி சிபாரிசு மனு செய்தேன். கடந்த 15.2.97 அன்று மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் இருந்து எனக்கு ஒரு கடிதம் வந்திருப்பதாகவும், வந்து பெற்றுக் கொள்ளுமாறும், சிவகாசி சட்டமன்ற உறுப்பினர் அவர்கள் அலுவலகத்தில் இருந்து எனக்கு தகவல் வந்தது. குறிப்பிட்ட கடிதத்தின் மேல் உறையின் நகலையும் கடிதத்தின் நகலையும் இத்துடன் இணைத்துள்ளேன்.

அக்கடிதத்தில் முகவரியில் எனது பெயரே குறிப்பிடப்படவில்லை. முகவரிக்கு முக்கியமான ஊரும் எழுதப்படவில்லை. அனுப்பன்குளம் ஊராட்சி உறுப்பினர் என்பதற்கு அப்பன் ஊராட்சி உறுப்பினர் என்று எழுதப்பட்டுள்ளது. எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற தமிழக அரசின் கொள்கை முழக்கத்திற்கிணங்க எனது கடிதத்தாள் தமிழில் அச்சிட்டுள்ளேன். அதில் எனது

பெயரும் முகவரியும் மிகமிக தெளிவாக அச்சாகியுள்ளது. ஒரு மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் இருந்து வரும் கடித முகவரியில் உள்ள தமிழ் இவ்வளவு தவறுதலாக இருக்கும் பட்சத்தில் நாம் எப்போது எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற இலக்கை அடைவோம் என்று அச்சமாக உள்ளது. நல்ல வேளையாக அந்த கடிதம் சட்டமன்ற உறுப்பினர் அவர்கள் அலுவலகம் வசம் கிடைத்ததால் எனக்கு கிடைத்தது.




விருதுநகர் திட்ட இயக்குநர் அலுவலகத்தில் பணியாற்றுகிறவர் எவ்வளவு பொறுப்பற்ற முறையில் முகவரி எழுதியுள்ளார் என்பதைக் காணலாம். இவர்கள் எல்லாம் அரசு ஊழியரான பின் கடனுக்கு வேலை பார்க்கிறார்கள் என்றுதானே பொருள்! இந்த முகவரி செய்திபோய்ச் சேருவதற்கான முழுமுகவரியே இல்லை. ஓர் ஏழை உழவன் ஏதேனும் தேவை கருதி இப்படி அரை குறையாக விண்ணப்பத்தை அளித்திருந்தால் இந்தஅலுவலர் அவரைக் கடித்துக் குதறியிருக்க மாட்டாரா!

இவரைத் தண்டிக்கச் சொல்லித்தான் ஊராட்சி உறுப்பினர் எழுதுகிறார். அவரது உணர்ச்சியைப் பாராட்டுகிறேன். எல்லாக் கட்சிகளிலிருந்தும் இவரைப் போன்ற உணர்வாளர்கள் திரள வேண்டும் என்பதுதான் என் அவா.

"நாம் எப்போதும் எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற இலக்கை அடையலாம் என்று அச்சமாக உள்ளது" என்கிறார்.

எனக்கிருக்கும் வருத்தமெல்லாம் இவரும் தன் மடற்கட்டில் இரண்டொரு திருத்தங்களைச் செய்ய வேண்டும் என்பதுதான்.

D. ஜவஹர் என்பதில் அப்பா பெயரை முன்னெழுத்தாக (Initial)க் கொண்டிருக்கும் இவர் 'D' என்பதைக் கைவிட்டு, தமிழிலேயே போட்டு விடலாமே!

அடுத்து 'Post' என்பதைத் 'தபால்'என்று எழுதிய நிலைமாறி இன்று 'அஞ்சல்' எனும் சொல் புழக்கத்துக்கு வந்துவிட்டது. எங்குபார்த்தாலும் 'அஞ்சலகம்'எனும் சொல்லைக் காணலாம். அனுப்பன்குளம் அஞ்சல் என்றே போடலாமே! எதற்காக 'Po'.

பிறர் தவறு கண்டு கொதித்தெழும் தோழர், பிறர் நம்மைப் பார்த்துக் குறை கூறாத அளவுக்கு நம்மை முதலில் செம்மை செய்து கொள்ளவேண்டும்.

D. ஜவஹர்

அனுப்பன் குளம் ஊராட்சி உறுப்பினர்

பேராபட்டி
அனுப்பன்குளம் (Po)
சிவகாசி - 626 189

சிவகாசி வட்டார தமிழ் மாநில காங்கிரஸ்
செயற்குழு உறுப்பினர்

அனுப்பன்குளம் ஊராட்சி
தமிழ் மாநில காங்கிரஸ்

7. ஓர் இதழில் வெளிவந்த செய்தி - முதலில் அதைப் படியுங்கள்.

தமிழ் ஆர்வமா?

"பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரியில் தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் திருநெல்வேலி மாவட்ட ஆட்சி மொழிக் கருத்தரங்கு அண்மையில் நடைபெற்றது.

தமிழ் ஆட்சி மொழி மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் தலைமை தாங்கினார். கூட்டம் நடைபெற்ற அரங்கு நிரம்பி வழிந்தது.

தமிழ் மீது தணியாத ஆர்வம் கொண்டு இத்தனைபேரும் வந்துவிட்டனரோ எனப் பலருக்கும் ஆச்சரியம். விசாரித்ததில் நெல்லை மாவட்ட ஆட்சியர் அலுவலக ஊழியர்கள்தான் அரங்கில் நிரம்பியிருந்தனர் எனத் தெரிந்தது."

"கூட்டம் நடைபெற்ற அரங்கு நிரம்பி வழிந்தது," எனவே நல்ல கூட்டம் வந்திருந்தது என்பதில் மகிழ்ச்சி. மேலும் பேசியவர்கள் அப்போதுதான் ஊக்கத்தோடு பேச முடியும் என்பது உண்மை.

'விசாரித்ததில் நெல்லை . . . . .எனத் தெரிந்தது'

இந்த இதழ் செய்தியைத் திறனாய்வுக் கண்ணோட்டத்தில் எழுதும்போது ஓர் உண்மையை முற்றிலும் மறந்துவிட்டது. ஒவ்வொரு மாவட்டத்திலும் நடைபெறும் ஆட்சிமொழிக்

கருத்தரங்குகளும் முதல் கட்டமாக அந்த மாவட்ட அலுவலர்கட்காகத்தான் நடத்தப்படுகிறது. அரசாணைகளை அறிந்தவர்கள் அவர்கள், அறிந்து கொண்டு முதற்கட்டமாகச் செயற்படுத்த வேண்டியதும் அவர்களே!

தமிழில் ஒப்பமிடுதல், தமிழில் வரைவுகள் எழுதுதல், பிறர்க்கு எழுதும் மடல்களைத் தமிழிலேயே எழுதுதல், தமிழ்த் தட்டச்சுப் பொறியைப் பயன்படுத்துதல் போன்றவற்றில் கடந்த நாற்பதாண்டுகளில் உள்ள தொய்வு நிலையைப் புரிந்து கொண்டு செம்மையாகச் செயற்படுத்த வேண்டிய அரசு அலுவலர்கட்குத்தான் இவைபற்றிய முழு விவரங்கள் தெரிவிக்கப்படவேண்டும்.

இந்த ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் பொதுமக்களுக்காகவோ, தமிழ்ப் புலமை மிக்கவர்களுக்காகவோ நடத்தப்படவில்லை. அவர்களும் வரலாம்; மகிழலாம். ஆனால் அரங்கத்தில் இருக்க வேண்டியவர்கள் அலுவலக ஊழியர்கள்தாம்.

வரவேண்டியவர்கள் தமிழ் ஆர்வத்தோடு வாராதது போலவும், அரசு அலுவலர்களை வலுக்கட்டாயப்படுத்தி, குண்டுக்கட்டாகத் தூக்கிக் கொண்டு வந்து போட்டு அரங்கத்தை நாங்கள் நிரப்பிவிட்டது போலவும் வாய் பிளக்கிறது இந்த இதழ்.

திறனாய்வு செய்யும்போது, உண்மைகளையும் புரிந்துகொண்டு எழுதவேண்டியது கடமையல்லவா?

8. 1.8.99 ஆம் நாளிட்ட "முகம்" இதழில் ஓர் ஆசிரியவுரை; படியுங்கள்.

"தமிழா உன்னை ஆளுகிறவர்கள் யார்?

டாக்டர் கலைஞரும், 25 அமைச்சர்களும் என்றுதானே நினைக்கிறாய்! அட, அப்பாவிப் பயலே!

பிற மாநிலங்களைச் சேர்ந்த 125 அய்.ஏ.எஸ். அதிகாரிகளும், பிற மாநிலங்களைச் சேர்ந்த 71 அய்.பி.எஸ். பிற மாநிலங்களைச் சேர்ந்த எட்டு உயர்நீதிமன்ற நீதிபதிகளும்தான் உன்னை ஆள்கிறார்கள் என்பதை நீ எப்போது உணரப்போகிறாய் தமிழா!

இத்துணை பிற மொழியாளர்களைத் தோளில் சுமந்து கொண்டுள்ள நீ, 'எங்கும் தமிழ், எதிலும் தமிழ்' என்று கூக்குரல் இடுகிறாயே, முடியுமா உன்னால்? மேற்படியாளர்கள் தமிழைக் கொண்டு வரவிடுவார்களா? உன்னை" என்று எழுதியது அந்த இதழ்.

இதை நானே அனுபவத்தில் பார்க்கிறேன். இன்று தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் 43 ஆண்டுகளாக நிறைவேறாமல் தவிக்கிறது என்றால் அதற்கு மேற்கண்ட இ.ஆ.ப., இ.கா.ப., அலுவலர்கள் முதற்காரணமாய் அமைகிறார்கள். ஆனால், அதற்காகத் தமிழர்களாக இருக்கும் நமது இ.ஆ.ப., அலுவலர்கள் மட்டும் தமிழுக்குச் சார்பாகச் செயற்பட்டுவிட்டார்களா என்ன?

இவர்கள் சரியாகவும், இறுக்கமாகவும் இருந்திருந்தால் இந்த இழிநிலை நேர்ந்திருக்காது. இவர்களே இன்றுவரை திருந்தவில்லை.

எடுத்துக்காட்டு ஒன்று.

அதிகம் படிப்பறிவில்லாத, அல்லது ஓரளவு தமிழ் அறிந்த, அல்லது தமிழ் மட்டுமே அறிந்த ஊராட்சிமன்றத் தலைவர்கள் பல்லாயிரக்கணக்கில் உள்ளார்கள். இவர்களுக்கு ஊரக வளர்ச்சி முகமை ஆங்கிலத்தில் குறிப்பு அனுப்புகிறது. அந்தக் குறிப்பை, மாவட்ட திட்ட அலுவலரும், ஒன்றிய ஆணையாளரும் அப்படியே அனுப்புவது மட்டுமின்றி இவர்களும் ஆங்கிலத்திலேயே குறிப்பு எழுதிச் சேர்க்கிறார்கள். (கோவில்பட்டி ஒன்றியம்)

இந்த நிலை மாறாத வரை தமிழுக்கு விடிவோ, ஏற்றமோ கிடையாது.

'அச்சமில்லை' என்று ஓர் இதழ்; இப்போது வருகிறதா? நின்றுவிட்டதா என்று தெரியவில்லை.

அதில் ஒரு திறனாய்வு

"தமிழ் வளர்ச்சித்துறையில் மறையம், மறைபொருள் போன்ற உபயோகத்திலுள்ள சொற்களுக்கு மாற்றாக "கமுக்கம்" எனும் சொல்லைப் பயன்படுத்த வேண்டுமென தமிழ்க்குடிமகன் அமைச்சரானபின் ஆணையிடப்பட்டிருப்பதாகவும் அது பற்றிய ஒரு விமர்சனமும் எழுந்துள்ளது.

உண்மையைப் பேசவேண்டிய நேரத்தில் பேசாதிருப்பவனைப் பார்த்து "கமுக்கமாக" இருக்கிறான் என்றும்; தவறுகளை மூடிமறைத்துக் கொண்டு அழுத்தமாக இருக்கும் பெண்ணைப் பார்த்து ஆள் ரொம்ப 'கமுக்கம்' என்றும் சொல்வது நாட்டு நடப்பு.

இந்தச் சொல்லோடு ஒரு வகையான கண்டன அர்த்தமும் உடன் தொனிப்பது - with a sound of derogatory meaning - இந்த சொல்லின் குணம். எனவே இந்தச் சொல்லை மறையம்/ மறைபொருள் என்ற சொற்களுக்கு மாற்றாதத் தெரிவு செய்தது தமிழ்க்குடிமகனின் ஆர்வக் கோளாறு. இங்கே இந்த சொல் பொருத்தமற்றது.

புதுக்கவிதை எழுதும் கவிஞர்களை 'வார்த்தைப் பொறுக்கிகள்' எனக் கடும் விமர்சனம் செய்தவர் இந்த சான்றாண்மை மிக்க அமைச்சர்தான். அந்த விமர்சனம் திரும்பாதிருக்க இத்தகைய சொற்சிலம்பம் சுழற்றி காலத்தை வீணாக்குவதை அமைச்சர் நிறுத்த வேண்டும். (அவர்கள் வெளியீட்டில் எத்தனை பிழைகள் என்று பாருங்கள்)

ஏற்கெனவே, Confidential, Strictly Confidential என்ற சொற்களைப் பயன்டுத்தி வந்தார்கள்.

தமிழில் அவற்றைப் பயன்படுத்தத் தொடங்கியதும் மறைபொருள், மந்தணம் போன்ற சொற்களைப் பயன்படுத்தினர். ''மந்தணம்''என்ற சொல் பளிச்சென அந்தப் பொருளைத் தரவில்லை.

எனவே, முதல்வர் அவர்களுடன் கலந்து மக்கள் வழக்காக இருப்பதும் பளிச்செனப் பொருள் உணர்த்துவதுமாகிய கமுக்கம், மிகக் கமுக்கம் எனும் சொற்களைப் பயன்படுத்தினோம். நாட்டு நடப்பைப் பற்றித் தெரிந்து எழுதத் தெரியாதவர்கள் இது என் ஆர்வக் கோளாறு என்கின்றனர். நாற்றம், கழகம் போன்ற சொற்கள் இன்றுமுறையே தாழ்ந்த பொருளையும், உயர்ந்த பொருளையும் தருகின்றன. இந்த வகையான சொற்பொருளியல் (Semantics) கல்வியைக் கற்றவன் நான். எனவே தோழர்கள் மிகவும் அலட்டிக் கொள்ளக்கூடாது.

அதே நேரத்தில் ஒரு கட்டுரையும் எழுதியிருக்கிறார்கள் 'தமிழ் வளர்க்கும் மண் குதிரைகள்' என்பது தலைப்பு.

தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தில் விதி விலக்குப் பெற்றவை சில.

அதில் ஒன்று, கருவூலங்கட்கு அனுப்பப்படும் பட்டியல்கள்.

''கருவூலங்கள் முழுக்க முழுக்க தமிழக அரசுத்துறை இதற்கு அனுப்பப்படும் பட்டியல்கள் ஆங்கிலத்தில் எதற்காக?

நல்ல கேள்வி! மேலும் திராவிட அரசுகள் நாற்பதாண்டுகளாக இது பற்றியெல்லாம் சிந்திக்கவே இல்லை என்கிறது இதழ். ஆனால் இவர்களே அறியாமல் போன செய்தி இதுதான். எல்லாக் கருவூலங்கட்கும் தமிழில் பட்டியல்கள் அனுப்பலாம் என்றும் பிற விளக்கங்களைத் தந்தும் அனைவர்க்கும் சுற்றறிக்கைகள் அனுப்பப்பட்டுள்ளன. விதி விலக்குப் பட்டியலிலிருந்தும் இது எடுக்கப்பட்டுவிட்டது. (இந்த நூலில் விளக்கம் உள்ளது)

அடுத்து எழுதுகிறது இதழ்;

'ஆட்சிமொழிச் சட்டத்தை இயற்றிய தலைமைச் செயலகத் துறையிலிருந்தே ஆட்சிமொழி தொடர்பான ஆணைகளும் அறிவுரைகளும் நாற்பதாண்டுகள் கடந்த பின்னரும் இன்னமும் ஆங்கிலத்தில் வெளியிடப்படுவது ஆட்சிமொழிச் சட்டத்தின் மீது அதனை உருவாக்கியவரே சிறுநீர் கழிக்கும் அவமானத்திற்கு நிகரானது. இத்தகைய அரசாணைகளைத் திருப்பி அனுப்பி - ஆட்சிமொழிச் சட்டமீறலை ஏற்க முடியாது என கண்டனம் செய்யும் தைரியமிக்க ஒருவர் தமிழ் வளர்ச்சித்துறை தலைவராகாத வரையில் இந்த அவமரியாதை தமிழுக்கு தொடர்ந்து நடந்து கொண்டுதான் இருக்கும்.

'ஐஏஎஸ்' என்கிற அரண்மனை ஜீவன்களுக்கு தமிழ் என்றால் அலட்சியம். தமிழ்த் துறைத் தலைவர்களுக்கோ 'ஐஏஎஸ்' என்றால் பாமரத்தனமான பயபக்தி. இந்த நிலைகள் தலைகீழானாலன்றி - ஆங்கிலத்தில் அரசாணைகள் வருவதைத் தடுக்க இயலாது.

இந்த அரசில் மன்னனும் நானே; அரசவைக் கவிஞனும் நானே என்று தன்னையே எல்லாமாக நினைக்கும் ஒருவர் முதல்வராகவும், அவரிடம் மடி ஏந்தி தமிழ் வளர்ச்சித்துறைத் தலைவர் பதவியைப் பிச்சையாகப் பெறுகிறவர்கள் இத்துறைத் தலைவர்களாக வரும் நிலை இருக்கிறவரை இந்த நிலை மாறாது.'

தமிழ்க்குடிமகன் ஏதோ மடி ஏந்தி தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சர் பதவியைப் பிச்சையாகப் பெற்றுவிட்டார் என்று கருதுகிறார்களா? துணிச்சல் மிக்க என் பணிகளைப் பாராட்டாவிட்டாலும் இப்படி 'எல்லாம் தெரிந்த ஏகாம்பரங்களைப்' போல் எழுதாமலாவது இருக்கலாம் அல்லவா?

அடுத்தது.

''தமிழ்க்குடிமகன் தமிழ்வளர்ச்சித் துறை அமைச்சராகிவிட்டார். அவரது ஆழ்ந்த சிந்தனை மூலம் தமிழ் வளர்ச்சி இனி கொடிகட்டிப் பறக்கப்போகிறது என நாடு நம்பி கொண்டிருந்தது.

மேடைப் பேச்சுகளும் கருத்தரங்குகளும் தமிழ் வளர்ச்சிக்கு இம்மியும் பயன்படவில்லை என்பது கடந்த முப்பதாண்டுகால அனுபவம். இருந்தும் அதே பல்லக்குப் பவனியை அமைச்சர் கடந்த இரண்டாண்டுகளாக நடத்திக்கொண்டிருப்பது அந்த நம்பிக்கையில் மண் அள்ளிப் போட்டுவிட்டது.''

இவர்கள் எந்த அடிப்படையில் இதைச் சொல்கிறார்கள்? இதற்கு முந்தைய கட்டுரையில் என் எச்சரிக்கைகளைப் பார்க்கிறீர்கள்.

மேல்மட்ட அலுவலர்களிலிருந்து கடைநிலை ஊழியர் வரை போராட மட்டுமே முடிந்தது. பலர் திருத்திக் கொண்டார்கள். சிலர் அலட்சியம் செய்தார்கள். சிலர் முரண்டு பிடித்தார்கள். எனினும் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லலாமே தவிர, நூற்றுக்கு நூறு நான் வெற்றி பெற்றுவிட்டேன் என்று சொல்ல முடியவில்லை.

10. 13.11.98 ஆம் நாளைய தினமலரில் ஒரு செய்தி.

*மணியார்டர் படிவத்தில் தமிழைக் காணோம் . . . . கன்னடம் தான் 'பளிச்'*

திருச்சி, நவ.13 -

தமிழ்நாட்டில் உள்ள தபால் நிலையங்களில் கன்னட மொழியில் மணியார்டர் பாரம் விற்பனை செய்யப்படுகிறது.

ஏழை, எளிய மக்கள் பணம் அனுப்ப, மணியார்டர் தான் பெரும்பாலும் பயன்படுத்துகின்றனர். அவர்கள் தமிழ் மட்டுமே அறிந்தவர்கள். அதனால் தமிழில் தந்தி அனுப்பும்முறை, தமிழில் மணியார்டர் படிவம் கொண்டு வரப்பட்டது. கடந்த சில மாதங்களாக

திருச்சி (திருச்சியில் சில தபால் அலுவலகங்கள் தவிர), தஞ்சாவூர், நாகப்பட்டினம், திருவாரூர் மாவட்டங்களில் கன்னட மொழியில் மணியார்டர் பாரங்கள் விற்பனையாகின்றன. வழக்கமாக மணியார்டர் பாரத்தில் ஒரு புறம் ஆங்கில மொழியிலும், மறுபுறம் இந்தி மற்றும் தமிழிலும் இருக்கும். ஆனால் இப்போது இந்தி மற்றும் கன்னடத்தில் பாரங்கள் விற்பனையாகின்றன.

இதனால் பாமர மக்கள் மொழி தெரியாமல் தபால் அலுவலக ஊழியர்களை தொந்தரவு செய்வதோடு பூர்த்தி செய்ய யாரேனும் படித்த நபரை அணுகவேண்டிய நிலையும் உள்ளது.

'கன்னட மொழியில் பாரங்கள் விற்கப்படுவது ஏன்? என அதிகாரிகளிடம் கேட்டபோது, தமிழில் உள்ள பாரங்கள் ஸ்டாக் இல்லாததால் கன்னட மொழி பாரங்கள் தான் எங்களுக்கு சப்ளை ஆகிறது. இன்னும் சில நாட்களிலே தமிழ் பாரங்கள் வந்துவிடும் என்றனர்.

இதே பதிலை கடந்த பல வாரங்களாகவே தபால் அதிகாரிகள் சொல்லி வருகின்றனர்."

நல்லவேளையாக எங்கள் நடவடிக்கைக்குப் பின் இப்போது அந்த நிலை இல்லை. படிவங்களில் தமிழ், ஆங்கிலம் ஆகியவை இடம் பெற்றுள்ளன என்றாலும் எங்கள் கவனத்துக்குக் கொண்டுவந்த இதழ் பாராட்டுக்குரியது.

11. மேனாள் துணைவேந்தர் ச. முத்துக்குமரன் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். தலைப்பு "நமது நாட்டு ஆட்சி மொழிகள் - சிக்கலும் தீர்வும்" என்பதாகும்.

"இன்றிலிருந்து நமது மொழியில் எழுதத் தெரிந்தவர்களைத்தான் தேர்ந்து எடுத்துப் பணியில் அமர்த்துவது என்று முடிவெடுத்தால் ஆறு மாதத்தில் நமது மொழி மாநில ஆட்சிமொழியாக முழுமையாக ஆக முடியும்."

இது சரியான கருத்துத்தான்; இப்போது தமிழே தெரியாமல் ஆங்கிலத்தில் தேர்வு எழுதுபவர்களும், உரிய மதிப்பெண் பெற்றுத் தேர்ச்சியடைந்து பணிக்கு வந்துவிடலாம் எனும் நிலை உள்ளது. இதனால்தான் பலர் இது தொடர்பான வேறு கருத்தை வலியுறுத்துகின்றனர்.

" தமிழில் படித்தவர்கட்கு வேலை வாய்ப்பில் முன்னுரிமை வழங்கவேண்டும்" என்பதுதான் அது. இந்தக் கருத்தினை அரசு ஆராயாமல் இல்லை. ஆழ்ந்து சிந்தித்து அது தொடர்பாக கோப்பினையும் உருவாக்கினோம்.

பிற மாநிலங்களில் 'இதே நிலை' குறித்து நடைபெற்றுள்ள முயற்சிகள் பற்றி அறிய முயன்றோம். கர்நாடகம், கேரள மாநிலங்களில் இது தொடர்பான ஆணைகள் எவையும் பிறப்பிக்கப்படவில்லை. ஆனால் ஆந்திர அரசு மட்டும் தெலுங்கில் படித்தவர்கட்கு - தெலுங்கு மொழியில் தேர்வு எழுதி வென்றவர்களுக்கு கூடுதலாக 5 மதிப்பெண்கள் வழங்கலாம் என்று ஆணை பிறப்பித்தது.

வரவேண்டியது கட்டாயம். புரட்சித்தலைவியின் அரசு அதைத்தான் செய்கிறது. ஆனால் 'தினமலர்' செய்யும் குறும்பைப் பார்த்தீர்களா? சின்னக் குத்தூசியிடம் சொல்லடி வாங்கிய 'தினமலர்' என்ன எழுதுகிறது பாருங்கள்?

கண்டுபிடியுங்க! சவால்!

கம்பி வடம், பன்முறைச் செயல்பாடுகள், காணொலிப் பேழை பதிவுக் கருவி, கம்பி வட தொலைக்காட்சி இணைப்பு. . . இவை யெல்லாம் என்ன? தமிழ்நாட்டுத் தமிழர்களுக்கு, தமிழ் பயின்ற வேற்று மொழியாளர்களுக்குப் புரியுமா?

தமிழ்நாட்டில் தமிழ் ஆட்சி மொழியாக இருந்தாலும், 'எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்' என்ற கோஷத்தை பரவலாக்க முடிந்ததா? தகவல் தொழில்நுட்பத்தின் வேகமான வளர்ச்சிக்கு ஈடுகொடுக்கும், பாமர மனிதனால் புரிந்து கொள்ளக் கூடிய, புழக்கத்தில் வெளியிடக் கூடிய தமிழ்ச் சொற்களை ஒரு அரசால், தமிழறிஞர்களால். . . கண்டுபிடிக்க முடிகிறதா? என்பது நீண்ட நாள் கேள்வி.

பிறமொழிச் சொல் ஒன்றுக்கு தமிழில் சொல்லாக்கம் செய்யும்போது பலராலும் ஏற்றுக்கொள்ளக் கூடிய, பொது மக்களால் எளிதில் உச்சரித்து பொருள் புரிந்து கொள்ளக் கூடிய சொற்கள் தான் தேவை. அதைவிடுத்து ஆங்கிலச் சொற்களுக்கு 'நாங்களும் தாய் மொழியில் சொற்கள் வைத்திருக்கிறோம்' என்ற நினைப்பில் ஏதோ ஒரு சொல்லைப் போட்டு சொல்லாக்கம் செய்வதுதான் பெரும்பாலும் நடக்கிறது. மேலும், 'நான் மொழிபெயர்த்த சொல்தான் சரி' என்று வாதிடும் அறிஞர்கள் மத்தியில் நல்ல சொல் எங்குப் பிறக்கும்?

அந்த வகையில் கீழே கொடுக்கப்பட்டுள்ள சொற்களுக்கு என்ன பொருள் என்பதை உங்களால் புரிந்து கொள்ள முடிகிறதா என்று பாருங்கள். . . .

1. கம்பிவட தொலைக்காட்சி இணைப்பு.
2. பன்முறைச் செயல்பாடு
3. ஒளியிழை
4. காணொலிப் பேழைப் பதிவுக் கருவி
5. அடக்க வட்டு இயக்கிக் கருவி
6. காணொலிப் படத் தொகுப்பகம்
7. கம்பி வடம்
8. கம்பி வட இணைப்பு அளிக்கும் வணிகம் செய்பவர்
9. பணத் தண்டம்

ஏதாவது புரிந்தால் நீங்கள் தமிழர்தான். புரியவில்லை என்றாலும் கவலைப்படவேண்டாம். நீங்களும் தமிழர்தான். இந்தச் சொற்களுக்குப் பொருள் புரிந்து கொள்ள கடைசிப் பக்கம் வாருங்கள். (கேபிள் 'டிவி' ஒளிபரப்புகளை முறைப்படுத்துவது தொடர்பான சட்ட மசோதா சட்ட சபையில் நேற்று தாக்கல் செய்யப்பட்டது. அந்த மசோதாவில்தான் இந்தச் சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளன.)

முதல் பக்கத்தில் கொடுக்கப்பட்ட சொற்களுக்குப் பொருள் புரியாதவர்கள் இங்குக் கொடுக்கப்பட்டுள்ள சொற்களைப் பார்த்து.. . . அட அப்போதே இதைத்தான் நினைத்தேன் என்று சொல்லக்கூடும். சரியாக இருந்தால் சரிதான். இப்போது படியுங்கள்.

1. கேபிள் 'டிவி' நெட்வொர்க்
2. மல்டி சிஸ்டம் ஆபரேஷன்ஸ். (அதாவது செயற்கைக் கோள் மூலம் 'டிவி'சேனல்களைப் பெற்று கேபிள் 'டிவி' ஆபரேட்டர்களுக்கு வழங்கும் செயல்)
3. ஆப்டிக்கல் பைபர்.
4. வீடியோ கேசட் ரெக்கார்டர்
5. காம்ப்பேக்ட் டிஸ்க் பிளேயர்
6. வீடியோ லைப்ரரி
7. கேபிள்
8. கேபிள் ஆபரேட்டர்
9. அபராதத் தொகை

இப்போது புரிந்தால், இனிமேல் உங்கள் வீட்டுக்கு கேபிள் சந்தா வசூலிக்க வருபவரிடம். . . கம்பி வட இணைப்பு வழங்கும் வணிகரே வாருங்கள். . . என்று கூறிப் பாருங்கள்."

'தினமலர்'க்குச் சீனாவில் இருக்கும் நிலை தெரியுமா? சிங்கப்பூரில் உள்ள நிலை தெரியுமா? சீனமொழியில் ஒரு சொல்லை அரசு மொழிபெயர்த்து வெளியிட்டுவிட்டால், அதைத்தான் எல்லாரும் கடைப்பிடிக்க வேண்டும். சிங்கப்பூரில் நல்ல தமிழில் எல்லா அரசு அறிவிப்புகளும் உள்ளன.

இங்குதான் தமிழ் இவர்களுக்கு இளக்கார மொழி. எவர் வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் மென்று துப்பலாம். அதனால்தான் 'தினமலர்' இப்படிக் குதப்புகிறது.

* * *

இவ்வாறாகப் பலரும் பல திறனாய்வுகளைச் செய்துள்ளனர். சிலர் கவலையோடும், சிலர் எங்களுக்குக் கவனமூட்டும் வகையிலும் எழுதியுள்ளனர். சிலர் அறியாமையால் எழுதியுள்ளனர். சிலர் குறும்புடன் திறனாய்வு செய்துள்ளனர். சிலர் தங்கள் பிழைப்புக் கெட்டு விடக் கூடாதே என்ற கோணத்தில் எழுதியுள்ளனர்.

எனினும் எங்கள் முறையான முயற்சிகளைத் தொடர்வதில் எந்தத் தடையும் இல்லை. இவர்களது திறனாய்வுகளையும் படித்தோம். திகைத்துப்போய் நின்றுவிடவில்லை. சிறிது நின்று பார்த்துவிட்டு நடைபோட்டோம் "நல்லது செய்ய நாலு இடையூறு வரும்" என்ற பழமொழியும் நினைவுக்கு வந்தது. என்றாலும், எங்களுக்கு அறிவுரை கூற முன்வரும் சிலர் முதலில் தங்களைத் திருத்திக் கொள்ள வேண்டும்.

"ஊரைத் திருத்து முன் உலகைத் திருத்து முன்
உன்னைத் திருத்தடா முதலில்" (பெருஞ்சித்திரனார்)

## இயல் - முப்பத்தைந்து

## என் நடவடிக்கைகள்

நாடெங்கிலும் எத்தனையோ நிகழ்வுகள். தமிழுக்குச் சார்பாக நடைபெறும் பணிகள் இயல்பானவை. எனவே அவற்றை விதந்து பேசிக் கொண்டிருக்க வேண்டியதில்லை. ஆனால், தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை விரைந்து செயல்படுத்த அரசு கடும் முயற்சியை மேற்கொண்டுள்ளது என்பது அனைவர்க்கும் தெரியும்.

பல இடங்களில் விழிப்புணர்ச்சி தோன்றி, இதுவரையிலும் தமிழில் எழுதாமல் இருந்தவர்கள் கூடத் தங்களை மாற்றிக் கொண்டு தமிழில் எழுதத் தொடங்கி விட்டார்கள். புது மாற்றங்கள்- நாம் பார்த்து, கேட்டு மகிழக்கூடிய மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன; நிகழ்ந்து கொண்டே இருக்கின்றன.

என்றாலும், பல திட்டங்களில் எந்த அசைவும் இல்லை, அதே பழைய நிலை, மாடு தொடர்ந்து செக்கைச் சுற்றிக் கொண்டே இருக்கிறது. கழுத்திலுள்ள கட்டு அவிழ்க்கப்பட்ட பின்பும், பூட்டாங்கயிறு கழற்றப்பட்டு விடுவிக்கப்பட்ட பின்பும் 'மாடு'தன் பழக்கத்தை விடவில்லை.

ஒரு கதை உண்டு. தேவகோட்டைச் செக்குமாடு கதை.

அந்தக் கதைதான் இங்கும்.

இந்த ஆண்டுகளில் பலர் எங்களுக்குப் பலவற்றைச் சுட்டிக் காட்டினார்கள்; கவனப் படுத்தினால் நடவடிக்கை எடுப்பார்கள் என்று நம்பினார்கள்.

நடவடிக்கை எடுத்தோமா? எடுத்தோம் - விரிவான விவரங்கள் இதோ.

1991 சனவரியில் தி.மு.க. ஆட்சி கலைக்கப்பட்டது. மேலும், ஐந்து மாதங்கள் நானும் அவைத்தலைவராகத் தொடர்ந்து பொறுப்பில் இருந்து, 31.5.1991 இல் விலகினேன். பின் ஐந்து ஆண்டுகாலம் எதிர்க்கட்சி ஏற்பு.

1996 இல் ஆட்சிக்கு வருவோம் என்றோ, அப்போது தமிழ் வளர்ச்சித்துறை தனி உருவெடுக்குமென்றோ, நான் அத்துறையின் அமைச்சராக வருவேன் என்றோ எண்ண முடியாதகாலத்தில் - கனவிலோ, கற்பனையிலோ இவை வாராத காலத்தில் - எதிர்க்கட்சியில் இருந்தாலும் தமிழுக்கு என்ன செய்யவேண்டும்? தமிழர்கள் என்ன செய்யவேண்டும் என்பது குறித்து ஓர் விரிவான அறிக்கையை உருவாக்கிப் பலருக்கு அனுப்பினேன். நேரில் சந்தித்தவர்களிடம் கொடுத்தேன்.

13.5.96 அன்று புதிய ஆட்சி அமைந்து, தனி அமைச்சகம் தோற்றுவிக்கப்பட்டு, நானும் தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சராகப் பொறுப்பேற்ற பின் பலவற்றைத் துருவி ஆராய்ந்தோம்.

என்ன ஆராய்ந்தோம், எங்கள் பணி எந்தப்போக்கில் சென்றது என்பதனைப் பின்வரும் அறிக்கையிலிருந்தே புரிந்து கொள்ள முடியும்.

"பலதுறைகளில் புகுந்து பார்க்கும் போது அதிர்ச்சி தரத்தக்க உண்மைகள் புலப்பட்டன. சில இடங்களில் அதிரடி நடவடிக்கை எடுத்துத்தான் இவற்றைச் செம்மை செய்ய நேர்ந்தது.

இவற்றின் விளைவாக உள்நாட்டுத் தமிழர்களும் வெளிநாட்டுத் தமிழர்களும் ஒரு நம்பிக்கை பெற்று நமக்குச் செய்தி தருகிறார்கள்; வேண்டுகோள் வைக்கிறார்கள். நாம் அவர்களிடம் ஒருவகை நம்பிக்கையைத் தோற்றுவித்திருக்கிறோம். இதழ்களில் எங்காவது ஓரிடத்தில் தமிழ் வளர்ச்சித் துறை நினைவு கூரப்படுகிறது.

அல்லது நாங்கள் கவனிப்போம் என்று நம்பிச் செய்திகளை வெளியிடுகிறார்கள்.

'தமிழ்க்குடிமகன் கவனிப்பாரா?' எனும் தலைப்பு அடிக்கடி வருகிறது.

பொதுவாக, இதழ்களில் இப்போது நமக்கு எதிர்ப்பு இல்லை. கேலி, கிண்டல் இல்லை. நம் முயற்சிகள் வலுவானவை என்பதைப் புரிந்துகொண்டு அவை (ஆதரவு) சார்பு நிலைக்கு வந்துள்ளன. எனவே,

1. பலரிடமும் ஓர் எதிர்பார்ப்பு
2. இதழ்களின் கவனத்தைக் கவர்ந்த நிலை
3. இதழ்களின் எதிர்ப்பை அகற்றிய நிலையில் இத்துறை தன்னை நிலைநாட்டிக் கொண்டுள்ளது.

இந்நிலையில் நாங்கள் மேற்கொண்டுள்ள வளர்ச்சிப் பணிகளைத் தொகுத்தளிக்க வேண்டியது கடமையாகிறது.

தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் சார்பில் 'ஆட்சிச் சொல் அகராதி' வெளியிடப்பட்டுள்ளது. 'ஆட்சிமொழி'யைச் செயற்படுத்தும் நோக்கில் இந்த அகராதியின் முதல் பதிப்பு 1957 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. இரண்டாம் பதிப்பு 1962ஆம் ஆண்டிலும் மூன்றாம் பதிப்பு 1971ஆம் ஆண்டிலும் வெளியிடப்பட்டன. 1983 இல் நான்காம் பதிப்பு வெளியிடப்பட்டது. (இது 306 பக்கங்களைக் கொண்டது)

நான்காம் பதிப்பின் மறுபதிப்பு 1990ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. (இதை ஐந்தாம் பதிப்பாகக் கொள்ளலாம்). இப்பதிப்பில் ஏறத்தாழ 9000 சொற்கள் இடம்பெற்றுள்ளன.

இந்நிலையில், அலுவலகங்கட்குத்தேவையான ஆட்சிமொழிச் சொற்களை மட்டுமே கொண்டதாக இப்பதிப்பு விளங்குகிறது. (விலை உருபா 69-90)

அதன்பின் ஐந்தாம் பதிப்பில் 20000 படிகளை அச்சிட்டு வழங்கினோம்.

1996 இல் பொறுப்பேற்றுத் துறை வேகமாக நடைபோட்டது. ஆட்சிச் சொல்லகராதியை மீண்டும் புதுப்பித்து வெளியிடலாமா என்று சிந்தித்தோம். அப்படி வெளியிடும்போது 1990 ஆம் ஆண்டின் அகராதியில் கையிருப்பு ஏதேனும் உண்டா எனத் நுருவிப் பார்த்தபோதுதான் நான் அதிர்ச்சி அடைந்தேன். பல படிகள் அச்சிடப்பட்ட நிலையில் அரசு மைய அச்சகத்திலேயே அப்படியே இருந்தன. அதன்பிறகு பார்த்தால் விற்பனைப் பகுதியாகிய அச்சு மற்றும் எழுதுபொருள் துறையில் பல படிகள் அப்படியே இருந்தன. 7 ஆண்டுகள் ஆகியும் அச்சகத்திலும் விற்பனைப் பிரிவிலுமே பல படிகள் அப்படியே இருக்குமானால் ஆட்சி மொழியைச் செயற்படுத்துவதில் என்ன வேகம் இருந்திருக்கமுடியும் என்பதை அதிர்ச்சியுடனும் திகைப்புடனும் உணர முடியும். இது தெரிந்ததும் 23.8.97 அன்று நானே அரசு மைய அச்சகம் சென்று ஆராய்ந்தேன். அவர்கள் அளித்த அறிக்கையைப் பாருங்கள். நீங்களே அதிர்ச்சியில் உறைந்து போவீர்கள். 23.8.97-இல் அச்சகத்தில் கையிருப்பு (கிடங்கில் தூங்கிக்கொண்டிருப்பவை).

| | | |
|---|---|---|
| 1. | ஆட்சிச் சொல்லகராதி 1990 ஆம் ஆண்டு | .. 9000 படிகள் |
| 2. | வனத்துறைச் சிறப்புச் சொல்லகராதி | .. 400 படிகள் |
| 3. | கையடக்க ஆட்சிச் சொல்லகராதி | .. நான் உணர்த்திய பிறகு 5000 படிகள் தற்போது பிற அலுவலகங்கட்குப் பகிர்ந்தளிக்கப்படுகின்றன. 6487 படிகள் இன்னும் உள்ளன. |
| 4. | துணை ஆட்சிச் சொல்லகராதி | .. 45250 படிகள் தேக்கம். 43,250 படிகள் பகிர்மானப் பட்டியலின் படி பகிர்ந்தளிக்கப்படுகிறது. 1,000 படிகள் முழுமையான புத்தகம் கட்டும் பணியில் உள்ளது. 1,000 படிகள் கையிருப்பில் உள்ளன. |

என் கவனத்துக்கு வந்ததும் உடனடி நடவடிக்கையில் இறங்கினேன். தேங்கியுள்ள படிகளை முறைப்படி விலைக்குக் கொடுக்க வேண்டும். இனி எப்போது இவற்றை விற்பது என்ற நிலையில் அனைத்தையும் இலவசப் படியாகவே பல துறைகளுக்கும் கொண்டு செல்ல வேண்டும் எனும் முறையில் கோப்பு அணியமாக்கப்பட்டது. அந்த முயற்சியின் விளைவாக உருபா 7.50 இலட்சம் தள்ளுபடி செய்து முதல்வர் ஆணையிட்டார். (அரசாணை எண்.166, நாள்:29.5.97)

உடனே வேகம் வேகமாக அனைத்துத் துறைகளுக்கும் படிகள் அனுப்பப்பட்டன. இப்போதுதான் பல அலுவலகங்கள் ஆட்சிச் சொல் அகராதியைப் பார்த்துள்ளன.

இது போக, மற்றோர் அதிர்ச்சிச் செய்தியும் இங்கே உள்ளது. "தமிழ்-தமிழ் அகராதி" யொன்றை அரசே வெளியிடலாம் என்று நினைத்த போது தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்ட தமிழ் அகராதி கவனத்துக்கு வந்தது. அதுதான், 'தமிழ் - தமிழ் அகராதி'

மு. சண்முகம் பிள்ளையைத் தொகுப்பாசிரியராகவும், அ.ச.ஞா., அ.மு.ப., கொண்டல் மகாதேவன் ஆகியோரை மேலாய்வாளர்களாகவும்கொண்டு 1985இல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் ஒரு தமிழ் - தமிழ் அகரமுதலியை வெளியிட்டுள்ளது.

அன்று விலை உரூ.100/- 5000 படிகள் வெளியிட்டுள்ளனர்.

1996 இல் நான் பொறுப்பேற்றபின், தீர்ந்துபோன அந்த நூலைத் திருப்பி அச்சிடலாம் என முயன்றபோதுதான் ஒரு புது உண்மை தெரிந்தது. ஆம்! 3000 படிகள் விற்கப்படாமலேயே கடந்த 11 ஆண்டுகளாகக் கிடங்கிலேயே வைக்கப்பட்டுள்ளன எனும் அதிர்ச்சிச் செய்தி கிடைத்தது. அதிர்ந்து போனேன். 1015+35=1050 பக்கங்களுடன் 64,048 சொற்களுக்கான பொருள் விளக்கத்துடன் கூடிய அகரமுதலி இன்று அச்சிட்டால் உரூபா 800க்கு மேல் ஆகலாம். ஆனால், இன்று 100 உரூபாய் விலையுள்ள 3000 படிகள் தேங்கியுள்ளன.

அவற்றை வெளிக்கொணரவும் மாவட்டந்தோறும் அவற்றை விற்பனை செய்யவும் ஏற்பாடு செய்யப்பட்டது. எங்கள் துறையே பணம் செலுத்தி, படிகளைப் பெற்று மக்களிடம் சேர்த்துள்ளது.

மற்றோர் அதிர்ச்சியும் உள்ளது. தமிழில் சுருக்கெழுத்துப் பயின்றோர் இப்போதும் அதிகம் தேவைப்படுகின்றனர். அந்த வகையில் அவர்கள் பயில்வதற்கான தமிழ்ச் சுருக்கெழுத்து அகராதி கிடைப்பதில்லை என்றும், அதை மறுபதிப்புச் செய்து வெளியிடத் தமிழ் வளர்ச்சித்துறை முன்வரவேண்டும் என்றும் பல அன்பர்கள் மடல் எழுதினர். இந்த நூலை வெளியிட்ட தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தை ஆராய்ந்தோம். இங்கும் ஓர் அதிர்ச்சி காத்திருந்தது.

தமிழ்ச் சுருக்கெழுத்து அகராதி

எம். சீனிவாசராவ் என்பவர் 1919 ஆம் ஆண்டு தமிழ்ச் சுருக்கெழுத்துக் கலைக்கு வித்திட்டவர். அந்த முறையைப் பின்பற்றி அனந்த நாராயணன் என்பவர் தமிழ்ச் சுருக்கெழுத்து அகராதியை வெளியிட்டார்.

1980 இல் முதற்பதிப்பு வந்தது. 1997 இல் மீண்டும் மறுமதிப்புக் கொண்டுவர ஏற்பாடு செய்யப்பட்டது. அன்று விலை உரூபா.45/-

இந் நூலிலும் 2200 படிகள் விற்கப்படாமல் கிடங்கில் முடங்கிக் கிடந்தன என்பதைப் பார்த்தபோது எனக்கு எப்படியிருக்கும்?

வெளியிலோ நூல் கிடைக்கவில்லையே என்ற தவிப்பு.

எங்களுக்கோ மறுபதிப்பு நூலை வெளியிடவேண்டுமே எனும் துடிப்பும் முயற்சியும்.

ஆனால் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனமோ நீண்ட தூக்கத்தில் இருந்துவிட்டது.

அதனால் இரு அகராதிகளையும் தமிழ் வளர்ச்சி இயக்குநர் பெற்றுத் தக்கவாறு பொது மக்களிடம் கொண்டு செல்ல ஏற்பாடு செய்யப் பட்டது.

'அகர முதலிகள்' குறித்த எங்கள் பணி எப்படி அமைந்துள்ளது என்பதை இப்போது உணரமுடியும்.

3. கல்வித்துறையின் அரசுச் செயலர் ச.பா. இளங்கோவன் 2.7.96 அன்று ஓர் அரசாணை பிறப்பித்துள்ளார். மிக மிக எளிய செய்தி. 57 இல் ஆங்கிலத்தில் வந்தது போலவே 1996லும் ஆங்கிலத்தில் அரசாணை. அதிலும் 'இளங்கோவன்' எனும் அழகிய பெயர் தாங்கிய இ.ஆ.ப. அலுவலர் வாயிலாக அதுவும் பேராசிரியர் 'கல்வி அமைச்சராக' இருக்கின்ற துறையிலிருந்து ஆங்கிலத்தில் அரசாணை வருகிறது. கலைஞர் ஆர்வத்தோடு உருவாக்கிய 'தனி அமைச்சகம்' எந்தத் துறையிலிருந்து பிரிந்ததோ அந்தத் துறையே - கல்வித் துறையே 'தனி அமைச்சக அமைப்பால் எந்த ஒரு தாக்கத்தையும் அடையவில்லை; எதைப் பற்றியும் கவலைப்படவில்லை.'

இவ்வளவுக்கும் இளங்கோவன் ஒரு காலத்தில் த.வ., த.ப. துறையின் செயலாளராக இருந்தவர். ஆங்கிலத்தில் அராசணை தேவையென்றால் வைத்துக்கொள்ளட்டும் . ஆனால் 'தமிழில்' வெளியிடுவதற்கு 'அரைமணி' நேரம் செலவிட்டால் போதும்!

எங்கள் துறைக்கு - மொழிபெயர்ப்புத் துறைக்கு அனுப்பியிருந்தால் கூடப் போதுமே! இதுதான் என் துறை தொடங்கப்பட்டபோது இருந்த நிலை.

இந்த ஆணை என் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டது. தொலைபேசியில் செயலர் இளங்கோவனுக்குச் சுட்டிக் காட்டப்பட்டது.

EDUCATION, SCIENCE AND TECHNOLOGY (P2) DEPARTMENT

G.O. (1D) No.68 Dated : 2.7.1996

From Secretary to Government, Public (Speial - A) department U.O. Note 1869/96-1 dated 7.5.96

ORDER:

The notification appended to this order will be published in the Tamil Nadu Government Gazette.

APPENDIX

NOTIFICATION

In exercise of the powers conferred by section 38(2) of the Tamil Nadu Private Colleges (Regulation) Act, 1976, the Governor of Tamil Nadu hereby appoints Thiru K. Jayaraman, Additional District Judge-cum-Cheif Judicial Magistrate, Chengalpattu a Tribunal under the Tamil Nadu Privte Colleges (Regulation) Act, 1976 Madras Vice Thiru M. Kamatchi, Tribunal under private Colleges (Regulation) Act, Madras transferred to Tiruchirappalli.

4. மதுராந்தகம் சட்டமன்ற உறுப்பினர் 'வெங்கடேசன்' 15.7.96 அன்று எனக்கு ஒரு மடல் எழுதுகிறார். அதில் சில பகுதிகள்.

"தமிழை இரண்டாம் மொழியாக எடுத்தவர்களை மட்டும் கருத்தில் / கவனத்தில் கொண்டு மாநில அளவில் அரசு உதவிகளை வழங்குதலும் தமிழ் வளர்ச்சிக்கு வித்தூன்றும்.

மேலும் தமிழை இரண்டாம் (Second Language) மொழி என்று வரைப்படுத்துவதும் தவிர்க்கப்பட்டு முதன்மொழி - தமிழ் என்றும் இரண்டாம் மொழி ஆங்கிலம் என்றும் - குறைந்த பட்சம் நமது தமிழ் மாநிலத்திலாவது தங்களின் அமைச்சுப் பணி காலத்தில் நிறைவேற்றிட வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்."

ஒரு சட்டமன்ற உறுப்பினர் இவ்வளவு ஆர்வம் எடுத்து எனக்கு மடல் எழுதுகிறார். உண்மையில் இந்த மடல் கல்வி அமைச்சருக்குத்தான் எழுதப்பட்டிருக்கவேண்டும். எனினும் 'தமிழ்' என்றதும் எனக்கு எழுதிவிட்டார். மகிழ்ச்சி, அவர் சொன்னதை மனத்திற் கொண்டு செயற்பட்டோம். நானே பேராசிரியரிடமும் பேசினேன். முதல்வரிடமும் பேசினேன்.

ஆனால் ஓர் உண்மை அவர் கவனத்திற்கு வரவில்லை.

+1, +2 வகுப்புகளில் Part I பாகம் 1 முதன்மொழி - தமிழ்தான் Part II பாகம் 2 இரண்டாம் மொழிதான் ஆங்கிலம்.

ஆனால் பாகம் 1 இல் உள்ள தமிழை விட்டு விட்டுப் பலர் சமற்கிருதம், பிரெஞ்சு போன்ற மொழிகளை எடுத்துப் படித்தனர். தமிழை அறவேவிட்டு விட்டனர். ஆனாலும் அவர்கள் அதிக மதிப்பெண்கள் எடுத்து, அரசின் பரிசையும், உதவியையும் பெற்றார்கள் என்பதுதான் கொடுமையான நிலை. அதை உணர்ந்து வேங்கடேசன் எழுதியுள்ளார்.

1996 ஆட்சியின் தொடக்கம் என்பதால் அந்த ஆண்டு இதை நிறைவேற்றவில்லை. ஆனால் 1997 சூன் மாதத்தில் திட்டவட்டமான அரசாணை பிறப்பிக்கப்பட்டது. அதன்படி, தமிழை ஒரு பாடமாக எடுத்துப் படிப்பவர்களின் (as a subject)மொத்த மதிப்பெண்கள் மட்டுமே கணக்கிடப்பட்டு அதன்படி மாநில அளவில் முதல் மூன்று இடங்களில் வரும் மாணவ, மாணவியருக்கும், மாவட்டவாரியாக முதல் மூன்று இடங்களில் வரும் மாணவ மாணவியருக்கும்

பரிசுகள் வழங்கப்பட்டன. அவர்கள் எந்தப் பட்ட வகுப்பில் சேர்கிறார்களோ அதனை முடிக்கும் வரை படிப்பு உதவித் தொகையும் அவர்களுக்கு வழங்கப்பட்டது.

எனவே நண்பர் - ஒரு ச.ம.உ. எழுதிய மடலின் கருத்து 1997 முதல் செயற்படுத்தப்பட்டது என்பதைக் குறிப்பிட்டு மகிழ்கிறேன்.

5. முதலில் தூத்துக்குடி மாவட்டத்திட்ட அலுவலர் எழுதிய மடலைப் படியுங்கள்.

"சிதம்பரனார் மாவட்டம் 1995-96ஆம் ஆண்டு ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டத்தின் கீழ் வறுமைக் கோட்டிற்கு கீழ் உள்ள மக்களிடம் விபரம் கேட்டு கையொப்பம் பெறும் படிவம் ஆங்கிலத்தில் மட்டுமே அச்சடிக்கப்பட்டுள்ளதற்கு காரணம் தெரிவிக்க கோரி பார்வையில் கண்ட கடிதத்தில் கேட்கப்பட்டுள்ளது.

ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சி திட்டம் (ஐ.ஆர்.டி.பி.) தொடர்பான நடைமுறை வழிகாட்டி நூலின் "மாதிரி படிவத்தினை" அடிப்படையாகக் கொண்டு அச்சடிக்கப்பட்டதால் ஆங்கிலத்தில் மட்டும் அச்சடிக்கப்பட்டது.

இனிவரும் காலங்களில் ஆங்கிலப் படிவத்தினை தமிழாக்கம் செய்து தமிழ் மற்றும் ஆங்கில மொழிகளில் படிவம் தயாரித்து அச்சடித்து பயன்படுத்தப்படும் என்ற விபரத்தினை பணிந்து தெரிவிக்கிறேன்."

வறுமைக் கோட்டிற்குக் கீழே உள்ள மக்களிடம் விவரம் கேட்டு, பதிவு செய்து, கையொப்பமும் பெறப்பட வேண்டிய படிவம்.

நடுவண் அரசிலிருந்து ஆங்கிலத்தில் வந்ததாம், அதனால் அப்படியே அச்சிட்டு விட்டார்களாம், என்ன பொருத்தமற்ற வாதம், போலித்தனமான வாதம்;

படிவம் யாருக்கு? வறுமைக் கோட்டிற்குக் கீழே வாழ்பவர்களுக்கு; நம்மூரில் வறுமைக் கோட்டுக்குக் கீழே இருப்பவன் படிக்காத பாமரன்; அல்லது தமிழ் மட்டுமே எழுதப்படிக்கத் தெரிந்த ஏழை, மற்றவர்களைப் போல் ஆங்கிலச் 'செல்வத்தைப் (?) பெறாத ஏழை, அவர்களுக்கு இதைத் தமிழில் தரவேண்டும் எனும் எண்ணம் வரவில்லை மாவட்ட அலுவலர்க்கு.

மொழி பெயர்த்துத் தந்தால் தானே 'அந்த' ஏழைக்குப் புரியும் என்ற எண்ணமே வரவில்லை. மொழி பெயர்க்கவிரும்பாத சோம்பல்தனம்; ஏழைக்கு விளங்கினால் என்ன, விளங்காவிட்டால் என்ன என்று கருதும் அலட்சிய மனோபாவம்;

இப்படிப்பட்ட நிலையில் இவர்களுக்குத் 'தமிழ் மொழிச் சட்டம்' நாற்பதாண்டுகளாக நடைமுறையில் இருப்பது கூட நினைவில் இல்லை; இருந்தாலும் கவலைப்பட வில்லை. எங்கள் கவனத்துக்கு வந்து நாங்கள் தெரிவித்த பிறகுதான் விடை எழுதுகிறார்கள்.

வருங்காலத்தில் தமிழில் அச்சிடுவார்களாம், இதுவாவது நடக்குமா? நடந்திருக்குமா? இப்படி மடல் எழுதிய திட்ட அலுவலர் மாறுதலில் வேறு இடம் போயிருப்பார். கீழே இருப்பவர்கள் புதிதாக வருபவரிடம் தெரிவிப்பார்களோ தெரிவிக்க மாட்டார்களோ?

அப்படியானால் - மீண்டும் - அடுத்த ஆண்டும் - அதே ஆங்கிலப் படிவம் - ஏழைக்கும் - ஆட்சி செய்யும் அலுவலர்க்கும் உள்ள இடைவெளி குறையாத வகையில் அதே ஆங்கிலம்.

6. 25.9.96 அன்று நெ.சா. துறைத் தலைமைப் பொறியாளர்க்கு ஒரு மடல் எழுதினேன்.

அது இதுதான்

பெறுநர்

தலைமைப் பொறியாளர், நெடுஞ்சாலைத் துறை,
எழிலகம், சேப்பாக்கம், சென்னை - 600 005

அன்புடையீர்,

பொருள் : ஊர்ப் பலகைகளில் தமிழ் இடம் பெறுவது குறித்து.

தற்போதுள்ள தமிழ் வளர்ச்சி நடவடிக்கைகள் குறித்துத் தாங்கள் அறிவீர்கள். தமிழகம் முழுவதும் உள்ள தொலைக்கற்கள் (Mile stones) ஊர்களைக் குறிக்கும் பெயர்ப் பலகைகள் (cement Name Boards) ஆகியவற்றில் பல இடங்களில் ஆங்கிலம் மேலேயும் தமிழ் அதற்குக் கீழும் இடம் பெறுவதை நானே நேரில் கண்டுள்ளேன். அனைத்துத் தரப்பினருக்கும் முறையான சுற்றறிக்கை அனுப்பி எல்லா இடத்திலும் தமிழ் முதலிலும் ஆங்கிலம் அதற்கடுத்த இரண்டாவது இடத்திலும் இடம் பெறுமாறு பார்த்துக் கொள்ளவும்."

இருக்கவேண்டிய இடத்தில் 'தமிழ்' இருக்கவேண்டும் என்பதை வற்புறுத்துவதற்காக எடுக்கப்பட்ட முயற்சி இது.

7. சென்னை வானொலி நிலைய இயக்குநர் விசய திருவேங்கடம் சிறந்த தமிழ்ப் பற்றாளர். தமிழ் ஆட்சிமொழித் துறை வேகமாகச் செயற்படத் தொடங்கும் இக்கால கட்டத்தில் நல்ல தமிழ்ச் சொற்கள் நாடெங்கும் பரவுவதற்குத் தாமும் உறுதுணையாக இருக்கவேண்டும் என்று விரும்பினார்.

அதற்காக 'நாளொன்று பிறக்கச் சொல்லொன்று அறிவோம்'

எனும் தலைப்பிலான சிறப்பு நிகழ்ச்சியைச் சென்னை வானொலி நிலையம் ஒலிபரப்பத் தொடங்கியது.

Cell Phone - செல்லிடத்துப் பேசி - செல்பேசி என்றவாறு இரண்டொரு மணித்துளிகள் விளக்கம் தரப்பட்டது.

1.11.1996 அன்று தொடங்கப்பட்ட இந்நிகழ்ச்சி நீண்ட நாட்கள் தொடர்ந்தது. முதலில் தொடங்கப்பட்ட போது அதற்காகப் பதினைந்து மணித்துளிகள் அமையுமாறு நான் ஒரு முன்னுரை வழங்கினேன்.

அதன்பிறகு சொல் விளக்க நிகழ்ச்சி தொடர்ந்தது; எங்களது முயற்சியைப் பாராட்டி, தானும் தன் பங்களிப்பைச் செய்யவேண்டும் என்ற முனைந்த சென்னை வானொலி நிலையத்துக்கும் - நினைத்ததைச் செயற்படுத்திய திரு. விசய திருவேங்கடத்துக்கும் நன்றியையும், பாராட்டையும் தெரிவிக்க வேண்டும்.

8. 'அரசு திடீர் உத்தரவு' என்ற தலைப்பில் 27.11.96 அன்ற தினமலரில் வந்த செய்தி இது.

"தமிழகத்தில் ஜெயலலிதா ஆட்சிக் காலத்தில் ஆங்கிலத்தில் இருந்த முதல் தகவல் அறிக்கை படிவம் தற்போது முதல்வர் கருணாநிதி ஆட்சிக் காலத்தில் மீண்டும் முன்பு இருந்தது போலத் தமிழில் முதல் தகவல் அறிக்கையாக மாற்றப்பட்டுள்ளது.

இந்தியாவில் உள்ள மாநிலங்களில் அந்தந்த மாநில மொழியின் அடிப்படையில் எல்லா போலீஸ் ஸ்டேஷன்களிலும் முதல் தகவல் அறிக்கை பதிவு செய்யப்படும். இதன் அடிப்படையில் தமிழகத்தில் தமிழில் கடந்த ஆண்டு டிசம்பர் வரை இருந்தது. இதில் குற்ற எண், சட்டப்பிரிவு, காவல் நிலையம், வட்டம், மாவட்டம், சம்பவம் நடந்த நாளும், நேரமும், தகவல் கொடுத்த நாள், நேரம், நடந்த இடம், காவல் நிலையத்தில் இருந்து எவ்வளவு தூரம், எந்தப் பக்கம், முதல் தகவல் அறிக்கை நீதி மன்றம், உயர் அதிகாரிகள் ஆகியோருக்கு எப்போது அனுப்பப்பட்டது, தகவல் கொடுப்பவலர் பெயர், தகப்பனார் / கணவர் பெயர், முகவரி, குற்றவாளியின் விபரம், பெயர், தகப்பனார் மற்றும் கணவர் பெயர், முகவரி, முதல் தகவல் அறிக்கை கொடுப்பதில் கால தாமதம் எனில் காரணங்கள், முதல் புலன் விசாரணை செய்யும் காவல் அலுவலரின் பெயர், எண், நிலை, தகவல் கொடுத்தவரின் கையொப்பம் / கைரேகை, பதிவு செய்பவரின் கையொப்பம், பெயர் எண், நிலை ஆகிய விபரங்கள் இருந்தன.

இந்த அறிக்கை அரசு மூலம் அச்சிடப்பட்டு அந்தந்த போலீஸ் ஸ்டேஷன்களுக்கு சப்ளை செய்யப்பட்டது. முதல் தகவல் அறிக்கைக்கு மொத்தம் 6 காப்பிகள் இருந்தது. பெரிய அளவு பேப்பரில் இருந்தது. இதன் பின்பக்கம் முதல் தகவல் அறிக்கையின் முழு விபரம் எழுதலாம். பெரும்பாலும் இந்தப் பக்கத்திலேயே எல்லா விபரங்களையும் எழுதி விடுவார்கள். பெரிய வழக்கு என்றால் தான் தனியாக வெள்ளை பேப்பர் சேர்த்து எழுதுவார்கள்.

இந்த முறையில் ஜெயலலிதா ஆட்சிக் காலத்தில் மாற்றம் செய்யப்பட்டது. எல்லா மாநிலங்களிலும் ஆங்கிலம் தொடர்பு மொழியாக உள்ளது. எனவே முதல் தகவல் அறிக்கையை ஆங்கிலத்தில் எழுதினால் அதை கம்யூட்டரில் புகுத்தி, இந்தியா அளவில் எல்லா

மாநிலங்களிலும் உள்ள கிரிமினல்கள் குறித்து தகவல்களைப் பரிமாறிக் கொள்ளலாம். எனவே இதன் மூலம் விரைவில் குற்றவாளியைக் கைது செய்து விடலாம் என்ற நம்பிக்கையில் ஏற்கெனவே நீண்ட காலமாக இருந்த தமிழ் முதல் தகவல் அறிக்கை ஆங்கிலத்தில் மாற்றப்பட்டது. இதில் தமிழில் இருந்த விபரங்களைத் தவிர கூடுதலாக பதிவு செய்ய வேண்டிய விபரங்கள் இருந்தன.

இதில் பொது நாட்குறிப்பு, நம்பர், நேரம், புகார் வாய்மொழிமூலம் பெறப்பட்டதா, எழுத்து மூலம் பெறப்பட்டதா?, புகார் செய்பவரின் பிறந்த தேதி, ஆண்டு, எந்த நாட்டைச் சேர்ந்தவர், பாஸ்போர்ட் எண், கொடுத்த தேதி, இடம், வேலை, என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. கோர்ட்டிற்கு அனுப்பப்பட்ட தேதி, நேரம் ஆகியவை அடங்கும்.

தமிழில் இருந்த முதல் தகவல் அறிக்கை எல்லா மக்களுக்கும் பொதுவானதாக இருந்தது. ஆனால் இந்த ஆங்கில முதல் தகவல் அறிக்கை மேல் மட்டத்தினருக்கு மட்டும் உள்ளது போல் இருந்தது.

இந்த ஆங்கில முதல் தகவல் அறிக்கை கடந்த ஜனவரி முதல் பின்பற்றப்பட்டது. ஆனால் இது அரசு மூலம் அச்சிட்டு எல்லா போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் அனுப்பப்படவில்லை. மாதிரிக்காக மட்டுமே அனுப்பப்பட்டது.

எனவே போலீசார் தங்கள் நிலையைத் தெரிவித்து புகார் செய்ய வந்தவர்களிடமே அந்த மாதிரியை வைத்து 6 ஜராக்ஸ் காப்பிகள் எடுத்துத் தரும்படி கோரினர். அவர்களும் தங்கள் விதியை நொந்து எடுத்துத் தந்தனர். மேலும் இந்த முதல் தகவல் அறிக்கையில் முழு விபரம் எழுத மிகக் குறைந்த இடமே இருந்தது. இதில் போலீசார் எழுத முடியாமல் புகார் செய்ய வந்தவர்களிடமே வெள்ளைப் பேப்பரையும் வாங்கித் தரும்படி கோரினர். அவர்களும் அதன்படி வாங்கித் தந்தனர். அரசு மூலம் அச்சிட்டுத் தராததால் நம்பர் இல்லாமல் இருந்தது. எனவே அந்தந்த போலீஸ் ஸ்டேஷனிலேயே போலீசார் நம்பர் போட்டுக் கொண்டனர். இதனால் எதையும் செய்யலாம் என்ற நிலை ஏற்பட்டது.

இந்த நிலையில், தற்போது முன்புபோல் தமிழ் முதல் தகவல் அறிக்கையை பின்பற்றும்படி அரசு உத்தரவிட்டுள்ளது. இது தொடர்பாக எல்லா போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் சுற்றறிக்கை மூலம் தகவல் தெரிவிக்கப்பட்டுள்ளது."

முன்பு 'முதல் தகவல் அறிக்கை' (FIR) தமிழில்தான் இருந்தது. இடைக்காலத்தில் ஆங்கிலத்தில் மாற்றப்பட்டது. சூன் 96 முதல்தான் மாற்றம். எங்கள் ஆட்சி தொடங்கியபின் பழையபடி மாற்றப்பட்டது. செய்தியிலேயே முழு விளக்கம் உள்ளது.

9. என் துறைச் செயலாளர்க்கு அனுப்பிய குறிப்புரை இது.

"தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திரு. சீனிவாசனுக்கு - குறிப்புரை :

ஏற்கெனவே 1134/1978இன் படி தமிழக அரசு ஊழியர்கள் அனைவரும் தமிழில்தான் கையொப்பமிட வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டுள்ளது. எனவே இதனை வலியுறுத்தியும் தங்கள் பெயரை எழுதும்போதும் S. அமுதம் என்று எழுதாமல் தந்தையின் பெயர்த் தலைப்பைத் தமிழிலேயே தருமாறும், தலைமைச் செயலகத் துறைகள், சார்நிலை அலுவலகங்கள் மற்றும் மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள் ஆகியவற்றிற்கு அனுப்பும் வகையில் ஓர் அரசாணை பிறப்பிக்கவேண்டும். பிறப்பிக்கும் முன் என்னுடன் கலந்து பேசவும்."

தமிழில் ஒப்பமிடவும், தமிழில் பெயர்த் தலைப்புகளை வைத்துக் கொள்ளவும் வலியுறுத்தப்பட்டது.

1997 ஆம் ஆண்டின் நடவடிக்கைகள்

10. பஞ்சாப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் பேராசிரியர் தன் ஊர்ப் பகுதியில் வரும் 'செய்யாறு' பெரும்பாலும் 'செய்யார்' என்றே எழுதப்பட்டு வருவதைச் சுட்டிக் காட்டியுள்ளார். அதற்கான விடை இது.

17.11.1997
தி.பி.2028/கார்த்திகை 2.

"அன்புடையீர்,

'செய்யாறு' எனும் ஊரின் சிதைவுப் பெயர் குறித்து ஏற்கெனவே கவனத்தில் கொண்டுள்ளேன். ஆவன செய்யப்படும். ஊர்ப்பெயர்களைச் செம்மை செய்வது குறித்தும் முயற்சிகள் மேற்கொண்டுள்ளேன்.

சண்டிகாரின் தமிழ்ப் பள்ளிகள் குறித்தும் ஆவன செய்யப்படும். தாங்கள் கேட்ட நூல்களை வாங்கி அனுப்புவதற்கு ஏற்பாடு செய்யப்படும்."

11. பொதுத்துறைச் செயலாளர்க்கு நான் எழுதிய மடல் இது. 10.12.97 அன்று எழுதப்பட்டது. பொதுத்துறைச் செயலாளர் 12.12.97 அன்று என்னை நேரில் சந்தித்துப் பேசினார். 'இனிமேல் இப்படி நேராவண்ணம் பார்த்துக் கொள்வதாகக் கூறினார்.'

10.12.1997 தி.பி.2028/கார்த்திகை 25

பெறுநர்
திரு. இராமசுந்தரம், இ.ஆ.ப.,
செயலர், பொதுத்துறை, தலைமைச் செயலகம், சென்னை - 9

அன்புக்குரிய திரு. இராமசுந்தரம்,

தமிழ் ஆட்சிமொழித் துறை 18 மாதங்களாக இயங்குவதை அறிவீர்கள். மேலும் இத்துறையின் பெயரே தமிழ் ஆட்சிமொழித் துறைதான். ஆனாலும் கடந்த 40 ஆண்டுகளாக நிறைவேற்றப்பட்ட சட்டம், அரசாணைகள், மடல்கள், துறை அமைச்சரின் முயற்சிகள், சட்டமன்ற அறிவிப்புகள், தமிழ் நாடெங்கும் தெரிவிக்கப்பட்டுள்ள கருத்துக் குவியல்கள் ஆகிய எவை குறித்தும் பல மேல்நிலை அலுவலர்கள் கவலைப்படுவதே இல்லை என்பதோடு திட்டமிட்டே அலட்சியப்படுத்துகிறார்களோ என்ற எண்ணமும் தோன்றுகிறது. இந்நிலையில் மாண்புமிகு அமைச்சர் புலவர் செங்குட்டுவன் 1.12.97 முதல் மீண்டும் தன் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறார் என்ற அறிவிப்பையே தாங்கள் ஆங்கிலத்தில்தான் வெளியிட்டுள்ளீர்கள். இது எந்த வகையில் சரியானது என்பதை நீங்கள்தான் விளக்கவேண்டும். எனவே, இதுகுறித்து தாங்கள் தெளிவான விளக்கம் ஒன்றை அளிப்பீர்கள் என்று நம்புகிறேன். தங்கள் விடையைப் பெற்ற பின்னரே, இது குறித்து பொதுவான நடவடிக்கை எதுவாக இருக்கலாம் என்பதை மாண்புமிகு முதல்வர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு செல்ல விரும்புகிறேன்."

12. நாகையிலிருந்து மறைமலையடிகளாரின் பேரன் 'கிள்ளிவேள்' எனக்கொரு மடல் எழுதியிருந்தார்.

"தாங்கள் எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்பதில் அரசின் கொள்கைப்படி மிக ஆவல் உடையவராய் உள்ளீர்கள். மகிழ்ச்சி. தமிழில் இலட்சார்ச்சனை வரவேற்கத்தக்கதும், தேவையானதுமாகும். 'தமிழ்க் கடல்' மறைமலையடிகளாரின் கனவு நனவாகும் நிலை.

தமிழ் நாட்டில் ஆட்சி மொழி தமிழ், நல்ல ஏற்பாடு. தமிழ் பேசுவோர் புரிந்து, அறிந்து செயல்பட நல்ல வாய்ப்பு. அதே நேரத்தில் அலுவலர் என்ற பெயரில் உள்ள சிலர் மொழிப்பற்றற்ற, தங்கள் புத்தியை மாற்றாமல் செயல்பட்டு அரசுக்கு அவ்வப்பொழுது அவப்பெயர் வாங்கித் தருவதில் குறியாய் உள்ளனர்.

யான் அறிந்த சில சான்றுகளைத் தருவேன்.

1. அக்டோபர்த் திங்களில் கிராமப்புறங்களில் வீடு கட்டுவோர் கடைப்பிடிக்கவேண்டிய விதிமுறைகள், ஊராட்சித் தலைவர்களின் பணிமற்றும் கண்காணிப்புப் பற்றிய ஓர் அரசாணை வந்தது.

12 பக்கமுள்ள அவ்வாணை நாகைப்பட்டினம் மாவட்ட ஆட்சித் தலைவர் அவர்களால் ஊராட்சி மன்றத் தலைவர்களுக்கு அனுப்பப்பெற்றுள்ளது.

முற்றிலும் ஆங்கிலம். இதுதான் தமிழ் ஆட்சிமொழியின் நிலையா?

நம் நாட்டில் ஊராட்சி மன்றத் தலைவர்களுள் 75 விழுக்காட்டினர் அவ்வளவு எழுதப்படிக்கத் தெரியாதவர்கள், ஏன் பாராளுமன்ற உறுப்பினரே எழுதப்படிக்கத் தெரியாதவர்களாய் உள்ளனர் (எடுத்துக்காட்டு : பூலான்தேவி)

இந்நிலையில் அவர்களுக்கு அரசாணைகள் தமிழில் வந்தாலே படித்துப் புரிந்து கொள்வது மிகக் கடினம். அவ்வாறிருக்க ஊராட்சிகளுக்கு ஆங்கிலத்தில் அரசாணை மிகப்பெரிய நகைச்சுவை, இது தேவையா?

இதன் உட்பொருளை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். திருவாளர் ஆட்சித்தலைவரின் நோக்கம்தான் என்ன?

1. அரசு எவ்வளவுதான் தமிழ் வளர்ச்சிக்கு முயன்றாலும் நாங்கள் ஆங்கிலேயரின் அடிவருடிகளே என்பதை மெய்ப்பிப்பதா?
2. தமிழ் என்ன, அதில் என்ன இருக்கிறது. ஆங்கிலத்துக்கு இணையாகுமா என்பதா?
3. அரசு என்ன சொன்னாலும் கேளோம், எம் வழியில் நாங்கள் செல்வோம் என்ற அடாவடித்தனமா?
4. தமிழ் அறியா அறியாமையின் விளைவா?
5. அரசுக்குக் கெட்டபெயர் வாங்கித் தருவதோடு அல்லாமல் மக்களின் எதிர்ப்பை ஆக்கப் பூர்வமாக வாங்கித்தருவதில் உள்ள ஆர்வமா?
6. அரசின் கண்காணிப்பு எங்கேயுள்ளது? நம் வழியில் நாம் செல்வோம் என்ற குறிக்கோளா?
7. தமிழ்த் தட்டச்சுப் பொறி இல்லாக் குறைபாடா? என்னவென்று அறிய ஆவல்?.

மேலும் ஓர் எடுத்துக்காட்டு

தரங்கம்பாடி சார் பதிவாளர் அலுவலத்திற்கு ஓர் அரசாணை மாவட்டப் பதிவாளரிடமிருந்து வந்துள்ளது. இக்கிழமையில் பதிவுகளுக்கு எவ்வளவு கட்டணம் வாங்கவேண்டும். விண்ணப்பத்தாள்களில் செய்ய வேண்டிய மாற்றங்கள் பற்றியது.

முழுவதும் ஆங்கிலத்தில். படியாத, எளிய ஊர்மக்களோடு தொடர்புடைய துறைகளிலேயே அடிமட்டத்திலேயே தமிழ் இல்லை, மற்றப் பகுதிகளைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை."

அவருடைய வரிகளைக் கவனியுங்கள்.

'அலுவலர் என்ற பெயரில் உள்ள சிலர்' மொழிப் பற்றற்ற முறையிலும், தங்கள் 'புத்தி'யை மாற்றாமலும் செயல்பட்டு அரசுக்கு அவ்வப்போது அவப்பெயர் வாங்கித் தருவதில் குறியாய் உள்ளனர்."

எவ்வளவு உண்மையான குற்றச்சாட்டு! அலுவலர்களில் சிலர்தான் ஆட்சிமொழித் திட்டத்தைச் சிதைக்கின்றனர் என்ற நான் அடித்துச் சொல்லி வருகிறேன். அதை உறுதி செய்யும் மடல்தான் இது. இதுகுறித்து மாவட்ட ஆட்சித் தலைவர்க்கு மடல் எழுதப்பட்டது.

சார்பதிவாளர் அலுவலகத்தொடர்பாக, அத்துறை அமைச்சர் ஐ. பெரியசாமிக்கு 12.12.97 அன்று மடல் எழுதப்பட்டது. அது இதுதான்.

அன்புடையீர்,

நாகப்பட்டினத்தில் உள்ள மறைமலையடிகளாரின் பேரன் எனக்கொரு கடிதம் எழுதியுள்ளார். அதில் கண்ட செய்திகளை அப்படியே தங்களுக்குத் தந்துள்ளேன்.

செய்தி

தரங்கம்பாடி சார்பதிவாளர் அலுவலத்திற்கு ஓர் அரசாணை மாவட்டப் பதிவாளரிடமிருந்து வந்துள்ளது. இக்கிழமையில் பதிவுகளுக்கு எவ்வளவு கட்டணம் வாங்கவேண்டும் - விண்ணப்பத் தாள்களில் செய்யவேண்டிய மாற்றங்கள் பற்றியது.

முழுவதும் ஆங்கிலத்தில். படிக்காத, எளிய ஊர்மக்களோடு தொடர்புடைய துறைகளிலேயே - அடிமட்டத்திலேயே - தமிழ் இல்லை, மற்றப்பகுதிகளைப் பற்றிச் சொல்லத்தேவையில்லை.

இது குறித்து தாங்கள் அனைத்து அலுவலர்களுக்கும் ஒரு தெளிவுரை வழங்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

* * *

13. பொறுப்பேற்று எட்டுமாதங்கள் ஆகியுள்ளன. இதற்குள் என்னென்ன பணிகள் நடைபெற்றுள்ளன என்பது குறித்து மாண்புமிகு முதல்வர் அவர்கட்கே ஒரு 'பார்வைக் குறிப்பு' அனுப்பினேன். அந்த மடல் இதுதான்.

மாண்புமிகு முதல்வர் அவர்கள் பார்வைக்கு :

1996-97 ஆம் ஆண்டின் வரவு செலவுத் திட்டத்தில் தமிழ் ஆட்சிமொழித் திட்டம் குறித்து இடம் பெற்ற பகுதி:

தமிழைப் பல்வேறு முனையிலும் வளர்த்திட இவ்வரசு முன்வந்துள்ளது. அதற்காகவே தனிக்கவனம் செலுத்தித் தமிழை வளர்க்கத் தனி அமைச்சகம் உருவாக்கப்பட்டுள்ளது. வெகு

விரைவில் தமிழ் முழு ஆட்சிமொழியாக விளங்க ஆவன செய்யப்படும். 1956இல் இயற்றப்பட்ட ஆட்சிமொழிச் சட்டம், பல அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டும் முழுமையாக நிறைவேறவில்லை எனும் ஆதங்கத்தைப் போக்கும் வகையிலும், தலைமைச் செயலகத்திலிருந்து இப்பணி தொடங்கும் வகையிலும், முதல் கட்டமாகத் தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் 500 வழங்கிட இந்த அரசு முன்வந்துள்ளது. இதனைச் செயற்படுத்தும் வகையில் கீழ்க்கண்ட பணிகளை நிறைவேற்றியுள்ளோம்.

1. 500 தமிழ்த் தட்டச்சுப்பொறிகள் முறைப்படி வாங்கப்பட்டு, தலைமைச் செயலகத்தின் துறைகள் அனைத்தும் இப்போது அவற்றைப் பயன்படுத்தத் தொடங்கியுள்ளன. 874 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகள் 374 ஆகவும், 304 தமிழ்த் தட்டச்சுப் பொறிகள் 804 ஆகவும் மாறியுள்ளன.

2. எடுக்கப்பட்ட 500 ஆங்கிலத் தட்டச்சுப் பொறிகளின் விசைப்பலகை (Key Board) களும் தமிழில் மாற்றப்பட ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

3. அரசாணைகள் அனைத்தும் தமிழில் வெளியிடப்பட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இணையாக ஆங்கிலத்திலும் ஆணைகள் வெளியிடலாம் என்று தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

4. பொதுமக்கள் தமிழில் எழுதும் மடல்கள் மற்றும் வேண்டுகோள்கட்கு அரசு அலுவலர்கள் தமிழில் மட்டுமே விடை தரவேண்டும் என்று தமிழகம் முழுவதும் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. அப்படியே எழுதாத அலுவலர்கள் குறித்துச் செய்தி வருமாயின், தக்க நடவடிக்கைக் குறிப்பும் அனுப்பப்படுகிறது.

5. கன்னியாகுமரி, நெல்லை விருதுநகர், சிவகங்கை, மதுரை, கோவை, தருமபுரி, திருச்சிராப்பள்ளி ஆகிய மாவட்டத் தலைநகர்களில் ஆட்சிமொழிக் கருத்தரங்குகளும் நடத்தப்பட்டு அலுவலர்கள் அனைவர்க்கும் தெளிவான கருத்துரைகள் வழங்கப்பட்டுள்ளன.

6. ஆட்சிச் சொல் அகராதி பொதுவாகவும் துறை வாரியாகத் தனித் தனியாகவும் உள்ளன. இந்த வகையில் உள்ள 84 அகராதிகளையும் மறு ஆய்வு செய்து, புதுக் கலைச் சொற்களையும் சேர்த்து வெளியிட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

7. வணிகர்கள் தம் பெயர்ப் பலகைகளில் பயன்படுத்திட 515 சொற்களைக் கொண்ட 'வணிகச் சொற்பட்டியல்' வெளியிடப்பட்டு இன்று நாடெங்கும் பரப்பப்பட்டுள்ளது.

(14) தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தைச் செயற்படுத்தும் வகையில் அனைத்துத் துறைகளிலும் தமிழின் பயன்பாட்டை விரிவுபடுத்துவது என முடிவெடுக்கப்பட்டது. அதன்படி மாண்புமிகு வணிக வரித்துறை அமைச்சர் அவர்கள், 1997-1998 ஆம் ஆண்டிற்கான வணிகவரித்துறையின் மானியக் கோரிக்கையைச் சட்டப் பேரவையில் முன் வைத்து, 1997ஆம்

ஆண்டு ஏப்ரல் திங்கள் 5 ஆம் நாள் அன்று விவாதத்திற்குப் பதில் அளித்து ஆற்றிய உரையில், தமிழ்நாடு பொது விற்பனை வரிச்சட்டம் 1959ன் கீழ் உள்ள அட்டவணைகள் தமிழாக்கம் செய்யப்பட்டு முதல் கட்டமாக வெளியிடப்படும் என்றும், பின்னர் விற்பனை வரிச் சட்டத்தின் தமிழாக்கம் வெளியிடப்படுமென்றும் அறிவித்திருந்தார்.

அந்த அறிவிப்பின்படி வணிக வரித்துறை முதல் முயற்சியாக அட்டவணைகளைத் தமிழாக்கம் செய்து ஒரு கையேட்டினை வெளியிட்டுள்ளது. மாண்புமிகு தமிழக முதல் அமைச்சர் இக்கையேட்டை வெளியிட்டார்கள். அதனை வணிக வரித்துறை அமைச்சர் மாண்புமிகு வே. தங்கபாண்டியன் முன்னிலையில் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி மற்றும் பண்பாட்டுத் துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் பெற்றுக்கொண்டார்கள். நீண்ட காலத்துக்குப் பின் வணிகர்களுக்கும், வணிக வரித்துறையின் அலுவலர்களுக்கும் பெரிதும் உதவும்படி இந்த அட்டவணை அமைந்துள்ளது. இது தமிழ் ஆட்சிச் செயலாக்கத்தின் ஒரு படிக்கட்டாகும்.

(15) திருநெல்வேலியில் நடைபெற்ற ஆட்சிமொழிக் கருத்தரங்கில் பொதுமக்கள் சார்பில், பாளையங்கோட்டை நகரமன்ற முன்னாள் தலைவர் திரு. சுப. சீத்தாராமன் பேசும்போது, பத்திரப் பதிவுத்துறையில் பயன்படுத்தப்படும் வில்லங்கச் சான்றிதழ்களில் மோசமான கலப்பு நடை இருப்பதை எடுத்துக் காட்டினார். "தொடர்புடைய துறை அமைச்சர் வாயிலாக மாற்றப்படும்" என்று தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் அறிவித்தார். அதன்படி, தமிழ் வளர்ச்சித்துறையிலிருந்து அமைச்சர் மூலமாக பதிவுத்துறை அமைச்சர் மாண்புமிகு இ. பெரியசாமி அவர்களுக்கு அனுப்பப்பட்டது. அதனை ஏற்று அமைச்சர் ஆணை பிறப்பித்தார். தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சர் 20.6.97 அன்று அக்கோப்பில் கையெழுத்திட்டு, அப்பணியை நிறைவேற்றினார்.

(16) தஞ்சாவூர், கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கத் துணை விதிகள் ஆங்கிலத்தில் உள்ளன. இது குறித்து அதன் தலைவர் இந்திரசித் 16.7.97 அன்று மடல் எழுதியிருந்தார்.

"தமிழ்நாட்டில் உள்ள கூட்டுறவு வீட்டு வசதி சங்கங்களின் உபவிதிகள் ஆங்கிலத்தில் உள்ளன. தமிழ் ஆட்சிமொழியாக இருக்கும் நிலையில் உபவிதிகள் மட்டும் ஆங்கிலத்தில் இருப்பதில் ஞாயமில்லை. எனவே, கூட்டுறவு வீட்டுவசதி சங்கப்பதிவாளர் மூலம் சங்க உபவிதிகள் தமிழில் இருக்க ஆவன செய்ய அன்புடன் வேண்டுகிறோம்."

இது குறித்து உடனடியாக வீட்டு வசதித்துறை அமைச்சர்க்குத் தெரிவிக்கப்பட்டது. 24.10.97 அன்று கூட்டுறவுத் துறைச் செயலர்க்கும், வீட்டு வசதித் துறைச் செயலர்க்கும் மடல்கள் எழுதப்பட்டன.

பெறுநர்

திரு. ம. இராமு, இ.ஆ.ப.,
செயலர், கூட்டுறவுத்துறை,
சென்னை

திரு. ஏ.பி. முத்துசாமி, இ.ஆ.ப.,
செயலர், வீட்டு வசதித்துறை
சென்னை

அன்புடையீர்,

பொருள் : கூட்டுறவு வீட்டுவசதி சங்கத் (பைலாக்கள்) துணை விதிகள் தமிழில் அச்சடித்து வழங்க நடவடிக்கை தொடர்பாக.

"தமிழ் நாட்டிலுள்ள கூட்டுறவு வீட்டு வசதி சங்கங்களின் துணை விதிகள் அனைத்தும் ஆங்கிலத்தில் உள்ளன. எனவே, அவை அனைத்தும் தமிழில் அச்சிட்டு வழங்கப்பட ஆவன செய்திட வேண்டுகிறேன். இது தொடர்பாக ஒரு வேண்டுகோள் இணைக்கப்பட்டுள்ளது."

17. நேர்முக உதவியாளர்கள் அளவில்

கடலூர் மாவட்டம் காட்டுமன்னார் கோவில் வட்டம் திருமுட்டம் அருள்மிகு பிரணவபுரீசுவரர் ஆலயத்திற்குத் திருப்பணிக்குழு அமைப்பது பற்றியது இக்கோப்பு.

இதில் அனைத்தும் தமிழில், பட்டியலை அறநிலையத்துறைக்கு அனுப்பும் நேர்முக உதவியாளரின் மடல் மட்டும் ஆங்கிலத்தில் - அதுவும் பிழையான ஆங்கிலத்தில் (To sent)

To

The Addl. commr. of Nungambakkam, Chennai.

Sir,

As desired by the Hon'ble Minister for back ward classes, I am directed to sent here with the particulars for your kind consideration.

பிற்படுத்தப்பட்டோர் துறை அமைச்சரின் நேர்முக உதவியாளர்க்கு இந்த மடலைத் தமிழில் எழுதவேண்டும் என்ற எண்ணம் வரவில்லை. தப்பும் தவறுமாக அரை குறை ஆங்கிலத்தில் எழுதினாலும் எழுதுவோமே தவிரத், தமிழில் எழுத மாட்டோம் என்று அடம் பிடிக்கிறார்களா?

(18) கூட்டுறவு வங்கிகளில் தமிழில் எழுதும்படி வற்புறுத்தி, கூட்டுறவுத்துறை அமைச்சர்க்கு 24.10.97 அன்று ஒரு மடல் எழுதினேன். மடலிலேயே விளக்கம் உள்ளது.

பெறுநர்

மாண்புமிகு கூட்டுறவுத்துறை அமைச்சர் திரு. கா.ந. நேரு அவர்கள், சென்னை

அன்புடையீர்,

பொருள் : கூட்டுறவுத்துறை வங்கிகளில் தமிழில் எழுதும்படி வற்புறுத்தல்.

கும்பகோணம் மத்திய கூட்டுறவு வங்கியில் தமிழில் வரைவு ஓலை கேட்டால் பழனிச்சாமி என்ற எழுத்தர் அதைக்கேலி செய்வதும், தமிழில் எழுதிக்கொடுக்க மறுப்பதுமான செயல்களில் ஈடுபட்டு வருகிறார். தமிழை ஆட்சிமொழியாக்கும் அரசாணைக்கு எதிராக இவர் ஈடுபடுவதாக இவர் மீது நடவடிக்கை எடுக்கலாம். எடுப்பீர்கள் என்று நம்புகிறேன். இதற்கான புகார்க் கடிதமும் இணைக்கப்பட்டுள்ளது. இவருக்கு மட்டுமல்லாது அனைத்து வங்கிகளுக்கும் இது தொடர்பாக ஒரு சுற்றறிக்கை அனுப்பினால் நலமாக இருக்குமென்று கருதுகிறேன்.

1998 ஆம் ஆண்டு

(19) 21.3.98 ஆம் நாளைய குறிப்பு

கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் (1983) தமிழில் வெளிவந்துள்ளது.

விதிகள் மற்றும் பிரதம சங்கங்களின் துணை விதிகள் ஆங்கிலத்தில் உள்ளதாகவும், அவை தமிழில் தரப்படவேண்டும் என்றும் பலர் எனக்கு எழுதினர். அவிநாசி சங்கம் எழுதிய மடலை மேற்கோள் காட்டி மாண்புமிகு கூட்டுறவு அமைச்சர்க்கு ஒரு மடல் எழுதினேன். அமைச்சர், செயலாளர், பதிவாளர் ஆகியோர் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டு மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபட்டுள்ளனர் (21.3.98).

(20) 28.5.98 அன்று போக்குவரத்துத் துறை அமைச்சர்க்கு ஒரு மடல் எழுதினேன்.

இந்த மடலைப் போ.வ.துறை அமைச்சர், மேல் நடவடிக்கைக்காக போ.வ. துறை ஆணையருக்கு அனுப்பி வைத்தார். அவர் 8.6.98 அன்று அமைச்சர்க்கு ஒரு மடல் அனுப்பி, அதன் படியை எனக்கும் அனுப்பி வைத்தார்.

ஜி.ஏ. ராஜ்குமார், இ.ஆ.ப.,
போக்குவரத்து ஆணையர்

கடிதம் எண். 4/48869/98-8.9.98

மாண்புமிகு போக்குவரத்துத் துறை அமைச்சர் அவர்கள்,
தலைமைச் செயலகம், சென்னை - 9

அன்பார்ந்த அய்யா,

பொருள் : போக்குவரத்துத் துறையில் அனைத்து நடவடிக்கைகளும் தமிழில் எடுப்பது - சம்பந்தமாக.

பார்வை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் மாண்புமிகு போக்குவரத்து துறை அமைச்சர் அவர்களுக்கு எழுதிய கடிதம் நாள் : 28.5.98

பார்வையில் கண்டுள்ள கடிதத்தில் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் போக்குவரத்துத் துறையில் அனைத்து நடவடிக்கைகளும் ஆங்கிலத்தில் தொடர்கின்றன என்றும் இதுதவிர்க்கப்பட்டு வருங்காலங்களில் அனைத்து நடவடிக்கைகளும் தமிழில் எடுக்கப்படவேண்டும் எனவும் குறிப்பிட்டு உள்ளார்கள். இத்துறையில் அனைத்து நடவடிக்கைகளும் தமிழில்தான் எடுக்கப்பட வேண்டும் என அனைத்து துணைப் போக்குவரத்து அலுவலர்களுக்கு 8.6.98 அன்று அறிவுறுத்திக் கடிதம் அனுப்பப்பட்டுள்ளது. கடிதத்தின் நகல் தங்களின் மேலான பார்வைக்கு அனுப்பியுள்ளேன் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

அது மட்டுமன்றி, மா.ஆ. தலைவர் மற்றும் வ.போ.வ. அதிகாரிகள் அனைவர்க்கும் ஒரு மடல் அனுப்பியுள்ளார்.

ஜி.ஏ. ராஜ்குமார், இ.ஆ.ப.,
போக்குவரத்து ஆணையர்

கடிதம் எண். எண்.4/48869/சூ/98 நாள் : 8.9.98

அன்பார்ந்த திரு,

பொருள் : போக்குவரத்துத் துறையில் அனைத்து நடவடிக்கைகளும் தமிழில் எடுப்பது - சம்பந்தமாக

பார்வை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் மாண்புமிகு போக்குவரத்துத் துறை அமைச்சர் அவர்களுக்கு எழுதிய கடிதம் நாள் : 28.5.98

பார்வையில் கண்டுள்ள கடிதத்தில் மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமய மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் மாண்புமிகு போக்குவரத்துத் துறை அமைச்சர் அவர்களுக்கு எழுதிய மடலில் போக்குவரத்துத் துறையில் நடவடிக்கைகள்

அனைத்தும் ஆங்கிலத்தில் தொடர்கின்றன என்றும், இனிமேல் தமிழில்தான் நடைபெற வேண்டும் எனவும் வலியுறுத்தியுள்ளார்கள். (பார்வையில் கண்டுள்ள கடிதத்தின் நகல் இணைக்கப்பட்டுள்ளது)

தமிழில் நடவடிக்கைகள் தொடர அனைத்து நடவடிக்கைகளையும் எடுக்க வேண்டும். எனவே, அனைத்து துணைப் போக்குவரத்து ஆணையர்கள் மற்றும் வட்டாரப் போக்குவரத்து அலுவலர்கள் தங்கள் அலவலகங்களில் பணியாற்றும் பணியாளர்களுக்குத் தக்க அறிவுரைகள் வழங்கி இத்துறையில் வரும் காலங்களில் குற்றக் குறிப்பாணை, விளக்கம் கேட்டல் போன்ற அனைத்துக் கடிதத் தொடர்புகள் தமிழில்தான் நடைபெற வேண்டும் என அறிவுறுத்தப்படுகிறார்கள். இதை அமுல்படுத்துவதில் எவ்வித சுணக்கமும் இருக்கக்கூடாது.

இக்கடிதம் பெற்றுக் கொண்டமைக்கு உடன் ஒப்புதல் அளிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறாகத் தொடர் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது.

(21) இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் 10.6.98 அன்று அனைத்து அலுவலர்க்கும் ஒரு சுற்றறிக்கை அனுப்பியுள்ளார். அதனை அப்படியே படிக்கலாம்.

மிக அவசரம் : தனிக் கவனம்

ஆணையாளர் அலுவலகம்
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை - 34

சுற்றறிக்கை ந.க. 87647/97/பி1 நாள் 10.6.1998

பொருள் : பணிப்பிரிவு - இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை - தமிழில் கையொப்பமிடுதல் மற்றும் கோப்புகள் மற்றும் ஆவணங்களைத் தமிழில் பேணுதல் - அறிவுரை வழங்கப்படுகிறது.

பார்வை : மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் கடிதம் நாள்.1.6.98

**1978க்குப் பின்னர் அனைத்து அரசு அலுவலர்களும் தமிழில்தான் கையெழுத்து இடவேண்டும் எனவும், ஆவணங்கள் மற்றும் கோப்புகளைத் தமிழில்தான் பேணவேண்டும் எனவும் அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டிருந்தும், அதனைச் செயற்படுத்துவதில்லை என்று அறநிலையத்துறை அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டுள்ளது. இச்செயல் அரசாணையை மீறிய குற்றமாகவும், தண்டனைக்குரியதாகவும் கருதப்படுகிறது. இது தொடர்பாக அனைத்து அலுவலர்களுக்கும் கீழ்க்கண்ட அறிவுரைகள் வழங்கப்படுகின்றன.**

அனைத்து அலுவலர்களும், பணியாளர்களும் தமிழில்தான் ஒப்பமிடவேண்டும் எனவும், அலுவலகக் கோப்புகள் அனைத்தையும் தமிழில் பேணுவதோடு குறிப்புகள் மற்றும் வரைவுகள் தமிழில்தான் தயாரிக்கப்படவேண்டும் எனவும், அனைத்து ஆவணங்களும் தமிழிலேயே பேணப்படவேண்டும் எனவும் கண்டிப்பாக அறிவுறுத்தப்படுகிறது.

மேற்படி அறிவுரைகளைத் தத்தம் கட்டுப்பாட்டில் பணிபுரியும் அனைத்து அலுவலர்களுக்கும் மற்றும் பணியாளர்களுக்கும் தெரிவித்து, மேற்படி அறிவுரைகளைக் கண்டிப்பாகக் கடைப்பிடிக்க அறிவுரை வழங்கியும், இச் சுற்றறிக்கையைப் பெற்றமைக்கு உடனடியாக ஒப்புதலை அனுப்பி வைக்கும்படியும் அனைத்துச் சார்நிலை அலுவலர்களும் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

(ஒப்பம்) ச. மெய்கண்ட தேவன்
ஆணையாளர்

எம் துறையில் பணியாற்றும் இணை ஆணையர் முதலாகச் செயல் அலுவலர்கள் வரை இச்சுற்றறிக்கை அனுப்பப்பட்டுள்ளது. இ.ச. அ.நி. துறையில் தமிழ் ஆட்சி மொழிச் செயலாக்கம் சிறப்பாகவே உள்ளது.

(22) பழநி முருகன் கோவிலில் ஏராளமான தங்கும் விடுதிகள் உள்ளன. அங்கு தங்க வரும் வாடிக்கையாளர்களுக்குத் தரப்படும் "கைச் சாத்துகள்" ஆங்கிலத்தில் உள்ளன என்று த.மா.க. தோழர் பன்னிருகைச் செல்வன் மடல் எழுதியிருந்தார். அதனை பழநி இ.ஆ. செயராமனுக்கு அனுப்பி வைத்தேன். அவர் எழுதிய விடை இதுதான்.

1. பார்வையில் காணும் நேர்முகக் கடிதம் தொடர்பாகப் பின்வரும் பதில்கள் பணிந்து சமர்ப்பிக்கப்படுகிறது.

2. திருக்கோவில் தங்கும் விடுதி அறைப் பதிவு ரசீது புத்தகங்கள் ஏற்கெனவே ஆங்கிலத்தில் அச்சிடப்பட்டு இருப்பில் உள்ளன. ஆங்கிலத்தில் உள்ள இரசீது புத்தகத்தின் இருப்புத் தீர்ந்தவுடன் தமிழாக்கம் செய்த இரசீதுகள் வழங்கப்படவுள்ளது.

இது விபரம் மாண்புமிகு அமைச்சர் அவர்களுக்குத் தெரிவிக்க ஆவன செய்ய கேட்டுக் கொள்ளப்படுகிறது.

* * *

எனவே கடந்த காலத்தில் இது கவனிக்கப்படவில்லை என்பதையும், இப்போது கவனிக்கப்படுகிறது என்பதையும் எல்லாரும் ஒப்புக் கொள்வர்.

(23) தமிழக அரசுத் துறைகள் - தமிழ் நாட்டுக்குள் இயங்குபவை, தமிழர்களுக்காக விளம்பரம் செய்யும் போது, பல துறைகள் ஆங்கிலத்திலேயே வெளியிடுவதைப் பார்த்தேன். 24.8.1998 அன்று முதல்வர் பார்வைக்கு ஒரு மடல் எழுதினேன்.

மாண்புமிகு முதல்வர் அவர்கள் பார்வைக்கு.

பொருள் : அரசுத் துறையினர் விளம்பரங்கள் வெளியிடுவது - குறித்து.

தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் கடுமையான முறையில் செயற்படுத்தப்பட்டும் இன்னும் பலர் அதைப் பொருட்படுத்துவதில்லை என்ற நிலை உள்ளது. இன்னும் பல துறைகள் தங்களுடைய விளம்பரங்களை ஆங்கிலத்தில் மட்டுமே வெளியிடுகின்றன.

(எ.கா.)

1. வணிக மற்றும் தொழில் துறை இயக்குநர் அலுவலகம் - தினமணி - மதுரைப் பதிப்பு - 6.7.98
2. மாவட்ட ஊரக வளர்ச்சி முகமை - தினமலர் - கோவைப் பதிப்பு - 9.4.98
3. ஆணையாளர், திருமங்கலம் நகராட்சி, மதுரை மாவட்டம் - தினமணி - மதுரைப் பதிப்பு - 6.7.98

இவற்றின் மீது என்ன நடவடிக்கை எடுக்கலாம் என்பது குறித்து மாண்புமிகு முதல்வர் அவர்களின் வழிகாட்டுதல் வேண்டப்படுகிறது."

நகராட்சி ஆணையர் கூடத் தமிழில் விளம்பரம் வெளியிடுவதில்லை என்றால் எவ்வளவு கேவலம்!

(24) தொழில் நுட்பக் கல்வி இயக்ககத்தின் சார்பில் நடத்தப்படும் பட்டயத் தேர்வுகளைத் தமிழில் எழுத இசைவு தரப் பட்டுள்ளது. ஆனால் வினாத் தாள்கள் மட்டும் ஆங்கிலத்தில் மட்டுமே உள்ளன. அதனால் அத்துறையின் இயக்குநர்க்கு ஒரு மடல் எழுதப்பட்டது.

17.10.98 தி.பி.2029/புரட்டாசி 31.

பெறுநர்

இயக்குநர்
தொழில் நுட்பக் கல்வி இயக்ககம் (Director of Technical Education)
பட்டேல் சாலை, சென்னை - 25

அன்புடையீர்,

தமிழ்நாட்டுத் தொழில் நுட்பக் கல்லூரிகளில் முதலாம் ஆண்டு பட்டய வகுப்புகளில் (Diploma courses) தேர்வுகள் எழுதும்போது தமிழில் எழுதலாம் என்று அரசு அனுமதி வழங்கியுள்ளது. ஆனால் வினாத் தாள்கள் ஆங்கிலத்தில் மட்டுமே உள்ளன. எனவே வேதியியல்

(Chemistry) இயற்பியல் (Physics) ஆகிய வினாத்தாள்களிலும், ஏனைய வினாத்தாள்களிலும் தமிழும் ஆங்கிலமும் இடம் பெறுமாறு ஆவன செய்யவும்.

அன்புடன்

* * *

எந்தத் துறையில் இருந்தாலும், எந்த மூலையில் இருந்தாலும் தமிழ்த் தொடர்பான நடவடிக்கைகளைச் சளைக்காமல் மேற்கொண்டுள்ளோம் என்பதை உணரமுடியும்.

(25) வணிகவரித்துறையின் சார்பில் வெளியிடப்படும் படிவங்கள் ஆணைகள் எல்லாம் ஆங்கிலத்திலேயே உள்ளன. அதிகக் கல்வியறிவில்லாத, தமிழைத் தவிர வேறுமொழி அறியாத, தமிழையும் முழுமையாக அறியாத பலர் வணிகர்களாக உள்ளனர். அவர்களுக்குரிய படிவம் ஆங்கிலத்தில் இருக்கிறதே என்று ஒரு நாளாவது அந்தத் துறையினர் நினைத்திருப்பார்களா?

இதோ, திருப்பூர், காயிதே மில்லத் பேரவை எனக்கு ஒரு மடல் எழுதுகிறது. அதில் உள்ள சில பகுதிகள்.

இந்தியா எங்கள் தாய்நாடு

இஸ்லாம் எங்கள் வழிபாடு

காயிதே மில்லத் பேரவை

இந்திய யூனியன் முஸ்லீம் லீக்

20, பெரிய தோட்டம் 4 வது வீதி

காங்கேயம் ரோடு, திருப்பூர் - 641 604

தேதி 29.08.97

வணிகவரித்துறை சம்பந்தப்பட்ட படிவங்கள் அறிவிப்புகள்

தமிழில் மாற்றக்கோரி, தமிழக அரசுக்கு காயிதே மில்லத் பேரவை வேண்டுகோள்.

ஆக. 29: இந்திய யூனியன் முஸ்லீம் லீக் திருப்பூர் நகர காயிதே மில்லத் பேரவை செயலாளர் எஸ்.ஏ. ஸித்திக் தமிழக அரசுக்கு விடுத்துள்ள கோரிக்கை.

தமிழுக்கு முன்னுரிமை அளித்து தமிழ்ப் பண்பாடு மற்றும் கலாச்சார துறைக்கு என ஒரு அமைச்சரையும் ஏற்படுத்தி தமிழ்மொழியின் வளர்ச்சிக்காக பாடுபட்டு வரும் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களும் மாண்புமிகு அமைச்சர் தமிழ்க்குடிமகன் அவர்களும் வணிகவரித் துறையில் பயன்படுத்தப்படும் படிவங்கள், அறிவிப்புகள், உத்தரவுகள் முதலியவற்றைத் தமிழில் அச்சடித்து வியாபாரிகளுக்கு வழங்கிடத் துரித ஆணை பிறப்பிக்க வேண்டும்.

பெரும்பாலான வியாபாரிகளுக்கு ஆங்கிலத்தில் வணிகவரித் துறையில் பிறப்பிக்கப்படும் உத்தரவுகள் அறிவிப்புகள் போன்றவை மிகுந்த சிரமத்திற்கும் அறிந்து கொள்ளும் விஷயத்தில் தாமதத்தையும் ஏற்படுத்தக்கூடியதாக உள்ளது.

ஆங்கில மொழியில் அளிக்கப்பட்டுள்ள உத்தரவுகள் அறிவிப்புகளுக்கு வியாபாரிகளால் தக்க சமயத்தில் விளக்கவுரை அளிப்பதிலும் சிக்கல் ஏற்படுகிறது. இதனால் வீணாக அபராதம், மற்றும் வழக்குகளைச் சந்திக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது.

ஆகவே தமிழக அரசு இது குறித்து வியாபாரிகளின் நலன் குறித்து வணிகவரித் துறையினால் வழங்கப்படும் உத்தரவுகள், அறிவிப்புகள் மற்றும் படிவங்களை தமிழ்மொழியில் அளிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென காயிதே மில்லத் பேரவை சார்பில் கேட்டுக் கொள்கிறேன்."

இந்த மடலை அப்படியே படியெடுத்து, வணிகவரித் துறைச் செயலாளர்க்கு மேல் நடவடிக்கைக்காக அனுப்பி வைத்தேன்.

(26) 16.11.98 அன்று பேரா ஆறு. அழகப்பன் எனக்கொரு மடலை எழுதினார்.

அந்த மடலையும், 'இந்தியா டுடே' இதழில் வந்துள்ள குட்டிச் செய்தியையும் பார்ப்போம்.

கலைமாமணி முனைவர் ஆறு அழகப்பன், விருகம்பாக்கம், சென்னை-92

பெறுநர்

முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள்

வணக்கம்.

பொருள் : தமிழ் மொழியில் அயல் மொழி வரி வடிவங்களைக் கலந்து எழுதுதல் தொடர்பாக

தமிழக அரசு தமிழ் வளர்ச்சிக்கு நல்ல பல திட்டங்களை வெளியிட்டு வருவதனை அறிந்து மகிழ்கிறோம். கோயில்களில் தமிழில் வழிபாடு செய்ய வேண்டுமென்பதற்குத் தாங்கள் வெளியிட்ட உரத்த கருத்துக்களும், பல்வேறு தமிழ் அமைப்புக்கள் போராட்டங்கள் நடத்தியதும் பெரிதும் பாராட்டத்தக்கன.

ஒரு கால கட்டத்தில் திராவிட இயக்கத் தலைவர் ஒருவர் "ஸ்ரீரெங்க நாதரையும் தில்லை நடராஜரையும் பீரங்கி வைத்துப் பிளக்கும் நாள் எந்நாளோ? அந்நாளே தமிழரின் நன் நாள்" என்று பேசிய கருத்துக்கு மாறுபட இப்பொழுது அங்கு தமிழில் வழிபாடுகள் செய்ய வேண்டுமென்றும் வழிபாட்டிற்கு உரிய பாடல்களையும் அச்சிட்டுக் கொடுத்திருப்பது வரவேற்கத்தக்கது. "எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என்பதற்குத் தமிழக அரசு முன் உதாரணமாக விளங்கி வருகிறது.

இவ்வேளையில் தங்கள் கீழ் விளங்கும் தமிழ் வளர்ச்சித்துறை மேலும் ஒரு பணியைச் செய்ய வேண்டுமென்பதற்காக இக்கடிதத்தை எழுதுகிறேன். இந்தியா டுடே என்ற இதழில் 'புல்லாங்குழல்' என்றசொல் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது. புல் Long குழல்.

பெண்மணி என்ற இதழில் பெண்மணிகள் என்ற சொல் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது. Pen மணிகள்

முன்பு இதேபோல் குமுதத்தில் திரு. மாலன் ஆசிரியராக வந்ததும் இருமொழி வரிவடிவங்களையும் கலந்து வெளியிட்டார். நான் கண்டித்துக் கடிதம் எழுதினேன். இவ்வாறு இப்பொழுது தனியாக எழுதக் கூடிய தமிழ்ச் சொற்களில் அயல் வரி வடிவங்கள் சரளமாக எழுதப்பட்டு வருகின்றன. இதனைத் தொடங்கி வைத்தவர் துக்ளக் ஆசிரியர் 'சோ'என்பது என் கருத்து.

எனவே, தமிழ் இதழ்கள் தொலைக்காட்சி, வானொலி சாதனங்கள் ஆகியவைகளில் செய்யப்படும் மொழிச்சிதைவுகளைத் தமிழ் வளர்ச்சித் துறையினர் அவ்வப்போது கண்டு அவர்களை நெறிப் படுத்தும் ஒரு கடிதத்தை அனுப்பலாம். இதோ செய்தி :

"புல் Long குழல்

ஒரு புல்லாங்குழல் சாதனை படைக்கிறது. நாட்டிலேயே மிகப் பெரிய புல்லாங்குழலை (5 அடி நீளம், 3.5. அங்குலம் சுற்றளவு) சிருஷ்டித்தமைக்காக 'லிம்கா புக் ஆ.'.ப் ரெக்கார்ட்'ஸில் இடம்பெற்ற தினேஷ் சாண்டில்யா, அதோடு திருப்தி அடைந்துவிடவில்லை."

இது மிகவும் கண்டிக்கத்தக்கது என்பது மட்டுமன்றி, கலைஞர் குடும்ப இதழாக வருகின்ற "குங்குமம்" இதழும் இது போன்ற தவறினைத்தான் செய்கிறது.

எனவே இதனை ஓர் அமைச்சகம் வெறும் ஆணையால் மட்டும் செய்துவிட முடியுமா? அல்லது வேறு வகையான "மருத்துவம்" தேவைப்படுகிறதா?

அழகப்பனும் சிந்திக்கலாம்; யாவரும் சிந்திக்கலாம்.

(27) இந்து நாளிதழ் அவ்வப்போது "You and Me" எனும் பகுதியில் என்னைப் பற்றி, என் துறை பற்றி, என் தமிழ் முயற்சிகள் பற்றிய செய்திகளை வெளியிடும்.

அதை எழுதுகிற தோழர் பெரும்பாலும் கிண்டலுடன் தான் எழுதுவார். அவ்வளவு இளக்காரம் அவர்களுக்கு.

இதோ, 14.12.1998 ஆம் நாளிட்ட இதழில் உள்ள பகுதியைப் படியுங்கள்.

A Lot of noise, has predictably / been made about "Tamilising"all spheres of life in the State. But Government departments in their own mysterious ways seem to remain oblivious of such development. For instance the Labour departments. Labour activists point out that use of Tamil in administration is really an issue of the working class, more than any other group. But,

unmindful of the concerns of workers/ the Labour department issues all its instructions and notifications only in English' they say.

Even a recent announcement under the Manual Workers Act explaining some new welfare measures to be extended by the Construction Workers Welfare Board is only in English. A livid set of workers point out that these notifications seem to be issued with an intention of ensuring "that we do not understand them". A Government and a Cabinet which swears by Tamil remains unmoved by "several of our petitions" seeking all official orders and correspondence only in Tamil so that they will be able to apply and seek any relief or welfare measure.

One wonders whether in all the noise and heat generated by the verbal duels over use of Tamil, the basic raised by poor workers will be heard.

'a lot of noise' என்கிறது இதழ். ஆனால் ஓர் உண்மையைச் சொல்கிறது.

பாடுபடும் உழைப்பாளர்களைக் கொண்ட தொழிலாளர் நலத்துறையில் நிர்வாகத்தில் தமிழைப் பயன்படுத்துவது தேவைதான்.

ஆனால், தொழிலாளர்களின் மனக் குறையைப் பற்றிக் கவலைப்படாமல் தொழிலாளர் நலத்துறை, துறை சார்ந்த அறிவுரைகளையும் அறிக்கைகளையும் ஆங்கிலத்திலேயே தருகின்றது. இது பாட்டாளிகளின் மனக்குமுறல் என்பதையும் சுட்டத் தவறவில்லை.

மேலும் ஓர் எடுத்துக்காட்டையும் தருகின்றது.

கட்டுமானத் தொழிலாளர்கள் நல வாரியத்தின் சார்பில் வழங்கப்படும் சலுகைகள் குறித்த அறிவிப்பு ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டுள்ளது. "நாங்கள் அவற்றை விளங்கிக் கொள்ளக்கூடாது" என்ற உள்நோக்கத்தில் இதை அதிகாரிகள் செய்கின்றனர் என்றே தொழிலாளர்கள் குற்றம் சாட்டுகின்றனர். கடைசியில் ஒரு வினா எழுப்புகிறது.

தமிழைப் பயன்படுத்துவது தொடர்பாக எழும் வாதங்களின் சூட்டுக்கும் ஆரவாரங்களுக்குமிடையில் ஏழைத் தொழிலாளர்களின் கோரிக்கை நிறைவேறுமா என்று கேட்கிறது. சரியான கேள்விதான். பாராட்டலாம்.

இதழை அப்படியே படி எடுத்து, இதழ் வெளிவந்த அன்றே, தொழிலாளர் நலத்துறை அமைச்சர் அ. இரகுமான்கானுக்கு அனுப்பிவைத்தேன்.

அந்த மடலைப் பாருங்கள் 14.12.98 தி.பி.2029/கார்த்திகை 29

பெறுநர்

மாண்புமிகு அ. இரகுமான்கான் அவர்கள்
தொழிலாளர் நலத்துறை அமைச்சர்
தலைமைச் செயலகம், சென்னை - 600 009

அன்புடையீர்,

14.12.98 ஆம் நாளிட்ட "இந்து" இதழில் 'You and Me' எனும் பகுதியில் வெளிவந்த செய்தியைத் தங்கள் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். அதில் நம்முடைய துறையிலிருந்து வருகின்ற சுற்றறிக்கைகள் மற்றும் அறிவிப்புகள் ஆங்கிலத்தில் மட்டுமே வருகின்றன என்று சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. ஏழை எளிய கட்டுமானப் பணியாளர்களுக்குத் தரப்படும் அறிவிப்புகள் தமிழில் அளிக்கப்படுவதற்கான ஏற்பாடுகளைச் செய்வீர்கள் என்று நம்புகிறேன்.

* * *

இதற்கு மேல் நான் எப்படித்தான் செயற்பட வேண்டும் என்கிறீர்கள்? எனினும், அமைச்சர் இதனைச் செயற்படுத்தும் வகையில் எனக்கொரு மடலை எழுதினார்.

அன்புடையீர்,

14.12.1998 நாளிட்ட 'இந்து' நாளிதழில் "Between you and me" என்ற பகுதியில் தொழிலாளர் மற்றும் வேலைவாய்ப்புத் துறையின் அறிவிக்கை ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டதையும், அது தமிழில் வெளியிடப்படவேண்டும் என்பதையும் எனது கவனத்திற்குக் கொண்டுவந்ததற்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேற்குறிப்பிட்ட அறிவிக்கை அவசரத்தை முன்னிட்டு 03.11.98 அன்றைய கூடுதல் சிறப்பு அரசிதழில் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டது. பொதுவாக இதுபோன்ற அறிவிக்கைகள் முதலில் ஆங்கிலத்தில் வெளியிடப்படும். பின்பு, தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு தமிழிலும் வெளியிடப்படும். மேற்படி அறிவிக்கையை அங்ஙனம் தமிழில் வெளியிடுவதற்காக மொழிபெயர்த்து நேரடியாக அரசு பதிப்பகத்திற்கு அனுப்புமாறு நமது தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறை கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளது. இம்மொழி பெயர்ப்பு அரசு பதிப்பகத்தில் பெறப்பட்டதும் இந்த அறிவிக்கை தமிழிலும் வெளியிடப்படும் என்பதைத் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

* * *

28. ஓர் ஒன்றியப் பெருந்தலைவர், சீனியார் எழுதிய மடலின் சில பகுதிகளைப் பாருங்கள்.

"தாங்கள் எடுத்துக் கொள்ளும் தமிழ் வளர்ச்சி முயற்சி பெரிதும் பாராட்டுக்குரியது. எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்கிற நிலையை வெற்றிகரமாக நிறைவேற்ற, சில குறைகளைத் தாங்கள் அகற்றப் பெரிதும் முயற்சி மேற்கொள்ள கேட்டுக் கொள்கிறேன். ஊராட்சி ஒன்றிய அலுவலகங்களுக்கு தலைமைச் செயலகம், ஊரக வளர்ச்சித்துறை, மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகம், மாவட்ட திட்ட அலுவலர் அலுவலகம் போன்ற துறைகளிலிருந்து அனுப்பப்படும் கடிதங்கள் ஆங்கிலத்திலேயே பெரிதும் வருகிறது என்பதை தங்கள் மேலான கவனத்திற்கு கொண்டுவருகிறேன்."

28.12.98 இல் அவருக்கு ஒரு மடல் எழுதினேன். அவரிடமிருந்து விடை வந்தபின்பும், வேறு சில இடங்களிலிருந்தும் இது போன்ற தவறுகள் சுட்டிக் காட்டப்பட்ட பின்பும் உள்ளாட்சித் துறை அமைச்சர் கவனத்துக்கு இவற்றைக் கொண்டு சென்றேன். அமைச்சர் அருமையாகச் செயற்பட்டு, உதவினார் என்பதை மறக்க முடியாது.

29. சார் பதிவாளர் அலுவலகத்தில் பதியப்படும் பத்திரங்களில் ஒரு வகையான கலப்படத் தமிழ் காலங்காலமாகக் கையாளப்பட்டு வருகிறது.

ஆனால் சந்திரேசன் என்பவர் நல்ல தமிழில் ஒரு பத்திரத்தை எழுதி எனக்கு அனுப்பியிருந்தார். அதன் மீது மேல் நடவடிக்கை எடுக்குமாறு, பதிவுத்துறை அமைச்சர் இ. பெரியசாமிக்கும், பதிவுத் துறைத் தலைவர்க்கும் மடல்கள் எழுதினேன்.

15.12.98 தி.பி.2029/கார்த்திகை 30

பெறுநர்

மாண்புமிகு இ. பெரியசாமி அவர்கள்
பதிப்புத்துறை அமைச்சர்,
தலைமைச் செயலகம், சென்னை - 600 009

அன்புடையீர்,

பத்திரப் பதிவு அலுவலகங்களில் நல்ல தமிழில் பதிவு செய்வதற்கு ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒரு மாதிரி வெளிவந்துள்ளது. தாங்கள் உரிய பத்திரத்தை நேரில் வரவழைத்தும், இந்த முயற்சியை மேற்கொண்ட சென்னையைச் சார்ந்த சந்திரேசன் என்பவரை வரவழைத்தும், பதிவுத்துறைத் தலைவருடன் கலந்துபேசிச் செயற்படுத்தினால் நீண்டகாலமாகக் கலப்படத் தமிழில் இருக்கும் பத்திரங்கள் நல்ல தமிழில் மாற்றுவதற்கு வாய்ப்பாகும். இது காலத்தால் செய்யப்படும் தமிழ்ப் பணிகளுள் சிறப்புக்குரிய ஒன்றாக அமையும்.

படி : பதிவுத்துறைத் தலைவர், சாந்தோம் நெடுஞ்சாலை, சென்னை - 600 028

*1999 ஆம் ஆண்டு*

தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம் முழுக்க முழுக்கத் தமிழக அரசின் அமைப்பு. சட்ட அலுவலர்க்கான தேர்வினை இந்த அமைப்பே நடத்தியது. ஆனால் 'தமிழை' அறவே புறக்கணித்துவிட்டு இத்தேர்வு நடைபெற்றுள்ளது. இது என் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டது. அதில் சில குறிப்புகள்:

ஐயா,

கடந்த, 28.2.99 ஞாயிற்றுக் கிழமை, சென்னை கிண்டியில் அமைந்துள்ள அண்ணா பல்கலைக் கழகத்தில், "தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகத்திற்கு" (Tamilnadu Industrial Investment Corporation-TIIC) 'சட்ட அலுவலர்' (Law officer) பதவிக்கான எழுத்துத்தேர்வு நடைபெற்றது.

இதில் என்ன கொடுமை என்றால், அத்தேர்வில் கேள்வித்தாள் ஆங்கிலத்தில் மட்டும் இருந்ததோடு மட்டுமின்றி, பதில் அனைத்தும் ஆங்கிலத்தில் மட்டும் தான் எழுதப்பட வேண்டும் என்ற நிபந்தனையும் விதிக்கப்பட்டது. தமிழில் பதில் எழுத அனுமதி மறுக்கப்பட்டது.

சமீபத்தில் தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் மாண்புமிகு தமிழ்க்குடிமகனார் அவர்கள் கூட, இனி அரசுப் பணிகட்குச் செல்வோர் ஆட்சிமொழித் தமிழையும் தேர்வுப் பாடமாக எழுதவேண்டும் என்ற ஒரு நல்ல அறிவிப்பை வெளியிட்டார்.

ஆனால், தமிழக அரசு சார்பு நிறுவனமான, "தமிழ்நாடு" என்று தனது பெயருக்கு தொடக்கமாக வைத்துள்ள, "தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம் (TIIC)" "சட்ட அலுவலர்" பதவிக்கான தேர்வில், தமிழில் தேர்வு எழுத அனுமதிக்கவில்லை. ஆங்கிலத்தில் மட்டும் தான் பதில் எழுத வேண்டும் என்ற நிபந்தனையும் விதித்தது.

எனவே ஆங்கிலத்தில் மட்டும்தான் தேர்வு எழுத வேண்டும் என்று தமிழக அரசு சார்பு நிறுவனம் விதித்த நிபந்தனை, தமிழக அரசின் கொள்கைக்கு மாறுபட்டதோடல்லாமல், தமிழ்மொழி வாயிலாகக் கற்றவர்களுக்கு ஒரு மாபெரும் இழப்பாகவும் அமைந்தது."

இது தொடர்பாகத் தொ.மு.கழக இயக்குநருக்குக் கடுமையாக ஒரு மடல் எழுதினேன்.

மேலாண்மை இயக்குநர்
தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம்,
473, அண்ணா சாலை, நந்தனம், சென்னை - 600 035

அன்புடையீர்,

தங்களுடைய நிறுவனம் - அரசு சார்ந்த நிறுவனம். இதில் 28.2.99 அன்று அண்ணா பல்கலைக் கழக வளாகத்தில் சட்ட அலுவலர் (Law officer) பதவிக்கான எழுத்துத்தேர்வு நடைபெற்றுள்ளது. இதில் வினாத்தாள் ஆங்கிலத்தில் மட்டுமே இருந்துள்ளது. விடையையும் ஆங்கிலத்தில் மட்டுமே எழுதவேண்டுமென நிபந்தனையும் விதிக்கப்பட்டுள்ளது. தமிழில் விடையெழுத அனுமதி மறுக்கப்பட்டுள்ளது. தமிழ்நாடு தேர்வாணையத்தால் நடத்தப்பட்ட உரிமையியல் நடுவர் (Civil Judge) பதவிக்குக்கூட வினாக்கள் தமிழ் மற்றும் ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் இருந்ததோடு மட்டுமன்றி, பதிலும் தமிழ் அல்லது ஆங்கிலத்தில் எழுதப்படலாமென அனுமதிக்கப்பட்டுள்ளது.

இந்தியா முழுவதும் பணியாற்றுவதற்கான இந்திய ஆட்சிப் பணித் (I.A.S.) தேர்வைக்கூட முற்றிலும் தமிழில் எழுதலாம் என்பதைத் தாங்கள் அறிவீர்கள். தமிழிலேயே தேர்வெழுதி வென்றவர்கள் பலர் பல்வேறு மாநிலங்களில் பணியாற்றுகிறார்கள் என்பதைத் தாங்கள் அறிவீர்கள்.

இந்நிலையில் சட்டப் படிப்பைத் தமிழ் வழியில் பயின்று, தமிழிலேயே தேர்வெழுதி வெற்றிபெற்றவர்கள் சட்ட அலுவலர்க்கான தேர்வையும் தமிழில் எழுத அனுமதிக்கப்படாமல் மறுக்கப்பட்டிருப்பது தமிழக அரசினுடைய கோட்பாட்டுக்கு எதிரானதாக உள்ளது.

இது குறித்துத் தக்க விளக்கம் அளிப்பீர்கள் என்று நம்புகிறேன். வரும் 30.11.99க்குள் இதற்கான விடையை எதிர்பார்க்கிறேன்.

அதன் இயக்குநர் சா.பா. இளங்கோவன் விடை எழுதினார்.

'தங்களது 22.11.99 நாளிட்ட கடிதம் கிடைக்கப்பெற்றோம். இதுவரை கடைப்பிடிக்கப்பட்ட வழிமுறைப்படி, 28.02.99 அன்று நடைபெற்ற சட்ட அலுவலர் பதவிக்கான எழுத்துத் தேர்வுக்குரிய வினாத்தாள் ஆங்கிலத்தில் தயாரிக்கப்பட்டது. தமிழில் விடை எழுதுவதற்குரிய கோரிக்கை எதுவும் எழுப்பப்படவில்லை. அனுமதி மறுக்கப்படவுமில்லை.

மேற்குறித்த தேர்வு மூலமாக யாரும் பணி நியமனம் செய்யப்படவுமில்லை.

இனி வரும் நாட்களில் நடக்கவிருக்கும் பணி நியமனத் தேர்வுக்குரிய வினாத்தாள் தமிழிலும் / ஆங்கிலத்திலும் இருக்குமாறு உரிய நடவடிக்கை எடுக்கப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.'

த.வ. துறைச் செயலாளராக இருந்த சா.பா. இளங்கோவனுக்கு வினாத்தாள்களைத் தமிழிலும் தரலாமே என்ற எண்ணமே வரவில்லை (He has not applied his mind).

"இதுவரை கடைப்பிடிக்கப்பட்ட விதிமுறைப்படி வினாத்தாள் ஆங்கிலத்தில் தயாரிக்கப்பட்டது" என்கிறார்.

முன்னோர் எழுதிய வரைவுகளை அப்படியே பார்த்தெழுதித் தங்கள் கடனைத் தீர்ப்பவர்கள் (கடமையைச் செய்பவர்கள் அல்ல) பலர். அரசின் குறிக்கோளை நிறைவேற்ற, தன் தாய்மொழி ஏற்றம் பெறத் தானாகவே சிந்தித்து நடவடிக்கை எடுக்க வேண்டிய எத்தனையோ துறைகளில் பலர் தங்கள் வாய்ப்பை நழுவவிட்டிருக்கின்றனர். அதனாலேயே தமிழுக்கு இவ்வளவு பின்னடைவு.

இதைச் சுட்டிக் காட்டுவதற்கும் ஒரு தமிழ்க்குடிமகன் வரவேண்டியதாயிற்று!

31. தமிழைப் புறக்கணிப்பதில் காவல் துறை சற்று அதிகமாகவே ஈடுபடுவதைப் பார்த்திருக்கிறேன். அதற்கு ஓர் எடுத்துக்காட்டு.

திருப்பூர் காவல் துறை உதவிக் கண்காணிப்பாளர் ஓர் ஆணையை ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளார். அது என் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டது. நானே அந்த ஆணையைத் தமிழில் மொழிபெயர்த்தேன். பின்னர் இவற்றை உள்துறைச் செயலர் இரா. பூரணலிங்கம் அவர்களுக்கு அனுப்பினேன்.

அது தொடர்பாக அவரே எழுதிய மடல் இது.

அன்பார்ந்த திரு. ஷர்மா

பொதுமக்களுக்கு அனுப்பப்படும் ஆணைகள் மற்றும் கடிதங்கள் தமிழில்தான் இருக்கவேண்டுமென அரசாணைகள் பிறப்பிக்கப்பட்டிருந்தும், ஆணைகளும் கடிதங்களும் ஆங்கிலத்தில்தான் பொதுமக்களுக்கு அனுப்பப்படுகின்றன என்று அரசின் கவனத்திற்கு வந்துள்ளது. எனவே, இனி வருங்காலத்திலாவது பொது மக்களுக்கு அனுப்பப்படும் கடிதங்களை ஆங்கிலத்தில் எழுதாமல் கண்டிப்பாகத் தமிழிலேயே அனுப்பவேண்டுமென அனைத்துக் காவல்துறை அலுவலர்களுக்கும் அறிவுரை வழங்கும்படி தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

2. குறிப்பாக, திருப்பூர் காவல்துறை உதவிக் கண்காணிப்பாளர் வெளியிட்டுள்ள ஆணையின் நகல் ஒன்று இக்கடிதத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. இக்கடிதத்தைத் தமிழில் மாண்புமிகு தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சர் அவர்களே மொழிபெயர்த்து அந்தத் தமிழாக்கக் கடிதமும் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. இதனையும் சம்பந்தப்பட்ட அலுவலர்கள் அனைவருக்கும் அனுப்பும்படி தங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

தங்களன்புள்ள

(இரா. பூரணலிங்கம்)

32. சிலர் தமிழக அரசு எல்லாவற்றையும் தமிழில் கொண்டு வரவேண்டும் என்ற ஆர்வத்தில் மடல் எழுதுவார்கள். பாராட்ட வேண்டியதுதான்.ஆனால் அவர்கள் தமிழ்ச் சிந்தனையோடு செயற்பட மாட்டார்கள். 'ஊருக்கு உபதேசம்' செய்யும் இப்படிப்பட்ட 'புண்ணியவான்கள் பலர்.' நாகர்கோவில் சார்ந்த 'தமிழ்நாடு சீர்திருத்த நலச் சங்கப் பொதுச் செயலாளர்' ஜானி என்பவர் எழுதிய மடல் இது.

"நாகர்கோவில் பேருந்துகளில் மிகவும் விசித்திரமாக, ஆங்கிலத்தில் பாய்ன்ட் டு பாயின்ட் என்றும் சூப்பர் பாஸ்ட் என்றும் எல்.எஸ்.எஸ். என்றும் வி. பாஸ்ட் என்றும் ஆங்கிலத்திலேயே எழுதி விளம்பரப்படுத்தப்பட்டுள்ளது. இது தமிழ்மொழி வளர்ச்சிக்காகவே பாடுபட்டு வருகின்ற தங்கள் ஆட்சியில் இதுபோன்ற பெயர்ப் பலகைகள் தேவையா? என எண்ண வைப்பதோடு கழக ஆட்சியினைப் பற்றி ஏளனப்படுத்தவும் செய்கிறார்கள்."

இதற்கு ஆதரவு தரும் பிற நிறுவனங்கள், அமைப்புகளின் சார்பிலும் கையொப்பங்கள் பெறப்பட்டுள்ளன.

அப்படி அனுப்பிய 30 பேரில் தி.க.வைச் சேர்ந்த ஒருவர் மட்டும்தான் (மா.மணி) பெயரையும், நிறுவனப்பெயரையும் தமிழில் எழுதிவிட்டுத் தமிழிலேயே கையொப்பமும் இட்டுள்ளார். வள்ளியம்மாள் பெயர், நிறுவனப் பெயர் தமிழில் உள்ளன. ஆனால் கையொப்பம் ஆங்கிலத்தில்.

அதிலும் மலைவாழ் மக்கள் நிறுவனச் சார்பில் ஆங்கிலத்தில் ஒப்பம். நல்ல முன்னேற்றம்!

மீதி எல்லாரும் 'சுத்தமான' ஆங்கிலத்தில், எந்தவகையான தமிழ்க்கலப்படத்துக்கும் இடங்கொடுக்காமல், மிகுந்த கவனத்தோடு செயற்பட்டுள்ளார்கள்.

இப்படியொரு மடல் எனக்கு (22.3.99) அதற்கு என் விடை இதுதான்.

"முப்பது அமைப்புகள் சேர்ந்து அனுப்பிய விண்ணப்பம் வரப்பெற்றது. இரண்டொரு பேரைத் தவிர மற்ற அனைவருமே தங்கள் பெயரையும், நிறுவனத்தின் பெயரையும் ஆங்கிலத்திலேயே எழுதியுள்ளனர். அப்படி எழுதிவிட்டு எங்களுக்கு அறிவுரை கூறுவது எந்த அளவிற்குப் பொறுப்புடைய செயல் என்பதை எண்ணிப் பார்க்கவும். எனினும் நாங்கள் தக்க மாற்றங்களைச் செய்ய முயல்வோம். திருக்குறளில் உள்ள தன்குற்றம் நீக்கிப் பிறர் குற்றம் காணவேண்டும் என்ற குறளை எல்லா உறுப்பினர்களுக்கும் தெரிவிக்கவும்."

33. ஊத்துமலைப் பண்ணையார் பாண்டியன் ஒரு மடல் எழுதினார். அறநிலையத் துறைக்கு அது தெரிவிக்கப்பட்டு நடவடிக்கை எடுக்கப்பட்டது. இது தொடர்பாக அடுத்த மடலை அவர் எழுதுகிறார்.

HR & CE துறை தபால்கள் ஆங்கிலத்தில் அனுப்பப்படுவதை தமிழில் அனுப்ப ஆணையிட வேண்டும் என நான் தங்களுக்கு எழுதினேன். தாங்கள் தமிழில் எழுத வேண்டும் என ஆணை பிறப்பித்தீர்கள். நன்றி.

தமிழகத்தில் உற்பத்தி செய்யப்படும் ஊறுகாய்ப் பொட்டலம் முதல் மசாலா பாக்கட்டுகள் மீது அச்சிட்டு இருந்த பேப்பர்கள் அனைத்தும் தமிழில் இல்லை. இங்கு உற்பத்தி செய்து வியாபாரம் செய்யும் பொருள் மீது இருக்கும் பெயர் மற்றும் இதில் விபரம் அடங்கிய அச்சிட்ட பேப்பர், தமிழில் இருக்க வேண்டும் என தாங்கள் ஆணையிட கேட்டுக் கொள்கிறேன்."

ஆனால் எனக்கு விளங்காத ஒன்று இதுதான். ஊறுகாய்ப் பொட்டலத்தின் மீது 'தமிழில்' இல்லையே என்று குறை கூறும் இவரது மடற்கட்டு தமிழில் இல்லையே! இவரது கையொப்பம் தமிழில் இல்லையே! இந்த இரண்டிலும் இவர் கவனம் செலுத்தாத போது வெளிமாநிலங்கட்குச் செல்லும் ஊறுகாய்ப் பொட்டலத்தைப் போட்டு ஏன் பிதுக்குகிறார்?

இவ்வளவு ஆர்வம் படைத்த இவரைப் போன்றவர்கள் முதலில் தங்கள் செயல்கள் தமிழில் உள்ளனவா என்று பார்க்கவேண்டாமா? பலருக்கு இது ஒரு படிப்பினையாக இருக்கவேண்டும் என்பதற்காகத்தான் இதனை எடுத்துக் காட்டுகிறேன்.

34. அழகப்பர் பல்கலைக் கழக மாணவர்கள் எனக்கொரு மடல் எழுதியிருந்தனர். அது குறித்து, அந்தப் பல்கலைக் கழகத் துணைவேந்தருக்கு ஒரு மடல் எழுதினேன். அவரது விடை இது.

மாண்புமிகு ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலைத்துறை அமைச்சர் அவர்களுக்கு வணக்கம்.

அழகப்பா பல்கலைக்கழகத்தில் இளநிலைக் கல்வியியல் (பி.எட்.) சேர்க்கைக்காக நுழைவுத் தேர்வு நடைபெற்றது குறித்து 26.6.1998 ஆம் நாளிட்ட தினத்தந்தியில் வெளியான செய்தி தொடர்பாக பல்கலைக் கழகத்தின் விளக்கத்தினைக் கீழே கொடுத்துள்ளேன்.

அழகப்பா பல்கலைக் கழகத்தில் இளநிலைக் கல்வியியல் (பி.எட்.) வகுப்புகளுக்கு நுழைவுத் தேர்வு 1998 ஆம் ஆண்டுதான் முதன்முறையாக நடைபெற்றது. பல்கலைக் கழகத்தின் அனைத்துப் பாடவகுப்புகளும் ஆங்கில மொழியிலேயே அமைந்துள்ளன. தேர்வு முறையில் ஓரிரு மாணவர்கள் வினாத்தாள் தமிழில் கொடுக்கப்படவில்லை என்று கூறியபின்புதான் இக்குறைபாடு கவனத்திற்கு கொண்டுவரப்பட்டது. உடன்தக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு இவ்வாண்டு முதல் 1999 நுழைவுத் தேர்வு வினாத்தாள் தமிழ் மற்றும் ஆங்கிலத்தில் வடிவமைக்கப்பட்டுள்ளது என்பதை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள

க. ருக்மணி

முதன் முறையாக நடைபெற்ற (பி.எட்.) தேர்வில் வினாத்தாள் ஆங்கிலத்தில் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. தவறு சுட்டிக்காட்டப்பட்ட பின் அடுத்த ஆண்டு இருமொழியிலும் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டு விட்டது.

நான் கல்லூரி முதல்வராக இருந்தபோது, இப்போதைய துணைவேந்தரும் மதுரை மீனாட்சி கல்லூரி முதல்வராக இருந்தவர். மிகுந்த பொறுப்புடன் விடை எழுதியுள்ளார்.

35. "எங்கும் தமிழ், எதிலும் தமிழ்" என்ற கோட்பாடு எப்படிச் செயற்படுத்தப்படுகிறது?

சென்னைக்கு வருவதற்காக மதுரை வானூர்தி நிலையத்தில் காத்திருந்தேன். தலைமை அஞ்சல மேலதிகாரி செயராமனும் அங்கு வந்தார். அப்போது, சேலம் மாநகர்ப் பகுதியில் தமிழே இல்லாத, கன்னடமும் ஆங்கிலமும் மட்டுமே உள்ள பணவிடைத்தாள் வழங்கப்படுவதாகவும், உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் சுட்டிக் காட்டினேன்.

பின்னர் பயணம் மேற்கொண்டோம்.

20.7.99 அன்று அவர் எனக்கொரு மடல் எழுதினார்.

Dear Sir,

Kindly recall the conversation you had with me on 09.07.99 at Madurai Air Port during the course of which you have expressed your concern that Money Order forms printed in Regional language other than Tamil are being sold to the public at Salem area. The matter was got enquired into. Suitable instructions have been issued to all the Postal stores Depots in Tamilnadu Postal Circle and all the Regional Postmasters General to ensure that Money order forms printed in Tamil are released for the use of the members of public in Tamilnadu.

I am very much grateful to you for having brought this matter to my personal notice. On behalf of the Department of Posts, I assure of our best services.

With regards,
Yours sincerely
(S. JAYARAMAN)

ஒருவரைக் காணும்போது அவர் தொடர்பான செய்தியினை எடுத்துச் சொல்லி நடவடிக்கை மேற்கொள்ளும் பழக்கத்தால் வந்தது இது. சொல்லி வைத்தபடியே திரு. செயராமன் நடவடிக்கை எடுத்துள்ளார்.

மேலும் எங்கள் த.வ. இயக்குநரும் அஞ்சல் துறை இயக்குநர்க்கு ஒரு மடல் எழுதியிருந்தார். அதற்கு இயக்குநர் விடை எழுதியிருந்தார்.

"மணியார்டர் படிவத்தில் இருந்து 'தமிழ்' நீக்கப்படவில்லை. அதற்கு அரசு உத்தரவும் இல்லை. அண்டை மாநிலத்தில் இருந்து படிவத்தை இரவலாகப் பெற்று தமிழக அஞ்சல் துறை பொருள் கிடங்கு விநியோகம் செய்ததால் சிறு தவறு நடந்துள்ளது. தவறு திருத்திக் கொள்ளப்பட்டது. தமிழில் மணியார்டர் படிவம் தங்கு தடையின்றி தமிழகத்தில் கிடைப்பதற்கு ஆவன செய்யப்பட்டுள்ளது. தவறுக்கு வருந்துகிறேன். இவண், க. இராமச்சந்திரன்"

எனவே எந்த இடத்தில் தமிழுக்கு ஊறு நேர்ந்தாலும் தயங்காமல் தலையிட்டு, தமிழுக்கு உரிய இடத்தைப் பெற்றுத் தருவதற்காக உழைத்துள்ளோம் என்பதற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டாகும். நானும் திரு. செயராமனுக்கு ஒரு மடல் எழுதினேன்.

36. தமிழ்நாட்டின் ஊராட்சி மன்றத் தலைவர்கட்கு ஒரு மடல் தலைமைச் செயலகத்திலிருந்து செல்கிறது; அதுவும் ஆங்கிலத்தில். தலைமைச் செயலகத்திலிருந்து அனுப்பிய அலுவலர் எவ்வளவு பொறுப்பற்ற முறையில் இதைச் செய்கிறார்? 12682 ஊராட்சி மன்றத் தலைவர்களில் எத்தனையோ பேர் படிக்காதவர்கள்; பலர் தமிழ் மட்டும் படிக்கத்தெரிந்தவர்கள். இவர்களுக்குத் தலைமைச் செயலகம் ஆங்கிலத்தில் அறிவுரை சொல்கிறது. இதனை ஓர் ஊ.ம. தலைவர், எனக்குச் சுட்டிக் காட்டினார். உடனே ஒரு பிடி பிடித்தேன்.

முதலில் ஊ.வ. இயக்கத்தின் கூடுதல் இயக்குநர் கோபால், மேலிருந்து ஆங்கிலத்தில் வந்தாலும் இதைத் தமிழில் தரவேண்டும் எனும் எண்ணமில்லாத தூத்துக்குடி மாவட்டத் திட்ட அலுவலர்.

இதனை அப்படியே ஊ.ம.தலைவர்கட்கு அனுப்பிய கோவில்பட்டி ஆணையாளர் எல்லோரையும் பிடித்தோம். என் மடலின் செய்தி இதுதான்.

"தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் கடுமையாக இருந்தும் தாங்கள் இதுபற்றி எந்தவகையான கவனமும் செலுத்தாமல், ஊராட்சி மன்றத் தலைவர்களுக்குக்கூட ஆங்கிலத்தில் அனுப்பி வருகிறீர்கள். இதுகுறித்து அரசாணையை மீறிய குற்றத்திற்காகத் தங்கள் மீது ஏன் நடவடிக்கை எடுக்கக்கூடாது என்பதற்கு ஒருவாரத்திற்குள் பதிலளிக்க வேண்டுகிறேன். தங்கள் பதில் வந்தபிறகே ஊரக வளர்ச்சித்துறை அமைச்சருக்கு இது குறித்துத் தெரிவித்து நடவடிக்கை எடுக்க வேண்டிவரும்."

3.8.99 இல் இம்மடல் எழுதினேன். 9.8.99 இல் ஒ.ஆ. எழுதிய விடை இது:

பார்வை ஒன்றில் கண்ட தங்கள் அலுவலகக் கடிதத்தில் கேட்கப்பட்டுள்ள விளக்கத்திற்கு கீழ்க்கண்டவாறு என்னுடைய விளக்கத்தினைச் சமர்ப்பிக்கிறேன்.

பார்வை இரண்டில் கண்ட விபரப்படிக்கு தூத்துக்குடி மாவட்ட ஊரக வளர்ச்சி முகமை திட்ட அலவலர் அவர்களிடமிருந்து ஆங்கில தொலை அச்சு செய்தி நகல் வரப்பெற்றது. அதை

உடனடியாக ஊராட்சி மன்றத் தலைவர்களுக்கு அனுப்பும்படி அறிவுறுத்தப்பட்டிருந்தது. மேற்படி தொலை அச்சுசெய்தி நகலினை அப்படியே ஆங்கிலத்தில் தட்டச்சு செய்து ஊராட்சி மன்றத் தலைவர்களுக்கு தக்க நடவடிக்கைக்காக அனுப்பப்பட்டது. மேற்படி தவறு அவசரமாக எடுக்கப்பட்ட நடவடிக்கையினால் ஏற்பட்டுவிட்டது. இத்தவறுக்கு மிகவும் வருந்துகிறேன். மேற்படி தொலை அச்சு நகல் கிடைக்கப் பெற்றதும் ஊராட்சி மன்றத் தலைவர்கள் எனது கவனத்திற்கு கொண்டு வந்தவுடன் மேற்படி தொலை அச்சு செய்தியினை உடனடியாக தமிழாக்கம் செய்து 19.7.99 இல் அனைத்து ஊராட்சி மன்ற தலைவர்களுக்கும் அனுப்பப்பட்டுவிட்டது.

இனி வருங்காலங்களில் இது போன்ற தவறுகள் ஏற்படா வண்ணம் கவனத்துடன் செயல்படுவேன் என்ற விபரத்தை பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்."

அவசரமாக எடுக்கப்பட்ட நடவடிக்கையாம் இது. இப்படி அவசரமாக எடுத்தே ஆங்கிலத்தை நிலைநாட்டி விட்டார்கள். 1956க்குப்பின் 43 ஆண்டுகள் கழித்தும் இன்றும் அவசரத்திலேயே இயங்குகிறார்களாம். உண்மையிலேயே நம் அதிகாரிகள் இப்படி மின்னல் வேகத்தில் செயல்பட்டிருந்தால் நாடு எங்கோ போயிருக்குமே! எத்தனை பணிகளை மூட்டை கட்டிப் போட்டிருக்கிறார்கள் என்பது எல்லார்க்கும் தெரியுமே!

ஏதோ, விளக்கம் எழுதவேண்டும் என்பதற்காக எழுதியுள்ளார். அடுத்து, திட்ட அலுவலரின் மடல்.

"அந்த அறிவுரைகள் தமிழில் அனுப்பாமல் தவறுதலாக, வட்டார வளர்ச்சி அலுவலர்களுக்கு என்னாலும், ஊராட்சி மன்றத் தலைவர்களுக்கு வட்டார வளர்ச்சி அலுவலர்களாலும் அனுப்பப்பட்டது. தற்பொழுது இதன் தமிழாக்கம் எல்லா ஊராட்சி மன்ற தலைவர்களுக்கு இவ்வலுவலக கடித எண். அ1/505/99, நாள் 6.8.99 ன்படி தமிழில் அனுப்பப்பட்டுள்ளது.

இது குறித்து சமர்ப்பிப்பதென்னவென்றால் இவ்வலுவலகத்திலிருந்து எழுதப்படும் கடிதப்போக்குவரத்து குறிப்பாக பொதுமக்கள் ஊராட்சித்தலைவர்கள், ஒன்றியத் தலைவர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள் மற்றும் பாராளுமன்ற உறுப்பினர்களுக்குத் தமிழிலேயே கடிதம் எழுதப்படுகிறது. மேலும் அரசு அலுவலர் பெயருக்கு முன்னால் ஊர்/தந்தை பெயரின் முதல் எழுத்தை எழுதும்போது ஆங்கில எழுத்தினை பயன்படுத்தாமல் தமிழிலேயே எழுதும்படி அனைத்து அலுவலர்களுக்கும் சுற்றறிக்கை அனுப்பப்பட்டுள்ளது. அதன் நகல் இத்துடன் பார்வைக்காக சமர்ப்பிக்கப்படுகிறது. மேலும் இனிவரும் காலங்களில் இவ்வாறு தவறுகள் வராமல் பார்த்துக்கொள்கிறேன் எனப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்."

கூடுதல் இயக்குநர் கோபாலை மட்டும் அறைக்கு வரவழைத்து விளக்கம் கேட்டேன் (பெயரைப் பார்த்தால் தமிழராகத் தெரிந்தார். ஆனால் விசாரித்தபின் இவரது தாய்மொழி வேறு என்று தெரிந்தது) இன்றும் மேலதிகாரிகள் எப்படி இருக்கிறார்கள் என்பதற்கு இது எடுத்துக்காட்டு.

நான் மூன்று ஆண்டுகளாகக் கரடியாய்க் கத்தி வருகிறேன். ஆனால் பலர் திருந்தவே இல்லை. அதன் விளைவுதான் இது.

37. காவல் துறைச் சார்பு ஆய்வாளர்களாக (S.I.) 700 தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்கள் மாநிலத்தில் உள்ள 3 இடங்களில் பயிற்சி பெறுகின்றார்கள். ஆனால். . . .

(விளக்கம் என் மடலில்) இதனை முதல்வர் கவனத்துக்கு கொண்டு வந்தேன்.

அன்புடையீர்,

வணக்கம்.

தமிழக அரசின் காவல் துறையின் பயிற்சி சார்பு ஆய்வாளர்களாக, சென்னையில் அசோக் நகர், வீராபுரம் மற்றும் வேலூர் ஆகிய இடங்களில் 700 பேர் பயிற்சிபெற்று வருகின்றார்கள். பயிற்சிக்குரிய பாடங்கள், கற்பித்தல் ஆகியன ஆங்கிலத்தில் மட்டுமே தரப்படுகின்றன. அவர்கள் இது குறித்து எனக்கு எழுதியுள்ளார்கள். தமிழகத்தில் பணிபுரியப் போகின்ற இத்தகைய காவல்துறையினர்க்குத் தமிழ் வழியில் பாடம் கற்பிக்கவும், தமிழில் தேர்வு எழுதவும் ஆவன செய்ய வேண்டுகிறேன்." 3.8.99 அன்று எழுதப்பட்ட மடல் இது.

38. வணிகவரித்துறை தமிழைப் பயன்படுத்துவதே இல்லை. அந்த அளவுக்கு அங்கே ஆங்கிலம் கொடிகட்டிப் பறக்கிறது. அதிலும் இத்துறை அமைச்சர் முதலமைச்சர்தான்.

சிலகாலத்திற்கு முன் அவர்கள் துறைக்கு ஆங்கிலத் தட்டச்சுப் பொறி வழங்கப்பட்டது. அதை எடுத்துவிட்டுத் தமிழ்த் தட்டச்சுப்பொறி வழங்க முற்பட்டபோது நாங்கள் எப்படிப் போராட வேண்டியிருந்தது என்பதைக் காணுங்கள். சண்டை முற்றிய பிறகு, இது தொடர்பான அனைத்து அரசாணைகளையும் அலசி ஆராய்ந்து நானே ஒரு குறிப்பை உருவாக்கினேன்.

நான்கு பக்கங்களில் விரியும் இக்குறிப்பைப் படித்துப் பார்த்தால் தான், எங்கள் முயற்சியின் கடுமை புரியும். நாங்கள் எவ்வளவு பெரிய போராட்டத்தை நடத்தியிருக்கிறோம் என்பது விளங்கும். எனினும், நான் அனுப்பியது கோப்பு என்பதால் இதற்குமேல் விவரங்களை வெளியிட இயலாது. மாண்புமிகு முதல்வர் அவர்கட்கே இக்கோப்பினை அனுப்பி வைத்தேன்.

39. தொழில் நுட்பக் கல்லூரிகளில் சில பாடங்களில் வினாத்தாள் ஆங்கிலத்தில் மட்டுமே உள்ளது. உண்மையில் பல மாணவர்கள் பல பாடங்களைத் தமிழ் வழியில்தான் பயில்கின்றனர். இதனைக் கவனத்தில் கொள்ளாமலேயே வினாத்தாள் உருவாக்கப்பட்டுள்ளது. இது குறித்துச் சேகரன் என்பவர் என் கவனத்துக்குக் கொண்டுவந்தார். அண்ணா பல்கலைக் கழகத் துணைவேந்தர் கலாநிதிக்கும், தொ.நு. கல்வி இயக்குநர் ஞானத்திற்கும் மடல்கள் எழுதினேன்.

அன்புடையீர்,

பொருள் : தொழில் நுட்பக் கல்லூரிகளில் வினாத்தாள்கள் தமிழில் வழங்கப்படாமை குறித்து.

பார்வை : திரு. ச. சேகரன் அவர்களின் 25.4.97 ஆம் நாளிட்ட கடிதம்.

தொழில் நுட்பக் கல்லூரிகளில் வேதியியல், இயற்பியல் பாடங்களைத் தமிழில் தேர்வு எழுதும் மாணவர்களுக்கு ஆங்கிலத்தில் வினாத்தாள்கள் வழங்கப்படுவதாகப் பார்வையில் குறிப்பிடப்பட்டுள்ள கடிதத்தில் கூறப்பட்டுள்ளது.

சில ஆண்டுகளாக இவ்விருபாடங்களில் வினாத்தாள் ஆங்கிலத்தில் மட்டுமே வழங்கப்படுவதாகவும், இதனால் தமிழ் வழியில் பயிலும் மாணவர்கள் தேர்வு எழுத இடர்ப்படுவதாகவும் எனக்கு முறையீடு வந்துள்ளது. முறையீட்டையும் ஆங்கில வினாத்தாளையும் இதனுடன் இணைத்தனுப்பியுள்ளேன். இதில் நாங்கள் தனிக்கவனம் செலுத்தி இவ்வினாத்தாள்களைத் தமிழில் வழங்கிட உடனடியாக நடவடிக்கை மேற்கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

இணைப்பு : மேற்குறித்தவாறு.

துணை வேந்தர்க்கு இதில் நேரடிப் பொறுப்பில்லை என்பதால் அவரும் தக்க நடவடிக்கைக்காக, தொ.நு.க. இயக்குநருக்கு அனுப்பி வைத்தார்; எனக்குத் தெரிவித்திருக்கிறார்.

ஆனால் தொ.நு.கல்வி இயக்குநரோ இது குறித்து எந்தவிடையும் எழுதவில்லை. எனவே 15.11.1999 அன்று நானே ஒரு நே.மு. மடல் எழுதினேன்.

தொழில் நுட்பக் கல்லூரிகளில் முதலாம் ஆண்டு பட்டய வகுப்புகளில் தேர்வுகள் எழுதும்போது, தமிழில் எழுதலாம் என்று அரசு அனுமதி அளித்துள்ளது. ஆனால் வினாத்தாள்கள் ஆங்கிலத்தில் மட்டுமே உள்ளன. எனவே, இனி வருங்காலங்களில் வினாத்தாள்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் இடம்பெறவேண்டும். (இப்போது பல்கலைக்கழக வினாத்தாள்கள் அப்படித்தான்

உள்ளன) இது குறித்து ஓராண்டாகியும் தங்களிடமிருந்து எந்த விடையும் வரவில்லை. ஒரு வாரத்திற்குள் இது குறித்துத் தெளிவான விடையை எழுதுவீர்கள் என்று நம்புகிறேன்.

அதன்பிறகு இயக்குநர் நா.அ. ஞானம் விடை எழுதினார்.

"பார்வையில் கண்ட தங்களது மடலுக்கிணங்க, எதிர்வரும் ஏப்பிரல் 2000 வாரியத்தேர்வு முதல், முதலாம் ஆண்டு பட்டய வகுப்பு மாணவர்களுக்குத் தேர்வுக்குரிய வினாத்தாள்கள் (ஆங்கிலப் பாடம் நீங்கலாக) தமிழிலும், ஆங்கிலத்திலும் வழங்க உரிய நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டு வருகின்றன என்ற விபரத்தினை பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்."

தமிழ்நாட்டில், கல்வித்துறையில் ஒரு வினாத்தாளைத் தமிழில் கொடுங்கள் என்று சொல்வதற்கே நாங்கள் எவ்வளவு முயற்சி எடுக்கவேண்டியுள்ளது என்பதைக் கவனியுங்கள்.

கல்வித்துறைத் தொடர்பானதாக இருந்தும் 'தமிழ்' என்றதும் எனக்கு அனுப்பி வைத்தனர். நானும் சளைக்காமல் நடவடிக்கை எடுத்துள்ளேன். இப்படித்தான் எங்கள் பணியின் போக்கு அமைகின்றது என்பதை அனைவரும் உணரமுடியும்.

40. பொதுத்துறையிலிருந்து வெளியிடப்படும் எளிய செய்தியைக் கொண்ட சுற்றறிக்கைகள் கூட ஆங்கிலத்தில் வரும். அப்படியோர் அறிக்கையை 'அலுவலர்களின் மெத்தனப் போக்கு' எனும் கட்டுரையில் சுட்டிக் காட்டியிருக்கிறேன்.

அதனால் இப்போது நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. 12.8.99 ஆம் நாளிட்ட அறிக்கையைப் பார்க்கவும்.

"பொருள் : மறைந்த திரு ராஜீவ் காந்தி அவர்களது பிறந்தநாள் நினைவாக 20.8.99 ஆம் தேதியினை 'நல்லிணக்க நாளாக' கொண்டாடுவது சம்பந்தமாக.

மத்திய அரசு மறைந்த திரு ராஜீவ் காந்தி அவர்களது பிறந்த நாள் நினைவாக 20.8.99 ஆம் தேதியினை 'நல்லிணக்க நாளாகவும்' அதைத் தொடர்ந்து 20.8.99 முதல் 5.9.99 வரையிலான இருவார காலத்தினை 'சமுதாய நல்லிணக்க இருவார' விழாவாகவும் நாடு முழுவதும் கொண்டாட வேண்டும் என்று கேட்டுக் கொண்டுள்ளது. தலைமைச் செயலகத்தில் உள்ள அணிவகுப்பு மைதானத்தில் 20.8.99 ஆம் தேதியன்று காலை 11.00 மணிக்கு 'நல்லிணக்க நாள்' உறுதிமொழியை மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் செய்து வைப்பார்கள். அந்த நேரத்தில் மழை இருந்தால், நாமக்கல் கவிஞர் மாளிகையில் பத்தாவது மாடியில் உள்ள மாநாட்டுக் கூடத்தில் உறுதிமொழி செய்து வைக்கப்படும். நல்லிணக்க நாள் உறுதிமொழி (தமிழில்) இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

2. மேற்கூறிய தகவலை மாண்புமிகு அமைச்சர் அவர்களின் தகவலுக்காக வைக்கும்படி முதுநிலை உதவியாளர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

நா. முருகானந்தம்
அரசு துணைச் செயலர்"

இத்தகைய மாற்றங்கள் தலைமைச் செயலகத்தில் வந்து கொண்டிருக்கின்றன என்பதை மனமகிழ்ச்சியுடன் ஒப்புக்கொள்ளலாம்.

41. 'தாட்கோ' எனப்படும் அரசு நிறுவனம் தனது விளம்பரத்தை ஆங்கிலத்தில் வெளியிட்டிருந்தது. என் நே.மு.உ.3.8.99 இல் 'தாட்கோ' பொதுமேலாளர்க்கு மடல் எழுதினார்.

அதற்கு அந்தப் பொ.மே., வெ. சந்திரசேகரன் விடைஎழுதியுள்ளார்.

"இது ஆதி திராவிடர் மாணவ / மாணவிகளுக்கான கணினி பயிற்சியளிக்க பயிற்சி நிலையத்தினைத் தேர்ந்தெடுக்க வெளியிடப்படும் விளம்பரம். பெரிய, பெரிய தனியார் பயிற்சி நிறுவனங்கள் தேர்வுக்குக் கலந்து கொள்ள உள்ள வாய்ப்பினை எதிர்நோக்கி ஒப்பந்தப்புள்ளி விளம்பரம் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டது என்று தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

மேலும், பயிற்சியில் கலந்து கொள்ள மாணவ / மாணவியர்களைத் தேர்ந்தெடுக்க வெளியிடப்படும் விளம்பரம் தமிழ்மொழி வாயிலாகத்தான் வெளியிடுவது என்று கருத்து உள்ளது என்பதனையும் தங்களுக்குச் சமர்ப்பித்துக்கொள்ளப்படுகிறது."

விளக்கம் இருக்கட்டும். கணினியின் விசைப்பலகையையே தமிழில் கொண்டு வந்துவிட்டது தமிழக அரசு. பெரிய, பெரிய தனியார் பயிற்சி நிறுவனங்களுக்கெல்லாம் தமிழே தெரியாதா? தமிழ்நாட்டுக்குள்தானே அவர்களது வணிகமெல்லாம்? தமிழில் விளம்பரம் வெளியிட்டால் எந்த நிறுவனமும் கவனிக்காமல் போய்விடுமா? இதெல்லாம் பொருந்தாக் காரணம், போலித்தனம். ஆங்கிலத்தில் வெளியிட்டுவிட்டார்கள். அதற்குச் சப்பைக் கட்டுக் கட்டுகிறார்கள். அவ்வளவுதான்.

இந்த அதிகாரிகள் எப்போது திருந்துவார்களோ?

42. பல்வேறு தோழர்களும் தமிழ் ஆட்சிமொழித் திட்டம் சிறப்பாகச் செயற்படுத்தப்பட வேண்டும் என்றே கருதுகிறார்கள். அதற்கான முயற்சிகளையும் அவர்கள் எடுக்கிறார்கள். நெல்லையிலிருந்து வந்த மடல் இந்த ஆர்வத்தை வெளிப்படுத்துகிறது.

"பல அரசு ஊழியர்கள் தமிழில் ஒப்பம் இடுவதில்லை. எந்த ஒரு பிரஞ்சுக் காரரும் பெயரை பிரெஞ்சு மொழியிலும் முன் எழுத்தை இத்தாலி மொழியிலும் எழுதார். சீன மொழியில் ஒப்பம் இட மாட்டார். ஆனால் தமிழக அரசின் கீழ் பணிபுரியும் அரசுப் பணியாளர்கள் பெயருக்கு முன்பு

எஸ்.எம். என்பதுபோன்ற ஆங்கில எழுத்துடன் எழுதியும் ஒப்பமும் இட்டு வருகிறார்கள். இது அரசு ஆணைகளுக்கு முரண் என்பதைப் பணிவன்புடன் தெரிவிக்கிறேன்."

கூட்டுறவுத்துறை விளம்பரங்கள் தமிழில் வெளிவந்துள்ளன. எனினும் பெயர்த் தலைப்புகளில் சற்றும் கவனம் செலுத்தப்படவில்லை என்பதை உணர முடியும். அது தொடர்பாக 4.7.99 ஆம் நாளிட்ட "தினகரனில்" வெளிவந்த 'வாசகர் குரல்' பகுதியிலும் இச்செய்தி வெளியிடப்பட்டுள்ளது.

பொதுமக்களில் பலரும் இந்த உணர்வோடு பொங்கியெழ வேண்டும், அக்கறையுடன் செயற்பட வேண்டும் என்பதுதான் எங்கள் எதிர்பார்ப்பு. அந்த எதிர்பார்ப்புக்குரிய விடைதான் இது.

இதுபோன்ற பல்வேறு தோழர்களும் செயற்படத் தொடங்கினால் நல்ல முன்னேற்றம் இருக்கும்.

கூட்டுறவுத்துறை விளம்பரத்தை எரியூட்டும் அறிவிப்பும் வந்து விட்டது.(30.9.99)

இப்போதுதான் பாவேந்தர் வரிகளை நினைக்கவேண்டும்.

*"கெடல் எங்கே தமிழின்நலம்*
*அங்கெல்லாம் தலையிட்டுக்*
*கிளர்ச்சி செய்க*
*கடல்போலும் எழுக! கடல்*
*முழக்கம்போல் கழறிடுக!*
*தமிழ்வாழ் கென்று"*

இப்போது கிளர்ந்து எழுந்துள்ளார்கள். நெல்லையில் ஓரிடத்தில் எழுந்த இந்தக் கிளர்ச்சித்தீ எல்லா இடத்திலும் பரவவேண்டும்.

43. கவிஞர் முகில் வண்ணன் ஒரு செய்தியை எங்கள் கவனத்திற்குக் கொண்டுவந்தார் (உண்மையில் இது கல்வி அமைச்சர்க்குரியது) அது இதுதான்.

தமிழகத்தின் தலைநகர் சென்னை அசோக்நகர், அரசு மகளிர் மேல்நிலைப்பள்ளியில பல ஆண்டுகளாகவே, மேல்நிலைப் பிரிவில் கணக்கு, அறிவியல் பிரிவுகளில் ஆங்கிலவ மட்டுமே பயிற்றுவிக்கப்படுகின்றன. தமிழ்வழி வரலாறு போன்ற கலைப் பாடங்கள் மட்டுமே பயிற்றுவிக்கப்படுகின்றன.

10ஆம் வகுப்பு வரை அதே பள்ளியில் படிக்கும் தமிழ்வழி பயின்ற மாணவிகள் 11அ வகுப்புக்கு வேறு பள்ளிகளைத் தேடிச் செல்லவேண்டிய நிலை (குமுதம் சூன் 24 இதழ்)

தமிழில் வழிபாடு செய்யப்படும் எனும் பெயர்ப்பலகை தமிழகக் கோயில்களில் வைக்கப்படுதல் வேண்டும் என வெகுளும் தமிழுள்ளம், தமிழே இல்லாத அரசுப் பள்ளியில் மட்டுமாவது தமிழ்வழி பயிற்றுவித்தல் நடைபெற ஆவன செய்ய வேண்டுகிறேன்."

எனினும் நாங்கள் அது தொடர்பாக மேல் நடவடிக்கை எடுத்தோம். உரிய முறையில் அனைவரது கவனத்துக்கும் கொண்டு சென்றோம்.

44. தமிழ்நாடு வனத்துறை அலுவலகப் பணியாளர் சங்கத்தலைவர் எழுதிய மடலுக்கு என் நே. மு.உ. எழுதிய மடல் இது.

20.9.99 ஆம் நாளிட்ட தங்கள் மடல் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் அவர்களால் பார்வையிடப்பட்டது.

தற்போது தலைமைச் செயலகத்திலுள்ள அனைத்துத் துறைகளிலும் 'தமிழ் ஆட்சி மொழித் திட்டச் செயலாக்கம்' குறித்து ஆய்வு செய்யப்படுகிறது. வெகு விரைவில் அனைத்தும் தமிழில் வெளிவருவதற்கு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். தங்கள் கோரிக்கை தொடர்பாக மாண்புமிகு அமைச்சர் அவர்களிடமும் துறைச் செயலாளரிடமும் பேசி, உரிய நடவடிக்கை மேற்கொள்ளப்படுமென மாண்புமிகு அமைச்சர் அவர்கள் தெரிவித்துள்ளார் என்பதைத் தங்களுக்குத் தெரிவித்துக்கொள்ள பணிக்கப்பட்டுள்ளேன்.

இதிலேயே போதுமான விளக்கம் உள்ளது. நாங்கள் தலையிட்டு நடவடிக்கை மேற்கொள்ளப்படாத துறையே இல்லை என்பதை உறுதி செய்து கொள்ளலாம்.

45. நெல்லை மாவட்ட ஆதி திராவிடர் (ம) பழங்குடியினர் நலக்குழு உறுப்பினர் எங்கட்கு மடல் எழுதினார். இவரது வேண்டுகோள் மாவட்ட ஆட்சியர் கி. தனவேல் அவர்களால் அருமையாகச் செயற்படுத்தப்பட்டுள்ளதை வேறோர் இடத்தில் காணலாம்.

46. நான் கவனத்துக்குக் கொண்டுவந்த செய்தி தொடர்பாகத் த.வ. இயக்குநர் எடுத்த நடவடிக்கை இது.

இது தமிழ் நாடு விளையாட்டு மேம்பாட்டு மேல் ஆணையத்துக்கு எழுதப்பட்டது.

ஆட்சிமொழித் திட்டச் செயலாக்கத்திற்கு உறுதுணைபுரியும் வகையில் அரசு அலுவலகங்களில் நடைமுறையில் பயன்படுத்தப்பட்டுவரும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களைக் கொண்ட ஆட்சிச் சொல் அகராதி என்னும் நூல் வெளியிடப்பட்டுள்ளது. தங்கள் கட்டுப்பாட்டின்கீழ் அமைந்துள்ள விளையாட்டு மேம்பாட்டு ஆணையத்தின் பெரம்பலூர் மாவட்டப் பிரிவில் அனுப்பப்பெறும் அனைத்துக் கடிதங்களிலும் "யோகா இன்ஸ்ட்ரக்டர்" என்ற பதவிப்பெயர்ச் சொல்லாட்சியே பயன்படுத்தப்படுவதாக அரசின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டுள்ளது. எனவே, "யோகா இன்ஸ்ட்ரக்டர்" என்பதற்கு "யோகா பயிற்றுநர்"

என்ற தமிழ்ச் சொல்லை உடனடியாகப் பயன்படுத்தி அலுவலக நடைமுறையில் தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தை முழுமையாகச் செயற்படுத்துவதற்கு அன்புகூர்ந்து ஆவன செய்ய வேண்டுகிறேன். மேலும் மேற்குறிப்பிட்ட சரியான தமிழ்ச் சொல்லையே பயன்படுத்த வேண்டுமென்று தங்களின் அனைத்துச் சார்நிலை அலுவலகங்களுக்கும் அறிவுரை வழங்குமாறும், அவ்வாறு வழங்கும் அறிவுரையின் படி ஒன்றினை இவ்வியக்ககத்திற்கு உடன் அனுப்புமாறும் அன்புடன் வேண்டுகிறேன்.

47. 27.10.99 'தேவி' இதழில் வெளிவந்த செய்தி - *தமிழ் பரவட்டும்*

தமிழக அரசுத் துறைகளில் வீட்டு வசதித் துறைதான் தனக்குச் சொந்தமான கட்டிடங்களில் தமிழ்மொழிக்குப் புகழாரம் சூட்டும் சொற்றொடர்களை ஒளிவிளக்கு எழுத்துக்களினாலும் அமைத்துள்ளது. மற்றபடி பல இலாகாக்கள் தங்கள் அன்றாட அலுவலர்களை இன்னும் தமிழுக்கு மாற்றுவதற்கு தயாராக இல்லை என்பது தெரிகிறது.

அண்மையில் வேடந்தாங்கல் பறவைகள் சரணாலயம் சென்றபோது அங்கு விற்கப்பட்ட நுழைவுச் சீட்டில் ஆங்கிலத்துடன் தமிழ் துளியும் கூட இல்லை. அனைத்து நிர்வாகத்தையும் தமிழில் மாற்றுவதற்கு தமிழ் வளர்ச்சித் துறை திட்டமிட்ட காலவரையறை நிர்ணயித்துச் செயல்படவேண்டும். இல்லையென்றால் இன்னும் 20 ஆண்டுகளுக்குப் பிறகும் தமிழ் தமிழ் என்று கதறிக்கொண்டிருக்கும் கதைதான்."

எழுதி விடுத்தவர் சரியாகவே சொல்லியுள்ளார், போகிற போக்கைப் பார்த்தால் இன்னும் பல ஆண்டுகளுக்குப் பிறகும் "தமிழ் - தமிழ்" என்றே கதறிக் கொண்டிருக்க வேண்டியதுதான்.

இதனைப் படியெடுத்து வனத்துறை அமைச்சர்க்கு அனுப்பி வைத்தேன்.

48. ஆர்வமுள்ள அரசு அலுவலர்கள் தான் தமிழை இன்றளவும் வாழவைத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த வகையில் நெல்லை மா.ஆ. தலைவர் கி. தனவேல் குறிப்பிடத்தக்கவர். அவர் எழுதிய மடலைப் பாருங்கள்.

"திருநெல்வேலி நகரத்தில் நெடுங்காலமாக பேருந்துகளில் ஜங்ஷன், டவுன், ஹைகிரவுண்டு ஆகிய இடங்களைக் குறிக்கும் பேருந்துப் பெயர்ப் பலகைகள் தமிழாக்கம் செய்யப்படாமல் இருந்து வந்தன. இது குறித்துப் பேருந்து உரிமையாளர்கள், அரசுப் போக்குவரத்துக் கழகம், போக்குவரத்துத்துறை அலுவலர்கள் ஆகியோருடன் ஆலோசனைக் கூட்டம் நடத்தி மேற்கண்ட பெயர்களைப் பின்வருமாறு தமிழாக்கம் செய்து 16.11.1999 முதல் அதனைச் செயல்படுத்தியுள்ளேன்.

| | |
|---|---|
| ஜங்ஷன் | நெல்லை சந்திப்பு |
| டவுண் | நெல்லை நகரம் |
| ஹைகிரவுண்டு | மேட்டுத்திடல் |

மேற்கண்ட மாற்றத்திற்குப் பொதுமக்களிடம் நல்ல வரவேற்பு உள்ளது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இது குறித்து திருநெல்வேலியில் வெளியான பத்திரிகைத் துணுக்குகள் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளன.

இது குறித்து மாலை முரசு (16.11.99) இதழ்என்ன எழுதுகிறது என்று பாருங்கள்.

"ஐகிரவுண்டு பெயர் மாறியது
'பாளை, மேட்டுத்திடல்'
நெல்லை. நவ.16 -

பாளை ஐகிரவுண்டு, பாளை மேட்டுத்திடல் என்றும் நெல்லை டவுன் நெல்லை நகரம் எனவும் பெயர் மாற்றப்பட்டுள்ளது.

பெயர் மாற்றம்

"எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்" என்பதில் ஆர்வமுள்ள நெல்லை மாவட்ட கலெக்டர் தனவேல் அனைத்துத் துறைகளிலும் தமிழை புகுத்துவதில் முனைப்புடன் செயல்பட்டு வருகிறார். இதற்கு முன் உதாரணமாக தனது கார் நம்பரை கூட தமிழில்தான் வைத்துள்ளார்.

சமீபத்தில் ஒரு நிகழ்ச்சியில் பேசும்போது நெல்லை நகரத்தில் ஆங்கிலத்தில் அழைக்கப்படும் சில இடங்களின் பெயர்கள் விரைவில் மாற்றப்படும் என்றார். அதன்படி நெல்லை டவுன் என்பதை நெல்லை நகரம் எனவும் பாளை ஐகிரவுண்டு என்பதை பாளை மேட்டுத்திடல் எனவும் மாற்றப்படுவதாக கலெக்டர் அறிவித்தார்.

மேட்டுத்திடல்

அவருடைய அறிவுப்புப்படி நெல்லையில் ஓடும் ஒரு சில தனியார் பஸ்களில் பாளை. ஐகிரவுண்டு என்பது பாளை. மேட்டுத்திடல் என்று மாற்றி எழுதப்பட்டுள்ளது. அதேபோல் "டவுன்" நெல்லை நகரம் என்று மாற்றி எழுதப்பட்டுள்ளது. ஆனால் அரசு போக்குவரத்துக் கழக பஸ்களில் இந்த தமிழ் மாற்றப் பெயர் அறிவிப்பு இன்னும் செயல்படுத்தப்படவில்லை. பஸ் நிலையத்தின் பாளை. கிரவுண்டு பஸ்சுக்காகக் காத்து நின்றவர்கள் பாளை. மேட்டுத்திடல் என்ற போர்டைப் பார்த்தவுடன் இந்த பஸ் வேறு எங்கோ செல்கிறது என அதில் ஏறாமல் நின்று கொண்டனர். கண்டக்டர் இந்தபஸ் ஐகிரவுண்டு தான் செல்கிறது எனக் கூறியவுடன் பெயர் மாற்றத்தை ரசித்தபடியே பஸ் ஏறிச் சென்றனர்.

இது குறித்து, எல்லா இதழ்களும் போட்டி போட்டுக்கொண்டு செய்திகளை வெளியிட்டுச் சிறப்பித்தன. ஆர்வம் எழுந்தால், மக்களுக்கு எந்த ஆணையும் தேவையில்லை. அரசும் பாராட்டும், பொதுமக்களும் வரவேற்பர். இதுதான் உண்மையான நிலை.

இதுகுறித்துப் பாராட்டி நானே ஒரு மடல் எழுதினேன். (6.12.99)

அன்புக்குரிய தனவேல்,

பேருந்துகளில் பெயர்கள் நல்ல தமிழில் மாற்றம் செய்யப்பட்டதை முன்பே அறிந்தேன். தங்களைப் போன்ற அக்கறையும் ஆர்வமும் உடைய தமிழ்நெஞ்சங்கள் அரசுப் பொறுப்புகளில் அமரும்போதுதான் நாம் மாபெரும் வெற்றியை அடையமுடியும். இந்தவகையில் சிறப்புடன் பணியாற்றும் தங்களுக்கு என் நெஞ்சார்ந்த பாராட்டுகள்! பணிகள் தொடரட்டும்!

அன்புடன்
(மு. தமிழ்க்குடிமகன்)

49. 10.12.99 அன்று தொழிலாளர் நலத் துறை அமைச்சர்க்கு எழுதிய மடல்.

அன்புடையீர்,

தமிழ்நாடு உடல் உழைப்போர் சட்டத்தின்கீழ் வெளியிடப்படும் ஆணைகள் அனைத்தும் ஆங்கிலத்திலேயே உள்ளன என்று கட்டிடத் தொழிலாளர் பஞ்சாயத்து சங்கம் தெரிவித்துள்ளது. அதனைத் தங்கள் பார்வைக்கு அனுப்பியுள்ளேன். மிகக் குறைந்த கல்வி அறிவுள்ள இத்தகைய தொழிலாளர்களுக்குத் தமிழிலேயே ஆணைகள் வழங்குவது முறையாக இருக்கும். ஆவன செய்வீர்கள் என்று நம்புகிறேன்.

50. தவறுகளைச் சுட்டிக் காட்டி நடவடிக்கை எடுக்கும் அதே நேரத்தில் ஆர்வமுடைய அலுவலரின் பணியைப் பாராட்டியும் எழுதத் தயங்கவில்லை. முன்பு, நெல்லை, மா.ஆ. தலைவர் கி. தனவேலுக்கு அப்படியொரு பாராட்டு மடலை எழுதியிருந்தேன். தற்போது வேறு மடல்:

அன்புடையீர்,

தாங்கள் குடிநீர் வடிகால் வாரியத்தில் அனைத்து நடவடிக்கைகளையும் தமிழில் மேற்கொண்டுள்ளது குறித்து என் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டது. உங்களைப் போன்றவர்கள் எண்ணிக்கை பெருகப் பெருகத் தமிழுக்குப் புதிய மேன்மை கூடிக்கொண்டே போகும். தங்களுடைய நடவடிக்கைக்கு என் நெஞ்சார்ந்த பாராட்டுகள்!

பெறுநர்

திரு.பி. செயராசு
நிருவாகப் பொறுப்பாளர்
தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம்
பராமரிப்புக் கோட்டம், ஈரோடு - 638 011.

51. என் கவனம் எப்படியிருந்தது என்பதற்கும், அதனை என் துறை சார்ந்த உதவி இயக்குநர்கள் எப்படிச் செயல்படுத்தினார்கள் என்பதற்கும் இந்த மடல் எடுத்துக்காட்டு.

| அனுப்புநர்: | பெறுநர்: |
|---|---|
| திரு. திரு.க. தேவதாசு, | நிலைய அலுவலர், |
| மாவட்டத் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர், | தொடர் வண்டி நிலையம், |
| மாவட்ட ஆட்சியர் அலுவலக வளாகம், | திண்டுக்கல் சந்திப்பு |
| திண்டுக்கல் - 624 004 | திண்டுக்கல் |

ந.க.876/99, நாள் : 15.12.99, திருவள்ளுவராண்டு 2030, கார்த்திகை 29

பொருள் : தமிழ் - ஆட்சிமொழித் திட்டம் - திண்டுக்கல் தொடர்வண்டி நிலைய நடைமேடையில் வைக்கப்பட்டுள்ள தகவல் அறிவிப்புப் பலகைகளை நல்ல தமிழில் எழுதி வைக்க வேண்டுதல் - குறித்து.

திண்டுக்கல் தொடர்வண்டி நிலையத்திற்கு வரும் வண்டிகளின் பெட்டிகள் நிற்குமிடத்தைக் குறிக்கும் வகையில், திண்டுக்கல் தொடர்வண்டி நிலைய நடை மேடையில் தகவல் அறிவிப்புப் பலகைகள் வைக்கப்பட்டுள்ளன. அவ்வாறு வைக்கப்பட்டுள்ள தகவல் அறிவிப்புப் பலகைகளில் குறிப்பிட்டுள்ள விவரங்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்பட்டுள்ளன. அப்பலகைகளில் 'பெட்டி எண்' எனக் குறிப்பதற்குப் பதிலாக 'பெட்டி நெம்பர்' எனக் குறிப்பிட்டுள்ளதை 15.12.99 அன்று பாண்டியன் விரைவு வண்டியில் திண்டுக்கல் வந்தடைந்த மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, பண்பாடு (மற்றும்) இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் காணநேர்ந்தது. இதனை உரிய முறையில் நிலைய அலுவலருக்குத் தெரிவித்து அவ்வறிவிப்புப் பலகைகளை நல்ல தமிழில் எழுதிவைக்க உரிய நடவடிக்கைகளை மேற்கொள்ளப் பணிக்கப்பட்டுள்ளேன்.

எனவே, தாங்கள் திண்டுக்கல் தொடர்வண்டி நிலையச் சந்திப்பு நடைமேடையில் வைக்கப்பட்டுள்ள தகவல் அறிவிப்புப் பலகைகளில், 'பெட்டி நம்பர்' எனக் குறிப்பிட்டுள்ளதை 'பெட்டி எண்' என மாற்றி எழுதவும். இதுபோன்ற பிற அறிவிப்புப் பலகைகளையும் நல்ல தமிழில் எழுதி வைக்க அன்புகூர்ந்து ஆவன செய்ய வேண்டுகிறேன். இதுகுறித்துத் தாங்கள் மேற்கொண்ட நடவடிக்கை குறித்து எனக்குத்தெரிவிக்கவும் அன்புடன் வேண்டுகிறேன். (பின் குறிப்பு : இப்போது அந்த மாற்றம் நிகழ்ந்துள்ளது)

52. அரசு அலுவலர்கள் தவறு செய்கிறார்கள் என்றால் நடவடிக்கை எடுக்க வேண்டியது எங்கள் கடமை. ஆனால் உடனே கட்சிக்காரர்கள் 'கொள்கையைச் செயற்படுத்த முன் வராமல்' கோணல் சால் அடிக்க முன்வந்து விடுவார்கள் என்பதற்குப் பின்வரும் மடல் எடுத்துக்காட்டு. மடலிலேயே விளக்கம் உள்ளது.

'அன்புடையீர்,

வணக்கம். கோவில்பட்டி பஞ்சாயத்து யூனியன் அலுவலக ஆணையாளர் கருப்பசாமி அவர்கள் தனக்கு வழங்கப்பட்ட அரசு ஆணை குறிப்பை தனக்குட்பட்ட ஊராட்சி மன்றங்களுக்கு தமிழில் மொழிபெயர்த்து அனுப்பாமல் ஆங்கிலத்தில் அனுப்பியதாக மேற்படி கருப்பசாமி மீது தங்களது இலாகா மூலம் நடவடிக்கை எடுக்கப்பட்டு விசாரணையில் உள்ளது. திரு. கருப்பசாமி அவர்கள் நமது கழக ஆதரவாளர், நமது கழகத்தினர் தலைவராக உள்ள ஊராட்சி மன்றங்களுக்கு அனுசரணையாக செயல்படுபவர். ஆகையால் திரு. கருப்பசாமி அவர்களின் பிழையை மன்னித்து கருணை காட்ட வேண்டுகிறேன். மேலும் தற்போது திரு. கருப்பசாமி அவர்கள் பதவி உயர்வு கிடைக்கின்ற தகுதி வரிசையில் உள்ளார் என்பதால் தாங்கள் தயவு கூர்ந்து அவர் மீது நடவடிக்கையை தவிர்த்து உதவிட வேண்டுகிறேன்.'

கட்சிக்காரர்களுக்கு அனுசரணையாக இருக்கிறாராம். எனவே அவர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டாமாம். அப்படி எடுத்தால் பதவி உயர்வு பாதிக்கப்படுமாம். இவ்வளவு தெரிந்திருக்கிறது; ஆனால் இவற்றை யெல்லாம் கண்காணித்து நடவடிக்கை எடுத்திட 'மேலே ஒருவன்' இருக்கிறான் என்பது மட்டும் எப்படி மறந்து போயிற்று?

*கி.பி. 2000 ஆண்டு*

53. கி.பி. 2000 சனவரி முதல்நாளன்று கன்னியாகுமரியில் 133'உயரத்தில் அமைந்த 'திருவள்ளுவர் சிலை' திறக்கப்பட்டது. அதனையொட்டி நிகழ்ச்சி அமைப்பாளர் எனும் முறையில் கன்னியாகுமரியில் தங்கியிருந்தேன். நான் தங்கியிருந்த விடுதிக்குப் பெயர் "Sea View Lodge" இது அறநிலையத்துறைக்குச் சொந்தமான இடத்தில் ஒப்பந்த அடிப்படையில் கட்டப்பட்டது. துறை அமைச்சர் எனும் முறையில் அங்குத் தங்கினேன். ஆனால் ஒரு முறையிகம் (நிபந்தனை) விதித்தேன். விரைவில் மேலே 'கடல் காண் விடுதி' என்று எழுதி வைத்துவிட வேண்டும் என்று பணித்தேன். அதன்படி எழுதி வைக்கப்பட்டது.



படம் இதுதான்.

எனவே, எந்த இடத்தில் இருந்தாலும், எங்கள் தமிழ்க் கொள்கையைச் செயற்படுத்தத் தயங்கியது கிடையாது, தயங்க வேண்டிய தேவையும் கிடையாது.

54. சேலம் மாநகராட்சியில் குடிநீர்க் குழாய் இணைப்புக் கோரி நுகர்வோர் கொடுக்கும் விண்ணப்பம் ஆங்கிலத்தில் உள்ளது எனச் சுட்டிக் காட்டப்பட்டது. உடனே, சேலம் மாநகராட்சி மேயருக்கு மடல் எழுதினேன். அவருக்கு மட்டுமன்றி, எஞ்சியுள்ள 5 மாநகராட்சிக்கும் மடல் எழுதினேன்.

திருச்சி மேயர் புனிதவல்லி பழனியாண்டி விடை எழுதினார்.

"தங்களுடைய 13.12.99ந் தேதிய கடிதம் கிடைக்கப்பெற்றேன். நன்றி.

திருச்சிராப்பள்ளி மாநகராட்சியில் குடிநீர்க்குழாய் இணைப்புக்கோரும் விண்ணப்பப் படிவம் ஏற்கெனவே தமிழாக்கம் செய்யப்பட்டு இம்மாநகராட்சியில் நடைமுறையில் உள்ளது. மேற்படி விண்ணப்பத்தின் நகலொன்று இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. மேலும் விரிவான விபரங்களுடன் விண்ணப்பம் அச்சு செய்து பொதுமக்களுக்கு விநியோகம் செய்ய நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது என்பதையும் அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்."

இந்த மடலுடன் தமிழில் உள்ள விண்ணப்பத்தையும் விண்ணப்பம் பெற்றுக் கொண்டமைக்கான ஏற்புச் சீட்டையும் அனுப்பியிருந்தார். பாராட்டுக்கள்!

அதேபோல, மதுரை மேயர் பெ. குழந்தைவேலு மடல் எழுதியிருந்தார்.

"பார்வையில் கண்டுள்ள கடிதத்தின் பேரில் கீழ்க் கண்டவாறு விபரங்கள் தெரிவித்துக் கொள்ளப்படுகின்றன.

இம்மாநகராட்சியைப் பொறுத்தவரையில் விண்ணப்பப் படிவங்கள் யாவும் தமிழிலேயே அச்சடிக்கப்பட்டு விற்பனை செய்யப்படுகின்றன. குடிநீர் இணைப்புப் படிவம் கூட தமிழில் தான் உள்ளது. மேற்படி மாதிரிப் படிவம் ஒன்றும் இத்துடன் இணைத்துத்தங்களின் மேலான தகவலுக்கு அனுப்பி வைக்கப்படுகிறது."

அதனுடன் குடிநீர் வழங்கல் தொடர்பாகத் தமிழில் உள்ள விண்ணப்பங்கள் அனைத்தையும் என்பார்வைக்கு அனுப்பியிருந்தார்.

1. விண்ணப்பம்
2. ஏற்கெனவே உள்ள குழாய் இணைப்பில் பிறவேலைகள் பார்த்தல்
3. ஒப்புதல் கடிதம்

4. விண்ணப்பம் மற்றும் மதிப்பீடு
5. மதிப்பீடு சரிபார்த்தமைக்கான படிவம் (Check Slip)
6. பணம் செலுத்த உத்தரவு
7. சரிபார்த்தல் சீட்டு
8. இணைப்பு வேலை பார்த்தல்
9. செலவுத்தொகை மதிப்பீடு
10. இணைப்பில் பிற வேலைகள் செய்வது குறித்த மாதிரி வரைபடம்.

இவ்வளவு படிவங்களும் தமிழில் உள்ளன. பார்க்க மகிழ்ச்சியாக இருந்தது. மேயருக்குப் பெரிய பாராட்டைத் தெரிவிக்கலாம். என்ன இருந்தாலும் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரை அல்லவா?

55. முன்னாள் படைவீரர் நலத்துறை உதவி இயக்குநர் எனக்கொரு மடல் எழுதினார்.

"படைக்கு ஆள்சேர்க்கும் போது அவர்கட்கான நுழைவுத் தேர்வில் தற்போது இந்தி (அ) ஆங்கிலத்தில் மட்டுமே பதிலளிக்க வாய்ப்பு உள்ளது.

இதனால் தமிழைப் பயிற்று மொழியாகப் பயிலும் மாணவர்கள் (தமிழ்நாட்டு இளைஞர்கள்) இராணுவ நுழைவுத் தேர்வில் தேர்ச்சியில் குறைவான அளவில் தேறுகின்றனர்."

இது நம் நாடாளுமன்ற உறுப்பினர்களாக - அமைச்சர்களாக இருக்கும் சிலர்க்குத் தெரிவிக்கப்பட்டது. அதன்பின். . . ?

56. தமிழ்நாடு டாக்டர் எம்.ஜி.ஆர். மருத்துவப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்க்கு ஒரு மடல் எழுதினேன். அது இதுதான் (20.3.2000)

'ஆயுர்வேத மருத்துவ நூல்கள் அனைத்தும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, பலர் தமிழிலேயே தேர்வெழுதி 1998 ஆம் ஆண்டு தேர்ச்சி பெற்றுள்ளனர். இந்நிலையில் கொரட்டூரில் உள்ள வெங்கட்டரமணா ஆயுர்வேதக் கல்லூரியும், நமது பல்கலைக் கழகமும் தமிழில் தேர்வெழுதத் தடை விதித்திருப்பதாக அறியப்படுகிறது. இதுகுறித்து உண்மை நிலையைத் தெளிவுபடுத்துவதுடன் தமிழ் வழியில் ஆயுர்வேத மருத்துவக் கல்வித் தேர்வினை எழுதுகிறவர்களுக்கு ஊக்கம் அளிக்க வேண்டுகிறேன்.'

என்ன நடவடிக்கை எடுத்தார்கள் என்பதற்கான குறிப்பு இல்லை.

57. மின்பாதை ஆய்வாளராகப் பணியாற்றிய ம. கருப்பையா என்பவர் ஒரு மடல் எழுதினார்.

அதனை ஏற்று, அவர் கூறிய தமிழ்த் தொடர்களில் பொருத்தமான மாறுதல்களைச் செய்து மின்துறை அமைச்சர் அவர்கட்கு ஒரு மடல் எழுதினேன். அதனுடன் மின்வாரியத் தலைவர் பூரணலிங்கம் அவர்கட்கும் அனுப்பிவைத்தேன்.

"தமிழ்நாடு மின்வாரிய அலுவலகப் பதிவேடுகளிலும், மின்கம்பம் தயாரிக்கும் இடப் பெயர்ப்பலகைகளிலும் பல இடங்களில் பொருத்தமான தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தி வருகின்றனர். எனினும் வேறு சிலவற்றிற்குத் தக்க மாற்றம் தேவைப்படுகிறது.

தற்போதுள்ள தொடர்கள்

1. மின் இணைப்புகளில் மின் தடங்கல் பதிவேடு
2. தெரிவிப்பவர் கையொப்பம்
3. கவனித்தவர் கையொப்பம்
4. மின் கம்பம் உற்பத்தி நிலையம்

இவற்றில் மாற்றம் தேவையில்லை.

மாறுதல் செய்யப்படவேண்டியவை :-

'கவனித்த நேரம்' என்பதை "மின்தடை நீக்கிய நேரம்" என்றும் - 'ஒர்க் அலகேசன்' என்பதை "பணி ஒதுக்கீட்டுப் பதிவேடு" என்றும் 'டூட்டி சாய்னிங் ரிப்போர்ட்' என்பதை "பணிப் பொறுப்பேற்பு அறிக்கை" என்றும் - 'சைக்கிள் நிறுத்துமிடம்' என்பதை "மிதி வண்டி நிறுத்துமிடம்" என்றும் மாறுதல் செய்யுமாறு அன்புடன் வேண்டுகிறேன்."

58. பேருந்துகளில் பல இடங்களில் செல்லும் ஊரின் பெயர்களும், குடியிருப்புகளின் பெயர்களும் நல்ல தமிழில் இருப்பதில்லை. இதனை மனத்திற்கொண்டு, த.அ.போ.வ. கழகத்தின் (மாவட்ட வாரியான) நிர்வாக இயக்குநர்களுக்கு மடல் எழுதினோம். அவர்களில் பலர் எங்களுக்கு விடை எழுதினர். தக்க மாற்றங்கள் செய்வதாக உறுதி அளித்தனர்.

திருச்சி நிர்வாக இயக்குநர் அவர்கள் தற்பொழுது வழக்கத்திலுள்ள சொற்களுக்குப் பதிலாகத் தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தி வருவதாகத் தெரிவித்துள்ளார்.

| வழக்கத்திலுள்ள சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| டவுண் | - | நகரம் |
| ஜங்சன் | - | சந்திப்பு |
| மார்க்கட் | - | அங்காடி |
| கோர்ட் | - | நீதிமன்றம் |
| சென்ட்ரல் பஸ் ஸ்டாண்ட் | - | மத்திய பேருந்து நிலையம் |
| போலீஸ் காலனி | - | காவலர் குடியிருப்பு |
| ஏர்போர்ட் | - | விமானநிலையம் |

| | | |
|---|---|---|
| ஜி.ஹெச். | - | அரசு மருத்துவமனை |
| டோல்கேட் | - | சுங்கச்சாவடி |
| கலெக்டர் ஆபீஸ் | - | மாவட்ட ஆட்சியரகம் |

திருநெல்வேலி நிர்வாக இயக்குநர் அவர்கள் தற்பொழுது வழக்கத்திலுள்ள கீழ்க்கண்ட ஆங்கிலம் கலந்த தமிழ்ச் சொற்களுக்குப் பதிலாக கீழ்க்கண்டவாறு தமிழ்ச் சொற்கள் பயன்படுத்தப்பட்டு வருவதாகத் தெரிவித்துள்ளார்.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஹைகிரவுண்டு | - | பாளை மேட்டுத்திடல் |
| 2. | ஜங்ஷன் | - | சந்திப்பு பேருந்து நிலையம் |
| 3. | டவுன் | - | நெல்லை நகரம் |
| 4. | பாளை மார்க்கெட் | - | பாளை தினசரி சந்தை |

ஆங்கிலம் கலந்த தமிழ்ப் பெயர்கள் கீழ்க்கண்டவாறு தமிழில் மாற்றம் செய்யப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | T.V.S. நகர் | - | டி.வி.எஸ். நகர் |
| 2. | S.T.C | - | சாராள் தக்கர் கல்லூரி |
| 3. | I.R.T. பாலிடெக்னிக் | - | ஐ.ஆர்.டி. தொழில் நுட்பப் பயிலகம் |
| 4. | I.O.B. காலனி | - | ஐ.ஓ.பி. குடியிருப்பு |
| 5. | என்.ஜி.ஓ.பி. காலனி | - | அரசு அலுவலர் 'பி' குடியிருப்பு |
| 6. | என்.ஜி.ஓ. 'ஏ'காலனி | - | அரசு அலுவலர் 'ஏ' குடியிருப்பு |

மேலும் தனியார் உரிமையாளர்களும் செயல்படுத்த திருநெல்வேலி மற்றும் தூத்துக்குடி மாவட்ட ஆட்சித் தலைவர்களுக்கும் செயல்முறை ஆணை பிறப்பிக்கும்படி கடிதம் எழுதப்பட்டுள்ளதாகத் தெரிவித்துள்ளார்.

கும்பகோணம், நிர்வாக இயக்குநர் அக்கழகப் பேருந்துகளின் முகப்பிலுள்ள பெயர்ப்பலகையில் ஊரின் பெயர்கள் தூய தமிழில் எழுதி இயக்க நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது எனத் தெரிவித்துள்ளார்.

59. கடைசியாக ஒன்று

உடனே கொதித்தெழுந்தோம்

தொலைபேசியில் 197 என்ற எண்ணுக்கு ஒரே நேரத்தில் பலர் பேசினால் 'You are in Q - Please wait' என்றுதான் குரல் வரும். ஆனால் திடீர் என்று ஒருநாள் ஆங்கிலத்தைத் தொடர்ந்து இந்தியிலும் குரல். தமிழ்நாட்டில் தமிழில் மட்டும் இல்லை.

இந்தச் செய்தியைத் 'தினத்தந்தி' இதழ் வெளியிட்டிருந்தது. உடனே பொது மேலாளரிடம் பேசினேன். திருத்திக் கொள்வதாகத் தெரிவித்தனர். அதன்படி 'இந்திக் குரல்' நிறுத்தப்பட்டது.

இதுபற்றித் 'தினத்தந்தி' இதழே மறுபடியும் செய்தி வெளியிட்டது.

''தினத்தந்தி'' செய்தி எதிரொலி

சென்னை டெலிபோனில் இந்தியில் கூறிய அறிவிப்பு ரத்து
அமைச்சர் தமிழ்க்குடிமகன் நடவடிக்கை

சென்னை, ஆ.14 -

"தினத்தந்தி"யில் வந்த செய்தியின் எதிரொலியாக அமைச்சர் தமிழ்க்குடிமகன் எடுத்த உடனடி நடவடிக்கையால் சென்னை டெலிபோனில் இந்தியில் கூறப்பட்ட அறிவிப்பு நேற்று நிறுத்தப்பட்டது.

இந்தியில் தகவல்

சென்னை டெலிபோனில் ஏதாவது தகவல் பெற 197 என்ற எண்ணை "டயல்" செய்தால் கடந்த சில நாட்களாக இந்தியில் தகவல் சொல்லப்பட்டது.

197 என்ற எண்ணுக்கு ஒரே நேரத்தில் பலர் டெலிபோன் செய்தால், "யூ ஆர் இன் கியூ பிளீஸ் வெயிட்" என்று ஆங்கிலத்தில் மட்டும் இதுவரையில் கூறப்பட்டு வந்தது. ஆனால் கடந்த சில நாட்களாக இந்த ஆங்கில அறிவிப்பைத் தொடர்ந்து இந்தியிலும் "ஆப் பதார் மே ஹை, கிருபயா பிரதீஷா கீஜியே" என்று டேப் செய்யப்பட்ட ஒரு பெண் குரல் அறிவித்தது.

அமைச்சர் தமிழ்க்குடிமகன்

தமிழ்நாட்டில் உள்ள டெலிபோனில் தமிழுக்கு இடம் இல்லாமல் ஆங்கிலத்திலும் இந்தியிலும் அறிவிப்பு வெளியிட்டுக் குழப்பம் ஏற்படுத்தும் இந்தச் செயலை நேற்று ''தினத்தந்தி''யில் செய்தியாக வெளியிடப்பட்டது. தமிழுக்கு இடம் இல்லாத நிலையும் தலைப்பாகக் கூறப்பட்டு இருந்தது.

தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் காலையில் "தினத்தந்தி"யில் இந்த செய்தியைப் படித்துவிட்டு உடனடியாக டெலிபோன் இலாகா தலைமை ஜெனரல் மானேஜர் சடகோபனுக்கு டெலிபோன் செய்தார். 197 டயல் செய்தால் ஆங்கிலத்திலும் புதிதாக இந்தியிலும் கூறப்படும் அறிவிப்புகளால் ஏற்படும் குழப்பத்தை எடுத்துக் கூறி தமிழுக்கு இடம் இல்லாத நிலை இருக்கக் கூடாது என்று வற்புறுத்தினார்.

டெலிபோன் இலாகா தலைமை ஜெனரல் மானேஜர் சடகோபன் உடனடியாக இந்தியில் வெளியிடப்படும் அறிவிப்பு நிறுத்தப்படும் என்றும் விரைவில் தமிழிலும் அறிவிப்பு வெளியிட நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் அமைச்சர் தமிழ்க்குடிமகனிடம் உறுதி அளித்தார்.

அமைச்சர் தமிழ்க்குடிமகன் எடுத்த நடவடிக்கையால் அடுத்த சற்று நேரத்திற்குள் இந்தியில் வெளியிடப்பட்ட அறிவிப்பு நிறுத்தப்பட்டது. இப்போது 197 டயல் செய்தால் ஆங்கிலத்தில் மட்டுமே தகவல் கூறப்படுகிறது. இந்தி அறிவிப்பு இல்லை.

அமைச்சர் தமிழ்க்குடிமகனிடம் டெலிபோன் இலாகா தலைமை ஜெனரல் மானேஜர் அளித்த உறுதிமொழியின்படி விரைவில் தமிழிலும் அறிவிப்பு வெளியிடப்படும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

டெலிபோனில் புதிதாக இந்தியில் அறிவிப்பு வெளியிட்டு தமிழுக்கு இடம் இல்லை என்ற செய்தியை பிரசுரித்து உடனடியாக நடவடிக்கை எடுக்க அரசின் கவனத்துக்கு கொண்டு வந்ததற்காக "தினத்தந்தி"யை அமைச்சர் தமிழ்க்குடிமகன் பாராட்டினார்."

இப்போது ஆங்கிலத்தைத் தொடர்ந்து தமிழிலும் கூறப்படுகிறது. "நீங்கள் வரிசையில் இருக்கிறீர்கள்; தயவு செய்து காத்திருக்கவும்" என்ற தொடர்களை இப்போது கேட்கலாம்.

* * *

இயல்பான கடமைகளை எல்லோரும் செய்வார்கள். ஆனால் நாங்களோ எல்லை மீறியே எங்கள் நடவடிக்கைகளை எடுத்துள்ளோம். ஆட்சிமொழிக் கருத்தரங்குகள் வாயிலாக அந்தந்த மாவட்ட அலுவலர்களிடம் தெளிவை உண்டாக்கினோம். அதிரடி ஆய்வுகளின் வாயிலாக, ஒருசிறிய அலுவலகத்தைக் கூட உலுக்கி எடுத்தோம். இதுவரையிலும் ஆய்வுக்கு உட்படாமல் தப்பித்துக்கொண்டு வந்த தலைமைச் செயலகத்தையே ஆய்வுக்குக் கொண்டு வந்தோம். இ.ஆ.ப. அலுவலர்கள் பலரை நேரில் அழைத்துத் தெளிவுபடுத்தினோம்.

தமிழகத்தின் மூலை முடுக்கெல்லாம் தேடிப்பிடித்து, எங்கெல்லாம் தமிழ் புறக்கணிக்கப்படுகிறதோ, எங்கெல்லாம் தமிழ் சிதைக்கப்படுகிறதோ அங்கெல்லாம் தலையிட்டுள்ளோம். நடுவண் அரசுத் துறைகளிலும், தமிழக அரசுத் துறைகளிலும் தனியார் துறைகளிலும் எங்கள் பணி ஊடுருவியது. பாவேந்தர் தேவைப்படும் இடங்களில் கிளர்ச்சி செய்யச் சொன்னார்.

அரசுப் பொறுப்பில் இருந்ததால் 'கிளர்ச்சி' செய்யவில்லை; தேவையுமில்லை, சொன்னால் போதும், சுட்டிக்காட்டினால் போதும்; நடக்கும்; நடந்திருக்கிறது.

அரசுப் பொறுப்புக்கு வாராத காலத்தில் கல்லூரிப் பேராசிரியராக, முதல்வராக இருந்த காலத்தில் பல இடங்களில் கிளர்ச்சி செய்திருக்கிறோம். பெயர்ப்பலகை சிவவற்றைத் தார்கொண்டு அழித்திருக்கிறோம்.

எனவே, தமிழ் உணர்வாளர்கள் செய்ய வேண்டுவது 'கிளர்ச்சி'. தமிழ் அமைச்சர் செய்ய வேண்டியது 'தமிழுக்கு வளர்ச்சி'

நான் சோர்வடையவில்லை; வளர்ச்சிக்கு உழைத்தேன்; ஆனாலும் தமிழகத்தில் இன்னும் பல இடங்களில் தமிழ் புறக்கணிக்கப்படுகிறது. போதுமான வளர்ச்சியை எட்டவில்லை. இப்போதும் என் பணி தொடர்கிறது; இனி நான் செய்ய வேண்டியது கிளர்ச்சி; தமிழ் அன்பர்கள் துணையுடன் 'கிளர்ச்சி' செய்வோம்.

இந்த நூல் அச்சாகி முடியும் வேளையில் ஒரு செய்தி வந்தது (27.4.2003)

கரூர்ப் பணிமனையில் இருந்த 30க்கும் மேற்பட்ட அரசுப் பேருந்துகளில் தமிழில் எழுதியிருந்த பெயர்ப்பலகையை அழித்துவிட்டனர். நாங்கள் அரும்பாடுபட்டு உருவாக்கிய இதனை இரண்டு 'உதவாக் கரைகள்' சேர்ந்து அழித்துவிட்டனர். எனினும், கரூர்த் தமிழ்ச் சங்கம் இதனை, மாண்புமிகு போக்குவரத்துத் துறை அமைச்சரின் கவனத்துக்குக் கொண்டு சென்றது. அமைச்சர் விசுவநாதன் உடனே நடவடிக்கை எடுத்து, கிளை மேலாளர் கிருட்டிணமூர்த்தியையும், உதவிப் பொறியாளர் நடராசனையும் தற்காலிகப் பணிநீக்கம் செய்துவிட்டார். அமைச்சருக்கு என் பாராட்டுகள்!

விழித்துக் கொண்டிருக்கும்போதே கண்ணைத் தோண்ட முயலும் இத்தகைய பேர்வழிகள் இன்னும் கடுமையாகத் தண்டிக்கப்பட வேண்டும்.

பாவலர் இளவரசு கூறுவது போல

*''உதைத்துத் திருத்திட ஒரு படை வேண்டும் தமிழனே!''* என்ற வரிதான் நினைவுக்கு வருகிறது.



## இயல் - முப்பத்தாறு

# பொதுமக்களின் பொறுப்பற்ற போக்குகள்

பொதுவான தமிழ் இதழ்களைப் படிப்பதென்பது வேறு. அதில் கலப்பு நடை, மணிப்பிரவாள நடை, ஆங்கிலத்தில் தலைப்பு போன்றவை இன்று தலைதூக்கியுள்ளன. மக்களிடைப் பரவி வருமானத்தைப் பெருக்கிட வேண்டும் என்ற ஒரே நோக்கில் தரம்தாழ்ந்த செய்திகளை நோக்கிப் பல இதழ்கள் கீழே இறங்கியுள்ளன. இவற்றைப் பல நூறு எடுத்துக்காட்டுகளுடன் மெய்ப்பிக்க முடியும்.

ஆனால் கல்வித்துறை வெளியிடும் நூல்களில் இந்தக் குறை வரலாமா!

கற்றுக்கொடுக்கும் இடத்திலுள்ள மாசுகளை நீக்கினால் நாட்டில் மாசு நீங்கும்.

இதோ..

மாநிலப் பள்ளிசாராக் கல்விக் கருவூலம் சார்பில் இயங்கும் அறிவொளி இயக்கத்தால் 'அறிவொளி தீபம்' எனும் நூல் வெளியிடப்பட்டுள்ளது.

அதில் முகவரியில் "அடையார்" என்று உள்ளது. எத்தனையோ முறை எடுத்துச் சொல்லிவிட்டோம். "அடையார்" என்றால் "பகைவர்" என்று பொருள். எனவே பொருள்புரியாமல் பிழையாக எழுதாதீர்கள் என்று எவ்வளவோ சொல்லியாயிற்று.

அடை ஆறு - 'அடையாறு' என்று எழுதுவதற்குக் கல்வியாளர்களே முன் வரவில்லை என்றால் என்ன செய்வது?

2. தினபூமி இதழில் ஒரு செய்தி (22.9.97)

Janata party "confrens" meeting என்று விளம்பரம். அரைகுறை ஆங்கில அறிவு படித்தவர்களால் 'confrens' என்ன பாடுபடுகிறது என்று பாருங்கள். அதுபற்றி அந்த இதழே எழுதுகிறது.

சொல்வது ஒன்று; செய்வது ஒன்றா!

COIMBATORE DISTRICT JANATA PARTY CONFRENS MEETING

கோவையில் நேற்று ஜனதா கட்சித் தலைவர் டாக்டர் சுப்பிரமணியசாமி நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார். அப்போது அவர் 'ஜனதா கட்சி மூலம் தமிழுக்கு தனி அந்தஸ்து கிடைக்கச் செய்வோம்' என்று உணர்ச்சி பூர்வமாக குறிப்பிட்டார். இந்நிலையில் நேற்று மதியம் கோவை மாவட்ட ஜனதா கட்சிச் செயல் வீரர்கள் கூட்டம். மேடையிலோ ஆங்கில வார்த்தைகள் தான்

ஆதிக்கம் பெற்றிருந்தன. (அதுவும் தப்பும் தவறுமாக) இப்படித்தான் சுப்பிரமணியசாமி தமிழுக்கு முதல்மரியாதை கொடுப்பாரோ?

3. ஒரு திரைப்பட விளம்பரம் - விளம்பரத்தில் ஒன்றும் தவறு நேரவில்லை. படத்தின் பெயரே அதுதான்.

*உன்னை கொடு என்னை தருவேன்*

"உன்னைக்கொடு; என்னைத் தருவேன்" என்று போடும் துணிவும், தெளிவும், அடிப்படை அறிவும் இவர்களுக்கு இல்லை.

நல்லவேளை 'எண்ணை தருவேன்' என்று போடாமல் விட்டார்களே! அதுவரைக்கும் 'தமிழ்' பிழைத்தது.

4. ஓர் இதழில் ஒரு கட்சித் தலைவரைத் தாக்கி ஒரு விளம்பரம். அதற்கு எடுத்துக்காட்டாக ஒரு திருக்குறள்.

'பிறர் கின்னா முற்பகல் செய்யின்
தமக்கின்னா பிற்பகல் தாமே விளையும்'

என்று விளம்பரம் செய்துள்ளார்கள்.

'பிறர்க்கின்னா' என்று ஒற்றுப் போட்டு எழுதினால்தான் 'பிறருக்கு ஒருவர் முற்பகல் துன்பம் விளைவித்தால்' எனும் பொருளைத் தரும்.

பிறர் கின்னா என்றால் எந்தப் பொருளையும் தராது.

அதுபோல, குறளை மேற்கோள் காட்டும்போது பிழையின்றிக் காட்டவேண்டும்.

"பிற்பகல் தாமே வரும்" என்பதுதான் குறளின் இரண்டாவது அடி.

ஆனால் விளம்பரம் தந்தவரோ இதைப்பற்றியெல்லாம் கவலைப்படவில்லை.

"பிற்பகல் தாமே விளையும்" என்று அவர் விருப்பத்துக்குக் குறளை எழுதியுள்ளார். இப்படி, எத்தனையோ பொறுப்பற்ற போக்குகள்!

5. 'மைலாப்பூர் அகாதெமி' விழா நடத்துகிறது. அதிலும் முதலமைச்சரை வைத்து (27.11.99) விருது வழங்கும் விழா. அழைப்பைப் பாருங்கள் :

"தமிழ்நாடக - தொலை காட்சித் தொடர்" தொலைக்காட்சி என்று எழுத அறியாமல் தொலை - காட்சித் தொடர் என்று போட்டு யாரையோ திட்டுவது போல் அழைப்பிதழ் அச்சிட்டுள்ளது. இப்படி எண்ணற்ற குறைபாடுகள் - குற்றங்கள், நாடெங்கிலும்.

# மைலாப்பூர் அகடமி (பதிவு)
## 30வது ஆண்டு
## தமிழ் நாடக - தொலைகாட்சித் தொடர்
## விருது வழங்கும் விழா

6. பண்ணுருட்டி நகர தி.மு.க. செயலாளர் மணி - மிசா மணி நல்ல கொள்கைப் பற்றாளர். எங்களையெல்லாம் அழைத்துப் பல கூட்டங்களை நடத்தியவர். அவர் நெல்லிக்குப்பம் சட்டமன்ற உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

11.11.99 அன்று மறைந்துவிட்டார். அவர் மறைவுக்கு ஈமச் சடங்கு செய்வதற்காக ஓர் அழைப்பிதழ் அச்சிட்டிருக்கிறார்கள்.

அதுதான் எனக்கு விளங்கவில்லை.

இதோ "சுப்ஸ்வீகரண பத்திரிக்கை" வழக்கிலேயே இல்லாத - எவருக்கும் தேவையே இல்லாத சொல்லைத் தூக்கிப்போட்டு அழைப்பு.

யாரோ 'ஒருவர்' சொல்லியிருக்க வேண்டும். அதை அப்படியே போட்டு விட்டார்கள். நாம் இன்றும் அடிமைச் சங்கிலிகளைப் பூட்டிக்கொண்டு நாறிக் கிடக்கிறோம் என்பதற்கு இதைவிட வேறென்ன எடுத்துக்காட்டு வேண்டும்!

பொது

தமிழ் வளர்ச்சி மன்றக் கூட்டம் நடைபெற்றபோது 'தினமலரில்' வரும் சில தவறான தொடர்களைச் சுட்டிக் காட்டி அவற்றைச் செம்மை செய்யலாமே என்றோம். உறுப்பினராக இருந்த 'தினமலர்'ஆசிரியர் குறிப்பிட்டார். "நானே நேரடியாக இதைச் செய்துவிட முடியுமா? பெரும்பாலும் தமிழ் முதுகலை படித்தவர்களைத்தான் வேலைக்கு அமர்த்தியிருக்கிறோம். அவர்களே தங்கள் அரைகுறைத் தமிழறிவால் இப்படிச் செய்துவிடுகிறார்கள்" என்றார். அவர் சொல்வது முற்றிலும் சரியானது. 'இன்பத் தமிழ்க் கல்வி' யின் நிலை இப்படி இருக்கிறது. அதனால் எங்கு பார்த்தாலும் பிழைபட்ட தமிழைப் பார்க்கிறோம்.

## இயல் - முப்பத்தேழு

## விளைவுகள்

அரசுச் சார்பில் நாங்கள் பல முயற்சிகள் எடுக்கிறோம் என்பது நாடெங்கிலும் உணரப்பட்ட நிலையில், பல தமிழன்பர்களும், தமிழ் அமைப்புகளும் தமிழுக்கு ஊறு நேரும் இடங்களைக் கண்டறிந்து எதிர்க்கத் தொடங்கினர்.

1. இலண்டன் பிராட்போர்டு பல்கலைக் கழகப் பேராசிரியர் 'பொன். முகைதீன் பிச்சை' ஓர் அருமையான கருத்தினை வெளியிட்டுள்ளார். 'மொழிப் பற்று குறைந்த காரணத்தினால்தான், ஒன்றுபட்ட பண்பாட்டுப் பார்வையிலிருந்து ஒதுங்கிக் கொண்டிருக்கிறோம் என்கிறார்.

அவரது கருத்து இதுதான்.

சாதி சமயச் சண்டை ஒழிய வழி என்ன?

முதன்முதல் இளைஞர்கள் கற்றுக்கொள்ள வேண்டியது, தமிழ் மொழியை நேசிக்கவேண்டும் என்பதைத்தான். நம்முடைய மூச்சு தமிழ் மொழி, நாமெல்லாம் தமிழர்கள் என்ற தத்துவத்தின் கட்டுப்பாட்டில் வாழ நினைக்கவேண்டும்.

எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்று வெறும் கூச்சல் மட்டும் போதுமா? சுவரொட்டிகளிலும் வியாபார, விளம்பரப் பலகைகளிலும் தமிழில் எழுதினால் மட்டும் போதுமா? எங்கும் தமிழ் என்ற குரல் வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் இருக்க வேண்டும்.

வியாபாரம், பக்கத்து வீட்டுப் பழக்கம், திருமணம், தெய்வ வழிபாடு கல்வி, உறவு விருந்து போன்ற எல்லாச் செயல்களிலும் தமிழ்மணம் கமழ வேண்டும். சாதி, மத பேதமின்றிப் பழகி ஒரு பண்பை நிலைநாட்டும் பொழுதுதான் "எங்கும் தமிழ்" எழுச்சிக்கு உயிர் ஊட்ட முடியும்.

மொழிப்பற்று, சமூக ஒற்றுமையைப் பலப்படுத்தும். சாதிப்பற்று, சமுதாயச் சண்டையை உருவாக்கும். பகுத்தறிவு கொள்ளாத தன்மையினால் ஏற்படும் மதவெறி, மார்க்கத்திலிருந்து விடுபடச் செய்து, மனிதனை மமதை கொள்ள வைக்கும், உள்ளத்தில் தாவிக் கொண்டிருக்கும் ஒழுக்கமற்ற சபலங்களை ஒடுக்கவும், மாறிவரும் எண்ணங்களைக் கட்டுப்படுத்தி, நற்பண்புகளை வளர்க்கவும் மதங்கள் ஏற்பட்டன. ஆனால், இன்றோ, மொழிப்பற்று குறைந்த காரணத்தினால், ஒன்றுபட்ட பண்பாட்டுப் பார்வையிலிருந்து ஒதுங்கிக் கொண்டிருக்கிறோம். - பொன் முகைதீன் பிச்சை (லண்டன் பிராட்போர்டு பல்கலைக்கழகப் பேராசிரியர்) (1.11.98 இராணி)

எனவே, பல முனைகளில் இருந்தும் மொழிப்பற்றின் சிறப்பை வலியுறுத்திச் செய்திகள் வருவதைப் பார்க்கிறோம்.

2. ஆனால் அதே நேரத்தில் மலேசியாவின் ஈப்போ நகரிலிருந்து சில கல் தொலைவில் உள்ள கேமரான் மலையுச்சிக்கு நான் சென்றபோது, ஓர் உணவகம் சென்றோம். அவர்கள் தமிழில் 'செந்தோசா உணவகம்' என்று எழுதி வைத்துள்ளனர்.

வடநாட்டார் இந்தியில் Marg என்பதையே பயன்படுத்துகின்றனர். மலேசியாவில் 'Jalan' என்பதையும், பெர்லினில் 'Strazze' என்பதையும் பயன்படுத்துகின்றனர். நாமோ 'தேவகோட்டை ரஸ்தா'என்றும், Mount Road என்றும் பயன்படுத்திப் பொறுப்பற்று நடந்து வருகின்றோம். வீதி, தெரு, முடுக்கம், ஒழுங்கை, மறுகு, சாலை என்றெல்லாம் நமக்குச் சொற்கள் உள்ளன. பயன்படுத்தும் மனமும் குணமும்தான் தமிழர்களுக்கு இல்லை.

3. வளைகுடாப் பகுதியில் உள்ள 'கத்தார்' நாட்டில் தோகா எனுமிடத்தில் நடைபெற்ற கலைவிழா தமிழனுக்குப் பெருமை சேர்ப்பதாக உள்ளது.

"அரபு நாடுகளில் அவர்கள் நாட்டு விழாக்கள் தவிர, வேறு எந்த நாட்டு விழாவும் நடத்த அனுமதியில்லை. ஆனால் தோஹாவில் உள்ள 'கத்தார் ஜெனரல் பெட்ரோலியம் கார்ப்பரேஷன்' நிறுவனத்தில் பணிபுரியும் தமிழர்கள் ஒன்றுசேர்ந்து, அந்த நிறுவனம் மூலமாகவே கலைவிழா நடத்த அரசின் ஒப்புதலைப் பெற்றுள்ளனர்.

மேற்கூறிய நிறுவனத்தில் 42 ஆண்டு காலம் பணிபுரிந்த, சந்திரன் என்பவர் முயற்சியால் 1991 முதல் இந்தக் கலைவிழா நடைபெற்று வருகிறது. தற்சமயம் சந்திரன் ஓய்வு பெற்றுவிட்டாலும், குப்பன் என்பவர் தலைமையில் விழா நடத்தப்பட்டு வருகிறது.

இந்தக் கலைவிழாவின் மூலம் தமிழ்ப் பாரம்பரியம் கட்டிக் காக்கப்படுவதோடு, வசூலாகும் தொகை தமிழ்நாட்டில் உள்ளசேவை இல்லங்களுக்கு அனுப்பப்பட்டு, கருணை விழாவாகவும் பரிணமளிக்கிறது.

இந்த ஆண்டு நடைபெற்ற கலைவிழாவில், எலக்ட்ரானிக்ஸ் துறையின் பங்கு பெரும் அளவில் இடம் பெற்றிருந்தது. கலைவிழா நடைபெறும் மேடையில், பட்டுத்திரை தொங்கவிடப்பட்டு அரங்கின் பல இடங்களில் 50க்கும் மேற்பட்ட வண்ண விளக்குகள் பொருத்தப்பட்டு, ஒளியை உமிழ்ந்து கொண்டிருந்தன.

பாட்டுப் பாடும் பெண்மணியின் பெயர் ஒலிபெருக்கியில் அறிவிக்கப்பட்டதும், அவர் 'மைக்'கில் பாட ஆரம்பித்தார். பலவித வாத்திய கருவிகள் இனிமையாக பின்னணி இசையை ஒலித்தன. இசைக்கருவிகளோ, இசைக் கலைஞர்களோ இல்லை. இங்குதான் புதுமை உள்ளது.

'மிடி'எனப்படும் 'மியூ சிக்கல் இன்ஸ்ட்ருமென்ட் டிஜிடல் இன்டர்பேஸ்'என்ற நவீன தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி கணிப்பொறி மூலம், நமக்குத் தேவையான இசையைப் பதிவு செய்து, அதை அரங்க மேடைக்குக் கொண்டு வந்து, பாடுபவர் மட்டும் பாட, பதிவு செய்யப்பட்ட பின்னணி இசை ஒலிக்கச்செய்யப்பட்டது. இதனால் பல சிரமங்கள் குறைந்ததாக தெரிவிக்கின்றனர் விழாக் குழுவினர். இசைக்கருவிகளையும், இசைக் கலைஞர்களையும் தேடிக்கொண்டு செல்ல வேண்டிய அவசியமில்லையே!

தமிழ் இசையைப் பதிவு செய்யும் 'மிடி' தொழில்நுட்பம் தெரிந்தவர்கள் உலகிலேயே மூவர்தான் உள்ளனர். இருவர் தோஹாவிலும், ஒருவர் அமெரிக்காவிலும் உள்ளனர். எவ்வளவு பெரிய பெருமை நமக்கு. 'தமிழன் என்று சொல்லடா. . தலைநிமிர்ந்து நில்லடா' என்று பெருமிதப்பட வைக்கிறது அல்லவா?

இந்தப் புதிய முறையில் உள்ள ஒரே ஒரு குறை என்னவென்றால், கர்நாடக இசையை ஓரளவுக்குத்தான் இதில் பதிவு செய்ய முடியும். கர்நாடக இசைக்கே உரிய சில கருவிகளின் ஒலியைப் பதிவு செய்ய சில சிக்கல்கள் இருக்கின்றன. விரைவில் அதைச் சரிப்படுத்திவிடுவோம் என்கின்றனர் இந்த 'மிடி' தொழில்நுட்ப கலைஞர்கள்.

இந்த வருடம் நடந்து முடிந்த கலை விழாவில், பல புதிய நிகழ்ச்சிகள் சேர்க்கப்பட்டன. இங்குள்ள தமிழ் மாணவர் சமூகத்துக்கு தமிழ் ஆர்வம்வர இரண்டு நிமிட பேச்சு போட்டி நடந்தது. 'குடும்பத்தில் பிரச்சனை ஏற்படக் காரணம் ஆண்களா? பெண்களா?' என்ற தலைப்பில் அரட்டை அரங்கம் நடைபெற்றது." (தினமலர் 3.10.99)

உலகெங்குமுள்ள தமிழர்கள் இத்தகைய எழுச்சி பெற்று விளங்குவது நல்ல வளர்ச்சியாகும். 10 ஆண்டுகளாக இந்த நிகழ்ச்சி நடந்து வருகிறது என்பதுதான் பெருமையாகும்.

4. பாரதிதாசன் பல்கலைக்கழகம் தமிழில் ஒரு விளம்பரத்தை வெளியிட்டுள்ளது. இதற்கு முன் சில இடங்களில் பாரதிதாசன் பல்கலைக்கழக அலுவலர்கள் கண்டிக்கப்பட்டதும் உண்டு. ஆனால் இப்போது நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்பதற்கு இந்த விளம்பரம் நல்ல எடுத்துக்காட்டு.

5. இவ்வளவு முன்னேற்றம் ஏற்பட்டும் இன்னும் சிலர் சில நிகழ்ச்சிகளில் ஆங்கிலத்தில் பேசி வருகின்றனர். அவர்களுக்குப் பொதுமக்களே பதிலடி கொடுத்தால்தான் அவர்கள் திருந்துவார்கள் (தினத்தந்தி 2.4.2000)

புரியாத மொழியில் பேசியதால் விவசாயிகளின் எரிச்சல் - தமிழில் பேசும்படி, விழா மேடையில் ஏறி கண்டனம் - கோவையில் நடந்த கருத்தரங்கில் பரபரப்பு

கோவை ஏப் 2- கோவையில் நடந்த ஒரு கருத்தரங்கில் கலந்து கொண்ட சிறப்பு விருந்தினர் ஆங்கிலத்தில் பேசியதால் எரிச்சல் அடைந்த விவசாயிகள் மேடை ஏறி கடும் கண்டனம் தெரிவித்தனர்.

விவசாயிகள் கலந்து கொண்ட கருத்தரங்கு

கோவை மரபு சாரா எரிசக்தித் துறை சார்பில், 'உயிர்ப் பொருட்களில் இருந்து எப்படி மின்சாரம் தயாரித்தல் என்பது' பற்றி 2 நாள் கருத்தரங்கு கோவை ஆர்.எஸ். புரத்தில் உள்ள அரசு வனக் கல்லூரியில் உள்ள கருத்தரங்க மண்டபத்தில் காலை 9 மணிக்கு நடந்தது.

கருத்தரங்கிற்கு தமிழ்நாடு விவசாயப் பல்கலைக்கழக துணைவேந்தர் கண்ணையன் தலைமை தாங்கினார். வன இலாகா மரபியல் மற்றும் மர்கலப்பின துறை இயக்குநர் கே. சுப்பிரமணியன், பாரதியார் பல்கலைக்கழக துணைவேந்தர் டாக்டர் பா. இளங்கோ ஆகியோர் கலந்து கொண்டனர். மேலும் கோவை மற்றும் சுற்றுப்புறப் பகுதிகளில் இருந்து சுமார் 50 விவசாயிகளும் கருத்தரங்கில் கலந்து கொண்டனர்.

துண்டுசீட்டு அனுப்பிய விவசாயி

கருத்தரங்கு சுமார் 9 மணி அளவில் தொடங்கியது. முதலில் வன இலாகா மரபியல் துறை இயக்குநர் கே. சுப்பிரமணியன் ஆங்கிலத்தில் பேசினார். இதை கேட்ட விவசாயிகள் அதிர்ச்சி அடைந்தனர்.

உடனே விவசாயிகளிடையே உட்கார்ந்திருந்த கோவையை சேர்ந்த கோவிந்தராஜ் ''இங்கு ஆங்கிலம் தெரியாத விவசாயிகள் உள்ளனர். நீங்கள் ஆங்கிலத்தில் பேசுவது எங்களுக்குப் புரியவில்லை. எனவே தமிழில் பேசுங்கள்'' என்று ஒரு துண்டுச் சீட்டில் எழுதி தமிழ்நாடு விவசாய பல்கலைக்கழகத் துணைவேந்தர் கண்ணையனுக்கு அனுப்பினர்.

மேடையில் ஏறி கண்டனம்

அதை வாங்கிப் படித்த கண்ணையன் அந்தத் துண்டு சீட்டை அப்படியே வைத்துவிட்டார். சுப்பிரமணியன் தொடர்ந்து ஆங்கிலத்தில் பேசிக்கொண்டிருந்தார். இதைக் கண்ட விவசாயி கோவிந்தராஜ் எரிச்சல் அடைந்தார்.

உடனே சடாரென்று எழுந்த கோவிந்தராஜ் நேராக மேடைக்கு சென்றார். அங்கு உட்கார்ந்திருந்த துணைவேந்தர் கண்ணையனிடம் "எங்களை அசிங்கப்படுத்தாதீர்கள். இங்கு

நீங்கள் ஆங்கிலத்தில் பேசுவது எங்களுக்குப் புரியவில்லை. முடிந்தால் தமிழில் பேசுங்கள் அப்படி முடியவில்லையென்றால் சொல்லிவிடுங்கள். நாங்கள் வெளியே சென்று விடுகிறோம். தொடர்ந்து ஆங்கிலத்தில் பேசினால் அனைவரும் கருத்தரங்கை புறக்கணிப்பு செய்வோம்'' என்று ஆவேசமாகக் கூறினார்.

ஆங்கில பேச்சு பாதியில் நின்றது

இதைக் கண்ட சுப்பிரமணியம் தனது ஆங்கிலப் பேச்சை நிறுத்தி விட்டார். இதனால் அங்கு பரபரப்பு ஏற்பட்டது. கோவிந்த ராஜுக்கு ஆதரவாக மேலும் சில விவசாயிகள் மேடையை நோக்கிப் படையெடுத்தனர்.

உடனே விவசாய பல்கலைக்கழக துணைவேந்தர் கண்ணையன், விவசாயி கோவிந்தராஜை சமாதானப்படுத்தினார். ''கருத்தரங்கின் தொடக்க உரை மட்டும்தான் ஆங்கிலத்தில் இருக்கும். அதனைத் தொடர்ந்து நடைபெறும் கருத்து பரிமாற்றங்கள், ஆலோசனைகள் தமிழில்தான் இருக்கும்'' என்று கூறினார்.

விவசாயி சமாதானம் அடையவில்லை

இதைக் கேட்டு விவசாயி கோவிந்தராஜ் சமாதானம் அடையவில்லை. தனது நிலையில் உறுதியாக இருந்தார்.

தமிழில் பேசினார்கள்

இதைத் தொடர்ந்து அதுவரை ஆங்கிலத்தில் பேசிக்கொண்டு இருந்த சுப்பிரமணியன் தனது உரையைத் தமிழில் தொடர்ந்தார். அதன் பின்னரே விவசாயி கோவிந்தராஜூம் மற்ற விவசாயிகளும் சமாதானமடைந்து கருத்தரங்கில் பங்குகொண்டனர்.

மொழி மாற்றம் செய்யப்பட்டது

கருத்தரங்கில் பேச வந்த துணைவேந்தர்கள் கண்ணையனும், இளங்கோவும் தங்களது உரையை ஆங்கிலத்திலேயே தயார் செய்து கொண்டு வந்திருந்தனர். ஆனால் ஆங்கிலப் பேச்சுக்கு விவசாயிகள் எதிர்ப்புத் தெரிவித்ததைத் தொடர்ந்து அவர்கள் இருவரும் தங்கள் உரையை அவசரம் அவசரமாக தமிழில் மொழிபெயர்த்து பேசினார்கள்."

அன்பர் கோவிந்தராசு அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். விவசாயிகளுக்கு விளக்கம் சொல்ல வருபவர்கள் அவர்களுக்கே விளங்காத மொழியில் பேசினால் என்ன நடக்கும்? ஒரு கோவிந்தராசு நினைத்தால் ஆங்கிலத்தில் பேசுகின்ற அறிவுலக மேதைகளையே மாற்றிவிட முடியும் என்பதற்கு இந்நிகழ்ச்சி ஓர் எடுத்துக்காட்டாகும். உங்களுக்குப் புரியாத ஆங்கிலத்தில் பேசினால், எழுந்து எதிர்ப்புக் காட்டுங்கள். பிறகு தமிழ் தானே வரும்.

7. சென்னை மாநகராட்சியில் 'தமிழ் வாழ்க' எனும் எழுத்துகள் உயரத்தில் உட்கார்ந்து மின்னுகின்றன. ஆனால் கட்டிடத்துக்குள் தமிழ் இல்லை.

தலைநகர்த் தமிழ்ச் சங்கம் மேயருக்கு இந்த மடலை எழுதுகிறது.

சென்னை மாநகராட்சி நிருவாகம் தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை அவமதிக்கிறது என்னும் குறைபாடு பரவலாக உறுதிப்படுத்தப்பட்டு வருகிறது.

சென்னை மாநகராட்சி வருவாய்த் துறை அண்மையில் - தொழில் வரி விதிப்புத் தொடர்பாக அனுப்பியுள்ள சுற்றறிக்கையினை ஆதாரமாக இணைத்துள்ளேன்.

உடனடியாக மேற்குறிப்பிட்ட ஊழியர் மீது தமிழ் ஆட்சி மொழிச் சட்ட அவமதிப்பு நடவடிக்கை எடுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்."

இதன்படி எனக்கு வந்ததும் உடனே ஆணையரிடம் தொலைபேசியில் கூறினேன். தக்க நடவடிக்கை எடுக்க வற்புறுத்தினேன்.

ORIGINAL

C.P.P. (V)—R. D. 31/93-94
500 Bks., 100 lvs., May, 93.

**CORPORATION OF MADRAS**

**PROFESSION TAX**



| From | To |
|---|---|
| **The Asst. Revenue Officer,**<br>Profession Tax Section,<br>Revenue Department,<br>Corporation of Madras,<br>Madras-600 003. | Thiru/M/s. [illegible]<br>[illegible]<br>[illegible]<br>அண்ணா சாலை, சென்னை-2. |

7. ஆங்கிலத்தில் அரசாணை வெளியிடப்படுவதால் ஏற்படும் அலங்கோலங்களைத் 'தினமலர்' இதழ் சுட்டிக்காட்டியிருந்தது.

அவற்றை அப்படியே படி எடுத்து, உள்ளாட்சித் துறை அமைச்சர்க்கு அனுப்பியிருந்தேன். அவரும் உடனே நடவடிக்கை எடுத்தார். நகராட்சி நிர்வாகத் துறைச் செயலர்க்கும், ஊரக வளர்ச்சித்துறைச் செயலர்க்கும் அமைச்சர் கோ. சி. மணி அவர்களே மடல் எழுதினார்.

"இத்துடன் மாண்புமிகு தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் அலுவலகத்திலிருந்து பெறப்பட்ட தினமலர் மற்றும் தினமணி செய்தி நாளிதழ்களின் ஜெராக்ஸ் நகல்கள் இணைத்தனுப்பப்பட்டுள்ளது. அரசாணைகளை ஆங்கிலத்தில் வெளியிடுவதால் ஏற்பட்டுள்ள இந்த நிலையினை, எதிர்காலத்திலாவது தமிழில் வெளியிடுவதால் தவிர்த்திடலாம் என

கருதுகிறேன். எனவே இனி வரும் காலத்தில் இத்துறையிலிருந்து வெளியிடப்படும் அனைத்து அரசாணைகளையும் தமிழிலேயே வெளியிடுமாறு செய்திடவும், தவிர்க்க இயலாத நிலையில் ஆங்கிலத்தில் அரசாணை வெளியிட வேண்டியிருந்தால் தமிழில் அரசாணை வெளியிட்டு ஆங்கிலத்தில் நகலாக தனியே அரசாணை வெளியிடலாம்.

கோ.சி. மணி
ஊரக வளர்ச்சி மற்றும் உள்ளாட்சித் துறை அமைச்சர்"

இவ்வாறு நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது என்று துறை அமைச்சர் எனக்கும் தெரிவித்தார். எனக்குத் தெரிய அமைச்சர்களில் தமிழ் ஆட்சிமொழிச் செயலாக்கத்துக்கு ஒத்துழைப்புக் கொடுத்தவர்களில் கோ.சி.மணி முதலில் வைத்து எண்ணத்தக்கவர் என்பதைச் சொல்லியே ஆகவேண்டும்.

8. மும்பையிலிருந்து வெளிவரும் 'The Times of India' இதழ் (22.10.1996) 'என்னை வம்புக்கு இழுத்துச்'செய்தி வெளியிட்டிருந்தது. இதைக் கண்ணுற்ற தமிழ்ப் பேராசிரியர் இ. மறைமலை (புகழ் பெற்ற தமிழ்ப்புரட்சியாளர் இலக்குவனாரின் புதல்வர்) அந்த இதழுக்கு ஒரு கண்டன மடலை எழுதியிருந்தார்.

இதழ்கள் தவறான போக்கில் போகும்போது நம் தோழர்கள் கண்டனம் தெரிவிக்கத் தவறுவதில்லை என்பது மனத்திற்கு எவ்வளவோ ஆறுதலாக உள்ளது.

அந்த வகையில் மறைமலையின் மடல் விறுவிறுப்பாக அமைந்துள்ளது. இதனை அப்படியே தருகின்றேன்.

Dr. I. Maraimalai
52/3 Soundarya colony
Annanagar western extension Chennai - 600 101.

The Editor
The Times of India Mumbai-400 001

This is apropos of your news report 'Say it all in Tamil: DMK Minister'(May 22) The news report ceases to be an objective presentation of facts as it simply tries to instigate advertising against the introduction of Tamil the state language, in the hoardings put up in Tamil Nadu. I have had the opportunity of visiting Japan. I have extensively toured the cities Tokyo, Obaka and Kobe missing no nook and corner. The hoardings and sign boards (either Commercial or Traffic) are all in Japanese. Only some traffic signboards in Osaka have English equivalents. Are they not metropolitan cities? Nobody there bothers about English.

Even in Tokyo, one of the largest cities in the world, the elite konws only one English sentence (if it is English) to utter to foreigner who speaks in English in. "No English"(which means I don't know English'). In Bangalore the signboards in many of the Government Offices except a few have only Kannada and Hindi. But here in Tamilnadu the Government is not against the use of English or Indian languages other then Tamil. You can use as many languages as you wish, but you should give a prominent place to Tamil which is the state language. Hence the headline "Say it all in Tamil" is a misleading one.The use of Tamil in State Government offices, makes your Correspondent grumble and groan "it would be Tamil all the way in Tamilnadu"and he deplores the 'Compulsory use' of Tamil. The use of Tamil is not forced as compulsory, but it is mandatory as per the official language policy laid down by Indian constitution.

Dr. Tahmihkudimagan is a scholar of repute, has written many books and is a popular poet who has taken part in hundreds of poetic symposia in Tamilnadu, Singapore and Malaysia. For more than two decades he has served as a Tamil professor and he was an efficient Principal of a post - graduate college when he voluntarily retired from service to take active part in politics. If such a great scholar fails to speak in chaste Tamil who else can? But the fact is he always avoids pedantic style and speaks in a lucid manner. The use of Tamil equivalents for 'Computer' and 'aircraft' at his first press conference may have baffled journalists who do not know Tamil. But every Tamil knowing journalist knows such words.

Even after 49 years of independence the use of Tamil in day to day life is considered as a great sin by your correspondent. Not only D.M.K. men but every patriot irrespective of his political affiliation in Tamilnadu wishes to use Tamil in all spheres of life. The proper steps taken by the Government to achieve that goal should not be distorted by your correspondent which may lead the country to chaos and confusion.

9. 26.5.96 'ஜூனியர் விகடன்' இதழ் என்னைக் கிண்டல் செய்து ஒரு செய்தி வெளியிட்டுள்ளது. நீங்களும் அதனைப் படிக்கலாம்.

தமிழ்நாடு முழுவதும் கடைகளின் பெயர்ப்பலகைகளில் தமிழ் எழுத்துக்களின் முழுஆக்கிரமிப்பை வற்புறுத்தி வரும் தமிழ்க்குடிமகன் நாரதரின் ஆங்கில உரையை திமிழைஸ் பண்ணிய விதத்தைப் பார்க்க ஆசையா? ஸாரி 'தமிழ்'

மான் நண்பர்களே, Tamil Drink son பேசுகிறேன்!

மருத்துவர் கருணாநிதிக்கு நீள வாழ்க்கை! தி.மு.க. விருந்தை யாராலும் குலுக்க முடியாது! அது பல வயதுகளாக வெற்றிகரமாக விளங்கும் விருந்து இன்று தமிழக மக்கள் மேலே

ஊட்டிவிடப்பட்டுள்ளனர்! அர்களுக்கு சில்லரை தேவை! நோட்டுக்களாக்க தவறாதீர்கள்! மகன் மேலே வந்தாகிவிட்டது! நீங்கள் எப்போதுமே எங்களை மேலே பார்க்கலாம்! ரோட்டில் சைகையில் உங்களைக் காக்க வைக்க மாட்டோம்! வெட்டு வெளிகளை எழுப்ப மாட்டோம்! எங்கள் சத்தியங்களை மேலே நாங்கள் கீழே எடுத்துக் கொள்கிறோம்! நன்றி!

ஒரிஜினல் ஆங்கில சொற்பொழிவு இதோ!

Dear Friends, தமிழ்க்குடிமகன் பேசுகிறேன்.

Long Live Karunanidhi! Nobody can shake the DMK party it is a party that has been successfully functioning for ages! Today, the Tamilians are fed-up! They need a change! Don't fail to note! The Sun has come up! You can always look up to us! We will not make you wait in the signal! We will not raise cutouts! We undertake to keep up our promises! Thank you!

பொறுப்பற்ற முறையில் எழுதப்பட்ட அந்தச் செய்தியை, தலைநகர்த் தமிழ்ச் சங்கம் கடுமையாகச் சாடி மடல் எழுதியிருக்கிறது.

'ஜூனியர் விகடன் 26.51996 தேதிய இதழில் நியூ(ஸ்) சென்ஸ் நாரதர் என்னும் செய்தியில் ரிலாக்ஸ் பக்கம் - தமிழ்க்குடிமகன் பேசினால் என்னும் செய்தியாகத் தாங்கள் செய்துள்ள தமிழ்க் கொலை கண்டு வேதனை அடைகிறோம்.

சரியான மொழிபெயர்ப்புத் தங்களுக்குத் தெரியவில்லை என்பதற்காகத் தமிழை இழிவுபடுத்தும் போக்கை இனித் தொடரவேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறோம். இனிமேல் இதுபோன்ற செயல்கள் தொடருமானால், தலைநகர்த் தமிழ்ச் சங்கத்தின் போராட்டத்தினைத் தாங்கள் சந்திக்க வேண்டியிருக்கும்.

தமிழ் உணர்வாளர்களின் உணர்வினைத் தாங்கள் தெரிந்து கொள்வீர்கள் என நம்புகிறேன்."

இதுபோன்ற கொதிப்புகளும், கொந்தளிப்புகளும் தான் இன்றைய தேவை.

10. தமிழக அரசு தமிழைச் செம்மைப்படுத்த வேண்டும் என்று எல்லா ஏற்பாடுகளையும் முனைப்புடன் செய்து வரும்போது சட்டப் பேரவைத் தலைவர் பொ.தி.ரா. பழனிவேல்ராசன் மட்டும் ஆங்கிலத்துக்கு வால் பிடிக்கிறார். இவரை, முதல்வரும் கண்டிக்கவில்லை; பேராசிரியரும் கண்டு கொள்ளவில்லை. ஆனால், தமிழ் அமைப்புகள் தூங்கவில்லை; துடித்தெழுந்தன அதன் விளைவு, பழனிவேல்ராசனுக்குக் கடும் கண்டனங்கள் எழுந்தன.

தமிழறிஞர் ம. இலெ. தங்கப்பா ஒரு மடல் எழுதுகிறார். இவர் ஆங்கிலத்தில் பேரறிவு படைத்தவர் 'Hues and Harmonies of Sankam literature' எனும் நூல் உருசியாவில் அதிகம் விற்பனையானது 'This Question of Medium' என்று தமிழை வலியுறுத்தி ஆங்கிலத்தில் எழுதியவர்.

அவரது மடற் கருத்து இதுதான்.

அன்பிற்குரிய தமிழ்க்குடிமகன் அவர்கட்கு

வணக்கம். கடந்த 5.11.96 தினமணியில் சட்டப் பேரவைத் தலைவர் திரு. பழனிவேல்ராசன் அவர்களின் பேச்சொன்று வெளிவந்துள்ளது. "மருத்துவம், பொறியியல் போன்ற கல்லூரிப் பாடங்களை ஆங்கிலத்தில்தான் கற்பிக்கவேண்டும். தமிழில் கற்றுக்கொடுக்க மேற்கொண்டு வரும் முயற்சி சரியானதன்று" என்று பேசியிருக்கின்றார்.

இப்பேச்சு தமிழ் நாட்டரசின் தமிழ்வழிக் கொள்கைக்கு எதிராகவும், தாங்கள் மேற்கொண்டு வரும் முயற்சிகட்கு முட்டுக்கட்டை இடுவதாகவும் அமைகின்றது.

இக்கருத்து முற்றும் உள்ளீடற்றது. எப்பொழுதோ முறியடிக்கப்பட்டுப்போன கருத்து. வேறு யாராவது கூறியிருந்தால் இதைப் பொருட்படுத்தத்தேவையில்லை. ஆனால் சட்டப் பேரவைத் தலைவரே இதைக் கூறியிருப்பதுதான் குழப்பம் விளைவிப்பதாக இருக்கின்றது. அரசின் ஒப்புக் கொள்ளப்பட்ட கருத்துகட்கும் செயற்பாடுகட்கும் முரணாக அரசின் உறுப்பினர் ஒருவரே கருத்துத் தெரிவிப்பது மக்களுக்கு அரசின் செயற்பாட்டின்மீதும் உண்மை உறுதியின் (Sincerity) மீதும் ஐயம் ஏற்படச் செய்துவிடும். இதனைத் தனிப்பட்ட கருத்து என்று தாங்கள் சும்மா விட்டுவிடக் கூடாது. மக்களுக்குத் தெளிவு ஏற்படுமாறு திரு. பழனிவேல் ராசன் கருத்தை மறுத்துரைப்பதோடு இனிமேலும் அவர் இத்தகைய பேச்சுக்களில் ஈடுபடாதவாறு ஆவன செய்தல் வேண்டுமென்று அன்புடன் வேண்டுகின்றேன்."

மேற்கண்டசெய்திகள் என்போன்றவர்களுக்கு எவ்வளவு ஊக்கத்தைத் தந்திருக்கும் என்று கூறத் தேவையில்லை. என் செயல்களுக்கு உறுதுணையாகவும், எதிரிகளின் போக்குகளுக்கு எதிராகவும் செயற்பட எழுந்துநிற்கும் இவர்களைப் போன்றவர்கள்தான் தமிழ்நாட்டில் தமிழில் எல்லாம் வரவும், ஏற்றம் பெறவும் விரும்புவர்கள்; இந்த விளைவுகள் தாம் என்றென்றும் வரவேற்புக்குரியவை.

தமிழை ஆட்சிமொழி ஆக்குவதற்காக சி. சுப்பிரமணியம் தொடங்கிய முயற்சியிலிருந்து முழு மூச்சாக இயங்கிய என் காலம் வரை பல செய்திகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இந்தச் செய்திகளிலிருந்து உங்களுக்குப் பல உண்மைகள் விளங்கியிருக்கும். அரசாணைகள் உள்ளன. சட்டம் போடப்பட்டுள்ளது. எப்படி எழுதவேண்டுமென்பதற்கான முன் எடுத்துக்காட்டுகள் பல உள்ளன. இவற்றை உண்மையான உணர்வோடு அரசு ஊழியர்கள் செயற்படுத்தினாலே போதும்.

# முடிவுரை

'நின்ற சொல்' என்கிறது இலக்கியம்.

31.10.1960 இல் என் திருமணம். அன்று என் பெயர் : சாத்தையா. என் மனைவி பெயர் செயலட்சுமி. பின்னர் இது 'வெற்றிச்செல்வி' என மாற்றப்பட்டது. திருமணத்துக்குத் தலைமை தாங்கிய பாவலர் பெருஞ்சித்திரனார் ஒரு வாழ்த்து மடலையும் வழங்கினார். அவரது வாழ்த்து :

*''சளைப்பில் அன்பினன் சாத்தையாவின்*
*உளக்குடி லேறிய உயர்செய லக்குமி*
*தன்னை மணந்த் தகுதிரு மணவிழா*
*அன்னை மொழியை அரசமர்த்தும் விழா''*

1960 இல் அவர் முன்னுரைத்தார்: 1996 இல் அன்னை மொழியை அரசமர்த்தும் அமைச்சர் பொறுப்பினை ஏற்றுக்கொண்டேன். 36 ஆண்டுகள் கழிந்தாலும் ஒரு பாவலரின் வாக்கு எப்படி நின்று நிலைக்கிறது என்பதனை எண்ணி வியக்கின்றேன்.

இன்னும் எவ்வளவோ இருந்தாலும் தமிழ் அன்புடைய ஒருவர், தமிழ்நாட்டில் தமிழ்ப்பணிகள் எவ்வாறு மேற்கொள்ளப்பட்டன என்பதனை அறிவதற்கும், தமிழுக்கு உரிய இடத்தில் தமிழை அமர வைக்க எவ்வளவு போராட வேண்டியிருந்தது என்பதனை உணர்வதற்கும் இது உதவும் என்ற எண்ணத்தில்தான் இந்த நூலைத் தந்துள்ளேன். இதனைப் படிக்கும் ஒவ்வொருவரும் 'நானும் நல்ல தமிழன்பனாக இருப்பேன்' என்று சூளுரைத்து எழுச்சி பெற்றால் போதும்.






செங்கதிரோன் இரவல்ஒளி பெறுவ தில்லை
செந்தமிழ்க்கும் பிறமொழிச்சொல் தேவை இல்லை
தங்குதடை யில்லாமல் மணிக்க ணக்கில்
தனித்தமிழில் பொழியவல்லார் இவர்போல் யாரே?
பொங்கிளமைக் கல்லூரிப் பருவந் தொட்டே
போற்றிவரும் கொள்கைகளில் மாற்ற மின்றி
எங்கெவரோ டிருந்தாலும் எடுத்துச் சொல்லும்
ஏறுதமிழ்க் குடிமகன்தான்! இதிலென் ஐயம்?

எப்பொறுப்பில் இருந்தாலும் இலையென் றாலும்
இவர்விருப்பு தமிழ்நலந்தான்; இவரின் கையில்
ஒப்படைக்கும் சிறுகல்லும் சிற்ப மாகும்
ஒல்லியுடல், வெள்ளையுடை, காலம் போற்றும்
செப்பரிய வினையாற்றல், எழுத்து, பேச்சு,
செவிமலரத் தமிழ்பாடி நடிக்கும் ஆற்றல்...
இப்படியே பலதிறன்கள் இணைந்த தோழர்
எங்கள் தமிழ்க் குடிமகன்தான்! தமிழ்போல் வாழ்க!

-முனைவர் இரா. இளவரசு

